[illegible] அருளிய

சிவாகமத்தில் ஆறாவது அம்சத்திலுள்ள

# ரிபுகீதை

இது

திருவிடைமருதூர் ஸ்ரீ பிக்ஷுசாஸ்திரிகள் என்னும்

உலகநாத சுவாமிகளால்

மொழிபெயர்க்கப்பெற்று

கோவிலூர்

ஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகரவர்களின் ஆதீனம்

பொன்னம்பல ஞானதேசிகரவர்களால்

பரிசோதித்துச்சிட்டதற்கிணங்க

ஷை கோவிலூர்

ஸ்ரீ மகாதேவ ஞானதேசிகரவர்களின்

உத்தரவின்படி

கோட்டையூர்

க. வீ. சொ. வீ. அழகப்பையாவாலும்

பனையப்பட்டி

சி. மு. சி. சின்னையா செட்டியாராலும்

சென்னை கந்தன் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

மூன்றாம் பதிப்பு.

சுக்லஹு மகரமீ

1930ஹு



 [விலை ரூபா. 2.

உ

# சிறப்புப்பாயிரம்

தஞ்சைமாநகரம்-சதாவதானம்

ம-ா-ா-ஸ்ரீ

## சுப்பிரமணிய ஐயரவர்கள்

இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

பொன்பூத்த விதழிமலர்த் தொடைமிடையுஞ் சடையுடையான்
புகன்ற மெய்ம்மை
இன்பூத்த சிவரகசி யப்பெயர்த்த விதிகாசத்
திருமூன் றென்னுந்
தன்பூத்த வம்சமதாம் ரிபுகீதை தனையினிதாத்
தமிழிற் றந்தான்
தென்பூத்த விடைமருதா ருறையுலக நாதமறை
தேர்ந்த யோனே. (1)

அன்னதுதொன் றுட்பிரதி யாய்ப்பலவா யுறுபிழையை
யகற்றி மாறும்
வன்னமெலா முன்னுள்ள வண்ணமென வேயுலகில்
வழங்கத் தந்தான்
மன்னியமா மாயையினுன் மறைந்திடுமான் மாவையவ்வா
வரண நீக்கி
முன்னுளவண் ணங்காட்டு மியலெனப்பொன் னம்பலப்பேர்
முனிவன் றனே. (2)

அப்பிரதி தனைத்தஞ்சை வீரபத்ர மெய்ப்புலவ
னகிலத் தோர்கள்
இப்பிரதி யேதோமில் மெய்ப்பிரதி யென்றுமகிழ்ந்
தேற்கும் வண்ணம்
எப்பிரதி மானிடரும் புகழரவக் குறிச்சியில்வா
ழிராம சாமி
மெய்ப்பிரபு கைப்பொருளே மெய்ப்பொருளென் றச்சியற்றி
விளக்கி னனே. (3)

உ

திருவையாற்றில்

ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் பரம்பரையில் எழுந்தருளிய

# சிவாநந்தசுவாமிகள்

மாணாக்கருளொருவராகிய

கருவூரைச்சார்ந்த

நல்லமாகாளிப்பட்டி

## சு. தெய்வசிகாமணிக்குருக்கள்

இயற்றிய

பஃறொடை வெண்பா.

சீர்பூத்த வேதாந்த சித்தாந்தத் துட்பொருளாய்ப்
பார்பூத்த முக்கட் பரஞ்சுடராய்க்—கார்பூத்த

வண்ணப் பெருமானு மாமலர்வாழ் வானுங்கண்
ணெண்ணப் படுமா யிரத்தானும்—விண்ணப்பஞ்

சாற்றிப் பணியுந் தனிமுதலாய்த் தொண்டரகம்
வீற்றிருக்கு ஞான விளக்கொளியாய்—மாற்றமனங்

காண்டற் ககோசரமாய்க் கற்பனையொன் றில்லாதாய்
வேண்டெவ் வுயிர்க்கும் விலட்சணமாய்க்—காண்டகுசீர்த்

தொண்டரெலா முய்வான்சிற் சோதி யருண்மேனி
கொண்டு மதிநதிவேய் கோடீரம்—வெண்டலைகொள்

மாலிகையெண் டோளத்த மான்மழுவெண் மால்விடையோர்
பாலிகையெண் ணான்கறஞ்செய் பார்ப்பதியாள்—வாலியஃிற்

றங்கண்மணி மாலை யனைத்துந் துலங்கிடவே
செங்கயிலை வாழுஞ் சிவபெருமான்—றுங்கமிகுஞ்

சந்நிதியின் முன்னர்ச் சதுர்முகவன் சேயெனப்பேர்
மன்னி யுதித்தரிபு மாமுனிவ—னுன்னதமாப்

பெற்றவருண் மெஞ்ஞானப் பேரின்ப நிண்ணயத்தை
யுற்ற நிதாகனுக்கங் குள்ளபடி—சொற்றதெனுந்

தூய வடமொழியிற் சொன்னமா விதிகாச
மாயசிவ ராசியத்தா ருமசிச—மேயபுக

ழுள்ளரிபு கீதையினை யுள்ளபடி யெல்லோருங்
கள்ளமற வெளிதாக் கற்றுணரத்—தெள்ளுமறை

யின்மொழியோர் கோமா னிடைமருதூர்க் கண்ணெழுந்த
நன்மொழியோ ரேத்துலக நாதமகான்—றென்மொழியி

னத்தியா ரும்பரவு நாற்பத்து நான்கென்னு
மத்தியா யத்தொருநூ லாக்கினு—னத்தகைசே

ரிந்நூலை யாரு மெளிதிலுணர்ந் துய்யும்வணம்
முன்னா லுரைத்த முறைவழுவா—தெந்நாளு

மேரோங்கு சைவத் தியலோங்கு பத்தியுளான்
பாரோங்கு மேழிப் பதாகையுளான்—சீரோங்குங்

கங்கைகுலத் தெண்ணீர்க் கடலிலெழு விண்மணியான்
செங்குவளை மாலையணி திண்புயத்தா—னங்கருணை

மெய்யுடையான் கல்வி வியப்புடையான் கற்பகநேர்
கையுடையான் ஞானக் களிப்புடையான்—செய்யமகப்

பேறுடையான் செல்வப் பெருக்குடையான் சென்னிமிசை
யாறுடையா னன்பரடிக் கன்புடையான்—வீறுடைமை

மங்காத கொங்கு வளநா டதிற்சிறந்த
நங்காஞ்சி யென்னு நதிசூழ்ந்து—கொங்காருந்

தண்டா மரைமலரா டன்முகமென் றெம்முகமுங்
கொண்டா டரவக் குறிச்சியுளான்—கண்டார்கட்

கின்பைப் பெருக்கு மிராமசா மிக்குரிசி
லன்புடனே யச்சிட் டளித்திடெனத்—துன்பகற்றும்

பல்லுயிர்மேற் காருண்யம் பாச வயிராக்யம்
நல்லசிவ பத்திபர ஞானமெனச்—சொல்லலுறு

மிந்நான்கு மொன்ரு விசைந்தோர் வடிவெடுத்த
நன்ளு டெனும்பாண்டி நாட்டினிடைப்—பன்னளும்

பொன்னிலவு கோயிலூர்ப் பொன்னம் பலநாதன்
முன்னிலையி னிந்நூன் முழுதாய்ந்து—நன்னயமா

வச்சிட் டளித்தனன்வை யத்திடையென் போல்வாரு
மெய்ச்சிட்டர் தாமும் விமலான்ம—நிச்சயமா

மெய்வாழ் வடைந்து வினைவாழ்வை வேரறுத்திங்
குய்வா னருளே யுருவாகி—யையாற்றிற்

றங்குஞ் சிவாநந்த சற்குருவின் பொற்பாத
பங்கயத்திற் குள்ளன்பு பற்றியே—துங்கமிகுஞ்

சீலம் புனையுந் திருப்பணிசெய் மெய்த்தொண்டன்
ஞாலம் புகழ்சோழ நன்னாட்டிற்—சோலை

மருக்கதிர்சூழ் மேன்மாட மாளிகைசூழ் தஞ்சைத்
திருக்கரந்தை யம்பதிவாழ் சீரோன்—விருப்பொன்றின்

மேவடியார் நட்புடையான் வீரபத்தி ரக்கவிஞன்
ஓவலிலா வன்பா லுவந்து.



இஃது

இந்நூலில் முன்னுள்ளது

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

திருவிடைமா மருதூரில் வசிப்போ னாகித்
தியக்கமிலாப் பிரமகுலத் துதித்தோ னாகி
யிருமையிலா வகண்டவுணர் விசைந்தோ னாகி
யெப்போது மின்பமிகு மூலக நாத
னிருமலமாம் வடமொழியா னிகழ்த்தப் பட்ட
நிரதிசய மகிமையுள விந்த நூலை
யருள்வடிவாம் பரமசிவ னருளி னாலே
யற்புதமாந் தமிழ்க்கவியா லமைத்தா னன்றே.

19/5

உ

தஞ்சைமாநகரம்

ந. வீரபத்திரபிள்ளை

விளம்பிய

எண்சீர்க்கழிநெடிலடி

யாசிரிய

விருத்தம்.

அத்தனன்றருள் வண்ணம் ரிபுமுனி
யாய்நிதாகற் கருள்வடநூலினை
அத்தியாயங்க ளற்பத்திரண்டினுள்
ளாயிரத்துத் தொளாயிரத்தோடிரு
பத்திரண்டு விருத்தத்தமிழினாற்
பாடினனிடை மாமருதூருளான்
உத்தமாநந்தத் தாண்டவற்கன்புளா
னுலகநாத னெனும்மறைவல்லனே. (1)

அன்னநூலை யரவக்குறிச்சிவா
ழஷ்டலட்சுமி வாசன்மெய்யன்புடன்
றன்னதுள்ளத் தலத்திடைத்தேசிகன்
றாளைவைத்தநற் சைவசிகாமணி
இந்நிலம்புகழ் கங்கைகுலாதிப
னிராமசாமி யெனுஞ்சுகுணாகரன்
பன்னுமச்சிற் பதித்திடவேண்டியிப்
பாரெலாஞ்சுகம் பற்றச்செய்தானரோ. (2)

சிதம்பரம் ஸ்ரீமத் பொன்னம்பல ஞானதேசிகர் மடாலயம்
ஸ்ரீமத் சிதம்பரஞானதேசிகரின் மாணவர்
மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதர்
ஸ்ரீமத் நாராயணசுவாமிகளியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

பாடல்சால்சிறப்பிற்
பாண்டிநாடே
நுதல்விழிநாட்டத்
திறைதமிழ்தெரிந்துந்
சேதுகாவலர்
வைகியநகரா
திருமலிதருவின்
விசும்பிடைச்செலீஇ
யொளிகளுன்மலரொடு
மிகைகொளீஇவிரிந்து
பேரின்பவெள்ளம்
தேக்கெறிந்துநசையைப்
தம்மொடுபயின்ற
னொடுங்கியவுளத்த
யோகைநனிகொளு
யண்மியதாண்டவ
மட்டுண்வாழ்க்கையர்
கட்டழகதனிற்
னழியிழியின்பத்
வுள்ளுவர்ப்புறீஇ
வாய்நீருமிழ்ந்து
நகைப்பதுபோலு
தண்டலைஞெமிர்ந்த
மறையவர்முழக்கு
வணிகர்முழக்குங்
முழுநர்முழக்குங்
கோவிலூரதனின்
னெல்லைநாயகிதன்
யொன்றேபொருளென
வென்றாழெனவே
முத்திராமலிங்க
தண்ணளிக்கிலக்கா
ஞாலத்தின்புணீஇக்
கண்டமெய்த்துறவார்
ளோங்கியதுறவினைத்
வருணைசலப்பேர்க்
வடமொழியதனி

பரதத்தோங்கிய
பழம்பதியெனப்புகழ்
முதல்வனுட்டினிற்
கமழ்தருமினிய
பாதுகாவலில்
மைமுகிறவழூஉந்
பருவரைதழீஇ
யசும்புறுதேற
தளவமதன்றலை
தகைபடக்கிடப்பது
பெருகமாந்தி
போக்கியமுனிவரர்
செம்மையதாதலி
துடலதாய்வணங்கி
வும்பர்நாடதனை
ரவாப்பெருக
மங்கையர்சிறந்த
கட்டுண்டிறத்தின—ராதலி,
தழுந்தினரிவரென
யொடுங்காதெள்ளுபு
வானவர்தம்மை
நறுநதிவைகரைத்
வண்டறைமுழக்கு
நறுமணமுழக்கும்
கணிகையர்முழக்கு
தொழுநர்முழக்கு—நிலைபெறும்,
மேவுறுமளிவிழி
னெல்லையிலருள்பெறீஇ
வுலகமுணரிய
யெழில்பெறவிளங்கு
முனிகுருபரன்சீர்
யுண்ணசையொழீஇ
காலுமடையெனக்
தொண்டர்தங்குழுவினு
தாங்கியபெருமைய
கருணைகரன்றன்
னடைபெறுரிபுமொழி

ஓதையைத்தமிழி லோதியருள்கென
வளம்பலபொலியுந் தலம்பலவற்றினும்
பம்பியபுகழ்பெறு செம்பிநாடதனி
லிடைமருதூரி னடவிறையருண்மிகப்
பெற்றுயர்ஞானப் பெட்புறுசீல
னந்தணர்குலத்தி லந்தவதரித்தோ
னலகிலுயர்தவத் துலகநாதப்பேர்
பூண்டதுறவறக் காண்டகுமுனிவரன்
மொழிபெயர்த்தனன்மெய் விழிபெறவெவரும்
பனையிதழதனில் வனைபெறுமதனை
யெழுதாவெழுத்தினிற் பழுதேயிலாது
துறவினிற்சுகனாய் யறிவினிற்சனகனாய்ப்
பதிகருணாநிதி பொதிதருமுளத்தனாய்த்
தில்லையில்வதிதரு மெல்லையில்பெருமைய
பொன்னம்பலனெனம் புனிதகுருபரன்
பதிப்பித்தனன்முன் படிப்போர்க்கின்னாள்
புத்தகங்கிடைத்தில தாதலிற்புதிதாய்ப்
பதிப்பியுமெனவே பாரவர்தவத்தின்
பலமெனப்போந்த நலமுறுகோவிலூர்
ஞானதேசிகனாய் மாணவர்க்கென்று
மந்தமிலாப்பொரு டந்தெவர்தமக்குந்
தண்ணளிசுரக்கும் புண்ணியக்குரிசில்
குருமகாதேவத் தெருண்மிகுமுனிவர
னாணையிட்டன னதுதலைக்கொளீஇ
வாட்டமில்செல்வக் கோட்டையூரதனில்
வாழ்தருவணிகன் றாழ்வறுதனிகன்
சொல்லொணாப்புகழ்பெறு வெல்லுறுபொறிய
வீரசேகரன்றாள் வேண்டிப்பணிந்த
வடியவர்குழுவினுட் படிதருகவீசொ
வழகப்பவேளொடு மழவேற்றண்ணல்வாழ்
புதுவைநாடதனிற் கதுவியசெல்வப்
பனசையில்வாழும் தனமிகுவணிக
னேவராயினுங் தாவறுநீற்றினைக்
குளத்தினிற்கொண்ட கொள்கையராயி
னுண்ணெஃகிழ்புருகி யுவப்புடனவர்தமைப்
பேணிப்பணியும் பெருந்தவச்செல்வன்
சீனாழனாச் சின்னையவேளு
மண்மினருவக்கு மணிதிலைவாழுமெஞ்
செம்மலாரிய சிதம்பரமுனிவரன்
றாட்டுணைபரவி வேட்டவைவிடீஇக்
கற்றுத்துறைபோகிய முற்றவக்குரிசில்
சுப்பையமுனிவரன் றுணைகொடு
பதிப்பித்தனரால் பண்புமீக்கொளவே.

ஆக அத்தியாயம் 44-க்கு திருவிருத்தம் 1924.

உ

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீகணேசாயநம:

# ரிபுகீதை.

## முதலாவது

## நூல்வரலாறும், ஆன்மநிர்ணயமும், சுவாநுபவமும் உரைக்கும் அத்தியாயம்.

### பரசிவ வணக்கம்.

ஆனைமுக னாறுமுக னருளாந் தேவி
  யநந்தகண மளவற்ற முனிவர் தேவ
ரேனையுள நல்லன்ப ரியாவ ராலு
  மெப்பயனும் பெறவேண்டி யிதயத் தின்க
ஞானமற வுபாசிக்கப் பட்டன் னோர்க்கிங்
  குவந்தபய னருள்கருணை மூர்த்தி யாகி
வானமென வகண்டசிதா காய மான
  வத்துவதாம் பரசிவனை வணங்கல் செய்வாம். (1)

### நடேசர்.

சுத்தசிதா காயமதா மெந்த வத்து
  சுதந்தரமாந் தனதுபர சத்தி யோடே
பத்தரெலா முய்யும்வணங் கருணை யாலே
  பரதத்வ வடிவாகத் திரண்டெ ழுந்தே
யத்துவிதா நந்தமுண ரநுப வத்தி
  னதிசயமிங் கெல்லோரு மறியும் வண்ண
நித்தமுமே யாநந்த நடனஞ் செய்யு
  நிதமந்த வத்துவினை நினைவில் வைப்பாம். (2)

இதுவுமது.

எவ்வடிவி னிடப்பாக மிலங்கா நின்ற
விவ்வுலக மனைத்துக்கு மாதா வாகு
மெவ்வடிவின் வலப்பாக மிலங்கா நின்ற
விவ்வுலக மனைத்துக்கும் பிதாவு மாகு
மெவ்வடிவின் பதத்திலுள சிலம்பி னோசை
யெவ்விதமா நாலுக்கு மேது வாகு
மெவ்வடிவின் விழிமூன்று மிலங்கு மியாவு
மிணையற்ற வவ்வடிவே யெம்மைக் காக்க. (3)

சிவன் முதலியோர் வணக்கம்.

அகிலசகன் னயகனு யநந்த சத்தி
யமைவுற்ற வகண்டசிவன் சரணம் போற்றி
நிகிலசகன் மாதாவாய் நித்யா நந்த
நிசவடிவா மம்பிகையின் சரணம் போற்றி
சகலவித விக்கினமுந் தீர்த்தெல் லோர்க்குஞ்
சாதகமாம் விநாயகனற் சரணம் போற்றி
தகைமைமிகு மன்பர்க்குச் சிவஞா னத்தைத்
தந்தருளுஞ் சண்முகனற் சரணம் போற்றி. (4)

நூல்வரலாறு.

சகமெவையுங் கற்பித்த பரேச னிந்தச்
சகத்திலுள சீவரெலா முய்ய வேண்டி
வெகுவிதமாங் கருமமுபா சனைகண் ஞானம்
விளம்பியிடும் வேதத்தை முன்புண் டாக்கி
மிகவுமகா நுண்மையதா மவ்வே தத்தின்
மெய்ப்பொருளை நன்றாக வுணரும் வண்ணம்
பகர்மிருதி புராணமிதி காச மற்றும்
பலவிதமா நூற்களையும் படைத்தா னன்றே. (5)

அகிலவித நூற்களினு மேலாய் நின்ற
வருமறையின் முக்கியதாற் பரிய மான
விகலமுறு வத்துவித நிர்ண யத்தை
விளம்பியிடும் புராணமிதி காசங் கட்கு
ளிகழ்வில்சிவ ரகசியமென் றுரைக்கு நாம
மிசைந்தவொரு விதிகாச மிகவு மேலாம்
புகலியவிவ் விதிகாசம் பனிரண் டம்சம்
பொருந்தியதா மெத்தவுமே புனித மாகும். (6)

பரவியவிவ் விதிகாசந் தன்னை முன்னம்
 பரமசிவன் பரமசிவைக் குபதே சித்தா
னருள்வடிவா மம்பிகைமற் றிந்த நூலை
 யருளுடனே சண்முகனுக் குபதே சித்தா
ஞரியசிவ பத்திமிகுஞ் சைகீ ஷவ்யற்
 குவகையுடன் கந்தனிதை யுபதே சித்தான்
விரவுசிவ கருணையினு லனைத்தும் பெற்ற
 வியாதனிதைச் சூதமுனிக் குபதே சித்தான். (7)

சூதமுனி மற்றைமகா முனிவர்க் கெல்லாஞ்
 சூட்சுமமா மிந்நூலை யுபதே சித்தா
ஞேதியவிவ் வகையாக வுலகத் தின்க
 ணுத்தமமா யுளவிந்நூல் விளங்க லாயிற்
ருதிஉள வம்சங்கள் பனிரண் டுக்கு
 ளத்யந்த மதிசயமா மாரு மம்ச
மீதினைமுன் பொருகாலங் கைலா யத்தி
 லிணையில்சிவன் ரிபுவுக்குத் தனித்து ரைத்தான். (8)

அரியதினு மரிதான விவ்வம் சத்தி
 லமைவுற்ற வத்யாய மைம்ப தாகும்
பரவுமிதி னுற்பத்து நான்கத் யாயம்
 பரமசிவ னருள்செய்த பரிசே யாக
நிருமலமாய் ரிபுமுனிவ னிதாக வோதி
 நிகிலமகா முனிவர்க்கு நிகழ்த்த லாலே
யுரைதருமிவ் வத்யாய மனைத்து மிங்கே
 யுத்தமமாம் ரிபுகீதை யென்ன லாகும். (9)

இன்னவிதம் வடமொழியா லீசன் ருனே
 யியம்பியிடு மிவ்வாரு மம்சத் தின்கண்
முன்னருள வாமொருமூன் றத்யா யங்கண்
 முடிவிலுள வாமொருமூன் றத்யா யங்கள்
பன்னியிடுங் கருத்துடனே நடுவி லுள்ள
 பரமான நாற்பத்து நான்கத் யாய
மன்னியவிக் கீதையினை முமுட்சு வெல்லா
 மதிக்கும்வணந் தமிழ்க்கவியா யமைக்கின் றேன்யான்.()

சருவஞ்ஞ சிகாமணியாம் பரேசனேரே
சாரமதாம் வடமொழியா லுரைத்த நூலை
யொருசிறிது மறியாவென் புன்மை வாக்கா
லூனமற வுரைத்திடுத லெவ்வா தென்றே
கருதிவெறி தேயிருந்த வென்க ருத்தைக்
கரியாக நின்றெவையு மசைக்குமீச
னரியதினு மரிதான விந்தநூலை
யமைக்கும்வண மசைப்பித்த திறமை யென்னே. (11)

சருவசரா சரங்கட்குஞ் சாட்சி யாகிச்
சகலத்து மாந்தரமா யந்தர் யாமி
சொருபமதாம் பரமசிவ னுஞ்ஞை யாலே
சுதந்தரமே செறியாத வென்றன் வாக்கா
லுரைதருமிந் நூற்கவியி லுள்ள தோட
மொன்றையுமே சாதுக்கண் மதித்தி டாமற்
பெருமைமிகு மிந்நூலின் பொருளை நாடிப்
பிழைகளெலாம் பொறுத்திதனைப் பேணல் வேண்டும். ()

சூதமுனி நைமிசவா ரணியத் துள்ள
சுத்தமகா முனிவரரை நோக்கிச் சொல்வான்
வேதியரே மீளவுமச் சைசீ ஷவ்யன்
விமலசிவன் சுதனான கந்தன் றன்னைக்
காதலுறு மனேகமுனி கணங்க ளோடுங்
கறையற்ற வனேகசிவ கணங்க ளோடும்
வீதலுறு மகிழ்வுடனே யிறைஞ்சி யேத்தி
விநயமுட னிவ்விதமாய் வினவி னானல். (13)

அருள்வடிவே யருள்வடிவாம் பரேசன் சேயே
யடைக்கலமென் றடைந்தவரை யாளுங் கோவே
சருவமுணர் சிகாமணியே சிவமே நோக்குஞ்
சண்முகவா நினதருளா லிந்தம் சங்க
விருளறவே கேட்டனன்மே லாரு மம்ச
மினியருளி நின்வசனச் சுதையி னாலே
கருகுபவ தாபமெலா நீக்கி யென்னைக்
காத்திடுவா யெனவோடுங் கந்தன் சொல்வான். (14)

உரியகுண மேலான சைகீ ஷவ்யா
வுனதுதிட பத்தியினுன் மகிழ்வுற் ருேம்யாஞ்
சருவசகன் ஞயகனும் பரேசன் ருனே
சாட்சாதாய்ச் சகலருக்கு மிதமே யாக
நிருமலமாம் ரிபுமுனியை நோக்கி முன்பு
நிகரற்ற கைலாய கிரியிற் சொன்ன
விருமையிலா ஞானமகா வர்ண வத்தை
யெல்லோர்க்கு மிதமாக விங்குச் சொல்வாம். (15)

முன்பொருகாற் சம்முதலா நற்கு ணங்கண்
முழுதுமுள ரிபுமுனிவன் கைலா யத்திற்
றுன்பமெலாந் தீர்க்கின்ற வெம்பி தாவைத்
துகளறவே தரிசித்து மிக வணங்கி
யின்பமிகு மகண்டபர ஞானம் வேண்டி
யீசனரு ளூரமாகக் கிடைப்ப தற்கச்
சம்புவினைக் குறித்துமிகு மன்பி ஞேடே
சாலவுமே விநயமுடன் போற்ற லுற்ருன். (16)

போற்றியபின் பரசிவனை நோக்கிச் சொல்வான்
பூரணமாஞ் சற்குருவே யின்றெ னக்குத்
தோற்றியவித் துவிதமெலாந் துடைக்கத் தக்க
துகளற்ற வத்துவித ஞானந் தன்னை
யேற்றியநற் கருணையினு லுபதே சித்திங்
கெல்லோரு மிதன்வழியா யுய்யும் வண்ணஞ்
சாற்றியருள் செய்திடுவா யென்ன லோடுஞ்
சங்கரனுஞ் சரியெனவே யருளிச் செய்தான். (17)

அயன்சுதனும் ரிபுமுனிவா! வேதாந் தத்தி
னருத்தமெலா மழுக்கறவே தெரிவிக் கின்ற
வியல்புளதாஞ் சூத்திரமோர் நான்கத் யாய
மியாமருளிச் செய்ததிதன் விசாரத் தாலே
பயமருவா வகண்டபர ஞான முண்டாம்
பவநீங்கும் பரப்பிரமா நந்த மெய்து
மயலறநீ கேளெனவே யதனை முற்று
மகிழ்வுடனே ரிபுவுக்கு மகேசன் சொன்ஞன். (18)

சொன்னவுடன் ரிபுமுனிவன் சூத்திரத்தின்
சூட்சுமமாம் பொருளையெலாங் கேட்ட வண்ணம்
பின்னமற மனதினிடை மனனஞ் செய்து
பின்னுமதைத் தியானித்துப் பூன்ற ஞான
மன்னியதாற் பவத்துன்ப மனைத்து நீங்கி
மகத்தான வானந்த மருவி னேனை
யன்னசிவன் றிருவுருவை யிறைஞ்சி யேத்தி
யதிசயமா மன்புடனே போற்ற லானன். (19)

அருள்வடிவா யெனையாண்ட சிவமே போற்றி
யானந்த கனமான சிவமே போற்றி
சருவவிலட் சணமான சிவமே போற்றி
சகலர்க்கு மிதமான சிவமே போற்றி
நிருமலமாய் நின்றபர சிவமே போற்றி
நீக்கமற நிறைந்தபர சிவமே போற்றி
யிருமையிலா வேகபர சிவமே போற்றி
யெங்குமுள வகண்டபர சிவமே போற்றி. (20)

அகிலசகக் காரணமாஞ் சிவமே போற்றி
யம்பிகையி னுயகமாஞ் சிவமே போற்றி
நிகிலபரி பூரணமாஞ் சிவமே போற்றி
நிரவயவ நிட்களமாஞ் சிவமே போற்றி
விகலமிலா விபுவான சிவமே போற்றி
வேதாந்த வேத்தியமாஞ் சிவமே போற்றி
சகலசகன் னுயகமாஞ் சிவமே போற்றி
சத்தியசிற் சுககனமாஞ் சிவமே போற்றி. (21)

சரமசர மெவைக்குமதிட் டான மான
சன்மயமாஞ் சங்கரநின் சரணம் போற்றி
பரமபரம் யாவையுமே விளக்கா நின்ற
பாஞ்சுடராம் பரசிவநின் சரணம் போற்றி
விரவியவெவ் வுயிர்கட்கு மின்ப நல்கும்
விமலசுக வடிவேநின் சரணம் போற்றி
யரியயனே முதலான வனேக கோடி
யமரர்கணம் வணங்கியநின் சரணம் போற்றி. (22)

பத்தருடைப் பவதாப மனைத்து நீக்கிப்
பரமசுக நல்கியநின் சரணம் போற்றி
சுத்தபர ஞானத்தை யெளிதாய்த் தந்து
சோர்வையெலா நீக்கியநின் சரணம் போற்றி
சித்தமுதற் கப்பாலாய்ச் செறிந்து நின்ற
சிதாகாய வடிவேநின் சரணம் போற்றி
வித்தரமாம் வேதாந்தப் பொருளை யெல்லாம்
விளக்கியசற் குருவேநின் சரணம் போற்றி. (23)

இன்னவிதம் பரசிவனைத் துதித்துப் பின்னு
மிறைஞ்சியவ னநுஞ்ஞையினு லவிடம் விட்டுப்
பின்னமிலா வாநந்த வநுப வத்தின்
பெலமுடனே யங்கங்கே சஞ் சரித்து
மன்னுசில வதிகாரிக் கிஞ்ஞா னத்தை
மகிழ்வுடனே யங்கங்கே யுபதே சித்த
பின்னர்சில வேதுவினுற் புவியின் கண்ணே
பிறங்கியதாங் கேதாரத் தலத்தில் வந்தான். (24)

பாரின்மிசை யிமகிரியின் சிகரத் தின்கட்
பற்றியதாங் கேதாரத் தலத்தி ருந்து
பூரணமாய்ப் பொருந்தியவக் கேதா ரேசன்
பூசனையே புரிந்துமிக விரத்தி கூர்ந்து
முறுதீர சிவபத்தி சிவஞா னங்க
ளுடமாகி விபூதியுட னுருத்தி ராக்க
வாரமுதற் சிவசின்ன மனைத்தும் பூண்ட
வயன்சுதனும் ரிபுமுனியை முனிவர் கண்டார். (25)

கண்டவுட னிதாகசுக ராதி யான
களங்கமிலா முனிவரெலா மன்பு கூர்ந்து
தண்டெனவே நன்றாக வணங்கி யேத்தித்
தகைமைமிகும் ரிபுமுனியை நோக்கிச் சொல்வார்
பண்டொரு காற் பரசிவனைக் கைலா யத்திற்
பத்தியுடன் பாங்காக வாரா தித்தவ்
வண்டர்பிரான் கருணையினு லகண்ட ஞான
மகிலர்க்கு மிதமாக வடைந்தா யன்றோ. (26)

சலனமிலா வகண்டபர ஞானம் பெற்ற
சற்குருவே பரமசிவன் கருணை யாலே
கலனமிலாச் சுருதிமுடிச் சூத்தி ரத்தின்
கருத்தான வகண்டபர சிவஞா னத்தை
யலைவறவே நீமுன்ன மடைந்த வண்ண
மத்யந்த கருணையினு லெங்கட் கெல்லா
முலைவுதரு பவபந்த மனைத்து நீங்கி
யுத்தமமா முத்திபெற வருள்செய் வாயே. (27)

தேசிகநின் கருணையினற் கிடைப்ப தான
திவ்வியமா ஞானமெனு நாவாய் கொண்டே
நீசமுறுஞ் சமுசார சாக ரத்தி
னின்றமல பரப்பிரம தீர மேறிச்
சாசுவத சொரூபமதா யிருப்ப மென்றே
சகலருமே விநயமுடன் சாற்ற லோடு
மாசணுகா ரிபுமுனியு மதனைக் கேட்டு
மகிழ்வுடனம் முனிவரரை நோக்கிச் சொல்வான். (28)

பரமசிவன் பூசனையே முதலாம் பத்தி
பண்ணியதா லவனருளுக் குரிய ரான
நிருமலமா முனிவரரே யுங்கட் கெல்லா
நிகழ்த்தவொணு ரகசியமாம் பொருளே யில்லை
யரியசிவ னடியார்க்கு மறைக்கத் தக்க
தானபொரு ளெங்கேனு மெவையு முண்டோ
வுரியவரே யாதலினு லுங்கட் கின்றே
யுத்தமமா ஞானத்தை யுபதே சிப்பாம். (29)

குறைவற்ற பரமசிவன் முன்பெ னக்குக்
குறைவறவே கருணையினு லுரைத்த வண்ணங்
கறையற்ற சுருதிமுடிச் சூத்தி ரத்தின்
கருத்தான ஞானத்தை யுரைப்பக் கேண்மின்
மறுவற்ற முனிவரரே யிஞ்ஞா னத்தான்
மகத்தான பவபந்த முடனே நீங்கி
நிறைவுற்ற பரப்பிரம வடிவே யாகி
நீரென்று நிச்சலமாய் நின்று வாழ்வீர். (30)

இந்தவித நிதாகசுக ராநி யான
 விம்முனிவர் தமைநோக்கிப் பொதுவா யோநிப்
பிந்நிமகா தேவனைமுக் காணத் தாலும்
 பிரியமுடன் வணங்கிமிக வன்பு கூர்ந்த
வந்தரிபு மாமுனிவ னிதாக னென்னு
 மரியமகா முனிதனையே தலைமை யாக்கித்
தொந்தமுறு வகண்டபர சிவஞா னத்தைத்
 துகளறவே யருள்செய்யத் தொடங்கி னுல். (31)

பூரணமா யகண்டசிதா காயமாகப்
 பொருந்தியுமா பதியான பரசி வன்றான்
பாரினையே முதலான சகத்தை யெல்லாம்
 படைத்தவுபா தானநிமித் தங்க ளென்னுங்
காரணமா மன்றியுமச் சகத்தை யெல்லாங்
 கலந்துண்மை தருவோனு மொளிசெய் வோனுஞ்
சாரமிலா வவற்றிற்கின் பஞ்செய் வோனுஞ்
 சத்தியசிற் சுககனமாஞ் சம்பு தானே. (32)

அருளுருவாம் பரமசிவ னநந்த சத்திக்
 காதார மாகவமர்ந் திருப்ப தாலே
சருவசகக் காரணமா மவ்வீ சற்குச்
 சமமேனு மல்லதவற் கதிக மேனு
மொருபொருளு மிலையதனு லன்னோன் றானே
 யோதுமுபா தானநிமித் தங்க ளாவன்
கருதியவவ் வீசற்கு மேலாய் வேறோர்
 காரணமு மொருகாலு மெங்கு மில்லை. (33)

செவ்வியசிற் சுககனமாம் வத்து தானே
 சின்மயமாந் தனதுபர சத்தி யாலே
திவ்வியமங் களவடிவாய்த் திரண் டெழுந்து
 திரிபுரசங் காரமுத லீலை செய்திங்
கெவ்வமெலாந் தீர்த்தன்ப ரெல்லோருக்கு
 மிதமான போகமொடு மோட்ச நல்கு
மவ்விதமாம் பரமசிவ வத்து தானே
 யருளதனு லெம்மையெலா மென்றுங் காக்க. (34)

ஆன்மநிர்ணயம்

நிகிலவித சாதனமு நேரப் பெற்ற
நிதாகநினக் கினியான்ம நிர்ண யத்தை
யகிலசகன் ஞயகனும் பரேசன் முன்ன
மத்யந்த கருணையினு லறைந்த வண்ணஞ்
சகலருமே யறியும்வணஞ் சுருங்கச் சொல்வாஞ்
சாலவுமே ரகசியமா மிவ்வர்த் தத்தை
யிகழ்வறவே நன்ருகக் கேட்டு ணர்ந்தோ
ரெப்போதும் பரப்பிரம வடிவே யாவர். (35)

ஏகபரி பூரணமா மறிவே யான்மா
விவ்வறிவே விவகார திசையின் மைந்தா
வாகமுத லநந்தவித வுபாதி கட்கு
மதிட்டான வடிவாக வமர்ந்து நிற்குந்
தேகமுத லனைத்துக்குஞ் சாட்சி யாகுந்
திருசியமாம் பொருட்கெல்லா மதீத மாகும்
பாகமற விசாரிக்கி லிவ்வான் மாவே
பகுப்பற்ற பரப்பிரம சொரூப மாமே. (36)

அறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
யழியாம லிருப்பதனுற் சத்து மாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
யனைத்தையுமே விளக்குவதாற் சித்து மாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
யகிலர்க்கும் பிரியமதாற் சுகமு மாகு
மறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
யந்தமிலா திருப்பதனு லநந்த மாமே. (37)

அத்துவித வறிவுருவே பிரம மாகு
மவைதானே யகிலவதிட் டான மாகு
மித்துவித மனைத்துக்கு மதீத மாகு
மேகபரி பூரணமா யிலங்கா நிற்கு
நித்தியநிர்க் குணமாகு நிமல மாகு
நிரஞ்சனமா நிட்கிரிய சுபாவ மாகுஞ்
சத்தியசிற் சுககனமாஞ் சாந்த மாகுஞ்
சந்ததமுஞ் சகலர்க்கு மான்மா வாமே. (38)

ஒருவெளியா யிருக்கின்ற வானந் தானே
யுற்றகட மடமென்னு முபாதி யாலே
யிருவெளிபோற் கடவான மடவா னென்றே
யிவ்வுலகி லிலங்கியிடு நீதியே போ
லொருவடிவா மறிவான வத்து தானே
யுண்மையிலா வவித்தைமுத லுபாதி யாலே
யிருவடிவ மானதுபோ லான்மா வென்று
மெங்குமுள பிரமமென்று மிலங்கு மன்றே. (39)

கடமடமா முபாதிகளை நேதி செய்யிற்
கடவானு மடவானு மொன்றே போல
மடமைமுத லுபாதிகளை நேதி செய்யின்
மாசற்ற வான்மாவும் பரமு மொன்றே
யிடமருவும் வேதாந்த விசாரத் தாலே
யிருமைதரு முபாதியெலா நேதி பண்ணித்
தடமருவு மான்மபர வைக்கி யத்தைத்
தடையறவே முமுட்சுவெலா முணர வேண்டும். (40)

ஏதமுறு மவித்தைமுத லான்மோ பாதி
யிலங்கியிடு மாயைமுதற் பிரமோ பாதி
பேதமெலா மான்மாவுக் கபின்ன மான
பிரமத்திற் கற்பிதமாய்த் தோற்ற லாலே
யீதெவையு மதிட்டானந் தனக்கு வேறா
யெள்ளளவு மிலையெனவே நேதி பண்ணி
யாதிமுடி யொன்றுமிலா வகண்ட மான
வான்மபர வைக்கியமே யறிய வேண்டும். (41)

சுத்திகையிற் கற்பிதமாம் ரசத மந்தச்
சுத்தியலா தன்னியமா யிலாத தேபோற்
சத்தியசிற் சுககனமா மான்மா வின்கட்
சலனமுதற் கற்பிதமாய்த் தோன்று நின்ற
வித்துவிதம் யாவையுமிவ் வான்மா வன்றி
யிதரமதா யிலையெனவே நேதி பண்ணி
யத்துவித பூரணமா யமர்ந்து நின்ற
வான்மபர வைக்கியமே யறிய வேண்டும். (42)

ஆன்மாவிற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
 மான்மாவுக் கயலாக வென்று மில்லை
யான்மாவுக் கயலாகப் பிரம மில்லை
 யப்பிரமந் தனக்கயலா யான்மா வில்லை
யான்மாவே பிரமமதாம் பிரமந் தானே
 யான்மாவா மணுவுமிதி லைய மில்லை
யான்மாவா மகம்பிரம மென்றெப் போது
 மான்மபர வைக்கியமே யறிய வேண்டும். (43)

அறிவுருவா மான்மாவே யிருப்ப தாலே
 யறையுமனன் மாவெனுமோர் வாக்கு மில்லை
யறிவுருவா மான்மாவே யிருப்ப தாலே
 யறியுமனன் மாவெனுமோர் மதியு மில்லை
யறிவுருவா மான்மாவே யிருப்ப தாலே
 யமருமனன் மாவெனுமோர் சகத்து மில்லை
யறிவுருவா மான்மாவே யென்று மெங்கு
 மசஞ்சலமா யமர்ந்ததென நிச்சயிப் பாய். (44)

அறிவுருவா மான்மாவே யிருப்ப தாலே
 யன்னியமா மவித்தையிலை மாயை யில்லை
யறிவுருவா மான்மாவே யிருப்ப தாலே
 யன்னியமாஞ் சங்கற்ப விகற்ப மில்லை
யறிவுருவா மான்மாவே யிருப்ப தாலே
 யன்னியமா மாகார மணுவு மில்லை
யறிவுருவா மான்மாவே யென்று மெங்கு
 மசஞ்சலமா யமர்ந்ததென நிச்சயிப் பாய். (45)

சித்தமுத லொருபொருளு மிலாமை யாலே
 சிந்திக்கத் தகுபொருளு மென்று மில்லை
சத்தியமாய்த் தேகமுத லிலாமை யாலே
 சரைமரண முதலியவை யென்று மில்லை
யத்தமுத லவயவமே யிலாமை யாலே
 யாதான முதலியவோர் செயலு மில்லை
நித்தவறி வுருவான வான்மா வொன்றே
 நிச்சலமாய் நிலைத்ததென நிச்சயிப் பாய். (46)

விரிந்தசகக் காரணமாம் விதியி லாதால்
விசித்திரமாய்ப் பகுப்புற்ற சகத்தே யில்லை
தரந்தரமாஞ் சகத்தில்லாத் தன்மை யாலே
தயங்குசகப் பாலகனு மரியு மில்லை
பொருந்துசரா சரமெவையு மிலாமை யாலே
புகலுசகன் னுசகனு மரனு மில்லை
நிரந்தரமாய் நிறைவுற்ற வான்மா வொன்றே
நிச்சலமாய் நிலைத்ததென நிச்ச யிப்பாய். (47)

அகரமுதல் வன்னமிலாத் தன்மை யாலே
யதனையுரை யாடியிடும் வாக்கு மில்லை
தகைமிகுங் குரவனிலாத் தன்மை யாலே
தற்பரனாய் நிற்கின்ற மாணு னில்லை
வெகுவிதமா நூற்களிலாத் தன்மை யாலே
விதியுடனே நிடேதமுத லெவையுமில்லை
யிகழ்வுபெறு வறிவுருவா மான்மாவொன்றே
யெப்போது மிருப்பதென நிச்சயிப் பாய். (48)

ஒன்றிலதாந் தன்மையினு லிரண்டு மில்லை
யுபயமிலாத் தன்மையினு லொன்று மில்லை
துன்றுபய மிலாமையினு லபய மில்லை
தொடரபய மிலாமையினுற் பயமு மில்லை
நின்றசுப மிலாமையினு லசுப மில்லை
நிகழசுப மிலாமையினுற் சுபமு மில்லை
யென்றுமறி வுருவான வான்மா வொன்றே
யெப்போது மிருப்பதென நிச்ச யிப்பாய். (49)

சத்திலதாந் தன்மையினு லசத்து மில்லை
சஞ்சலமா மசத்திலதாற் சத்து மில்லை
சுத்தமிலாத் தன்மையினு லசுசி யில்லை
சொலுமசுசி யிலாமையினுற் சுசியு மில்லை
தொத்துமிட ரிலாமையினுற் சுகமு மில்லை
தொடர்ந்தசுக மிலாமையினு லிடரு மில்லை
யித்துவித மெவையுமிலா வான்மா வொன்றே
யெப்போது மிருப்பதென நிச்ச யிப்பாய். (50)

நித்தமுநீ யிலாமையினு ஞானு மில்லை
நிகழ்த்தியநா னிலாமையினு னீயு மில்லை
கத்துருவே யிலாமையினுற் காண மில்லை
காணமிலாத் தன்மையினுற் கர்த்தா வில்லை
பத்தனிலாத் தன்மையினுன் முத்த னில்லை
பகர்முத்த னிலாமையினுற் பத்த னில்லை
யித்துவித மெவையுமிலா வான்மா வொன்றே
யெப்போது மிருப்பதென நிச்ச யிப்பாய். (51)

சனனமிலாத் தன்மையினுன் மாண மில்லை
சாதலிலாத் தன்மையினுற் சனன மில்லை
யனியமிலாத் தன்மையினு லகமு மில்லை
யகமிலதாந் தன்மையினு லனிய மில்லை
மனமிலதாந் தன்மையினுன் மயக்க மில்லை
மயக்கமிலாத் தன்மையினுன் மனது மில்லை
கனவறிவாய் நிறைவுற்ற வான்மா வொன்றே
கலங்காத வத்துவென நிச்ச யிப்பாய். (52)

அந்தமிலாத் தன்மையினு லாதி யில்லை
யாதியிலாத் தன்மையினு லந்த மில்லை
தொந்தமிலாத் தன்மையினுற் றோற்ற மில்லை
தோற்றமிலாத் தன்மையினுற் றொந்த மில்லை
பந்தமிலாத் தன்மையினுல் வீடு மில்லை
பாவியவீ டின்மையினுற் பந்த மில்லை
சந்ததமுஞ் சின்மயமா மான்மா வொன்றே
சலியாத வத்துவென நிச்ச யிப்பாய். (53)

புகலுமொரு காரியமு மிலாமை யாலே
பொருந்தியிடுங் காரணமு மொன்று மில்லை
திகழுமொரு திருசியமு மிலாமை யாலே
தெரிசிக்குந் திருக்குமொரு கானு மில்லை
வெகுவிதமாந் துவிதமெலா மிலாமை யாலே
வேறுபடா வத்துவிதந் தானு மில்லை
யகிலபரி பூரணமா மான்மா வொன்றே
யழியாத வத்துவென நிச்ச யிப்பாய். (54)

ஒருபொருளு மாந்தரமா யிலாமை யாலே
யொன்றியிடும் வாகியமாம் பொருளு மில்லை
சருவமெனச் சாற்றுபொரு ளிலாமை யாலே
சந்ததமுங் கிஞ்சிலெனும் பொருளு மில்லை
புரணமிலாப் பொருளெவையு மிலாமை யாலே
பூரணமாய்ப் பொருந்துபொரு டானு மில்லை
பாவியசிற் கனமான வான்மா வொன்றே
பழுதற்ற வத்துவென நிச்சயிப்பாய். (55)

இதுவதுவென் றியம்பியிடும் பொருளு மில்லை
யிலையுளதென் றியம்பியிடும் பொருளு மில்லை
திதமெனவே நிகழ்த்தியிடும் பொருளு மில்லை
திட்டாந்தந் தாட்டாந்த மெவையு மில்லை
விதம்விதமாய் விளங்கியிடும் பொருளு மில்லை
விசித்திரமாஞ் சீவபர சகத்தே யில்லை
நிதமுமெலா மகண்டபரப் பிரமந் தானு
நிமலபரப் பிரமமதே யான்மா வாகும். (56)

நிகிலமெனத் தோற்றுவதும் பிரமந் தானு
நீயெனவே தோற்றுவதும் பிரமந் தானு
மகமெனவே தோற்றுவதும் பிரமந் தானு
மன்னியராய்த் தோற்றுவதும் பிரமந் தானு
மிகழ்சகமாய்த் தோற்றுவதும் பிரமந் தானு
மீசனெனத் தோற்றுவதும் பிரமந் தானு
மகிலவிதத் தோற்றமுமே பிரமந் தானு
மகண்டபரப் பிரமமதே யான்மா வாகும். (57)

சத்தியசிற் சுககனமா மான்ம ரூபஞ்
சகலபரி பூரணமா மான்ம ரூப
நித்தியநிர்க் குணமாகு மான்ம ரூப
நிரஞ்சனநிட் களமாகு மான்ம ரூபஞ்
சுத்தசிதம் பரமாகு மான்ம ரூபஞ்
சூட்சுமத்துஞ் சூட்சுமமா மான்ம ரூப
மத்துவிதப் பொருளாகு மான்ம ரூப
மகண்டைக ரசமாகு மான்ம ரூபம். (58)

ஆதலினு லகண்டைக ரசமே யான
வான்மாவுக் கன்னியமா யணுவு மில்லை
போதகன மாகியவவ் வான்மா வேநீ
புகன்றதிலோ ரணுவேனு மைய·மில்லை
மாதவவிவ் வான்மாவா நானெப் போது
மகத்தான பரப்பிரம சொரூப மென்றே
பேதமிலா வகண்டான்ம நிச்ச யத்தைப்
பெற்றதனாற் பவபாச முத்த னாவாய். (59)

இந்தவிதம் யாவர்க்கு மிதமே யாக
விருமையிலா வகண்டான்ம நிர்ண யத்தை
யந்தமிலா மகிமையுறு மகேசன் முன்ன
மருளியவா நிதாகநினக் கடக்கிச் சொன்னேந்
தொந்தமுறு மிவ்வான்ம நிர்ண யத்தைத்
துகளற்ற மனதுடனே யொரு காலேனும்
புந்தியுறத் திடமாகக் கேட்டு ணர்ந்தோர்
பூரணமாம் பரப்பிரம வடிவே யாவர். (60)

சுவாநுபவம்.

என்றருளும் ரிபுமுனியை மகிழ்வாய் நோக்கி
யெனையாளுஞ் சற்குருவே கைலா யத்தி
லன்றுசிவ கருணையினு லடையப் பட்ட
வற்புதமா நின்சொருப வநுப வத்தை
யின்றருளா லுரைசெய்திப் பவதுன் பங்கள்
யாவையுமே நீக்கியெனை யாள்வா யென்றே
நின்றடைவாய் வினவியவந் நிதாக னுக்கு
நேரான வுத்தரமம் முனியுஞ் சொல்வான். (61)

சத்தியஞா னநந்தப் பிரம நானே
சமுசார சங்கமிலாப் பிரம நானே
நித்தியநிட் களமான பிரம நானே
நிராகார மானபரப் பிரம நானே
தத்துவமாய்த் தனித்தபரப் பிரம நானே
தான்றானய் நின்றபரப் பிரம நானே
யத்துவித மானபரப் பிரம நானே
யகண்டபரி பூரணமாம் பிரம நானே. (62)

சன்மயமாய் நின்றபரப் பிரம நானே
சதானந்த மானபரப் பிரம நானே
சின்மயமாய் நின்றபரப் பிரம நானே
சிதாகாய மானபரப் பிரம நானே
நின்மலமாய் நின்றபரப் பிரம நானே
நிரஞ்சனமாய் நிறைந்தபரப் பிரம நானே
யென்மயமாய் நின்றபரப் பிரம நானே
யேகபரி பூரணமாம் பிரம நானே. (63)

சாதிகுல மற்றபரப் பிரம நானே
சங்கமெலாம் விட்டபரப் பிரம நானே
யாதிமுடி வற்றபரப் பிரம நானே
யனர்த்தமெலாம் விட்டபரப் பிரம நானே
கேதமெலா மற்றபரப் பிரம நானே
கெம்பீர முற்றபரப் பிரம நானே
பேதமெலா மற்றபரப் பிரம நானே
பிணிப்பெவையு மிற்றபரப் பிரம நானே. (64)

இதுவெனுமோர் பொருளுமிலாப் பிரம நானே
யானெனுமோர் பொருளுமிலாப் பிரம நானே
யதுவெனுமோர் பொருளுமிலாப் பிரம நானே
யயலெனுமோர் பொருளுமிலாப் பிரம நானே
திதமெனுமோர் பொருளுமிலாப் பிரம நானே
திருசியமே தொன்றுமிலாப் பிரம நானே
நித்முமொரு வடிவான பிரம நானே
நிச்சலமாய் நின்றபரப் பிரம நானே. (65)

அத்யந்த நித்தபரப் பிரம நானே
யத்யந்த சுத்தபரப் பிரம நானே
யத்யந்த புத்தபரப் பிரம நானே
யத்யந்த முத்தபரப் பிரம நானே
யத்யந்த மமலபரப் பிரம நானே
யத்யந்த மசங்கபரப் பிரம நானே
யத்யந்த மசலபரப் பிரம நானே
யத்யந்த மகண்டபரப் பிரம நானே. (66)

அத்யந்த சற்கனமாம் பிரம நானே
யத்யந்த சிற்கனமாம் பிரம நானே
யத்யந்த சுககனமாம் பிரம நானே
யத்யந்த சூட்சுமமாம் பிரம நானே
யத்யந்த பாவனமாம் பிரம நானே
யத்யந்த சோபனமாம் பிரம நானே
யத்யந்த சாசுவதப் பிரம நானே
யத்யந்த சாந்தபரப் பிரம நானே. (67)

கேவலசன் மாத்ரபரப் பிரம நானே
கேவலசின் மாத்ரபரப் பிரம நானே
கேவலநன் மாத்ரபரப் பிரம நானே
கேவலநா தாந்தபரப் பிரம நானே
கேவலவா காரபரப் பிரம நானே
கேவலவா காயபரப் பிரம நானே
கேவலகே வலமான பிரம நானே
கேவலகெம் பீரபரப் பிரம நானே. (68)

பகுதியுடை விகாரமிலாப் பிரம நானே
பகுதிக்கு மப்பாலாம் பிரம நானே
சகலமனத் துகளுமிலாப் பிரம நானே
சங்கற்ப விகற்பமிலாப் பிரம நானே
வெகுவிதமா நாமமிலாப் பிரம நானே
விசித்திரமா முருவமிலாப் பிரம நானே
யகமருவா வனகபரப் பிரம நானே
யகண்டசிதா காயபரப் பிரம நானே. (69)

சகலபரி பூரணமாம் பிரம நானே
சரீரமுத லுபாதியிலாப் பிரம நானே
விகலமிலா விபுவான பிரம நானே
விஞ்ஞான கனமான பிரம நானே
நிகிலவதிட் டானபரப் பிரம நானே
நிகிலமுமாய் நிகழ்கின்ற பிரம நானே
யகிலவிலட் சணமான பிரம நானே
யனேத்துமிலா வகண்டபரப் பிரம நானே. (70)

பூதமெனும் பேதமிலாப் பிரம நானே
புவனமெனும் பேதமிலாப் பிரம நானே
சாதமெனும் பேதமிலாப் பிரம நானே
சகலமெனும் பேதமிலாப் பிரம நானே
வேதமெனும் பேதமிலாப் பிரம நானே
விதிமுதலாம் பேதமிலாப் பிரம நானே
யேதுமொரு பேதமிலாப் பிரம நானே
யெப்போது மேகபரப் பிரம நானே. (71)

ஆகமிலா வறிவுருவாம் பிரம நானே
யதுரூத மானபரப் பிரம நானே
மோகமிலா வறிவுருவாம் பிரம நானே
முத்தாப ரகிதபரப் பிரம நானே
பாகமிலா வறிவுருவாம் பிரம நானே
பரிச்சேத ரகிதபரப் பிரம நானே
சோகமிலா வறிவுருவாம் பிரம நானே
சுயஞ்சோதி யானபரப் பிரம நானே. (72)

நிருமலமாய் நின்றபரப் பிரம நானே
நிட்கிரிய மானபரப் பிரம நானே
யொருவடிவா யுள்ளபரப் பிரம நானே
யொன்றுமுணரவொண்ணுப் பிரம நானே
யிருமையிலா வேகபரப் பிரம நானே
யெப்போது மெங்குமுள பிரம நானே
சருவபரி பூரணமாம் பிரம நானே
சன்மாத்ர மானபரப் பிரம நானே. (73)

சந்ததமுஞ் சலனமிலாப் பிரம நானே
சந்தேக லேசமிலாப் பிரம நானே
யந்தமிலா வநந்தபரப் பிரம நானே
யகம்பாவ லேசமிலாப் பிரம நானே
தொந்தமிலாத் தூயபரப் பிரம நானே
துக்கசுக லேசமிலாப் பிரம நானே
பந்தமிலாப் பரமான பிரம நானே
பவபாச லேசமிலாப் பிரம நானே (74)

அயன்முதலெம் மூர்த்தியிலாப் பிரம நானே
யைந்துவித கிர்த்யமிலாப் பிரம நானே
மயலணுவு மருவாத பிரம நானே
மாசற்ற மகத்தான பிரம நானே
சுயவொளியாய்ச் சொலிக்கின்ற பிரம நானே
சுத்தசிதம் பரமான பிரம நானே
செயலெவையுஞ் செறியாத பிரம நானே
சின்மாத்ர மானபரப் பிரம நானே. (75)

அஞ்சனமா மவித்தையிலாப் பிரம நானே
யதன்செய்கை யெவையுமிலாப் பிரம நானே
பஞ்சவித கோசமிலாப் பிரம நானே
பரமபர மெவையுமிலாப் பிரம நானே
கிஞ்சிலிலாக் கேவலமாம் பிரம நானே
கிரியைமுத லெவையுமிலாப் பிரம நானே
விஞ்சைமுதல் வேறிலதாம் பிரம நானே
வெறிதான விமலபரப் பிரம நானே. (76)

அகிலத்து மூலபரப் பிரம நானே
யனைத்துக்கு மதீதபரப் பிரம நானே
நிகிலத்து நிறைந்தபரப் பிரம நானே
நித்தபரி சுத்தபரப் பிரம நானே
சகலத்துஞ் சாரபரப் பிரம நானே
சைதன்ய மாத்ரபரப் பிரம நானே
மிகமுத்த மானபரப் பிரம நானே
மெய்புணர்வா நந்தபரப் பிரம நானே. (77)

அகமென்றுந் தேகமலன் பொறிக ளல்ல
னகமென்று முயிர்களல னுள்ள மல்ல
னகமென்றும் புந்தியலன் சித்த மல்ல
னகமென்றும் புன்மையகங் கார மல்ல
னகமென்று மதன்மூலா வித்தை யல்ல
னகமென்றும் வியட்டியலன் சமட்டி யல்ல
னகமென்று மறிவுற்ற தெவையு மல்ல
னகமென்று மகண்டபரப் பிரமந் தானே. (78)

அகமென்றுஞ் சாதனலன் சிசுவு மல்ல
னகமென்றுந் தருணனலன் விருத்த னல்ல
னகமென்றுஞ் சிறியனலன் பெரிய னல்ல
னகமென்றுஞ் சிதைவுற்று மரிப்போ னல்ல
னகமென்றுஞ் சீவனல னீச னல்ல
னகமென்றுஞ் சடாசடமாஞ் சகத்து மல்ல
னகமென்று மெவையுமிலா தகமாய் நின்ற
வத்துவிதா கண்டபரப் பிரமந் தானே. (79)

அகமனிசஞ் சன்மயமாம் பிரம ரூப
மகமனிசஞ் சின்மயமாம் பிரம ரூப
மகமனிச நன்மயமாம் பிரம ரூப
மகமனிசந் தன்மயமாம் பிரம ரூப
மகமனிச நின்மலமாம் பிரம ரூப
மகமனிச நிர்க்குணமாம் பிரம ரூப
மகமனிச மசஞ்சலமாம் பிரம ரூப
மகமனிச மகண்டபரப் பிரம ரூபம். (80)

அருந்தவனே யநந்தவித மறைந்திங் கென்ன
வகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றாரந்தருமிவ் வகண்டபர நிச்ச யந்தா
னுத்தமனுஞ் சிவனருளா லியா மடைந்த
நிரந்தரமா மநுபூதி யைய மில்லை
நிமலபர சிவனுணை யுண்மை சொன்னோம்
பொருந்தியவிவ் வர்த்தத்தை யொருகா லேனும்
புந்தியுறக் கேட்டுணர்வோர் பரமே யாவர். (81)

அற்பமுமோர் பேதமிலா தகண்ட மான
வத்துவித பரசிவமே வேதாந் தங்க
ணிர்ப்பயமாய் நிகழ்த்தியநற் பொருளாய் நின்று
நிகழுமனச் சுத்தியிலா மூட ரெல்லாம்
பற்பலவா நூற்களினூற் பேத புந்தி
பற்றியதா லகண்டைக பரசிவத் தைத்
தற்பரமாஞ் சுருதிமுடி முதலா நூலின்
றாற்பரியப் பொருளாக வறியா ரென்றும். (82)

நித்தசிவார்ச் சனைமுதலாம் பத்தி செய்து
நிகழுமனச் சுத்தியினைப் பெற்ற தீர
ரத்துவித பரசிவமே மறையீ றுந்தி
யனைத்துக்குந் தாற்பரியப் பொருளா மென்றுஞ்
சத்தியமா மச்சிவமே நாமே யென்றுஞ்
சலனமிலா வகண்டசிவ ஞானம் பெற்று
மித்தையதாம் பவபந்த மனைத்து நீக்கி
மெய்யுணர்வா நந்தபர சிவமே யாவர். (83)

பரமசிவன் கருணையினு லருளிச் செய்த
பாங்காக ரிபுமுனிவ னிதாக னுக்கங்
கிருமையிலா வகண்டான்ம நிர்ண யத்தோ
டிலகியதன் சுவாநுபவ மிசைத்தா னென்றே
யருமையுடன் வினவியிடும் சைகீ ஷவ்யற்
ககிலமுமே யடைவாக வறிந்த கந்த
னிருமலமா யுரைசெய்தா னெனவே சூத
னிகிலமகா முனிவர்க்கு நிகழ்த்தி னானல். (84)

வேறு.

அகிலபூரண மாகிய கண்டமா
மான்மரூபத்தி னிர்ணய மோதலு
கிகரில்சத்திய சிற்சுக மாகவே
நின்றநின்மல மானபரம் பொரு
ளகமெனுவக மப்பரமே யென
வயலிலாவநு பூதியு ரைத்தலுந்
திகழுமாநந்தத் தாண்டவ மாடுநந்
தேவதேவ னகண்ட சொரூபமே. (85)

---

முதலாவது அத்தியாயம்
முற்றிற்று.

++++++++++++++++++++++++++++++++++++++++

## இரண்டாவது

### பிரமசோரூபம் நீயேயென்று உபதேசமுரைக்கும் அத்தியாயம்.

---

குருவரனே பரப்பிரம ஞானம் பெற்றுக்
கூறியவப் பரப்பிரம மாவ தற்கிங்
குரியவனு ருரித்தான ஞான மேதா
மூனமிலா வெனதுநிச சொரூப மேதாம்
விரிவுறவே யிதற்குரிய வுத்த ரத்தை
விமலசிவன் விளம்பியவா றருள்வா யென்றே
பரிவுடனே வினவியிடு நிதாக னுக்குப்
பாங்கான வுத்தரமம் முனியுஞ் சொல்வான். (1)

பயனெவையும் விரும்பாமற் பலசென் மத்திற்
பழுதறவே யநுட்டித்த வறங்க ளாலே
மயலணுவு மருவாமன் மனதின் சுத்தி
மன்னியதாற் சாதனமோர் நான்கும் பெற்றே
ரியல்புடனே யியற்றியிடுஞ் சிரவ ணாதி
யேதுவினாற் பரப்பிரம ஞானம் பெற்றிங்
கயலணுவு மணுகாத வகண்ட மான
வத்துவித பரப்பிரம மாவ ரன்றே. (2)

கற்பிதமாஞ் சீவபர வுபாதி யெல்லாங்
களங்கமுறு விசாரத்தா னேதி பண்ணி
யற்பமிலா வகண்டபரப் பிரமந் தன்னை
யனகவகம் பிரமாஸ்மி யென்ப தாக
நிர்ப்பயமா யறிவதுவே பிரமா கார
நிலைமைபெற வுரித்தான ஞான மாகு
மிப்பிரம ஞானத்தை யிசைந்த தீர
ரீனமுறு பவபாச மெய்தா ரென்றும். (3)

சத்தியசிற் சுககனமாய்ச் சலன மின்றிச்
சனாதனமாய்ச் சாலவுப சாந்த மாகி
நித்தியநிர்க் குணமாகி நிருவிட் சேப
நிராவரண நிட்களமாய் நிமல மாகி
யித்துவித கற்பனையோ ரிறையு மின்றி
யேகபரி பூரணமா யிணையொன் றில்லா
வத்துவிதா கண்டபரப் பிரமந் தானே
யனவரத நினதுநிச சொரூப மாமே. (4)

சன்மாத்ர மானபரப் பிரம நீயே
சகலபரி பூரணமாம் பிரம நீயே
சின்மாத்ர மானபரப் பிரம நீயே
செகசீவ பரங்களிலாப் பிரம நீயே
நன்மாத்ர மானபரப் பிரம நீயே
நாமமுரு வெவையுமிலாப் பிரம நீயே
தன்மாத்ர மானபரப் பிரம நீயே
தான்றானாய்த் தனித்தபரப் பிரம நீயே. (5)

வானமென வடிவிலதாம் பிரம நீயே
வழுவற்ற வத்துவதாம் பிரம நீயே
ஞானகன மானபரப் பிரம நீயே
ஞாலமுத லெவையுமிலாப் பிரம நீயே
சூனியமாய் நின்றபரப் பிரம நீயே
சுத்தசிதா காயபரப் பிரம நீயே
யாணியிலா வத்துவிதப் பிரம நீயே
யகண்டபரி பூரணமாம் பிரம நீயே. (6)

சகலவதிட் டானபரப் பிரம நீயே
சகலத்துஞ் சான்றான பிரம நீயே
யகிலவிலட் சணமான பிரம நீயே
யனைத்துக்கு மதீதபரப் பிரம நீயே
ககனமுதல் வத்துவிலாப் பிரம நீயே
காலமொடு தேசமிலாப் பிரம நீயே
நிகழுமய லெவையுமிலாப் பிரம நீயே
நிருமலமாய் நின்றபரப் பிரம நீயே. (7)



சற்கனமாய் நின்றபரப் பிரம நீயே
சதாநந்த கனமான பிரம நீயே
சிற்கனமாய்ச் செறிந்தபரப் பிரம நீயே
சிதாநந்த மயமான பிரம நீயே
துக்கசுக மெவையுமிலாப் பிரம நீயே
துவந்துவமே தொன்றுமிலாப் பிரம நீயே
யக்கரமா யமர்ந்தபரப் பிரம நீயே
யகண்டைக ரசவடிவாம் பிரம நீயே. (8)

சத்தியமாம் பரப்பிரம சொரூப நீயே
சனாதனமாம் பரப்பிரம சொரூப நீயே
நித்தியமாம் பரப்பிரம சொரூப நீயே
நிரஞ்சனமாம் பரப்பிரம சொரூப நீயே
சுத்தமதாம் பரப்பிரம சொரூப நீயே
சுயம்புவதாம் பரப்பிரம சொரூப நீயே
முத்தமதாம் பரப்பிரம சொரூப நீயே
மோகமிலாப் பரப்பிரம சொரூப நீயே. (9)

சமமதுவாம் பரப்பிரம சொரூப நீயே
சாந்தமதாம் பரப்பிரம சொரூப நீயே
மமர்மருவாப் பரப்பிரம சொரூப நீயே
மகத்தான பரப்பிரம சொரூப நீயே
விமலமதாம் பரப்பிரம சொரூப நீயே
வியாபகமாம் பரப்பிரம சொரூப நீயே
யமலமதாம் பரப்பிரம சொரூப நீயே
யசஞ்சலமாம் பரப்பிரம சொரூப நீயே. (10)

நிருமலமாம் பரப்பிரம சொரூப நீயே
நிராமயமாம் பரப்பிரம சொரூப நீயே
யிருமையிலாப் பரப்பிரம சொரூப நீயே
யேகமதாம் பரப்பிரம சொரூப நீயே
புரமருவாப் பரப்பிரம சொரூப நீயே
பூரணமாம் பரப்பிரம சொரூப நீயே
பரசிவமாம் பரப்பிரம சொரூப நீயே
பராற்பரமாம் பரப்பிரம சொரூப நீயே. (11)

தேகமிலாச் சின்மாத்ர சொரூப நீயே
திவ்வியமாஞ் சின்மாத்ர சொரூப நீயே
சோகமிலாச் சின்மாத்ர சொரூப நீயே
சுககனமாஞ் சின்மாத்ர சொரூப நீயே
யேகமதாஞ் சின்மாத்ர சொரூப நீயே
யிருமையிலாச் சின்மாத்ர சொரூப நீயே
பாகமுறாச் சின்மாத்ர சொரூப நீயே
பங்கமிலாச் சின்மாத்ர சொரூப நீயே. (12)

நிராவரண சின்மாத்ர சொரூப நீயே
நிட்களமாஞ் சின்மாத்ர சொரூப நீயே
புராதனமாஞ் சின்மாத்ர சொரூப நீயே
பூரணமாஞ் சின்மாத்ர சொரூப நீயே
சராதியிலாச் சின்மாத்ர சொரூப நீயே
சலனமிலாச் சின்மாத்ர சொரூப நீயே
பராபரமாஞ் சின்மாத்ர சொரூப நீயே
பாவனமாஞ் சின்மாத்ர சொரூப நீயே. (13)

ஏதமிலாச் சின்மாத்ர சொரூப நீயே
யெங்குமுள சின்மாத்ர சொரூப நீயே
பேதமிலாச் சின்மாத்ர சொரூப நீயே
பெரிதான சின்மாத்ர சொரூப நீயே
சோதியதாஞ் சின்மாத்ர சொரூப நீயே
சுதசித்த சின்மாத்ர சொரூப நீயே
யாதியிலாச் சின்மாத்ர சொரூப நீயே
யகண்டமதாஞ் சின்மாத்ர சொரூப நீயே. (14)

சகமயலோ ரணுவுமிலாச் சொரூப நீயே
சங்கற்ப விகற்பமிலாச் சொரூப நீயே
யகமயலோ ரணுவுமிலாச் சொரூப நீயே
யழுக்கற்ற வறிவான சொரூப நீயே
துகளணுகாத் துரியபர சொரூப நீயே
துரியத்து மதீதபர சொரூப நீயே
சுககனமாய் நிறைந்தபர சொரூப நீயே
சுத்தபரப் பிரமமென்னுஞ் சொரூப நீயே. (15)

எப்போது மெங்குமுள சொரூப நீயே
யிருமையிலா வேகபர சொரூப நீயே
தற்போத சூனியமாஞ் சொரூப நீயே
தான்றானாய்த் தனித்தபர சொரூப நீயே
கற்போல வசைவற்ற சொரூப நீயே
கற்பனையோ ரணுவுமிலாச் சொரூப நீயே
சற்போத சுககனமாஞ் சொரூப நீயே
சாலவுப சாந்தபர சொரூப நீயே. (16)

நித்தியநிர்க் குணமான சொரூப நீயே
நிராகார மானபர சொரூப நீயே
சத்தியஞா னானந்த சொரூப நீயே
சாசுவத மானபர சொரூப நீயே
சுத்தபர வெளியான சொரூப நீயே
சுயஞ்சோதி யொளியான சொரூப நீயே
யத்துவித பூரணமாஞ் சொரூப நீயே
யானந்த கனமான சொரூப நீயே. (17)

அங்கமிலா வனங்கபர சொரூப நீயே
யாதிமுடி வற்றபர சொரூப நீயே
சங்கமிலா வசங்கபர சொரூப நீயே
சட்பாவ ரகிதபர சொரூப நீயே
பங்கமிலாப் பரமான சொரூப நீயே
பவபாச லேசமிலாச் சொரூப நீயே
மங்கலிலாப் பரஞ்சோதி சொரூப நீயே
மாசற்ற பரப்பிரம சொரூப நீயே. (18)

வேறுபடா விபுவான சொரூப நீயே
வேதாந்த வேத்தியமாஞ் சொரூப நீயே
கூறுபடாக் குணாதீத சொரூப நீயே
குணங்குறிக ளௌவையுமிலாச் சொரூப நீயே
மாறுபடா மகத்தான சொரூப நீயே
மனவாக்குக் கெட்டாத சொரூப நீயே
வீறுபடா வேகான்ம சொரூப நீயே
யித்துவித மெவையுமிலாச் சொரூப நீயே. (19)

சத்துக்குஞ் சத்தான சொரூப நீயே
சதசத்துக் கப்பாலாஞ் சொரூப நீயே
சித்துக்குஞ் சித்தான சொரூப நீயே
சிதசித்துக் கப்பாலாஞ் சொரூப நீயே
வித்துக்கும் வித்தான சொரூப நீயே
வேறற்ற விமலபர சொரூப நீயே
யெத்துக்கு மெட்டாத சொரூப நீயே
யிருந்தபடி யிருக்கின்ற சொரூப நீயே. (20)

குருவுக்குங் குருவான சொரூப நீயே
குணதோட மெவையுமிலாச் சொரூப நீயே
யருளுக்கு மருளான சொரூப நீயே
யகளங்க மானபர சொரூப நீயே
தெரிவிக்குந் தெரிவான சொரூப நீயே
திருசியமோ ரணுவுமிலாச் சொரூப நீயே
சுருதிக்குஞ் சொல்லவொணாச் சொரூப நீயே
சும்மாவே யிருக்கின்ற சொரூப நீயே. (21)

கண்ணுக்குங் கண்ணான சொரூப நீயே
கருத்துக்குங் கருத்தான சொரூப நீயே
விண்ணுக்கும் விண்ணான சொரூப நீயே
விபுவுக்கும் விபுவான சொரூப நீயே
யெண்ணிக்கைக் கெட்டாத சொரூப நீயே
யெம்மயலுங் கிட்டாத சொரூப நீயே
வர்ணிக்கக் கூடாத சொரூப நீயே
வாக்குமுத லடாத சொரூப நீயே. (22)

காரணகா ரணமான சொரூப நீயே
காரியமோ ரணுவுமிலாச் சொரூப நீயே
பூரணபூ ரணமான சொரூப நீயே
போக்குவர வெவையுமிலாச் சொரூப நீயே
சீரணமில் சின்மயமாஞ் சொரூப நீயே
சிதாகாய மானபர சொரூப நீயே
யாரணவீ றறிவிக்குஞ் சொரூப நீயே
யகண்டைக ரசமான சொரூப நீயே. (23)

கேவலகே வலமான சொரூப நீயே
கெம்பீர மானபர சொரூப நீயே
பாவனபா வனமான சொரூப நீயே
பரமபர மெவையுமிலாச் சொரூப நீயே
யோவலிலா வுணர்வுருவாஞ் சொரூப நீயே
யொன்றாலு முணரவொணாச் சொரூப நீயே
மேவவொணா மிகவரிதாஞ் சொரூப நீயே
மெய்யுணர்வா நந்தபர சொரூப நீயே. (24)

தற்பதலட் சியமான பொருளு நீயே
துவம்பதலட் சியமான பொருளு நீயே
யற்பமிலா வசிபதமார் பொருளு நீயே
யகண்டார்த்த மானபரம் பொருளு நீயே
நிர்ப்பயமாய் நிலைபெற்ற பொருளு நீயே
நிரதிசயா நந்தபரம் பொருளு நீயே
சற்பதமே முதலவற்றின் பொருளு நீயே
சகலவித சத்தத்தின் பொருளு நீயே. (25)

பயிலுமறை முடிவிலுள பதவாக் யங்கள்
பலவற்றின் முற்பரியப் பொருளு நீயே
யயலணுகாப் பிரஞ்ஞானம் பிரம மாதி
யகிலமகா வாக்குகளின் பொருளு நீயே
யியலுமகா வாக்குகளின் பிரிவு மின்றி
யின்னதென வியம்பவொணாப் பொருளு நீயே
சுயமதுவாய்ச் சொற்பொருளோ ரணுவு மின்றிச்
சுதந்தரமாய் நின்றபரம் பொருளு நீயே. (26)

அயன்முதலா மைந்துவித மூர்த்தி பேத
மணுவுமிலா வகண்டபர தெய்வ நீயே
பயிலுமொரு கற்பனையு மிலாது நின்ற
பரமார்த்த மானபர தெய்வ நீயே
மயலணுவு மருவாத தெரிவாய் நின்ற
மகத்துக்கு மகத்தான தெய்வ நீயே
செயலெவையுஞ் செறியாத சிவமாய் நின்ற
சிதாகாய மானபர தெய்வ நீயே. (27)

சந்தத்மூஞ் சலியாது திடமாய் நின்ற
சன்மாத்ர மானபர தெய்வ நீயே
சிந்தைமுதற் றிருசியமோ ரணுவு மில்லாச்
சின்மாத்ர மானபர தெய்வ நீயே
நிந்தையுறு பவதுக்க நினைவே யில்லா
நிசாநந்த மானபர தெய்வ நீயே
பந்தமொடு மோட்சமுத லெவையு மில்லாப்
பரிபூன்ற மானபர தெய்வ நீயே. (28)

பின்னமிலாப் பேறிவாய்ப் பெருவிண் ணாகிப்
பெரிதுக்கும் பெரிதான பிரம நீயே
சென்னியமா முபாதிகளோர் சிறிது மின்றிச்
சிற்கனமாய்ச் செறிந்தபரப் பிரம நீயே
யன்னியமோ ரணுவுமிலா தகண்ட மான
வான்மாவுக் கபின்னபரப் பிரம நீயே
தன்னிடையே தானாகத் தனித்து நின்ற
தன்மாத்ர மானபரப் பிரம நீயே. (29)

பேதமுறப் பலவிதமாய்ப் பேசி யென்ன
பிரிவற்ற வகண்டபரப் பிரமந் தானே
மாதவநின் னிசமான சொரூப மாகு
மகாதேவ னருளியவா வகுத்துச் சொன்னே
மீதிலனு வளவேனு மைய மில்லை
யீசனிரு பதத்தாணை யிசைத்த துண்மை
யாதலினு லகம்பிரம மென்னு ஞான
மடைந்ததனு லகண்டபரப் பிரம மாவாய். (30)

இன்னவித மருளியிடும் ரிபுவை நோக்கி
யிணையற்ற வின்பமடைந் தன்பு கூர்ந்தங்
குன்னவொணு வியப்புடனே யிறைஞ்சி யேத்தி
யுத்தமனே மற்றுமெனக் ககண்ட ஞான
மன்னும்வணங் கருணையினு லருள்வா யென்றே
மகிழ்வுடனே வினவியிடு நிதாகன் றன்னை
யன்னரிபு மாமுனிவன் பரிந்து நோக்கி
யதற்கான வுத்தரமே யாரம் பித்தான். (31)

அகிலவித சீவர்க்குஞ் சுகமே செய்யு
மருள்வடிவாஞ் சங்கரன்முன் கைலா யத்தி
னிகழ்வுறவே யருள்செய்த நீதி யாக
நிதாகநினக் ககண்டபர நிர்ண யத்தை
வெகுநிடமாய் மனத்தினிடை விளங்கும் வண்ணம்
விசித்திரமாய் மேன்மேனும் விரித்துச் சொல்வாம்
புகலியவிவ் வகண்டபர நிர்ண யத்தைப்
புரையற்ற மனத்துடனே பொருந்திக் கேளாய். (32)

சத்தியமா யொருகாலுஞ் சகத்தே யில்லை
சகமெவையு மொருகாலுஞ் சனிக்க வில்லை
வித்தரமா யொருகாலு மிருக்க வில்லை
விளக்கமற வொருகாலு மிறக்க வில்லை
சித்திரமாஞ் சகத்தோற்றஞ் சிறிது மின்றிச்
சின்மாத்ர மானபரப் பிரம மொன்றே
நித்தியமாய் நிலைபெற்று நிற்கும் வத்து
நிதாகவிதி லையமிலை நிச்ச யந்தான். (33)

இத்துவித சகத்தெவையும் விவகா ரத்தில்
யாவர்க்கு மெநிராகத் தோற்ற லாலே
சித்தினது விவர்த்தமதாஞ் சித்தந் தானே
செகமெனத்தோற் றுகின்றதெனச் சில்லோர் சொல்வர்
சித்தமது நன்றாக விசாரிக் குங்காற்
சின்மயமாம் பிரமமலா திலவே யில்லை
புத்திரனே யாதலினு லெக்கா லத்தும்
பூரணமா யுளதுபரப் பிரம மொன்றே. (34)

சுத்திகையின் விவர்த்தமதாம் ரசதந் தன்னைச்
சோதிக்கிற் சுத்தியலால் ரசத மில்லை
யித்திறமே சித்தினது விவர்த்த மாக
விலங்கியிடுஞ் சித்ததைச் சோதிக் குங்காற்
சித்தையலாற் சித்தமெனச் சிறிது மில்லை
சித்தமிலாத் தன்மையினுற் செகத்து மில்லை
புத்திரனே யாதலினு லெக்கா லத்தும்
பூரணமா யுளதுபரப் பிரம மொன்றே. (35)

அகிலவதிட் டானபரப் பிரமத் தின்க
ணயலெனவே கற்பிதமாய்த் தோன்று நின்ற
சகலமுமே நன்றாகச் சோதிக் குங்காற்
சன்மயமாம் பிரமமலால் வேறு மில்லை
யிகழ்வுறவே யிரச்சுவினிற் றோற்றுஞ் சர்ப்ப
மிரச்சுவலாற் சோதிக்கில் வேறே யுண்டோ
புகழ்மகனே யாதலினா லெக்கா லத்தும்
பூரணமா யுளதுபரப் பிரம மொன்றே. (36)

மாயையிலை மாயைசெயுஞ் செயலு மில்லை
மயக்கமிலை மயக்கமுறுஞ் சகத்து மில்லை
தீயவகங் காரமிலை சித்த மில்லை
தியங்கியிடு மனதுமிலை மதியு மில்லை
காயமிலை கருமமிலை கார்த்தா வில்லை
காரணமிலை காட்சியிலை காண்பா னில்லை
யேயவுபா தேயங்க ளவையு மின்றி
யெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (37)

ஆகமுத லனேகவித வுபாதி யில்லை
யஞ்ஞான மவிவேக மனைத்து மில்லை
சேகரமாஞ் சாதனசம் பத்தி யில்லை
சிரவணமே முதலியஞா னங்க மில்லை
சோகமறு சமாதியிலை ஞான மில்லை
சோர்வுதரும் பந்தமிலை மோட்ச மில்லை
யேகபரி பூரணமா யிகழாச் சத்தா
யெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (38)

விடயமுத லநுபந்த நான்கு மில்லை
விளம்பியிடுஞ் சம்பந்த மூன்று மில்லை
சடமருவும் பூதங்க ளைந்து மில்லை
சதாசிவனே முதலியவைம் மூர்த்தி யில்லை
கடபடமே முதலியவாம் வத்து வில்லை
காலமொடு தேசமுமற் றெவையு மில்லை
யிடர்மருவா வின்புருவா யிலங்குஞ் சித்தா
யெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (39)

பூதமொடு பவுதிகமாம் பொருளு மில்லை
புலமுறவே நிகழ்கின்ற பொருளு மில்லை
சேதநகசை கங்கைமுதற் றீர்த்த மில்லை
சேவிக்குஞ் சிவன்முதலாந் தெய்வ மில்லை
நீதியொடு நிறைவேற்றும் விரத மில்லை
நிரைநிரையாப் பெறுகின்ற பலனு மில்லை
யேதுமிலாச் சன்மாத்ர வடிவே யாகி
யெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (40)

வன்னமுட னாச்சிரம பேதமில்லை
வகுப்புற்ற பாவமற மெவையு மில்லை
துன்னியிடுஞ் சுவர்க்கநர காதி யில்லை
துக்கசுக முதலியதாந் தொந்த மில்லை
யன்னியமா மிருமையிலை யொருமை யில்லை
யசத்தான வாரோப மணுவு மில்லை
சன்னியமில் சன்மாத்ர சுபாவ மாகிச்
சலியாம லுளதுபரப் பிரம மொன்றே. (41)

புந்தியினா லுறுதியிடும் பொருளு மில்லை
புரைமனத்தான் மனனமிடும் பொருளு மில்லை
சிந்தையினாற் சிந்திக்கும் பொருளு மில்லை
செறிவாக்கால் வசனிக்கும் பொருளு மில்லை
தொந்தமதாய்த் தோற்றியிடுந் துவித மில்லை
துவிதத்தாற் றொடர்கின்ற பயமு மில்லை
சந்ததமுஞ் சன்மாத்ர சுபாவ மாகிச்
சலியாம லுளதுபரப் பிரம மொன்றே. (42)

சனனமுதற் சட்பாவ விகார மில்லை
சரீரமுதற் சட்பாவ விகாரி யில்லை
நனவுமுத லான்றுவித வவத்தை யில்லை
நாநாவா மவற்றினபி மானி யில்லை
பனுவலிடும் பாவமுட னபாவ மில்லை
பலவிதமாம் வியட்டியிலை சமட்டி யில்லை
யனியமிலா வறிவுருவா யகண்ட சத்தா
யசஞ்சலமா யுளதுபரப் பிரம மொன்றே. (43)

சகலமுமே யில்லையெனுஞ் சொலவு மில்லை
 சருவமுமே மித்தையெனுஞ் சொலவு மில்லை
யகிலமுமே பிரமமெனுஞ் சொலவு மில்லை
 யனிசமகம் பிரமமெனுஞ் சொலவு மில்லை
நிகழ்பிரம மகமெனுமிச் சொலவு மில்லை
 நீநானென் றிவைமுதலாஞ் சொலவு மில்லை
யகிலவிதச் சொலவுமிலா தகண்ட மாகி
 யசஞ்சலமா யுளதுபரப் பிரமமொன்றே. (44)

சத்துவமே முதலியமுக் குணங்க ளில்லை
 சாற்றியவக் குணங்களினவ் விகார மில்லை
யத்துவிதந் துவிதமுதன் மதமு மில்லை
 யவையருளுங் குருசீட ராரு மில்லை
யித்துவிதப் பிராந்தியிறை யளவு மில்லை
 யில்லையென வியம்பியவிச் சொல்லு மில்லை
சுத்தசிதா காயமதாய்ச் சுபாவ சித்தாய்ச்
 சுககனமா யுளதுபரப் பிரம மொன்றே. (45)

ஓதியவிவ் வகண்டபர நிச்ச யத்தா
 லுலைமனத்தின் விகற்பங்க ளனைத்து நீக்கி
ராதிமுடி வொன்றுமிலா தகண் டமான
 வத்துவிதப் பரப்பிரம மானோ ருக்கே
மாதவவிவ் வறிபவ பந்த நீங்கு
 மற்றவருக் கிப்பந்த மென்று நீங்கா
தாதலினு லகண்டபர நிச்சயத்தா
 லநவரத மகண்டபரப் பிரம மாவாய். (46)

மருவுமதிட் டானபரப் பிரமத் தின்கண்
 மாயையினுற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மொருசிறிது மிலையெனவே நேதி பண்ணி
 யூனமற மிஞ்சியதே பிரம மென்று
நிருமலமா மகண்டபர நிர்ண யத்தை
 நிமலசிவ னிகழ்த்தியவா நினக்குச் சொன்னேம்
பாவியவிவ் வர்த்தத்தை யொருகா லேனும்
 பங்கமறக் கேட்டுணர்வோர் பரமே யாவர். (47)

வாரிதியி லலைகுமிழி நுரைக டோன்றும்
வகையெனவே வரையற்ற பாசி வத்திற்
சாரமிலாச் சகலசரா சரமுந் தோன்றுஞ்
சலனமுறு விசாரணையா லவைய னைத்தும்
பூரணமாம் பரமசிவ சொரூப மென்றே
புரையற்ற போதவுரம் பொருந்தி னோரே
கோரமதாம் பவபாச மனைத்து நீங்கிக்
குறைவற்ற பரமசிவ சொரூப மாவர். (48)

இன்னவிதம் பரமசிவ னருளிச் செய்த
வியல்பெனவே ரிபுமுனிவ னிதாக னுக்குப்
பின்னபிலா வகண்டபர நிர்ண யத்தைப்
பிரியமுட னருள்செய்தா னெனவே கந்த
னுன்னவொணாக் கருணையினாற் சைகீ ஷவ்யற்
குத்தமமா மிப்பொருளை யுரைத்தா னென்றே
தன்னியனுஞ் சூதமுனி முனிவர்க் கெல்லாந்
தற்பிரம நிர்ணயமே சாற்றினால். (49)

வேறு.

நித்தநிர்க்குண மாகிய வத்துவே
நீயெனத்திட மாகநி கழ்த்தலுஞ்
சத்தலாத சகங்க ளனைத்துமே
சற்றுமில்லை யிலையெனச் சாற்றலு
மித்தையன்றியின் மிஞ்சிய வத்துவே
மெய்யதான பரம்பொரு ளென்னலு
முத்தமாநந்தத் தாண்டவ மாடுநம்
மும்பர்கோன்ற னகண்ட சொரூபமே. (50)

இரண்டாம் அத்தியாயம்

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம்-2க்கு திருவிருத்தம்-135.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

## மூன்றாவது

### சருவமும் மித்தையென்றும் சருவமும் சின்மாத்ரமென்றுங் கூறி நிர்க்குணபூசையும் உரைக்கும் அத்தியாயம்.

---

பரமசிவ னருளியவா பின்னுஞ் சொல்வேன்
பலவிதமாம் பூதம்பொய் புவனம் பொய்யே
யுரைதருபா வாபாவ மியாவும் பொய்யே
யுற்பத்தி திதிநாச மனைத்தும் பொய்யே
விரிவுபெறு போகம்பொய் பந்தம் பொய்யே
விடயமுத லியாவும்பொய் விதியும் பொய்யே
சுருதியொடு நூலும்பொய் சொல்லும் பொய்யே
சுககனமாம் பரப்பிரம மொன்றே மெய்யாம். (1)

வெகுவிதமா மாபத்துஞ் சம்பத்தும் பொய்
விசித்திரமாம் வீடும்பொய் வித்தம் பொய்யே
தகுகுரவன் சீடன்பொய் குணதோடம் பொய்
தடையறவே போக்கும்பொய் வரவும் பொய்யே
மிகமறைவும் வெளியும்பொய் கணிதம் பொய்யே
மேவியவெவ் வசனமுமெய் பொருளும் பொய்யே
யிகபரமாங் கதியும்பொய் பயமும் பொய்யே
யிகழ்வுபெறாப் பரப்பிரம மொன்றே மெய்யாம். (2)

கருதியிடும் புராணம்பொய் யிதிகா சம்பொய்
காரியகா ரணமும்பொய் யீசன் பொய்யே
பாவியிடு முலகும்பொய் யுயிர்க ளும்பொய்
பந்தமொடு மோட்சசுக துக்கம் பொய்யே
சுராசுர ரெவரும்பொய் தியானம் பொய்யே
சுத்தமதா மனதும்பொய் வாக்கும் பொய்யே
யுரமருவாக் கௌணம்பொய் முக்யம் பொய்யே
யுணர்வுருவாம் பரப்பிரம மொன்றே மெய்யாம். (3)

புந்தியினு லுறுதியிடும் பொருளும் பொய்யே
புகன்மனத்தான் மனனமிடும் பொருளும் பொய்யே
சிந்தையினுற் சிந்திக்கும் பொருளும் பொய்யே
செறிவாக்கால் வசனிக்கும் பொருளும் பொய்யே
யிந்திரிய விடயமதாம் பொருளும் பொய்யே
யிதுவெனவே காண்பிக்கும் பொருளும் பொய்யே
தொந்தமதாய் விரிவுறுமெய்ப் பொருளும் பொய்யே
துகளற்ற பரப்பிரம மொன்றே மெய்யாம். (4)

சோத்திரமு மஃதுணருஞ் சத்தம் பொய்யே
சுழறுக்கு மஃதுணரும் பரிசம் பொய்யே
நேத்திரமு மஃதுணரு முருவம் பொய்யே
நிகழ்நாக்கு மஃதுணரு மிரதம் பொய்யே
காத்திரமார் மூக்குமதன் விடயம் பொய்யே
காரணமுமவ் வதிட்டான தெய்வம் பொய்யே
கோத்திரமுஞ் சூத்திரமுங் குலமும் பொய்யே
குறைவற்ற பரப்பிரம மொன்றே மெய்யாம். (5)

விரிவுபெறு மதுவிதுவு மெதுவும் பொய்யே
விளம்பியநா னீயனிய ரியாரும் பொய்யே
பரமிகமென் றெண்ணியவை யாவும் பொய்யே
பலவிதமாம் பழக்கமுடன் குய்யம் பொய்யே
சருவமெனுஞ் சகத்திலுள வெவையும் பொய்யே
சருவசகக் காரணமுஞ் சுத்தப் பொய்யே
திருசியமாய்த் தோற்றியவை யாவும் பொய்யே
திருக்கான பரப்பிரம மொன்றே மெய்யாம். (6)

சகலசரா சரமென்னுஞ் சொல்லும் பொய்யே
சகலத்தின் பேதமெனுஞ் சொல்லும் பொய்யே
நிகிலமெனுஞ் சங்கற்ப மயலும் பொய்யே
நிகிலத்தின் றோடமெனு மயலும் பொய்யே
யகிலசகக் காரணமாம் விதியும் பொய்யே
யகிலத்தின் பாலகனு மரியும் பொய்யே
யகருசகன் ஞுசகனு மரனும் பொய்யே
பங்கமிலாப் பரப்பிரம மொன்றே மெய்யாம். (7)

தவமோடு செபமும்பொய் தீர்த்தமும் பொய்
தன்வேதாத் யயனம்பொய் யோமம் பொய்யே
சிவஞாதி பூசனைபொய் மந்திரம் பொய்
செறிவன்னுச் சிரமங்கண் முற்றும் பொய்யே
சுவமான சற்சங்க மாதியும் பொய்
சுழல்பூத முதலான காலம் பொய்யே
யவமான சகத்தோற்ற மனைத்தும் பொய்யே
யழிவற்ற பரப்பிரம மொன்றே மெய்யாம். (8)

தூயவனே விதம்விதமாய்த் தோற்றப் பட்ட
தோற்றமெலா முண்மையினி லிலவே யில்லை
மாயையினாற் றோற்றியவெத் தோற்றந் தானு
மயக்கமுறும் பொய்யெனவே நிச்ச யிப்பாய்
நீயறியும் படிமற்றுங் குய்ய மான
நிர்ணயமே பரமசிவன் சொனவா சொல்வே
ஞயசக சீவபர மனைத்து மென்று
மறிவுருவாம் பரப்பிரம மாத்தி ரந்தான். (9)

இருள்வடிவா மவித்தையதன் பேத மியாவு
மிருமைதருஞ் சித்தத்தின் பேத மியாவும்
பரவியிடுஞ் சகத்துடைய பேத மியாவும்
பலகோடி பிரமாண்ட பேத மியாவுந்
திரிவிதமா முலகமுதற் பேத மியாவுந்
திரளுற்ற குணதோட பேத மியாவு
மருள்வடிவா மாசிரியன் வசன மியாவு
மறிவுருவாம் பிரமமென நிச்ச யிப்பாய். (10)

உத்தமமு மத்திமமு மதம மியாவு
மோங்கார மகாரமுதல் வன்ன மியாவும்
வித்தரமாய்ச் சுபாசுபமாங் கரும மியாவும்
விதம்விதமாச் செயலுற்ற செய்கை யாவு
மத்திரமாய்க் காண்கின்ற பதார்த்த மியாவு
மங்கங்கே கேட்கின்ற பதார்த்த மியாவுஞ்
சித்திரமாய்ச் சகத்திலுள பதார்த்த மியாவுஞ்
சின்மயமாம் பிரமமென நிச்ச யிப்பாய். (11)

வகைவகையாய்ச் சாரலுறும் பொருட்க ளியாவும்
வசனத்தால் வசனிக்கும் பொருட்க ளியாவு
மிகழ்வுறவே தள்ளியிடும் பொருட்க ளியாவு
மினிமையுடன் கூட்டியிடும் பொருட்க ளியாவு
மிகமிகவு நல்கியிடும் பொருட்க ளியாவு
மேன்மேலாய்ச் செயலுறுகா ரியங்க ளியாவு
நிகழ்வுறவே நீராடன் முதலா மியாவு
நிருமலமாம் பிரமமென நிச்ச யிப்பாய். (12)

இதுவெனவே வெகுவிதமாய்த் தோற்று நின்ற
வெவைகளுமே பிரமமென நிச்ச யிப்பாய்
நிதமுமக மகமெனவே நிகழா நின்ற
நிகிலமுமே பிரமமென நிச்ச யிப்பா
யெதுவெதுதான் திருசியமா யெங்கே யெங்கே
யெவ்விதமாய்த் தோற்றினுமத் தோற்ற மெல்லாந்
திதமருவுந் திருக்கான பிரம மென்றே
திடமாக வெப்போது நிச்ச யிப்பாய். (13)

பின்னுமகா ரகசியமாய் மிகவி யப்பாய்ப்
பிறங்கியநற் கைலைமலை தன்னி லீச
னென்னிடைமுன் னருளியதா நிர்ண யத்தை
யாவர்க்கு மிதமாக வியம்பக் கேளாய்
பின்னமெனத் தோற்றியவை யாவு மென்றும்
பேதமிலாச் சின்மாத்ர சொரூப மாகும்
பன்னியவச் சின்மாத்ர சொரூபந் தானே
பகுப்பற்ற பரப்பிரம சொரூப மாமே. (14)

இங்ககமென் றெண்ணுவதுஞ் சின்மாத் ரந்தா
னிதுவெனவே காண்பதுவுஞ் சின்மாத் ரந்தான்
றுங்கசிதா பாசனுமே சின்மாத் ரந்தான்
ருேற்றியவிவ் வுலகமுமே சின்மாத் ரந்தா
னங்கவனீ நானெனலுஞ் சின்மாத் ரந்தா
னுகாயங் காற்றனலுஞ் சின்மாத் ரந்தான்
பொங்குபுனல் பிருதுவியுஞ் சின்மாத் ரந்தான்
புகல்பஞ்ச மூர்த்திகளுஞ் சின்மாத் ரந்தான். (15)

பூதமொடு பவிடியமுஞ் சின்மாத் ரந்தான்
புகல்வர்த்த மானமுமே சின்மாத் ரந்தான்
பேதமுறு திரவியமுஞ் சின்மாத் ரந்தான்
பேசியிடுங் குணமுதலுஞ் சின்மாத் ரந்தான்
ஞாதுருவு ஞானமுமே சின்மாத் ரந்தான்
ஞானமுறு ஞேயமுமே சின்மாத் ரந்தா
ஞுதியுட னந்தமுமே சின்மாத் ரந்தா
னகிஞ்சிலொடு கிஞ்சிலுமே சின்மாத் ரந்தான். (16)

வகைவகையாம் வசனங்கள் சின்மாத் ரந்தான்
வசனிக்கும் வாக்குகளுஞ் சின்மாத் ரந்தான்
றொகைதொகையாய்த் தோற்றுவதுஞ் சின்மாத் ரந்தான்
றோற்றியதைத் தொடருவதுஞ் சின்மாத் ரந்தான்
மிகமிகவும் வேண்டுவதுஞ் சின்மாத் ரந்தான்
மேவியதை வெறுப்பதுவுஞ் சின்மாத் ரந்தா
னிகபரமா யுளவெவையுஞ் சின்மாத் ரந்தா
னின்மையுமற் றுண்மையுமே சின்மாத் ரந்தான். (17)

பலவிதமாச் செயுமயனுஞ் சின்மாத் ரந்தான்
பாலகனு மாதவனுஞ் சின்மாத் ரந்தா
னிலைமையறச் செயுமரனுஞ் சின்மாத் ரந்தா
னிகிலசுரா சுரர்நரருஞ் சின்மாத் ரந்தா
னலைவுபெறுந் திரியக்குஞ் சின்மாத் ரந்தா
னகிலசரா சரசகமுஞ் சின்மாத் ரந்தான்
றலைமையுறுங் குருசீடர் சின்மாத் ரந்தான்
றந்தைசுத ராதியருஞ் சின்மாத் ரந்தான். (18)

திருசியமுந் திருக்குருவுஞ் சின்மாத் ரந்தான்
றிகழ்ஞான ஞேயமுமே சின்மாத் ரந்தான்
றுருவமொடத் துருவமுமே சின்மாத் ரந்தான்
றூலமொடு சூக்கவுடல் சின்மாத் ரந்தான்
மருவியகா ரணவுடலுஞ் சின்மாத் ரந்தான்
மாயைமக தாதிகளுஞ் சின்மாத் ரந்தான்
கருதியமூர்த் தாமூர்த்தஞ் சின்மாத் ரந்தான்
காரியகா ரணமெவையுஞ் சின்மாத் ரந்தான். (19)

தொடர்வேத வேதாந்தஞ் சின்மாத் ரந்தான்
 றுவிதமொடத் துவிதமுமே சின்மாத் ரந்தான்
படர்நிக்கு விநிக்குகளுஞ் சின்மாத் ரந்தான்
 பகர்நிக்குப் பாலகருஞ் சின்மாத் ரந்தான்
கடபடமே முதலெவையுஞ் சின்மாத் ரந்தான்
 கண்டபல விவகாரஞ் சின்மாத் ரந்தா
ணடர்நாம முருவெவையுஞ் சின்மாத் ரந்தா
 ணகிலபதார்த் தங்களுமே சின்மாத் ரந்தான். (20)

பலவிதமாம் பூதங்கள் சின்மாத் ரந்தான்
 பரவியிடும் புவனங்கள் சின்மாத் ரந்தா
ணலைவுபெறும் பிராணன்கள் சின்மாத் ரந்தா
 ணலைகின்ற கரணங்கள் சின்மாத் ரந்தா
ணலமருவாக் கோசங்கள் சின்மாத் ரந்தா
 ணல்வினைக டீவினைகள் சின்மாத் ரந்தான்
சலனமுறுஞ் சீவர்களுஞ் சின்மாத் ரந்தான்
 சந்ததமுஞ் சகலமுமே சின்மாத் ரந்தான். (21)

நிலைமையுறு நித்தியமுஞ் சின்மாத் ரந்தா
 னிலைமருவா வநித்தியமுஞ் சின்மாத் ரந்தான்
றலைமையுறுஞ் சத்தியமுஞ் சின்மாத் ரந்தான்
 றவிர்கின்ற வசத்தியமுஞ் சின்மாத் ரந்தான்
சலனமுறு வாதாரஞ் சின்மாத் ரந்தான்
 சஞ்சலமா மாதேயஞ் சின்மாத் ரந்தான்
பலவிதமாஞ் சுகதுக்கஞ் சின்மாத் ரந்தான்
 பகுப்புற்ற பதார்த்தமெலாஞ் சின்மாத் ரந்தான். (22)

சதுர்விதமாஞ் சாதனமுஞ் சின்மாத் ரந்தான்
 சலனமிலா முத்தியுமே சின்மாத் ரந்தான்
விதம்விதமாய் மருவியதுஞ் சின்மாத் ரந்தான்
 வேதங்கள் விளம்புவதுஞ் சின்மாத் ரந்தா
னதிசயநூ லறைவதுவுஞ் சின்மாத் ரந்தா
 னணுகியது மணுகாதுஞ் சின்மாத் ரந்தா
னெதுவெதுதா னெவ்விதமா யெங்கே யெங்கே
 யிலங்கினுமே யவையாவுஞ் சின்மாத் ரந்தான். (23)

சின்மாத்ர மன்றியிலோர் பந்த மில்லை
சின்மாத்ர மன்றிலோர் மோட்ச மில்லை
சின்மாத்ர மன்றியிலோர் சீவ னில்லை
சின்மாத்ர மன்றியிலோ ரீச னில்லை
சின்மாத்ர மன்றியிலோர் சகமு மில்லை
சின்மாத்ர மன்றியிலோ ரணுவு மில்லை
சின்மாத்ர மெதுவதுவே சிதையா தெங்குஞ்
செறிகின்ற பரப்பிரம சோருப மாமே. (24)

சங்கரனுற் சாற்றியதா மிந்த வர்த்தஞ்
சத்தியமே சத்தியமே சங்கை யில்லை
துங்கமதாம் பரமசிவன் றுணைப்பா தத்தைத்
தொட்டிதனைச் சத்தியமாச் சொல்ல லுற்றே
னங்கமுறும் வேதமெலா மறையா நின்ற
வருத்தமிதே யருத்தமிதே யைய மில்லை
யிங்கிதனை யன்புடனே யொருகாற் கேட்டோ
னேகமதாம் பரப்பிரம மாவ னன்றே. (25)

பரிவுடனே யுபநிடத பாடத் தாலும்
பரமசிவ பத்தர்க்கே தானத் தாலும்
புரையறவே திவ்வியமா மிலிங்கத் தின்கண்
பூரணமாம் பரமசிவ பூசை யாலும்
பரவுசிவ தலங்களிலே வாசத் தாலும்
பலவிதமா மற்றுமுறு நியமத் தாலும்
பிரமமதாம் பரமசிவ னருளுண் டாகிப்
பின்னமிலா வகண்டான்ம போதமுண்டாம். (26)

புரணமதாம் பரசிவனுக் காவா கித்தல்
பொருந்தியிடும் வகையெங்ங னகிலா தாரப்
பரசிவனுக் காசனமிங் களிப்ப தெங்ஙன்
பரிசுத்தன் றனக்குரிய பாத்தி யாதி
தருவதெங்ங னென்றுலு நணைக்க வொண்ணுத்
தற்பானுக் கபிடேகஞ் செய்வ தெங்ஙன்
பாவுதிகம் பாளுகி விபுவாய் நின்ற
பானுக்குத் துகிலொன்றைச் சாத்த லெங்ஙன். (27)

ஓதியவன் ஞச்சிரம மொன்று மில்லா
வுருவோனுக் குபவீதஞ் சாத்த லெங்ஙன்
பேதமிலா நிராகார சொரூப னுக்குப்
பிறங்கியவா பரணங்க ளணிவ தெங்ங
னேதுமொரு பற்றுமிலா வசங்க னுக்கிங்
கினிதான கந்தத்தைப் பூச லெங்ஙன்
வாதனையே தொன்றுமிலா வடிவோ னுக்கு
வரமலரா லர்ச்சிக்கும் வகைதா னெங்ஙன். (28)

நாசிகையே முதலின்றிச் சுத்த மாக
நண்ணுசுயஞ் சோதிக்குத் தூப தீப
நேசமுடன் காண்பிக்கும் வகைதா னெங்ங
னிசமான வாநந்த திருத்த னுக்குப்
போசனமா நைவேத்யஞ் செய்வ தெங்ஙன்
புவனமெலா மாநந்தஞ் செய்வோ னுக்கு
மாசறவே தாம்பூல மளிப்ப தெங்ஙன்
மற்றுமுள வுபசாரஞ் செய்வ தெங்ஙன். (29)

கனன்முதலே விளக்கியிடுஞ் சிற்சோ திக்குக்
கற்பூர வாரத்தி செய்வ தெங்ஙன்
பனுவுமொரு பரிச்சேத மில்லா தோனைப்
பங்கமற வலமாக வருவ தெங்ங
னனவரத மத்துவித மானோன் றன்னை
யட்டாங்க பூருவமாய் வணங்க லெங்ஙன்
மனவாக்கு முதலியவைக் கெட்டா தான
மாதேவன் றனைவாக்கால் வழுத்த லெங்ஙன். (30)

புத்திரவுள் வெளியெங்கும் பூன்ற னாகப்
பொருந்தியுள பானுக்கு விசர்க்க மெங்ங
னித்திறமாய் வாகியமா முபசாரத்தா
லீசற்குப் பூசனையிங் கொவ்வா தேனுஞ்
சத்தியஞா னநந்த சம்பு வுக்குச்
சலனமிலாப் பாவனை யாம்பூசை தன்னை
வித்தரமாம் வேதாந்த நூலிற் சொன்ன
விதமாக விளம்பியிட விரும்பிக் கேளாய். (31)

மாயைமுதற் கற்பிதமாம் பொருளே யில்லை
மாய்வற்ற பரசிவனு நானே சேட
மாயுளனென் றெண்ணுவதே பாவா கித்த
லசைவறவே தன்னிடையே தானுய் நின்ற
தூயவனும் பரசிவனே நானென் றெண்ண
முகளற்ற வாசனமா மனத்தின் சங்க
மேயமதாந் தீவினைநல் வினைக ளொன்று
மெனக்கிலையென் றெண்ணுவதே பாத்தி யங்காண்.(32)

வெருகால மாகியுள வவித்தை யென்னும்
விரிவான சலாஞ்சலியை விடுத ருனே
தருமான்ம லிங்கத்துக் கருக்கியங் காண்
டடையற்ற பரமசிவா நந்த மென்னு
நிகழ்வான வாரிதியின் லேசா லேச
நிகிலருமே பருகுவரென் றெண்ணருனே
வகையான வாசமன மாகு மைந்தா
வரமருவு மபிடேக விதியுங் கேளாய். (33)

பூரணமாஞ் சுகவாரி யான வென்னுற்
புவனமெலா நனைப்புற்ற தென்று நானே
காரியமா முதகத்தா னனைக்க வொண்ணுக்
களங்கமிலாப் பிரமமெனுந் தியானந் தானே
சாரமதா மபிடேக மற்றென் றுலுஞ்
சற்றேனும் புனையவொணுப் பூன்ற ணுனென்
றோருவதே பரமான்ம லிங்கத் துக்கிங்
குரித்தான வத்திரமென் றுணர்தி மைந்தா. (34)

திரிகுணமா முலகமெனுஞ் சூத்தி ரத்தைத்
திரட்டிரளாய்த் தரிக்குமதிட் டான மான
பரசிவனே நானென்னுந் தியானந் தானே
பரமான்ம லிங்கத்துக் குபவீ தங்கா
ணருவமதா யகிலவிசே டமுமே யற்ற
வான்மாவே யகமென்னல் பணிக ளாகும்
விரிபல்வாம் வாதனைசேர் சகந்த ரிக்கும்
விபுநானென் றெண்ணுவதே கந்த மாகும். (35)

முக்குணமாம் விருத்திகளை விடுத ருனே
மூலவிலிங் கத்துக்கட் சதைக ளாகு
மிக்குருநா னீசனெனும் பேத மூன்றை
யிகழ்ந்திடலே வில்லுவபத் திரங்க ளாகுந்
துர்க்குணமாம் வாசனையைத் தவிர்த ருனே
தூபமதாஞ் சுயஞ்சோதி யாயி லங்கு
நிர்க்குணமாம் பரசிவனே நானென் றெண்ணு
நிரந்தரமாம் பாவனையே தீப மாகும். (36)

பலகோடி பிரமாண்ட நானே யென்னல்
பரமசிவ லிங்கத்தி னைவேத் யங்கா
ணலையாத பிரமசுக மனுப விக்கு
மகண்டமதாம் விருத்தியதே வியஞ்ச னங்காண்
சலியாத ஞானமெனு முதகத் தாலே
சஞ்சலமூ லாஞ்ஞான மென்னப் பட்ட
தொலையாத வுச்சிட்ட சேடந் தன்னைத்
துடைத்திடலே யத்தங்க டுலக்க லாகும். (37)

வெகுவிதமா யிராகமுறும் விடயந் தன்னை
விடுத்திடலே தாம்பூல மளிப்ப தாகும்
நிகழ்வுபெறு வஞ்ஞான விருளைப் போக்கு
நிருமலமாம் பிரமான்ம ஞானந் தானே
திகழ்வுறுநீ ராஞ்சனமாம் விவித மாகத்
தெரிவதெலாம் பிரமமெனுந் திட்டி தானே
சுககனமாம் பரமசிவ லிங்கத் துக்குச்
சுத்தமுறு மலர்மாலை யாகுந் தூயோய். (38)

பூரணவா நந்தான்மா வகமென் றெண்ணல்
புகழ்புட்பாஞ் சலியாகு மநந்த கோடி
காரியமாம் பிரமாண்ட மென்னி டத்தே
கற்பிதமாய்ச் சுழலுமெனுந் தியானந் தானே
நேரதுவாய் வலம்வரலா மென்று மென்னை
நிகிலருமே வந்திப்பார் நானெப் போது
மாரையுமே வந்திக்கே னென்னுந் தியான
மான்மமகா லிங்கத்தின் வணங்க லாமே. (39)

அண்டமதா மென்னிடையி லுமரூப
மணுவுமிலை யென்றுசெயுஞ் சிந்தை தானே
புகன்றபர பூசனையி லுரிய தாகப்
புகல்கின்ற வரநாம கீர்த்த னங்காண்
சகந்தனிலே கர்த்தவ்ய மான தொன்றுஞ்
சற்றுமெனக் கில்லையெனச் செய்யுந் தியானந்
தகுந்தமனோ பாவனையாற் செய்யும் பூசை
தனின்மற்று முள்ளவுப சாரமாமே. (40)

சகலமனோ மயக்கங்கள் விட்சே பங்கள்
சற்றுமிலா வசைவற்ற சமாதி தானே
விகலமிலாப் பரமசிவ லிங்கத் துக்கு
விசர்ச்சனமா மிவ்வண்ணம் வேதாந் தத்திற்
புகலமல பூசனையை யொருகா லேனும்
புரிந்திடுவோன் வாதனைக ளனைத்துந் தள்ளி
யகிலமதா மஞ்ஞான மாந்தை யாவு
மகற்றிமகா மோட்சசுக மடைவ னன்றே. (41)

ஓதியவிப் பூசனையைச் செய்வ தற்கிங்
குரித்தான வுணர்வில்லோர் மூர்த்தி யாதி
மீதுபர சிவன்றனைநல் லன்பி னோடே
மேவியிடு வாகியமா முபசா ரத்தால்
நீதியதாப் பூசனைசெய் திடினு மீச
னிகரில்லாக் கருணையினா லன்னோ ருக்கும்
போதமுடன் மோட்சத்தை மெள்ள மெள்ளப்
பொருந்தியிடச் செய்திடுவன் புரையற் றோனே. (42)

இந்தவிதம் பரமசிவ னருளிச் செய்த
வியல்பாக ரிபுமுனிவ னிதாக னுக்குப்
பந்தமறும் பரமார்த்த நிர்ண யத்தைப்
பாங்காகக் கருணையினாற் பகர்ந்தா னென்றே
யந்தமிலா வருளுடனே சைகீ ஷவ்யற்
கறுமுகவ னடைவாக வறைந்தா னென்றே
சந்ததமுஞ் சருவமுமே யுணர்ந்த சூதன்
சகலமகா முனிவர்க்குஞ் சாற்றி னானல். (43)

வேறு

மிகவிசித்திர மாம்பல தோற்றமு
　மித்தையேயென விங்கு விளம்பலு
மஃதுமாயில தற்கதிட் டானமா
　மறிவுமாத்திர மென்றுரை செய்தலு
நிகழுநிர்க்குண மானத பூசனை
　நீதியாக நிகழ்த்தலு மியாவுமே
மகிழுமானந்தத் தாண்டவ மாடுநம்
　மாசிலீச னகண்ட சொரூபமே. (44)

மூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 3-க்கு திருவிருத்தம்-179



++++++++++++++++++++++++++++++++++++++++

## நான்காவது

## அகண்டைகரசநிர்ணயமும் அகண்டாநுபூதியும் உரைக்கும் அத்தியாயம்.



சகலவித வுலகத்துஞ் சார்வ தற்குச்
　சாலவுமே யரிதாயற் புதமு மாகி
நிகழ்மறைநூ லெவற்றினுமே சார மாக
　நிகழ்த்துமகண் டைகரச நிர்ணயத்தைச்
சுகவடிவாம் பரமசிவ னருளான் முன்னஞ்
　சொன்னவித மாகநினக் கின்னஞ் சொல்வேன்
வெகுவிதமாஞ் சீவேச சகங்க ளியாவும்
　வேறற்ற வகண்டைக ரசமேயாகும். (1)

மேதினியீ தகண்டைக ரசசொ ரூப
மேவுசல மகண்டைக ரசசொ ரூபஞ்
சோதியன லகண்டைக ரசசொ ரூபஞ்
சுழல்வாயு வகண்டைக ரசசொ ரூப
மோதியவிண் ணகண்டைக ரசசொ ரூப
மொழிமுதலு மகண்டைக ரசசொ ரூபம்
பூதமெலா மகண்டைக ரசசொ ரூபம்
புகல்கிரியை யகண்டைக ரசசொ ரூபம். (2)

மருவுபய னகண்டைக ரசசொ ரூப
மகிழ்விடரு மகண்டைக ரசசொ ரூப
நாகமுத லகண்டைக ரசசொ ரூப
நாகமுமே யகண்டைக ரசசொ ரூபம்
விரியுலகு மகண்டைக ரசசொ ரூபம்
விரிஞ்சனுமே யகண்டைக ரசசொ ரூப
மரியரனு மகண்டைக ரசசொ ரூப
மமரரெலா மகண்டைக ரசசொரூபம். (3)

எறியினனு மகண்டைக ரசசொ ரூப
மிந்துவுமே யகண்டைக ரசசொ ரூப
மறைபொருளு மகண்டைக ரசசொ ரூப
மறையாது மகண்டைக ரசசொ ரூப
மறைபொருளு மகண்டைக ரசசொ ரூப
மறையாது மகண்டைக ரசசொ ரூப
முறுபெயரு மகண்டைக ரசசொ ரூப
முருவமெலா மகண்டைக ரசசொ ரூபம். (4)

நிகழ்பானு மகண்டைக ரசசொ ரூப
நிகழ்பரையு மகண்டைக ரசசொ ரூப
மகிழ்குருவு மகண்டைக ரசசொ ரூப
மாணுக்க னகண்டைக ரசசொ ரூபந்
திகழொளியு மகண்டைக ரசசொ ரூபந்
தெரிபொருளு மகண்டைக ரசசொ ரூப
மகிலமுமே யகண்டைக ரசசொ ரூப
மான்மாவு மகண்டைக ரசசொ ரூபம்.

இகழுடலு மகண்டைக ரசசொரூப
  மிந்திரியமு மகண்டைக ரசசொரூபம்
புகன்மனது மகண்டைக ரசசொரூபம்
  புந்தியுமே யகண்டைக ரசசொரூப
மகமதுவு மகண்டைக ரசசொரூப
  மமர்சித்த மகண்டைக ரசசொரூபம்
பகர்சீவ னகண்டைக ரசசொரூபம்
  பரப்பிரம மகண்டைக ரசசொரூபம். (6)

மருவுபிதா வகண்டைக ரசசொரூப
  மாதாவு மகண்டைக ரசசொரூபம்
பரவுபதி யகண்டைக ரசசொரூபம்
  பாரியுமே யகண்டைக ரசசொரூபங்
கருதுதம ரகண்டைக ரசசொரூபங்
  கலவாரு மகண்டைக ரசசொரூபஞ்
சரமெவையு மகண்டைக ரசசொரூபந்
  தாவரமு மகண்டைக ரசசொரூபம். (7)

காத்திரமு மகண்டைக ரசசொரூபங்
  காமுதலு மகண்டைக ரசசொரூபஞ்
சோத்திரமு மகண்டைக ரசசொரூபஞ்
  சொலுமொலியு மகண்டைக ரசசொரூப
நேத்திரமு மகண்டைக ரசசொரூப
  நிகழுருவு மகண்டைக ரசசொரூபம்
பாத்திரமு மகண்டைக ரசசொரூபம்
  பலபொருளு மகண்டைக ரசசொரூபம். (8)

கோத்திரமு மகண்டைக ரசசொரூபங்
  குலமுதலு மகண்டைக ரசசொரூபந்
தோத்திரமு மகண்டைக ரசசொரூபந்
  துதிப்பவனு மகண்டைக ரசசொரூபஞ்
சூத்திரமு மகண்டைக ரசசொரூபஞ்
  சொற்பொருளு மகண்டைக ரசசொரூபஞ்
சாத்திரமு மகண்டைக ரசசொரூபஞ்
  சகலமுமே யகண்டைக ரசசொரூபம். (9)

அசுபவுட லகண்டைக ரசசொ ரூப
மவத்தையெலா மகண்டைக ரசசொ ரூபம்
விசுவன்முத லகண்டைக ரசசொ ரூபம்
விராட்டாதி யகண்டைக ரசசொ ரூபம்
பசுபதியு மகண்டைக ரசசொ ரூபம்
பாசமெலா மகண்டைக ரசசொ ரூப
நசுவாமு மகண்டைக ரசசொ ரூப
நசியாது மகண்டைக ரசசொ ரூபம். (10)

காரணமு மகண்டைக ரசசொ ரூபங்
காரியமு மகண்டைக ரசசொ ரூபம்
பூரணமு மகண்டைக ரசசொ ரூபம்
புன்மையுமே யகண்டைக ரசசொ ரூப
மாரணமு மகண்டைக ரசசொ ரூப
மதன்பொருளு மகண்டைக ரசசொ ரூபந்
தாரணமு மகண்டைக ரசசொ ரூபந்
தவிர்வதுவு மகண்டைக ரசசொ ரூபம். (11)

அகல்புறமு மகண்டைக ரசசொ ரூப
மரசர்களு மகண்டைக ரசசொ ரூப
மகிழ்திருவு மகண்டைக ரசசொ ரூப
மற்றுளது மகண்டைக ரசசொ ரூபந்
தருசெபமு மகண்டைக ரசசொ ரூபந்
தந்திரமு மகண்டைக ரசசொ ரூபந்
திகழ்தியான மகண்டைக ரசசொ ரூபந்
திடஞான மகண்டைக ரசசொ ரூபம். (12)

உள்வெளியு மகண்டைக ரசசொ ரூப
முறுபதமு மகண்டைக ரசசொ ரூபங்
கொள்பொருளு மகண்டைக ரசசொ ரூபங்
கூடாது மகண்டைக ரசசொ ரூபந்
தெள்பொருளு மகண்டைக ரசசொ ரூபந்
தெளியாது மகண்டைக ரசசொ ரூபம்
விள்பொருளு மகண்டைக ரசசொ ரூபம்
விள்ளாது மகண்டைக ரசசொ ரூபம். (13)

புகல்போக மகண்டைக ரசசொ ரூபம்
போக்கியமு மகண்டைக ரசசொ ரூபந்
தருசெயலு மகண்டைக ரசசொ ரூபந்
தங்கிடமு மகண்டைக ரசசொ ரூபஞ்
சகலமுமே யகண்டைக ரசசொ ரூபஞ்
சாட்சியுமே யகண்டைக ரசசொ ரூப
மகல்பரமு மகண்டைக ரசசொ ரூப
மைக்கியமு மகண்டைக ரசசொ ரூபம். (14)

அகண்டைக ரசமலது வித்தை யில்லை
யகண்டைக ரசமலது முத்தி யில்லை
யகண்டைக ரசமலது சுகமு மில்லை
யகண்டைக ரசமலது சுத்த மில்லை
யகண்டைக ரசமலது சருவ மில்லை
யகண்டைக ரசமலது கிஞ்சி லில்லை
யகண்டைக ரசமதிலங் கெவையு மில்லை
யகண்டைக ரசமதுவே யனைத்து மாகும். (15)

அகண்டைக ரசமலது தூல மில்லை
யகண்டைக ரசமலது சூக்க மில்லை
யகண்டைக ரசமதிலங் கவித்தை யில்லை
யகண்டைக ரசமலதோ ரணுவு மில்லை
யகண்டைக ரசமலது நீயு மில்லை
யகண்டைக ரசமலது நானு மில்லை
யகண்டைக ரசமலதிங் காரு மில்லை
யகண்டைக ரசமதுவே யனைத்து மாகும். (16)

அகண்டைக ரசமலது சகமு மில்லை
யகண்டைக ரசமலது சிருட்டி யில்லை
யகண்டைக ரசமலது திதியு மில்லை
யகண்டைக ரசமலது நாச மில்லை
யகண்டைக ரசமலதிங் குண்மை யில்லை
யகண்டைக ரசமலதிங் கின்மை யில்லை
யகண்டைக ரசமலதோ ரிறையு மில்லை
யகண்டைக ரசமதுவே யனைத்து மாகும். (17)

அகண்டைக ரசமலது கருத்தா வில்லை
யகண்டைக ரசமலது போத்தா வில்லை
யகண்டைக ரசமலது ஞாதா வில்லை
யகண்டைக ரசமலது சீவ னில்லை
யகண்டைக ரசமலதிங் கீச னில்லை
யகண்டைக ரசமலது சகத்து மில்லை
யகண்டைக ரசமலதோ ரணுவு மில்லை
யகண்டைக ரசமதுவே யனைத்து மாமே. (18)

புகல்பொருளி லோரணுவு மைய மில்லை
பூரணமாம் பரமசிவ னறியச் சொன்னேன்
சகலசகன் ருயகஞ யநந்த சத்தி
சார்ந்தவஞ யாநந்த கனமா மீச
னகிலமுமே யகண்டைக ரசசொ ரூப
மானதெனு வருளியவிந் நிர்ண யத்தை
மிகவுமுறு மன்புடனே கேட்டு ணர்ந்தோன்
மெய்யுணர்வா நந்தபரப் பிரம மாவான். (19)

சகத்தினிடை யெவ்விடத்து மடைவ தற்குச்
சாலவுமே யரிதாகிக் குய்ய மாகி
மகத்ததுவா மாச்சரிய மான வென்றன்
மாருத வனுபவமாம் பாக்கி யத்தை
வகுத்துனைக் கின்னமுமே நிதாக சொல்வேன்
வாங்காத மனதுடனே பொருந்திக் கேளாய்
பகுத்திடுமோர் பேதமிலா தகண்ட மான
பரமசிதா காயபரப் பிரம நானே. (20)

அகமென்றும் பரமார்த்த சத்தா கின்றே
னகமென்றும் பரமார்த்த சித்தா கின்றே
னகமென்று மாநந்த கனமா கின்றே
னகமென்று மகண்டைக ரசமா கின்றே
னகமென்று மகிலமுமே யாகா நின்றே
னகமென்று மணுவளவு மிலாது நின்றே
னகமென்றும் பகுப்பறவே நிறைந்து நின்றே
னகமென்றும் பரப்பிரம மாகா நின்றேன். (21)

அகமகில காரணமாஞ் சொரூப மானே
 னகமகில பூரணமாஞ் சொரூப மானே
னகமகில வாதார சொரூப மானே
 னகமகில வாகார சொரூப மானே
னகமமல விஞ்ஞான சொரூப மானே
 னகமணுவும் விகாரமிலாச் சொரூப மானே
னகமனிசம் பங்கமிலாச் சொரூப மானே
 னகமமல பரப்பிரம சொரூப மானேன். (22)

அகமென்றும் பரமசிவ சொரூப மானே
 னகமென்றும் பரகுருவாஞ் சொரூப மானே
னகமென்றுஞ் சத்தியமாஞ் சொரூப மானே
 னகமென்றுஞ் சனாதனமாஞ் சொரூப மானே
னகமென்றுஞ் சுத்தமதாஞ் சொரூப மானே
 னகமென்றுஞ் சூட்சுமமாஞ் சொரூப மானே
னகமென்றும் பந்தமுறாச் சொரூப மானே
 னகமென்றும் பரப்பிரம சொரூப மானேன். (23)

அகமென்று நிர்க்குணமாஞ் சொரூப மானே
 னகமென்று நிர்த்தொந்த சொரூப மானே
னகமென்று நிட்களமாஞ் சொரூப மானே
 னகமென்று நிட்கிரிய சொரூப மானே
னகமென்று நிராமயமாஞ் சொரூப மானே
 னகமென்று நிராகார சொரூப மானே
னகமென்று நிரவயவ சொரூப மானே
 னகநிமல பரப்பிரம சொரூப மானேன். (24)

தொடருமொரு விசேடமிலாச் சொரூப நானே
 துவிதமொடத் துவிதமிலாச் சொரூப நானே
யிடரின்ப மெவையுமிலா சொரூப நானே
 யிருளொளியு மிலாதயர சொரூப நானே
மடமையுணர் வொன்றுமிலாச் சொரூப நானே
 மானவ மானமிலாச் சொரூப நானே
படர்பாவா பாவமிலாச் சொரூப நானே
 பகுப்பற்ற பரப்பிரம சொரூப நானே. (25)

ஆகுமகங் காரமிலாச் சொரூப நானே
யாதாரா தேயமிலாச் சொரூப நானே
தேகமுத லுபாதியிலாச் சொரூப நானே
தெளிவான சைதன்ய சொரூப நானே
மோகமன மாதியிலாச் சொரூப நானே
மோட்சமொடு பந்தமிலாச் சொரூப நானே
யூகமுறு விசாரமிலாச் சொரூப நானே
யொன்றுமிலாப் பரப்பிரம சொரூப நானே. (26)

சித்தமுத லெவையுமிலாச் சொரூப நானே
செவ்வியதாய் விசாரிக்குஞ் சொரூப நானே
புத்தியினுற் றியானிக்குஞ் சொரூப நானே
பொருந்துதியா னுசியிலாச் சொரூப நானே
வித்தரமா மகாமுதற் சொரூப நானே
விளங்கியிடு மோங்கார சொரூப நானே
மெத்தவுமே புனிதமதாஞ் சொரூப நானே
மெய்யான பரப்பிரம சொரூப நானே. (27)

பெரிதுக்கும் பெரிதான சொரூப நானே
பேதமறப் பிறங்கியிடுஞ் சொரூப நானே
யரிதுக்கு மரிதான சொரூப நானே
யகண்டைக ரசமான சொரூப நானே
சுருதிக்கு மெட்டாத சொரூப நானே
சொலும்பொருளுங் கிட்டாத சொரூப நானே
சருவத்துக் கப்பாலாஞ் சொரூப நானே
சலனமிலாப் பரப்பிரம சொரூப நானே. (28)

அறுவிதமாம் விகாரமிலாச் சொரூப நானே
யறுகோச மிலாதபர சொரூப நானே
குறைவுதருஞ் சடூர்மியிலாச் சொரூப நானே
கூறுமரி சட்கமிலாச் சொரூப நானே
யுறுமிதயக் கிரந்தியிலாச் சொரூப நானே
யுள்ளுக்கு முள்ளான சொரூப நானே
செறிதேச காலமிலாச் சொரூப நானே
சின்மாத்ர மானபர சொரூப நானே. (29)

மனமுதலே யசைக்கின்ற சொரூப நானே
மாசற்ற சின்மயமாஞ் சொரூப நானே
யனகசிதா காயபர சொரூப நானே
யகிலசுக தாகார சொரூப நானே
யெனையலதோ ரணுவுமிலாச் சொரூப நானே
யில்லையெனுஞ் சொல்லுமிலாச் சொரூப நானே
புனிதவகண் டாகார விருத்தி தன்னிற்
பொருந்தியிடும் பூரணமாஞ் சொரூப நானே, (30)

பூரணசின் மாத்திரமாஞ் சொரூப நானே
பொய்யுலக மெவையுமிலாச் சொரூப நானே
காரணகா ரியமிலதாஞ் சொரூப நானே
காலமொரு மூன்றுமிலாச் சொரூப நானே
சாரமறு சரீரமிலாச் சொரூப நானே
சரீரவபி மானியிலாச் சொரூப நானே
கோரமுறு காமமுதற் குற்ற மொன்றுங்
கூடாத பரப்பிரம சொரூப நானே. (31)

சலமுற்ற குணங்களிலாச் சொரூப நானே
சதசத்துக் காப்பாலாஞ் சொரூப நானே
யலைவுற்ற பந்தமிலாச் சொரூப நானே
யத்யந்த முத்தமதாஞ் சொரூப நானே
தொலைவற்ற சற்கனமாஞ் சொரூப நானே
துகளற்ற சிற்கனமாஞ் சொரூப நானே
நிலைபெற்ற சுககனமாஞ் சொரூப நானே
நீக்கமிலாப் பரப்பிரம சொரூப நானே. (32)

போக்குவர வொன்றுமிலாச் சொரூப நானே
போகின்ற தேசமிலாச் சொரூப நானே
சாக்கிரமே முதலுமிலாச் சொரூப நானே
சந்ததமுஞ் சாந்தமதாஞ் சொரூப நானே
நீக்கமற நிறைகின்ற சொரூப நானே
நிகழ்சச்சி தாநந்த சொரூப நானே
வாக்குமன தொன்றுக்கு மெட்டா தான
வத்துவதாம் பரப்பிரம சொரூப நானே. (33)

சூனியமு மசூனியமு மிலாது நின்ற
சுத்தமதாம் பரப்பிரம சொரூப நானே
யானியுமோர் பேறுமிலா தமர்ந்து நின்ற
வகண்டமதாம் பரப்பிரம சொரூப நானே
யேனையுமோர் சுபமசுப மிலாது நின்ற
வேகமதாம் பரப்பிரம சொரூப நானே
வானமுத லொருபொருளு மிலாது நின்ற
வத்துவதாம் பரப்பிரம சொரூப நானே. (34)

ஒன்றுடனே யிரண்டுமுதற் கணித மியாவு
மொன்றாத பரப்பிரம சொரூப நானே
நின்றிடுமோர் சதசத்து மிலாம லெங்கு
நிறைவுற்ற பரப்பிரம சொரூப நானே
யன்றியுமே சமமசம மொன்று மின்றி
யமைவுற்ற பரப்பிரம சொரூப நானே
யென்றுமெலாப் பொருளுமிலா தேக மாக
விலங்கியிடும் பரப்பிரம சொரூப நானே. (35)

தொடருமொரு சங்கற்ப பேத மின்றித்
துச்சமிலாத் தூயபரப் பிரம நானே
நெடியபல விட்சேப லேச மின்றி
நிராவரண மானபரப் பிரம நானே
மடமைதரும் விவிதான்ம பேத மின்றி
மகத்தாகி நின்றபரப் பிரம நானே
கடபடமே முதலியதோ ரணுவு மின்றிக்
களங்கமற நிறைந்த பரப் பிரம நானே. (36)

சருவவித சகத்துக்குஞ் சாட்சியான
சத்தியஞா னநந்த சொரூப நானே
கருதியிடுங் கண்முதலாங் கரண மியாவுங்
கலவாத சின்மாத்ர சொரூப நானே
திருசியமா ஞாதுருஞா னஙி யென்னுந்
திரிபுடியே தொன்றுமிலாச் சொரூப நானே
பாவியிடும் லட்சியலட் சணமே தொன்றும்
பற்றாத பரப்பிரம சொரூப நானே. (37)

கிளர்கிரியை யாவுக்கு மிதமாய் நின்றுங்
கேவலமாம் பரப்பிரம சொரூப நானே
வளர்வுமுதல் விகாரமிலா நிருவி கார
வத்துவதாம் பரப்பிரம சொரூப நானே
தளர்வுதருந் துக்கசுகஞ் சற்று மின்றித்
தனியான பரப்பிரம சொரூப நானே
யளவுபடும் பொருளெவையு மணுவு மின்றி
யகண்டமதாம் பரப்பிரம சொரூப நானே. (38)

இகழ்வறவே வேதாந்த நடையுற் றோர்க்கிங்
கெளிதாகக் கிட்டியிடுஞ் சொரூப நானே
சகலவித வேதாந்த நூற்க ளாலுஞ்
சந்ததமுஞ் சோதிக்குஞ் சொரூப நானே
யகிலமகா மௌனத்தின் பலமாய் நின்ற
வாநந்த கனமான சொரூம நானே
பகருமனக் கிரந்திகளைச் சிதைக்கா நின்ற
பரசித்தாம் பரப்பிரம சொரூப நானே. (39)

போற்றியிடும் பரமசிவன் கருணை யாலே
பொருந்தியவென் சுவா நுபவ பாக்கி யத்தைத்
தோற்றியிட யாவர்க்கு மிதமாச் சொன்னேன்
றுகளறவே சொல்லியவிவ் வர்த்தந் தன்னை
யேற்றியநல் லன்புடனே யொருகா லேனு
மிதயத்திற் றிடமாகக் கேட்டு ணர்ந்தோன்
சாற்றியவஞ் ஞானமுத லியாவுந் தள்ளிச்
சந்ததமும் பரப்பிரம மாவ னன்றே. (40)

திகழுமுமா நாயகனுய்த் திடபோ தத்தைத்
தெரிவிக்கும் பரசிவனை யாரா தித்தப்
பகவனருட் கருணையினாற் பாவ மியாவும்
பற்றறவே தீர்ந்துமனச் சுத்தி பெற்றோ
ரகிலசக தான்மாவா யரூப மாகி
யகண்டசிதா காயமதாய் நிறைந்து நின்ற
சுககனமாம் பரசிவமே நாமென் றெண்ணிச்
சோகமெலாந் தீர்ந்துபர சிவமே யாவர். (41)

பன்னியவா பரமசிவன் கருணை சாராப்
பாதகர்க டேகாதி நாமென் றெண்ணி
மன்னியவன் ஞச்சிரம வபிமா னத்தான்
மயங்கி வெகு கன்மங்கள் செய்து சோர்ந்து
துன்னியிடும் விடயாசை சூழ்ந்த லைந்து
துக்கிகளா யநவரதந் திரிவ ரென்றே
யன்னரிபு கருணையுட னிதாக னுக்கங்
ககண்டபர மார்த்தத்தை யருள்செய் தானல். (42)

**வேறு.**

அகிலமான சராசரத் தோற்றமு
மகண்டவேக ரசமென் றறைந்தது
நிகரில்சத்திய சிற்சுக பூரண
நிருமலப்பர நாமென் றுரைத்தது
மகிலநாயக ஞய்ப்பர வித்தையா
மம்பிகைக்கனு கூலசொ ரூபனுய்த்
திகழுமாநந்தத் தாண்டவ மாடுநந்
தேவதேவ னகண்ட சொரூபமே. (43)

நான்காவது அத்தியாயம்

**முற்றிற்று.**

ஆக அத்தியாயம்-4க்கு திருவிருத்தம்-222.

++++++++++++++++++++++++++++++++++++++++++

## ஐந்தாவது

### அனைத்தும் சசவிஷாணமென்றும் அவையெல்லாம் பிரமமென்றும் உரைக்கும் அத்தியாயம்.

சகலசரா சரசகமுஞ் சசவிஷாண
சமமெனவே பரமசிவ னருளிச் செய்த
மிகவரிதா நிர்ணயமிங் குனக்குச் சொல்வேன்
மேவுமனத் தொருமையுட னிதனைக் கேளாய்
வெகுவிதமாய்க் காண்பனவுஞ் சசவி ஷாணம்
விசித்திரமாய்க் கேட்பனவுஞ் சசவி ஷாணம்
நிகிலமதாந் திருசியமுஞ் சசவி ஷாண
நிகழ்கின்ற திருக்கதுவுஞ் சசவி ஷாணம். (1)

பரவியவிண் வாயுவன னீர்மண் ணென்னும்
பஞ்சமகா பூதமுமே சசவி ஷாணம்
விரவியவப் பூதத்தால் விளைவ தான
வெகுவிதமாம் பௌதிகமுஞ் சசவி ஷாண
மருவுமனம் புந்தியகங் காரஞ் சித்த
மற்றுமுள தேசெவையுஞ் சசவி ஷாண
முருவமதாம் பிரமாண்ட மவற்றி லுள்ள
வுலகங்க ளுயிர்களெலாஞ் சசவி ஷாணம். (2)

புகல்சனனஞ் சரைமரண மாதி வ்யாதி
புண்ணியபா வங்களெலாஞ் சசவி ஷாண
மிகல்காமங் கோபமுட னுலோப மோக
மீனமத மச்சரமுஞ் சசவி ஷாண
மகிழ்வுதருந் தைரியமும் வெற்றி தோல்வி
மானமவ மானமுமே சசவி ஷாணந்
தகுகுருவு மாணவனு மன்னோர் செய்யத்
தகுமுபதே சாதிகளுஞ் சசவி ஷாணம். (3)

ஆதியொடு மத்தியமு மந்தந் தானு
மவனிவனீ முதலெவையுஞ் சசவி ஷாணம்
பூதமொடு பவிடியமும் வர்த்த மானப்
பொருளெவையு மெப்போதுஞ் சசவி ஷாணங்
காதலுறுந் தூலவுடல் சூக்க தேகங்
காரணமாந் தேகமெலாஞ் சசவி ஷாணஞ்
சாதமுறுங் காரியமு மற்று முள்ள
சகலமுமே சந்ததமுஞ் சசவி ஷாணம். (4)

மமதையுறும் போக்கியமும் போகந் தன்னை
மருவியிடும் போத்தாவுஞ் சசவி ஷாணஞ்
சமமுடனே சந்தோடம் விசாரஞ் சாது
சங்கமுதற் சற்குணமுஞ் சசவி ஷாணம்
யமநியமா சனமுடனே யியற்றும் ப்ராணா
யாமமுத லியோகமுமே சசவி ஷாண
மமர்விவித லட்சியலட் சணமுஞ் சித்த
மலைவதுமற் றலையாதுஞ் சசவி ஷாணம். (5)

ஏதமினித் தாங்கித்த விவேக மாதி
 யெனுநான்கு சாதனமுஞ் சசவி ஷாணம்
பேதமுற விருபத்து நான்க தாகப்
 பேசியிடுந் தத்துவமுஞ் சசவி ஷாண
மோதியிடு முடன்மூன்று மவத்தை மூன்று
 முபயவித விந்தியமுஞ் சசவி ஷாணம்
பூதமதன் பஞ்சகமும் விரிஞ்ச னுதிப்
 புகல்தேவ பஞ்சகமுஞ் சசவி ஷாணம். (6)

பலவிதவன் னுச்சிரம மவற்றின் செய்கை
 பயில்குலகோத் திரமெவையுஞ் சசவி ஷாண
நிலைமருவாப் போகேச்சை மோட்ச விச்சை
 நிகழ்த்துமதன் சாதனமுஞ் சசவி ஷாணஞ்
சலனமுறுஞ் சசாதீய முதலாம் பேதஞ்
 சாற்றுபரிச் சேதமுமே சசவி ஷாணந்
திலமளவு முதலியதாக் காணப் பட்ட
 திருசியமுந் தெரிசனமுஞ் சசவி ஷாணம். (7)

சிந்தையினுற் பலவிதமாய் நினைக்கப் பட்டுச்
 செறிகின்ற பொருளெவையுஞ் சசவி ஷாணம்
புந்தியினுற் பலவிதமா யுறுதிப் பட்டுப்
 பொருந்தியிடும் பொருளெவையுஞ் சசவி ஷாணந்
தொந்தமுறும் வாக்காலே வசனிப் புற்றுத்
 தொடர்கின்ற பொருளெவையுஞ் சசவி ஷாண
மிந்திரிய மெவையாலு முணரப் பட்ட
 வெப்பொருளு மெப்போதுஞ் சசவி ஷாணம். (8)

வெகுவிதமாம் பூதங்கள் சசவி ஷாணம்
 விசித்திரமாம் புவனங்கள் சசவி ஷாணஞ்
சகலவித தீர்த்தங்கள் சசவி ஷாணஞ்
 சகலமதாந் தலங்களுமே சசவி ஷாண
மகிலமதா தருமங்கள் சசவி ஷாண
 மகிலமதாம் பலங்களுமே சசவி ஷாண
நிகிலவித வேதங்கள் சசவி ஷாண
 நிகிலமதா நூற்களுமே சசவி ஷாணம். (9)

சருவமதா மவித்தையுமே சசவி ஷாணஞ்
சருவமதாம் வித்தையுமே சசவி ஷாணஞ்
சருவமதாம் பந்தமுமே சசவி ஷாணஞ்
சருவமதா முத்தியுமே சசவி ஷாணஞ்
சருவமதாங் காலமுமே சசவி ஷாணஞ்
சருவமதாங் கருமமுமே சசவி ஷாணஞ்
சருவமுணர் ஞானமுமே சசவி ஷாணஞ்
சருவத்தி னீசனுமே சசவி ஷாணம். (10)

சகலவித சீவருமே சசவி ஷாணஞ்
சகலத்தின் சங்கமுமே சசவி ஷாணஞ்
சகலவித துவிதமுமே சசவி ஷாணஞ்
சகலத்தி னுண்மையுமே சசவி ஷாணஞ்
சகலவித சாத்திரமுஞ் சசவி ஷாணஞ்
சாற்றுமதன் ரகசியமுஞ் சசவி ஷாணஞ்
சகலவித வேதாந்த சித்தாந் தங்கள்
சருவமுமே சந்ததமுஞ் சசவி ஷாணம். (11)

குறைவெனவே தள்பொருளுஞ் சசவி ஷாணங்
கூட்டியிடத் தகுபொருளுஞ் சசவி ஷாண
நிறைவெனவே நினைபொருளுஞ் சசவி ஷாண
நேயமதாய் நினைபொருளுஞ் சசவி ஷாணம்
பிறருடைய பொருளெவையுஞ் சசவி ஷாணம்
பின்றனது பொருளெவையுஞ் சசவி ஷாண
மறிவுறுமான் மானான்ம விவேக மாதி
யகிலமுமே யநவரதஞ் சசவி ஷாணம். (12)

சருவமெனக் காண்பதுவுஞ் சசவி ஷாணஞ்
சத்தியமாய்த் தோற்றுவதுஞ் சசவி ஷாணம்
பிரியமதாய்ச் சொல்லுவதுஞ் சசவி ஷாணம்
பேணியதைக் கேட்பதுவுஞ் சசவி ஷாண
மருமையதா யோருவதுஞ் சசவி ஷாண
மயனுலகைப் படைப்பதுவுஞ் சசவி ஷாண
மரியுலகைக் காப்பதுவுஞ் சசவி ஷாண
மானதனை யழிப்பதுவுஞ் சசவி ஷாணம். (13)

மேவுபுரா ணங்களெலாஞ் சசவி ஷாண
மிருதியிதி காசமெலாஞ் சசவி ஷாணம்
பாவனமா முபநிடதஞ் சசவி ஷாணம்
பலவிதமா நூற்பொருளுஞ் சசவி ஷாணஞ்
சீவபா சகமியாவுஞ் சசவி ஷாணஞ்
செறிகின்ற சம்சாரஞ் சசவி ஷாணங்
கேவலமாம் பரப்பிரம மொன்றே யென்றுங்
கெம்பீர மாகவுள வத்து மைந்தா. (14)

கோலமுறுஞ் சீவசக பரங்க ளாகக்
கூறியிடுந் துவிதமெலாஞ் சசவி ஷாணம்
போலவெறும் பொய்யாகு மென்று மெங்கும்
பூரணமாய் நின்றபரப் பிரம மொன்றே
காலமொரு மூன்றிலுமே நாச மின்றிக்
களங்கமிலாப் பரமார்த்த வத்து வென்னுஞ்
சாலவுமே ரகசியமா மிவ்வர்த் தத்தைச்
சலனமறக் கேட்டுணர்வோன் பிரம மாவன். (15)

நரர்சுரர்க ளெல்லோர்க்கு மெவ்வி டத்து
நண்ணமிக வரிதாகிக் குய்ய மான
சருவமுமே பிரமமெனு நிச்ச யத்தைச்
சம்புவெனக் கருளியவா சாற்றக் கேளாய்
மருவுமகம் விருத்திக்கு விடய மாயு
மற்றுமிதம் விருத்திக்கு விடய மாயுந்
திருசியமா யெவையெவைதான் றோற்ற லாகுந்
தெரிவுற்ற வவையெல்லாம் பிரம ரூபம். (16)

தேகோக மென்றுணரு நினைவு தானே
தெரிவுற்ற வுட்கரண மென்ன லாகுந்
தேகோக மென்றுணரு நினைவு தானே
தியக்கமுறு சம்சார மென்ன லாகுந்
தேகோக மென்றுணரு நினைவு தானே
திரளுற்ற பீதியெலாஞ் செய்வ தாகுந்
தேகோக மெனுமந்த நினைவெப் போதுந்
தினையளவு மில்லையெலாம் பிரம ரூபம். (17)

தேகோக மென்றுணரு நினைவு தானே
 தெரிவுற்ற சகலசக மென்ன லாகுந்
தேகோக மென்றுணரு நினைவு தானே
 திடமுற்ற பந்தமெனச் செப்ப லாகுந்
தேகோக மென்றுணரு நினைவு தானே
 திரளுற்ற துன்பமெனச் செப்பலாகுந்
தோகோக மெனுமந்த நினைவெப் போதுந்
 நிலமளவு மில்லையெலாம் பிரம ரூபம். (18)

தேகமக மென்றறியு மறிவு தானே
 தெரிவற்ற வஞ்ஞான மென்ன லாகுந்
தேகமக மென்றறியு மறிவு தானே
 திடவிதயக் கிரந்தியெனச் செப்ப லாகுந்
தேகமக மென்றறியு மறிவு தானே
 திகழ்பாவா பாவமெனச் செப்ப லாகுந்
தேகமக மெனுமந்த வறிவெப் போதுந்
 நினையளவு மில்லையெலாம் பிரமந் தானே. (19)

ஆகமக மென்றறியு மறிவு தானே
 யலையுற்ற மனதெனவே யறைய லாகு
மாகமக மென்றறியு மறிவு தானே
 யமர்மலின வாதனைக ளென்ன லாகு
மாகமக மென்றறியு மறிவு தானே
 யநந்தவித நரகமென வறைய லாகு
மாகமக மெனுமந்த வறிவெப் போது
 மணுவுமிலை யுள்ளதெலாம் பிரமந் தானே. (20)

ஆகமக மென்றறியும் புந்தி தானே
 யலைகின்ற சீவனென வறைய லாகு
மாகமக மென்றறியும் புந்தி தானே
 யளவுபடும் பரிச்சின்ன மென்ன லாகு
மாகமக மென்றறியும் புந்தி தானே
 யநந்தவித சோகமென வறைய லாகு
மாகமக மெனுமந்தப் புந்தி யென்று
 மணுவுமிலை யுள்ளதெலாம் பிரமந் தானே. (21)

ஆகமக மென்றறியும் புந்தி தானே
யளவற்ற சங்கமென வறைய லாகு
மாகமக மென்றறியும் புந்தி தானே
யமர்சனன சராமரண மென்ன லாகு
மாகமக மென்றறியும் புந்தி தானே
யகிலமகா பாவமென வறைய லாகு
மாகமக மெனுமந்தப் புந்தி யென்று
மணுவுமிலை யுள்ளதெலாம் பிரமந் தானே. (22)

ஆகமக மென்றறியும் புந்தி தானே
யளவற்ற வமங்களமா வறைய லாகு
மாகமக மென்றறியும் புந்தி தானே
யளவற்ற வாசையென வறைய லாகு
மாகமக மென்றறியும் புந்தி தானே
யநந்தவித தோடமென வறைய லாகு
மாகமக மெனுமந்தப் புந்தி யென்று
மணுவுமிலை யுள்ளதெலாம் பிரமந் தானே. (23)

ஆகமக மென்றறியு நினைவு தானே
யகிலமகா மலமெனவே யறைய லாகு
மாகமக மென்றறியு நினைவு தானே
யளவற்ற சந்தேக மென்ன லாகு
மாகமக மென்றறியு நினைவு தானே
யனர்த்தமெலா மடைந்திடவோர் மூல மாகு
மாகமக மெனுமந்த நினைவெப் போது
மணுவுமிலை யுள்ளதெலாம் பிரமந் தானே. (24)

நினைவெதுவோ வதுதானே சீவ னாகு
நினைவெதுவோ வதுதானே யீச னாகு
நினைவெதுவோ வதுதானே சகமு மாகு
நினைவெதுவோ வதுதானே மனது மாகு
நினைவெதுவோ வதுதானே காம மாகு
நினைவெதுவோ வதுதானே கரும மாகு
நினைவெதுவோ வதுதானே துக்க மாகு
நினைவெதுவோ வதுதானே யனைத்து மாமே. (25)

நினைவின்றி நிற்பதுவே யகண்ட மாகு
நினைவின்றி நிற்பதுவே நிட்டை யாகு
நினைவின்றி நிற்பதுவே ஞான மாகு
நினைவின்றி நிற்பதுவே மோட்ச மாகு
நினைவின்றி நிற்பதுவே சகச மாகு
நினைவின்றி நிற்பதுவே பிரம மாகு
நினைவின்றி நிற்பதுவே சிவமு மாகு
நினைவணுவு மில்லையெலாம் பிரமந் தானே. (26)

சங்கற்ப நினைவுகளுக் கணுவும் பேதஞ்
சார்வதிலை நினைவதுவே சங்கற்பங் காண்
சங்கற்ப மெதுவதுவே மகத்தா மோகஞ்
சங்கற்ப மெதுவதுவே யாதிவ் யாதி
சங்கற்ப மெதுவதுவே காமங் கோபஞ்
சங்கற்ப மெதுவதுவே யத்தி யாசஞ்
சங்கற்ப மெதுவதுவே தாபம் யாவுஞ்
சங்கற்ப மெதுவதுவே சகல துன்பம். (27)

சங்கற்ப மெதுவதுவே மகத்தாந் தோடஞ்
சங்கற்ப மெதுவதுவே மலங்கள் யாவுஞ்
சங்கற்ப மெதுவதுவே காலந் தேசஞ்
சங்கற்ப மெதுவதுவே நாநா ரூபஞ்
சங்கற்ப மெதுவதுவே சகம யக்கஞ்
சங்கற்ப மெதுவதுவே சீவ ரூபஞ்
சங்கற்ப மெதுவதுவே யீச ரூபஞ்
சங்கற்ப மெதுவதுவே சகல ரூபம். (28)

சங்கற்ப மாத்திரமே மூலாஞ் ஞானஞ்
சங்கற்ப மாத்திரமே விவித பேதஞ்
சங்கற்ப மாத்திரமே சகல ஞானஞ்
சங்கற்ப மாத்திரமே சகல தொந்தஞ்
சங்கற்ப மாத்திரமே சகல கன்மஞ்
சங்கற்ப மாத்திரமே நரகஞ் சொர்க்கஞ்
சங்கற்ப மாத்திரமே பூதம் யாவுஞ்
சங்கற்ப மாத்திரமே புவனம் யாவும். (29)

சங்கற்ப மாத்திரமே தேக மாதி
　சங்கற்ப மாத்திரமே சிரவ ணாதி
சங்கற்ப மாத்திரமே யான்ம சிந்தை
　சங்கற்ப மாத்திரமே மற்றும் யாவுஞ்
சங்கற்ப மாத்திரமெங் கெங்கே தோற்றுஞ்
　சகசீவ பரங்களுமங் கங்கே தோற்றுஞ்
சங்கற்ப மாத்திரமே சற்று மில்லை
　சத்தியமாச் சகலமுமே பிரம ரூபம். (30)

மனதுக்குஞ் சங்கற்பந் தனக்கும் பேத
　மற்றணுவு மிலைமனதே சகங்கள் யாவு
மனதது வே மகத்தான பகையா மற்று
　மனததுவே மகத்தான பவமு மாகு
மனததுவே சன்மசரா மரண மாகு
　மனததுவே மகத்தான துக்க மாகு
மனததுவே மகத்தான மலமு மாகு
　மனததுவே காலமுத லெவையு மாமே. (31)

மனமதுவே சங்கற்ப விகற்ப மாகு
　மனமதுமே புத்தியுமாஞ் சித்த மாகு
மனமதுவே யகங்கார மாகு மற்று
　மனமதுவே பொதுவந்தக் கரண மாகு
மனமதுவே சீவனுமாம் பந்த மாகு
　மனமதுவே கத்துருபோத் துருவு மாகு
மனமதுவே மண்ணுதக மனலு மாகு
　மனமதுவே மருத்துமகல் விண்ணு மாமே. (32)

மனமதுவே சத்தமொடு பரிச மாகு
　மனமதுவே ரூபமுட னிரத மாகு
மனமதுவே கந்தமெனத் தோற்ற லாகு
　மனமதுவே யன்னமய கோச மாகு
மனமதுவே பிராணமய கோச மாகு
　மனமதுவே மனோமயமாங் கோச மாகு
மனமதுவே விஞ்ஞான கோச மாகு
　மனமதுவே யாநந்த கோச மாமே. (33)

மனமதுவே [illegible]
மனமது [illegible]
மனமதுவே காரணமாந் தேக மாகு
மனமதுவே சாக்கிரமுங் கனவு மாகு
மனமதுவே தொந்தமிலாச் சுழுத்தி யாகு
மனமதுவே விசுவனெனத் தோற்ற லாகு
மனமதுவே தைசதனாய்த் தோற்ற லாகு
மனமதுவே பிராஞ்ஞனெனத் தோற்ற லாமே. (34)

மனமதுவே சமட்டியெனு மியாவு மாகு
மனமதுவே வியட்டியெனு மியாவு மாகு
மனமதுவே வெகுவிதமாந் தேவ ராகு
மனமதுவே விதிமுதலாம் மூர்த்தி யாகு
மனமதுவே தெரிவுற்ற பொருளு மாகு
மனமதுவே தெரியாத பொருளு மாகு
மனமதுவே சடசித்தா மெவையு மாகு
மனமதுவே தோற்றியவெத் துவித முங்காண். (35)

மனமதுதா னெப்போது மித்தை யாகு
மனதுமகேந் திரசால நிகரே யாகு
மனமதுதான் மலடியுடை மைந்த னாகு
மனமதுதா னொருகாலு மிலவே யில்லை
மனமிலதாற் சங்கற்ப முதலு மில்லை
மனமிலதாற் குருசீடர் முதலு மில்லை
மனமிலதாற் சகசீவன் முதலு மில்லை
மனோமயமாஞ் சருவமுமே பிரம ரூபம். (36)

மனமுமிலை மனோமயமாஞ் சகசீ வாதி
மற்றுமொரு பொருளுமிலை யென்று மெல்லா
மனகசதா நந்தசிதா காய மான
வகண்டமதாம் பரப்பிரம சொரூப மேயா
மெனுமிதிலோ ரையமிலை சத்தி யந்தா
னெங்குமுள பரமசிவ னறியச் சொன்னே
னினியுமகா ரகசியமா மிவ்வர்த் தத்தை
நன்றாகக் கேட்டுணர்வோன் பிரம மாவன். (37)

சுத்தமுறும் வேதாந்த விசாரத் தாலுஞ்
சுகநல்கும் பரமசிவ பத்தி யாலும்
வித்தமுத லேடணையை விடுத லாலும்
விமலமதாம் பரமசிவத் தியானத் தாலும்
முத்திதரும் பரப்பிரம ஞான முண்டாய்
மொழிந்தமன முபசாந்தி மேவு மன்றி
சத்தமிகுங் குதர்க்கமுத லெவைக ளாலுஞ்
சாந்திதனை மேவாது மனதெப் போதும். (38)

திருசியமே தொன்றுமிலாத் திருக்கே யாகித்
தியங்குமனோ விகற்பமிலா நிலைநின் றோர்க்கு
மருவியிடு நனவுகனாச் சுழுத்தி யில்லை
மரணமிலை யுய்வதிலை மற்றொன் றில்லை
பிரிவறவே மனதுவெறி திருக்கு நிட்டைப்
பெருமையினை யென்சொல்வோ மென்றிவ் வண்ணம்
பரிவுடனே ரிபுமுனிவ னிதாக னுக்குப்
பரமார்த்த வுறுதியினைப் பகர்ந்தா னன்றே. (39)

வேறு.

சகலமான சராசரத் தோற்றமுஞ்
சசவிஷாண சமானமென் றோதலுந்
துகளதாகிய சொப்பனம் போலவே
தொடர்மனோமய மாயெங்குந் தோற்றிய
வகிலசீவ பரேச சகங்களு
மகண்டமாம்பர ரூபமென் றோதலு
மிகழ்விலாநந்தத் தாண்டவ மாடுநம்
மீசன்றன் பரிபூரண ரூபமே. (40)

ஐந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 5-க்கு திருவிருத்தம்-262.

++++++++++++++++++++++++++++++++++++++++++

## ஆ று வ து

## பிரமதீர்த்த ஸ்நானமும் பிரமமந்திரமும் உரைக்கும் அத்தியாயம்.

—oo✠oo—

தீனதயா பரகுருவே நித்த மெந்தத்
 தீர்த்தத்தி னீதான மாடு கின்றாய்
*தானமதன் சொரூபந்தா னெவித மாகுந்
 தானத்துக் குரியமகா மந்தி ரந்தா
னெதெவை யதற்குரிய தர்ப்ப ணந்தா
 னமைவதெவை யோமந்தா னெவித மாகு
நீநலமா யிவையெல்லா மருள்வா யென்ற
 நிதாகற்கு ரிபுமுனிவ னிகழ்த்த லானான். (1)

பூரணமா யான்மாவுக் கபின்ன மாகப்
 பொருந்துபரப் பிரமமெனுந் தீர்த்தத் தின்கண்
சாரமதா யெப்போதுந் தான மாடல்
 சகலத்தின் மேலான தான மாகுந்
தீரமிகும் புத்திரனே யிதனை யன்றித்
 தீர்த்தமெதி லாடலுமே தான மன்று
பேரறிவாம் பரப்பிரம தீர்த்தத் தின்கட்
 பேதமற நானென்று மாடு கின்றேன். (2)

நிகழுமகம் பிரமாஸ்மி யென்று ரத்த
 நிச்சயமே மேலான தான மைந்தா
பகருமிதன் சொரூபத்தை விசால மாகப்
 பரமசிவ னருளியவா பகரக் கேளா
யகமனிசம் பரப்பிரம சொரூப மானே
 னகஞ்சச்சி தாநந்த சொரூப மானே
னகமனிசம் பரமசிவ சொரூப னென்னு
 மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (3)

---

* (தானமென்பது-நீராடல்)

அகமனிசங் கேவலமாம் பரசொரூப
னகமனிசங் கேவலமாஞ் சாந்த ரூப
னகமனிசங் கேவலமா நித்த ரூப
னகமனிசங் கேவலமாஞ் சுத்த ரூப
னகமனிசங் கேவலமாம் புத்த ரூப
னகமனிசங் கேவலமா முத்த ரூப
னகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (4)

அகமனிச நிமலான்ம சொரூப மானே
னகமனிச நிரந்தரமாஞ் சொரூப மானே
னகமனிச நிட்களமாஞ் சொரூப மானே
னகமனிச நிட்கிரிய சொரூப மானே
னகமனிச நிரஞ்சனமாஞ் சொரூப மானே
னகமனிச நிராமயமாஞ் சொரூப மானே
னகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (5)

அகமனிச நிருமலமாஞ் சொரூப மானே
னகமனிச நிராவரண சொரூப மானே
னகமனிச நிரவயவ சொரூப மானே
னகமனிச நிர்க்குணமாஞ் சொரூப மானே
னகமனிசஞ் சருவான்ம சொரூப மானே
னகமனிசஞ் சருவமிலாச் சொரூப மானே
னகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (6)

அகமனிச மகந்தையிலாச் சொரூப மானே
னகமனிச மிதந்தையிலாச் சொரூப மானே
னகமனிசஞ் சங்கமிலாச் சொரூப மானே
னகமனிசம் பங்கமிலாச் சொரூப மானே
னகமனிசந் துரியமதாஞ் சொரூப மானே
னகந்துரியா தீதபர சொரூப மானே
னகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (7)

அகமகில விகற்பமிலாச் சொரூப மானே
னகமாதி யந்தமிலாச் சொரூப மானே
னகமனிய மொன்றுமிலாச் சொரூப மானே
னகமென்று மளவுபடாச் சொரூப மானே
னகமகில பூரணமாஞ் சொரூப மானே
னகமகில காரணமாஞ் சொரூப மானே
னகமனிசம் பரப்பிரம சொரூப மென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (8)

அகமகில பூரணவா நந்த மானே
னகமபரிச் சின்னமகா நந்த மானே
னகமனிச நிமலபரா நந்த மானே
னகமனிச நிரதிசயா நந்த மானே
னகமனிசஞ் சதாநந்த கனமே யானே
னகமனிசஞ் சிதாநந்த கனமே யானே
னகமனிசம் பரப்பிரம மானே னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (9)

அகமுண்மை மாத்திரமாஞ் சொரூப மானே
னகமுணர்வு மாத்திரமாஞ் சொரூப மானே
னகமின்ப மாத்திரமாஞ் சொரூப மானே
னகமேக மாத்திரமாஞ் சொரூப மானே
னகமசல மாத்திரமாஞ் சொரூ மானே
னகமான்ம மாத்திரமாஞ் சொரூப மானே
னகம்பிரம மாத்திரமாஞ் சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (10)

அகமனிச மகாகாய சொரூப மானே
னகமனிச மகத்தான சொரூப மானே
னகமனிசஞ் சிதாகாய சொரூப மானே
னகமனிசஞ் சிற்கனமாஞ் சொரூப மானே
னகமனிசம் பராகாய சொரூப மானே
னகமனிசம் பரமான்ம சொரூப மானே
னகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (11)

அகமனிச முடல்பொறிக ளுயிர்க ளுள்ள
மகங்கார மாதியிலாச் சொரூப மானே
னகமனிச மறிவற்ற நாம ரூப
மணுவுமிலா வத்துவித சொரூப மானே
னகமணுவும் பந்தமிலா நித்த முத்த
மாகுமகண் டைகரச சொரூப மானே
னகமமல பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (12)

அகமனிசந் தேகமுத லஞ்ஞா னாந்த
மனைத்துக்கும் விலட்சணமாஞ் சொரூப மானே
னகமனிச மனவாக்குக் கெட்டா தான
வத்துவிதா கண்டபர சொரூப மானே
னகமகில வாதார மாகி நின்று
மதன்சங்க மணுவுமிலாச் சொரூப மானே
னகமமல பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (13)

அகமனிச மறிவற்ற திருசி யங்க
ளனைத்துக்கு மதீதபர சொரூப மானே
னகமனிச மறைமுடியா லறியத் தக்க
வான்மாவுக் கபின்னபர சொரூப மானே
னகமனிய மணுவுமிலா தகமே யாக
வமர்கின்ற வகண்டபர சொரூப மானே
னகமமல பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (14)

அகமகில ரிதயத்து மிருந்த வற்றை
யசைக்கினுமே யசஞ்சலமாஞ் சொரூப மானே
னகமகில பூதமொடு பௌதி கங்க
ளமர்சீவ ராதியிலாச் சொரூப மானே
னகமகில காலமொடு தேசம் வத்து
வனைத்துமிலா வத்துவித சொரூப மானே
னகமமல பரப்பிரம சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தானம். (15)

இந்தவிதம் பரப்பிரம தீர்த்தத் தின்க
  ணெளிதாக வியற்றியிடுந் தானஞ் சொன்னேன்
மைந்தவிதை மகிழ்வுடனே யொருகா லேனு
  மயக்கமறக் கேட்டுணர்வோன் பிரம மாவன்
பந்தமறு பரப்பிரம மந்தி ரத்தைப்
  பரமசிவன் பகர்ந்தவணம் பகரக் கேளாய்
சந்தகமுஞ் சகலமகா மந்தி ரத்துஞ்
  சாலவுமிம் மந்திரமே சார மாகும். (16)

அகமனிசஞ் சத்தான பிரம மானே
  னகமனிசஞ் சித்தான பிரம மானே
னகமனிசஞ் சுகமான பிரம மானே
  னகமனிசஞ் சுத்தமதாம் பிரம மானே
னகமனிச மத்துவிதப் பிரம மானே
  னகமனிச மகண்டபரப் பிரம மென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
  னனைத்துக்கு மேலான மந்தி ரங்காண். (17)

அகமகில காரணமாம் பிரம மானே
  னகமகில பூரணமாம் பிரம மானே
னகமகில விலட்சணமாம் பிரம மானே
  னகமனிய மணுமிலாப் பிரம மானே
னகமகமா யமர்கின்ற பிரம மானே
  னகமனிச மகண்டபரப் பிரம மென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
  னனைத்துக்கு மேலான மந்தி ரங்காண். (18)

அகமனிச மாயையிலாப் பிரம மானே
  னகமாயா விகாரமிலாப் பிரம மானே
னகமனிச மவித்தையிலாப் பிரம மானே
  னகமவையின் விகாரமிலாப் பிரம மானே
னகமிருமை யெவையுமிலாப் பிரம மானே
  னகமென்று மேகபரப் பிரம மென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
  னனைத்துக்கு மேலான மந்தி ரங்காண். (19)

அகமனிசஞ் சற்கனமாம் பிரம மானே
ணகமனிசஞ் சன்மயமாம் பிரம மானே
ணகமனிசஞ் சிற்கனமாம் பிரம மானே
ணகமனிசஞ் சின்மயமாம் பிரம மானே
ணகமனிசஞ் சுககனமாம் பிரம மானே
ணகமனிசஞ் சூக்கபரப் பிரம மென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
ணைத்துக்கு மேலான மந்திரங் காண். (20)

அகமனிச நித்தபரப் பிரம மானே
ணகமனிசஞ் சுத்தபரப் பிரம மானே
ணகமனிசம் புத்தபரப் பிரம மானே
ணகமனிச முத்தபரப் பிரம மானே
ணகமனிச மமலபரப் பிரம மானே
ணகமனிச மகண்டபரப் பிரம மென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
ணைத்துக்கு மேலான மந்திரங் காண். (21)

அகமனிசம் பிரஞ்ஞான சொரூப மானே
ணகமனிசம் பரமான்ம சொரூப மானே
ணகமனிசம் பரமசிவ சொரூப மானே
ணகமனிசம் பரிசுத்த சொரூப மானே
ணகமனிசம் பராற்பரமாஞ் சொரூப மானே
ணகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
ணைத்துக்கு மேலான மந்திரங் காண். (22)

அகமனிச நிரஞ்சனமாஞ் சொரூப மானே
ணகமனிச நிர்க்குணமாஞ் சொரூப மானே
ணகமனிச நிராவரண சொரூப மானே
ணகமனிச நிட்கிரிய சொரூப மானே
ணகமனிச நிராமயமாஞ் சொரூப மானே
ணகநிமல பரப்பிரம சொரூப னென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தர
ணைத்துக்கு மேலான மந்திரங் காண். (23)

அகமனிசஞ் சங்கமிலாச் சொரூப மானே
னகமனிசஞ் சாந்தபர சொரூப மானே
னகமனிசம் பங்கமிலாச் சொரூப மானே
னகமனிசம் பரமார்த்த சொரூப மானே
னகமனிசம் பாசமிலாச் சொரூப மானே
னகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
னனைத்துக்கு மேலான மந்தி ரங்காண். (24)

அகமகில சகசீவ பரமாய் நின்று
மப்பேத மணுவுமிலாச் சொரூப மானே
னகமகில வேதமுடி நூல்க ளாலு
மறியுமகண் டாகார சொரூப மானே
னகமனிசஞ் சத்தியசிற் சுகமாய் நின்ற
வத்துவித பரப்பிரம சொரூப னென்னு
மகமிலகம் பிரமாஸ்மி நிச்ச யந்தா
னனைத்துக்கு மேலான மந்திரங் காண். (25)

நிகரிலகம் பிரமாஸ்மி மந்தி ரத்தை
நித்தமுமே யாதரவா யிடை விடாமல்
வெகுகால பரியந்தஞ் செபித்துக் கொண்டே
விமலபர ஞானத்தைப் பழகல் வேண்டு
மகிழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
மகத்தான பாவமெலா நாசஞ் செய்யுந்
துகளிலகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
றுவிதத்தால் வருந்துயரை நாசஞ் செய்யும். (26)

புகழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
பொய்யான பேதமெலா நாசஞ் செய்யுந்
திகழுமகம் பிரமாஸ்மி மந்திரந் தான்
றிடசிந்தா ரோகமெலா நாசஞ் செய்யு
மகிழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
மனதிலுள வியாதியெலா நாசஞ் செய்யும்
பகருமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
பலவாதி வியாதிகளை நாசஞ் செய்யும். (27)

நிகழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
ணினைவுற்ற சோகமெலா நாசஞ் செய்யு
மகலுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னகத்திலுள காமமெலா நாசஞ் செய்யுந்
திகழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
றிரளுற்ற கோபமெலா நாசஞ் செய்யு
மிகவுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
மேவியசங் கற்பமெலா நாசஞ் செய்யும். (28)

பகருமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
பலவிதமாஞ் சிந்தைகளை நாசஞ் செய்யு
மகலுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னகமென்னுந் துயரையெலா நாசஞ் செய்யு
மிகழ்விலகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னிதுவென்னுந் துயரையெலா நாசஞ் செய்யுந்
திகழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
றிருசியமாம் யாவையுமே நாசஞ் செய்யும். (29)

அமலவகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னஞ்ஞான மனத்தையுமே நாசஞ் செய்யு
மமலவகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னவிவேக மனத்தையுமே நாசஞ் செய்யு
மமலவகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னபிமான மனத்தையுமே நாசஞ் செய்யு
மமலவகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னரந்தைமிகும் பவத்தையெலா நாசஞ் செய்யும். (30)

திகழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
றேகத்தின் றோடமெலா நாசஞ் செய்யு
மிகழ்விலகம் பிரமாஸ்மி மந்தி ரந்தா
னிந்திரிய தோடமெலா நாசஞ் செய்யு
மகிழுமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
மனமுதலின் றோடமெலா நாசஞ் செய்யும்
பகருமகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
பலகோடி தோடமுமே நாசஞ் செய்யும். (31)

ஏற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
 னெந்திரதந் திரமெல்லா நாசஞ் செய்யுந்
தேற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 றிட்டமதிட் டங்களெலா நாசஞ் செய்யு
மாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
 னசத்தான மயக்கமெலா நாசஞ் செய்யுந்
தோற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 றோன்றியவெத் துவிதமுமே நாசஞ் செய்யும். (32)

போற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 பூதங்க ளனைத்தையுமே நாசஞ் செய்யுந்
தோற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 றொடர்புவன மியாவையுமே நாசஞ் செய்யு
மாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
 னுன்மவுணர் வனைத்தையுமே நாசஞ் செய்யுஞ்
சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 சகசீவ பரமெவையு நாசஞ் செய்யும். (33)

சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 சந்தகமாந் தியானத்தைச் சாரப் பண்ணுஞ்
சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 சவிகற்ப சமாதியினைச் சாரப் பண்ணுஞ்
சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 சகலவிகற் பமுமற்ற சமாதி நல்குஞ்
சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 சலனமிலா வபரோட்ச ஞான நல்கும். (34)

நிகரிலகம் பிரமாஸ்மி மந்திரந்தா
 னிகழ்சத்வா பத்தியெனும் பூமி நல்கு
மிகழ்விலகம் பிரமாஸ்மி மந்திரந்தா
 னிசைத்தவசஞ் சத்தியெனும் பூமி நல்கும்
பகருமகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 பதார்த்தாபா வனையென்னும் பூமி நல்குந்
துகளிலகம் பிரமாஸ்மி மந்திரந்தான்
 றுரியகையென் றோதியநற் பூமி நல்கும். (35)

அனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　னமலான்ம ஞானத்தை விளக்கு விக்கு
மனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　னமலான்ம லோகத்தின் செயத்தை நல்கு
மனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　னதிசயமா மான்மசுகந் தனையே நல்கு
மனிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா
　னகண்டம்தா மோட்சசுக மளிக்கு மன்றே. (36)

அரியவகம் பிரமாஸ்மி மந்திரத்துக்
　கதிசயமா மந்திரமே யொன்று மில்லை
பரவுமெழு கோடிமகா மந்திரந்தான்
　பலகோடி சன்மங்க டருவ தன்றி
மருவியிடுஞ் சன்மங்கண் மாற்று தென்று
　மற்றதனு லனைத்துக்கு மேலா கின்ற
துரிசிலகம் பிரமாஸ்மி மந்திரத்தைத்
　தொடர்ந்தகில மந்திரமுந் தொலைக்க வேண்டும். (37)

பலவிதமா மந்திரமுந் தூரத் தள்ளிப்
　பயிலுமகம் பிரமாஸ்மி மந்திரத்தை
நிலையுறவே யாதரவா யிடை விடாம
　னித்தமுமே முமுட்சுவெலாம் பழகல் வேண்டுஞ்
சலனமிலாப் பழக்கத்தான் ஞான மோட்சஞ்
　சகலமுமே சடிதியினிற் சித்தி யாகுந்
தலைமையுறும் பரமசிவன் சரணந் தொட்டுத்
　தத்துவமாய் நவில்கின்றேன் சங்கை யில்லை. (38)

சகலமதாம் வேதத்தும் வேதாந் தத்துஞ்
　சகலவிதி காசத்துஞ் சாத்திரத்தும்
மிகவுமகா ரகசியமா மிவ்வர்த் தத்தை
　மெய்யுணர்வா னந்தகன மான வீச
னகிலர்க்கு மிதமாக வென்னி டத்தே
　யருளியவா றிதாகநினக் கருளிச் செய்தேன்
புகலுமிதை யாதரவாக் கேட்டுணர்ந் தோன்
　பூர்ணமாம் பரப்பிரம மாவ னன்றே. (39)

கற்பிதமாய்க் காண்பதெலா மென்றும் பொய்யே
　களங்கமிலாப் பரமசிவ மொன்றே மெய்யாந்
தூர்ப்பலமா மனவாக்குப் பொறிக ளொன்றுற்
　றொடரவொணாப் பேரறிவா நந்த மான
தற்பரமே யகமென்னும் புந்தி தானே
　தருமோட்ச காரணமீ துறுதி யென்றே
நிர்ப்பயமாய் ரிபுமுனிவ னிதாக னுக்கு
　நீராடன் மந்திரமு னிகழ்த்தி னானால். (40)

வேறு.

நிருவிகார நிரஞ்சன நிர்க்குண
　நித்தநிட்கள நின்மல மாகிய
பிரிவில்சத்திய சிற்சுக பூரண
　பிரமநானெனப் பேசிய தானமு
மருவகம்பிர மாஸ்மி யெனச்சொலு
　மாசின்மந்திர மும்மற்றி யாவுமே
பரமவாநந்தத் தாண்டவ மாடுநம்
　பரசிவபரி பூரண ரூபமே. (41)

ஆறாவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம்-6க்கு திருவிருத்தம்-303.

++++++++++++++++++++++++++++++++++++++++

## ஏழாவது

## பிரமதர்ப்பணமும் பிரமவோமமும் உரைக்கும் அத்தியாயம்.

சதாமருவுந் தானமொடு மந்திரத்தைச்
　சகலர்க்கு மிதமாக முந்து மோத்தி
னிதாகநினக் கருள்செய்தே னிந்த வோத்தி
　னித்தியமாந் தருப்பணமோ டோமந் தன்னை
யுதாரமதாய்ப் பரமசிவன் சொன்வாச் சொல்வே
　னுலகத்தும் வேதத்துஞ் சாத்திரத்தும்
நிதானமுடை யிவையரிதா மிவ்வர்த்தத்தை
　நிலையுடைய மனதுடனே நின்று கேளாய். (1)

ஒருக்காலும் பிரபஞ்ச மோரி டத்து
மோரணுவு முண்மையதா யிலவே யில்லை
திருக்கான பரப்பிரம மாத்தி ரந்தான்
றிரமாக வெப்போது மிருப்ப தென்றே
யிருக்காதி வேதமுடி வனைத்தி னாலு
மியம்பியசிற் பரப்பிரம நானே யென்று
தருக்காதி யுதவியினு லுறுதிப் பட்ட
தகுபிரம நிச்சயமே தருப்பணங் காண். (2)

சகலபரி பூரணமாம் பிரம நானே
சத்தியஞா னாநந்தப் பிரம நானே
யகிலவதிட் டானபரப் பிரம நானே
யன்னியமோ ரணுவுமிலாப் பிரம நானே
நிகரில்சிதா காயபரப் பிரம நானே
நிமலான்மா காரபரப் பிரம நானே
யிகழுமுரு வெவையுமிலாப் பிரம நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (3)

சோகமிலாச் சுககனமாஞ் சொரூப நானே
சுத்தமதாம் பரமான்ம சொரூப நானே
யாகுமொரு விகற்பமிலாச் சொரூப நானே
யத்துவித வாநந்த சொரூப நானே
மோகமிலாப் பரிசுத்த சொரூப நானே
மூதுணர்வாம் பரஞ்சோதி சொரூப நானே
யேகமதாம் பரப்பிரம சொரூப நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (4)

உவமையிலா வொன்றான சொரூப நானே
யொன்றென்னுங் கணிதமுறாச் சொரூப நானே
விவிதமிலா விமலபர சொரூப நானே
விண்ணிலுமே நுண்ணியதாஞ் சொரூப நானே
தவிர்தலிலாத் தற்பரமாஞ் சொரூப நானே
தகுசத்தா மாத்திரமாஞ் சொரூப நானே
யெவையுமிலாப் பரப்பிரம சொரூப நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (5)

சொல்லுமொரு பொருளுமிலாச் சொரூப நானே
சும்மாவே யிருக்கின்ற சொரூப நானே
கல்லெனவே யசைவற்ற சொரூப நானே
காண்பானுங் காட்சியுமில் சொரூப நானே
யல்லலிலா வகண்டசுக சொரூப நானே
யயலற்ற பரமோட்ச சொரூப நானே
யெல்லையிலாப் பரப்பிரம சொரூப நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (6)

சதாநந்த மயமான சொரூப நானே
சந்ததமுஞ் சாந்தபர சொரூப நானே
சிதாநந்த மயமான சொரூப நானே
சின்மயமாம் பரமசிவ சொரூப நானே
யுதாரபரி பூரணமாஞ் சொரூப நானே
யொன்றூலு முன்னவொணுச் சொரூப நானே
யெதாகினுமோ ரணுவுமிலாச் சொரூப நானே
யெனும்பிரம் நிச்சயமே தருப்பணங் காண். (7)

நிருமலமாம் பரப்பிரம சொரூப நானே
நிர்க்குணமாம் பரப்பிரம சொரூப நானே
நிருபமமாம் பரப்பிரம சொரூப நானே
நிரஞ்சனமாம் பரப்பிரம சொரூப நானே
நிரவயவ பரப்பிரம சொரூப நானே
நிட்களமாம் பரப்பிரம சொரூப நானே
யிருமையிலாப் பரப்பிரம சொரூப நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (8)

சாட்சியமா யொருபொருளு மிலாமை யாலே
சாட்சியெனுந் தன்மையிலாச் சொரூப நானே
காட்சியுடன் காண்பானு மிலாமை யாலே
கலக்கமிலாக் கேவலமாஞ் சொரூப நானே
மோட்சமுடன் பந்தமுமே யிலாமை யாலே
மொழியுமொரு விசேடமிலாச் சொரூப நானே
யீட்சணமே முதலில்தாஞ் சொரூப நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (9

உடல்பொறிக ளுயிர்கண்மனம் புந்தி சித்த
மோங்குமகங் காரமிலாச் சொரூப நானே
மடமையதன் காரியமா நாம ரூப
மயலணுவு மருவாத சொரூப நானே
படருமனோ வாக்குகளுக் கெட்டா தான
பங்கமிலாச் சைதன்ய சொரூப நானே
யிடரில்பரா நந்தகன சொரூப நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்ப ணங்காண். (10)

சத்தியசிற் சுககனமாஞ் சொரூப நானே
சலனமிலா வேகான்ம சொரூப நானே
நித்தியமா நிருவாண சொரூப நானே
நிறைவுற்ற மகாமௌன சொரூப நானே
யுத்தமமாந் துரியபர சொரூப நானே
யோய்ந்ததுரி யாதீத சொரூப நானே
யித்தனையு மிலாதபர சொரூப நானே
யெனும்பிரம நிச்சயமே தருப்பணங் காண் (11)

சனனமுதல் விகாரமிலாச் சொரூப நானே
சஞ்சலமாங் கிரியையிலாச் சொரூப நானே
நனவுகனுச் சுழுத்தியிலாச் சொரூப நானே
நவில்விசுவ னுதியிலாச் சொரூப நானே
பனுவுபுர மூன்றுமிலாச் சொரூப நானே
பரசீவ சகங்களிலாச் சொரூப நானே
யநவரதம் பரப்பிரம சொரூப நானென்
றமர்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (12)

சந்ததமுஞ் சன்மாத்ர சொரூப நானே
சலனமிலாச் சின்மாத்ர சொரூப நானே
தொந்தமிலாச் சுகமாத்ர சொரூப நானே
துவிதமிலா வத்துவித சொரூப நானே
பந்தமிலாப் பரமுத்த சொரூப நானே
பரமசிதா காயபர சொரூப நானே
யந்தமிலாப் பரப்பிரம சொரூப நானென்
றமர்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (13)

அதுவிதுநீ நான்முதலாய்க் காண்ப வெல்லா
மணுவுமிலை யணுவுமிலை யணுவு மில்லை
யெதுவெதுதான் றிருசியமா யெங்கே யெங்கே
யெவ்விதமாய்த் தோன்றினுமத் தோற்ற மெல்லாந்
திதமருவுந் திருக்கான பிரம மேயாந்
திலமளவு மையமிலை சத்தி யந்தா
னிதமனைய பரப்பிரம நானே யென்று
நிகழ்பிரம நிச்சயமே தருப்பணங் காண். (14)

இவ்விதமே பரப்பிரம தருப்ப ணத்தை
யெல்லோர்க்கு மிதமாக விசைத்தேன் மைந்தா
செவ்வியதா மிப்பொருளை யொருகா லேனுஞ்
சிரத்தையுடன் கேட்டுணர்வோன் பிரம மாவ
னவ்விதமே பரமசிவ னருளிச் செய்த
வதிசயமாம் பரப்பிரம வோமந் தன்னைத்
திவ்வியமா நிதாகவினி யுனக்குச் சொல்வேன்
றியங்கியிடா மனதுடனே திருந்தக் கேளாய். (15)

அகமனிசம் பரப்பிரம சொரூப மானே
னகமனிசம் பரமான்ம சொரூப மானே
னகமனிசம் பரமசிவ சொரூப மானே
னகமனிசம் பராற்பரமாஞ் சொரூப மானே
னகமனிசம் பரமசுக சொரூப மானே
னகமனிசம் பரிபூன்ற சொரூப மானே
னகமனிசம் பிரஞ்ஞான சொரூப னென்னு
மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (16)

நிருமலமாம் பரப்பிரம சொரூப மேநா
னித்தியமாம் பரப்பிரம சொரூப மேநான்
பரவியதாம் பரப்பிரம சொரூப மேநான்
பரிசுத்த பரப்பிரம சொரூப மேநான்
பிரிவுபெறுப் பரப்பிரம சொரூப மேநான்
பிரணவார்த்த பரப்பிரம சொரூப மேநா
னருவமதாம் பரப்பிரம சொரூப நானென்
றகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (17)

சதாநந்த பரப்பிரம சொரூப மேநான்
சாந்தமதாம் பரப்பிரம சொரூப மேநான்
சிதாநந்த பரப்பிரம சொரூப மேநான்
சின்மயமாம் பரப்பிரம சொரூப மேநா
னுதாரமதாம் பரப்பிரம சொரூப மேநா
ேனோர்வடிவாம் பரப்பிரம சொரூப மேநா
னதாகியநற் பரப்பிரம சொரூப நானென்
றகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (18)

கருதவொணுப் பரப்பிரம சொரூப மேநான்
களங்கமிலாப் பரப்பிரம சொரூப மேநா
னுருவமிலாப் பரப்பிரம சொரூப மேநா
னுணர்வுருவாம் பரப்பிரம சொரூப மேநான்
கிரியையிலாப் பரப்பிரம சொரூப மேநான்
கேவலமாம் பரப்பிரம சொரூப மேநா
னருவமதாம் பரப்பிரம சொரூப நானென்
றகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (19)

அகமென்றுந் தேகமலன் பொறிக ளல்ல
னகமென்றும் பிராணனலன் மனது மல்ல
னகமென்றும் புத்தியலன் சித்த மல்ல
னகமென்று மாங்காரந் தானு மல்ல
னகமென்று மிதன்மூலாஞ் ஞான மல்ல
னகநனவு கனவுதுயி லடைந்தோ னல்ல
னகமென்று மெவைக்கும்விலட் சணமே யென்னு
மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (20)

அகமென்றுந் தூலமுத லுடன் மூன்றல்ல
னகம்விசுவ முதியபி மானி யல்ல
னகமென்று மன்னமய மாதி யல்ல
னகமென்று மவையினபி மானி யல்ல
னகமென்று மறைந்தவையின் றிரளு மல்ல
னகநாம ரூபங்க ளெவையு மல்ல
னகமென்று மெவைக்கும்விலட் சணமே யென்னு
மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (21)

ஓதியுணர் சிரவணமு மெனக்கிங் கில்லை
　யூகமுறு மனனமுமே யெனக்கிங் கில்லை
பேதமிலாத் தியானமுமே யெனக்கிங் கில்லை
　பிரிவற்ற சமாதியுமே யெனக்கிங் கில்லை
யேதுமிலா ஞானமுமே யெனக்கிங் கில்லை
　யிருமையிலா முத்தியுமே யெனக்கிங் கில்லை
யாதியிலாப் பரப்பிரம நானே யென்னு
　மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (22)

சகதமுதற் பேதங்கண் மூன்று மில்லை
　சூக்கமகா பூதங்க ளைந்து மில்லை
புகன்மனது முதலியவோர் நான்கு மில்லை
　பூதமுதற் காலங்கண் மூன்று மில்லை
விகலமுறு குணங்களொரு மூன்று மில்லை
　விதிமுதலா மூர்த்தியொரு மூன்று மில்லை
யகமனிசம் பரப்பிரம சொரூப னென்னு
　மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (23)

வேதங்க ளனைத்துமிலை நூற்க ளில்லை
　விளம்பியவவ் வேதாதிப் பொருளு மில்லை
பூதங்க ளனைத்துமிலை யப்பூ தத்தாற்
　பொருந்துவதாஞ் சரமசர மெவையு மில்லை
பேதங்க ளனைத்துமிலை யப்பே தத்தாற்
　பின்னமெனப் பேசியிடும் பொருளு மில்லை
யாதங்க மற்றபர நானே யென்னு
　மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (24)

அகிலவித தத்துவமு மசத்தே யாகு
　மகிலவித வுலகமுமே யசத்தே யாகு
மகிலவித வன்னமுமே யசத்தே யாகு
　மகிலவித வாச்சிரம மசத்தே யாகு
மகிலவித நாமங்க ளசத்தே யாகு
　மகிலவித ரூபங்க ளசத்தே யாகு
மகிலமிலாப் பரப்பிரம நானே யென்னு
　மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (25)

சுருதியுணர் ஞானமுமே யசத்தே யாகுஞ்
சூக்குமநூன் ஞானமுமே யசத்தே யாகு
சருவவித தீர்த்தமுமே யசத்தே யாகுஞ்
சகலதவந் தானமுமே யசத்தே யாகுங்
குரவனொடு சீடனுமே யசத்தே யாகுங்
குருசொல்லு மந்திரமு மசத்தே யாகு
மருவமதாம் பரப்பிரம நானே யென்னு
மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (26)

தொந்தமுற நினைப்பவெலா மசத்தே யாகுந்
துவிதமதாய்க் காண்பவெலா மசத்தே யாகும்
பந்தமுறு தேகமுத லசத்தே யாகும்
பலவிதமாஞ் சீவர்களு மசத்தே யாகுஞ்
சிந்தையுறும் போகமெலா மசத்தே யாகுஞ்
செறிகின்ற வினைகளெலா மசத்தே யாகு
மந்தமிலாப் பரப்பிரம நானே யென்னு
மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (27)

வித்தரமாய் விளம்புவது மசத்தே யாகும்
விருப்பமுடன் கேட்பதுவு மசத்தே யாகுஞ்
சத்தியமாய்ப் பார்ப்பதுவு மசத்தே யாகுஞ்
சஞ்சலமா யுணருவது மசத்தே யாகு
மெத்திரமாய்த் தோற்றுவது மசத்தே யாகு
மெவ்விதமாந் திருசியமு மசத்தே யாகு
மத்தமிலாப் பரப்பிரம நானே யென்னு
மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (28)

குறைவற்ற பரப்பிரம மான வென்னிற்
குறுக்குநெடுக் கானவெலா மசத்தே யாகுங்
கறையற்ற பரப்பிரம மான வென்னிற்
காரியகா ரணமெல்லா மசத்தே யாகு
மறைவற்ற பரப்பிரம மான வென்னின்
மயங்கியிடுந் தோற்றமெலா மசத்தே யாகு
மறிவுற்ற தெவையுமிலாப் பரநா னென்னு
மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (29)

சருவமொடு கிஞ்சிலுமே யசத்தே யாகுஞ்
 சஞ்சலமாஞ் சுகதுக்க மசத்தே யாகும்
புரணமொடு பரிச்சின்ன மசத்தே யாகும்
 புண்ணியபா வங்களெலா மசத்தே யாகு
மருவுசெய மபசெயமு மசத்தே யாகு
 மகிழுமிலா பாலாப மசத்தே யாகு
மருவமதாம் பரப்பிரம நானே யென்னு
 மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (30)

சித்தமுத லெப்பொருளு மசத்தே யாகுஞ்
 சிறுமைதரும் பகுதியுமே யசத்தே யாகும்
வித்தரமாம் வித்தையெலா மசத்தே யாகும்
 விதம்விதமாந் தோற்றமெலா மசத்தே யாகுஞ்
சத்தமுத லைம்புலனு மசத்தே யாகுஞ்
 சகலசரா சரசகமு மசத்தே யாகு
மத்தமிலாப் பரப்பிரம நானே யென்னு
 மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (31)

புத்திரனே யுட்பொருளு மசத்தே யாகும்
 புரையற்ற வெளிப்பொருளு மசத்தே யாகும்
பத்திசெயு நீதானு மசத்தே யாகும்
 பகர்கின்ற நான்றானு மசத்தே யாகும்
வித்தரமா மற்றேரு மசத்தே யாகும்
 விரிந்தசக சீவபர மசத்தே யாகு
மத்துவிதப் பரப்பிரம நானே யென்னு
 மகம்பிரம நிச்சயமே யரிதா மோமம். (32)

அகம்பிரம நிச்சயமே தான மற்று
 மகம்பிரம நிச்சயமே மந்தி ரங்கா
ணகம்பிரம நிச்சயமே தருப்ப ணம்மற்
 றகம்பிரம நிச்சயமே யோம மைந்தா
வகம்பிரம நிச்சயமே மற்று முள்ள
 வறங்களெலா மாதலினுன் முமுட்சு வாஞே
ரகம்பிரம நிச்சயமே யிடை விடாம
 லநவரத மாதரவாய்ப் பழகல் வேண்டும். (33)

இவ்விதமே பரமசிவ னிசைத்த வண்ண
மீனமிலாத் தானமுத லோம மீறுய்ச்
செவ்வியவாம் பொருளையெலாஞ் செப்பி னேனுன்
செப்பியதி லையமிலை சத்தி யந்தான்
றிவ்வியமாய் நிறைந்தெங்கு நின்ற வீசன்
றிருப்பாதந் தன்னுணை யுரைத்த துண்மை
யவ்விதமா மிப்பொருளை யொருகா லேனு
மன்புடனே கேட்டுணர்வோன் பிரம மாவன். (34)

உலகமெலா மெதனிடையி லுதித் தொடுங்கு
மொளிர்பானு விந்துவன லுடுக்கண் மின்னற்
பலவொளியு மெதனாலே விளக்க லாகும்
பகருமவை யெதனைநிதம் விளக்க மாட்டா
விலகுசுரா சுரரெவரு மெதன் பயத்தா
லெக்காலுந் தஞ்செயலே யியற்று நிற்ப
ரலையுமறி பொருளையெலா மகற்றி யந்த
வறிவுருவாஞ் சிவத்தையுபா சிக்க வேண்டும். (35)

அகண்டவறி வானபர சிவமே நானென்
றநவரத மிடையறவே செய்யுந் த்யானம்
புகன்றவுபா சனையாகு மதனு னுண்மை
பொருந்தியநற் புந்தியினுற் பரசி வத்தை
நிகழ்ந்திடவே யறிந்திடலா மற்றென் றாலு
நிருமலமா யறியவொண்ணு தாதலாலே
பகர்ந்தகுரு வசனத்தாற் பரசி வத்தைப்
பத்தியுட னென்றுமுபா சிக்க வேண்டும். (36)

சகலசக வதிட்டான மாகா நின்ற
சத்தியஞா னநந்த சிவமே யென்று
மகமெனவே யனியமற வறியா தோர்க்கிங்
கநந்தவித துன்பத்துக் கேது வான
விகல்பவமாம் வாரிதியி னின்றெ ழுந்தவ்
வேகபர சிவமென்னுந் தீரஞ் சார்ந்து
சுகமுறுவ திலையதனுற் பரசி வத்தைச்
சொன்னவண மெவ்விதமு மறிய வேண்டும். (37)

சந்ததமுஞ் சகலசகன் ஞாத ஞாகிச்
சகலர்க்கு மிதமான போக மோட்ச
மெந்தவித புருடார்த்தந் தனையு நல்கு
மியல்புள்ள பரமசிவ னிசைத்த வண்ண
மந்தரிபு மாமுனிவ னிதாக னுக்கங்
ககத்திலுள சங்கையெலாந் தீரும் வண்ணம்
பந்தமறு தருப்பணமோ டோமந் தன்னைப்
பரிவுடனே பாங்காகப் பகர்ந்தா னன்றே. (38)

**வேறு.**

சருவபூரண மாகிய கண்டமாய்ச்
சாந்தமாய்ச்சச்சி தாநந்த ரூபமாய்த்
திருசியங்க ளனைத்து மிலாமலே
திருக்குமாத்திர மாய்த்திக ழாநின்ற
பிரிவிலாப்பர நானென்று பேசிய
பிரமதர்ப்பண மும்பர வோமமு
மரியவாநந்தத் தாண்டவ மாடுநம்
மாண்டவன்பரி பூரண ரூபமே. (39)

ஏழாவது அத்தியாயம்
முற்றிற்று.
ஆக அத்தியாயம், 7-க்கு திருவிருத்தம்-342.

---

## எட்டாவது
## சீவன்முத்த னிலக்கணம் உரைக்கும் அத்தியாயம்.

நிதாகநினக் கிவ்வோத்திற் சீவன் முத்த
னிகழுமிலக் கணமான போதஞ் சொல்வேன்
சதாநந்த கனமான வான்மா வாகச்
சாந்திமிகுந் திருப்போனே சீவன் முத்த
னுதாரபரி பூரணமா யொழிவில் சத்தா
யுணர்வுருவா மான்மாவுக் கபின்ன மான
சிதாநந்த பரப்பிரம நானே யென்று
செறிகின்ற துணிவுடையோன் சீவன் முத்தன். (1)

சத்துவமே முதலியமுக் குணமு மின்றிச்
சத்தியமாய்ப் பாற்பரமாய்ப் பரமா நந்த
சித்துருவாம் பரப்பிரம நானே யென்று
சின்னமிலாத் துணிவுடையோன் சீவன் முத்த
னத்திரமாந் தேகங்கண் மூன்று மின்றி
யறிவுருவா யாநந்த கனமா யொன்றாய்
நித்தியமாம் பரமான்மா நானே யென்று
நிரந்தரமாந் துணிவுடையோன் சீவன் முத்தன். (2)

தேகமுத லபிமான மணுவு மின்றித்
திடமாகப் பரப்பிரம நானே யென்னு
மேகமதாந் துணிவுற்றுப் பரமா நந்த
மெப்போது மிசைந்திடுவோன் சீவன் முத்தன்
சோகமுறு மகங்கார மிறையு மின்றிச்
சுத்தபர சின்மாத்ர சொரூப மாக
மோகமற நின்றுமகா நந்தம் பெற்று
மோனமடைந் திடுவோனே சீவன் முத்தன். (3)

தூயமனந் தனிலென்றுஞ் சின்மாத் ரத்தைத்
தொடர்பவனாய்ச் சின்மாத்ர சொரூப னாகி
மாயைமுதற் கற்பிதமாம் பொருளை யெல்லா
மதியாத மன துடையோன் சீவன் முத்தன்
காயமுத லெவ்விடத்து நிறைந்து நின்றுங்
கற்பிதமா மொன்றோடும் பற்றே யின்றி
நேயமதா நித்தசுக திருத்த னாகி
நிச்சலமாய் நின்றவனே சீவன் முத்தன். (4)

எப்போதும் பரமான்மா பரனே யாகி
யேகமதாம் பிரஞ்ஞான மகமென் றெண்ணித்
தற்போத மின்றிமகா நந்த ரூபந்
தானாகி நிற்பவனே சீவன் முத்தன்
கற்போல மனமுதலின் சலன மின்றிக்
களங்கமிலாக் கேவலனாய்ச் சுத்தான் மாவாய்ச்
சற்போத வாநந்த வநுப வத்தைச்
சந்ததமுஞ் சார்ந்தவனே சீவன் முத்தன். (5)

அன்னியமாஞ் சிந்தையெலா மறவுந் தள்ளி
யகண்டைக ரூபமதாய்ச் சாந்த ணுகிப்
பின்னமுறும் பொய்யான பொருளே யின்றிப்
பேதமற நிற்பவனே சீவன் முத்த
னுன்னவொணு மாயைமனம் புந்தி சித்த
மோங்குமகங் காரமுயிர் பொறிக டேக
மென்னுமிவை யெனக்கில்லை பிரம மேநா
னென்றுதிட நிச்சயவான் சீவன் முத்தன். (6)

சத்தமுத லைம்புலனு மெனக்கிங் கில்லை
சத்துருவாங் காமமில்லை கோப மில்லை
புத்தியுறுந் தோடமில்லை குணமு மில்லை
பொய்யான மற்றவொரு பொருளு மில்லை
சித்தமுத லெவையுமிலாத் தன்மை யாலே
சிறுமைதரும் பந்தமில்லை முத்தி யில்லை
யித்தனையு மில்லாத பிரம மேநா
னென்றுதிட நிச்சயவான் சீவன் முத்தன். (7)

எனக்கயலாய்த் தூலமுதற் றேக மில்லை
யெனக்கயலாய் நனவுமுத லவத்தை யில்லை
யெனக்கயலாய் விசுவன்முத லாரு மில்லை
யெனக்கயலாய்ச் சமட்டிவியட் டிகளு மில்லை
யெனக்கயலா யாந்தரமாஞ் சகத்து மில்லை
யெனக்கயலாய் வாகியமாஞ் சகத்து மில்லை
யெனக்கயலா யெவையுமில்லை பிரம மேநா
னென்றுரமா யிருந்திடுவோன் சீவன் முத்தன். (8)

எனக்கயலாய்த் தீர்த்தமில்லை தான மில்லை
யெனக்கயலாய்த் தலங்களில்லை தெய்வ மில்லை
யெனக்கயலாய்த் தெய்வத்தின் சேவை யில்லை
யெனக்கயலாய்த் தருமமில்லை பாவ மில்லை
யெனக்கயலாய்ச் சனனமில்லை பந்த மில்லை
யெனக்கயலாய் ஞானமில்லை மோட்ச மில்லை
யெனக்கயலா யெவையுமில்லை பிரம மேநா
னென்றுரமா யிருந்திடுவோன் சீவன் முத்தன். (9)

எனக்கயலாய் வேதமில்லை நூலு மில்லை
யெனக்கயலாய் விதியுமில்லை நிடேத மில்லை
யெனக்கயலாய்க் குருவுமில்லை சீட னில்லை
யெனக்கயலா யுபதேச வாக்கு மில்லை
யெனக்கயலாய்ப் பரமுணரும் போத மில்லை
யெனக்கயலாய்க் காலமில்லை தேச மில்லை
யெனக்கயலா யென்றுமொரு பொருளு மில்லை
யான்பிரம மென்றுணர்வோன் சீவன் முத்தன். (10)

எனக்கயலாய்ப் பூதமில்லை புவன மில்லை
யெனக்கயலாய்ப் பௌதிகமா மெவையு மில்லை
யெனக்கயலாய்ச் சருவமில்லை கிஞ்சி வில்லை
யெனக்கயலா யொருமையில்லை யிருமை யில்லை
யெனக்கயலாய்த் தூரமில்லை யண்மை யில்லை
யெனக்கயலா யுயர்வுமில்லை தாழ்வு மில்லை
யெனக்கயலாய்ப் புகழ்வுமில்லை யிகழ்வு மில்லை
யான்பிரம மென்றுணர்வோன் சீவன் முத்தன். (11)

எனக்கயலாய்ச் சாதியில்லை நீதி யில்லை
யெனக்கயலாய்க் கோத்திரமுங் குலமு மில்லை
யெனக்கயலாய்க் கருமமில்லை பயனு மில்லை
யெனக்கயலாய்க் காரியகா ரணமு மில்லை
யெனக்கயலாய் வித்தையில்லை யவித்தை யில்லை
யெனக்கயலாய்த் தியானமில்லை சமாதி யில்லை
யெனக்கயலாய் நாதமில்லை சத்த மில்லை
யான்பிரம மென்றுணர்வோன் சீவன் முத்தன். (12)

எனக்கயலாய்ச் செபமுமில்லை தவமு மில்லை
யெனக்கயலாய் மந்திரதந் திரமு மில்லை
யெனக்கயலா யோமமில்லை சாந்தி யில்லை
யெனக்கயலா யிரவுமில்லை பகலு மில்லை
யெனக்கயலாய் விதியுமில்லை யரியு மில்லை
யெனக்கயலாய் யானுமில்லை யினனு மில்லை
யெனக்கயலாய்த் தேவதைக ளாரு மில்லை
யான்பிரம மென்றுணர்வோன் சீவன் முத்தன். (13)

சீதமுடன் ருபமுமே யெனக்கிங் கில்லை
  செயமுடனே யபசெயமு மெனக்கிங் கில்லை
பீதியுட னபீதியுமே யெனக்கிங் கில்லை
  பிணிபோன்ற பசிதாக மெனக்கிங் கில்லை
யாதியுடன் வியாதியுமே யெனக்கிங் கில்லை
  யடிமுடிமேற் கீழொன்று மெனக்கிங் கில்லை
போதகன பரப்பிரம நானே யென்று
  பூரணமா மறிவுடையோன் சீவன் முத்தன். (14)

பனுவியிடுந் திக்குவிதிக் கெனக்கிங் கில்லை
  பாகியமு மாந்தரமு மெனக்கிங் கில்லை
வினவியிடத் தகுபொருளு மெனக்கிங் கில்லை.
  விளம்பியிடத் தகுபொருளு மெனக்கிங் கில்லை
நினைவிலுறத் தகுபொருளு மெனக்கிங் கில்லை
  நின்றுணரத் தகுபொருளு மெனக்கிங் கில்லை
யணியமிலாப் பரப்பிரம நானே யென்னு
  மகண்டபர வறிவுடையோன் சீவன் முத்தன். (15)

பலவிதமாம் போக்கியமு மெனக்கிங் கில்லை
  பற்றியிடும் போகமுமே யெனக்கிங் கில்லை
யலைவுதரு மிராகமுமே யெனக்கிங் கில்லை
  யமர்கின்ற சாந்தியுமே யெனக்கிங் கில்லை
நிலைமருவா வவிவேக மெனக்கிங் கில்லை
  நீக்கவொணாப் பாசமுமே யெனக்கிங் கில்லை
சலனமிலாப் பரப்பிரம நானே யென்று
  சந்ததமுந் துணிவுடையோன் சீவன் முத்தன். (16)

பிரியமுட னப்பிரிய மெனக்கிங் கில்லை
  பிரமோத மோதமுமே யெனக்கிங் கில்லை
யிருமையெனு மாரோப மெனக்கிங் கில்லை
  யில்லையெனு மபவாத மெனக்கிங் கில்லை
நிருமலமா மிலக்கியமு மெனக்கிங் கில்லை
  நிலைபெற்ற யோகமுமே யெனக்கிங் கில்லை
யொருவடிவாம் பரப்பிரம நானே யென்னு
  முரமான துணிவுடையோன் சீவன் முத்தன். (17)

பிறந்திடுத லிருந்திடுதல் வளர்தலில்லை
பெருத்திடுத லிளைத்திடுதன் மரித்த லில்லை
செறிந்தபல சருமாதி தாது வில்லை
சிறுமையுட னெவ்வனமுஞ் சரையு மில்லை
யறிந்திடுமோ ருபாதியுமே யெனக்கிங் கில்லை
யத்துவிதந் துவிதமுத லெவையு மில்லை
நிறைந்தவறி வானபர நானே யென்று
நிலைபெற்று நிற்பவனே சீவன் முத்தன். (18)

கருமையிலை வெண்மையிலை செம்மை யில்லை
கண்டபல வுருவமிலை நாம மில்லை
மருளுமிலை தெருளுமிலை வெளியு மில்லை
மறைவுமிலை யிருளுமிலை யொளியு மில்லை
விரதமிலை யின்பமிலை துன்ப மில்லை
வேறான பொருளொன்று மெனக்கிங் கில்லை
புரணமதாம் பரப்பிரம நானே யென்று
புரையறவே யிருந்திடுவோன் சீவன் முத்தன். (19)

ஏதமெனத் தள்ளியிடும் பொருளு மில்லை
யிதமெனவே கூட்டியிடும் பொருளு மில்லை
யோதியிடுங் குருசீடர் முதலு மில்லை
யொளிர்ஞான ஞாதுருஞே யங்க ளில்லை
சேதனமுஞ் சித்தலதாஞ் செடமு மில்லை
செறிகின்ற சுபாசுபமு மெனக்கிங் கில்லை
பேதமிலாப் பரப்பிரம நானே யென்று
பிரிவறவே யிருந்திடுவோன் சீவன் முத்தன். (20)

அற்புதமா யொருபொருளு மெனக்கிங் கில்லை
யான்மாவு மனான்மாவு மெனக்கிங் கில்லை
கற்பிதமாஞ் சுவர்க்கமுதற் பலமு மில்லை
களங்கமறப் பழகியிடுங் கல்வி யில்லை
பற்பலவாஞ் சங்கைசமா தான மில்லை
பயில்சாந்தி தாந்திமுத லெனக்கிங் கில்லை
தற்பதமாம் பரப்பிரம நானே யென்று
தளர்வறவே யிருந்திடுவோன் சீவன் முத்தன். (21)

பங்கமுறு விகற்பங்க ளெனக்கிங் கில்லை
  பலவிதமா முலகங்க ளெனக்கிங் கில்லை
யிங்கிகழத் தகுபொருளு மெவையு மில்லை
  யியற்றியிடத் தகுபொருளு மெவையு மில்லை
மங்கலற வசனிக்கும் வாக்கு மில்லை
  மவுனமடைந் திடுநிலையு மெனக்கிங் கில்லை
துங்கமதாம் பரப்பிரம நானே யென்னுந்
  துணிவுடனே யிருந்திடுவோன் சீவன் முத்தன். (22)
திரிகுணமுஞ் சம்மான பகுதி யில்லை
  திகழ்சத்வ மேலான மாயை யில்லை
யிருகுணமு மேலான வவித்தை யில்லை
  யிருண்மேலாந் தாமதமாம் பகுதி யில்லை
யுரைசெயுமோ ருபாதியுமே யிலாமை யாலே
  யோதியிடும் பரசீவ சகமே யில்லை
யிருமையற வுளதுபரப் பிரம மொன்றே
  யிதுவேநா னெனவுணர்வோன் சீவன் முத்தன். (23)
சத்தியஞா னநந்த சொரூப மேநான்
  சத்தியஞா னநந்த சொரூப மேநா
னித்தியஞா னனந்த சொரூப மேநா
  னித்தியஞா னனந்த சொரூப மேநான்
சுத்தபரி பூரணமாஞ் சொரூப மேநான்
  சுத்தபரி பூரணமாஞ் சொரூப நானென்
றித்திறமாய்த் திடமான நிச்ச யத்தை
  யிடையறவே யிசைந்திடுவோன் சீவன் முத்தன். (24)
தன்னிடையே தானாக விலங்கா நின்ற
  தற்பதமாம் பரப்பிரமந் தானே யென்று
பின்னமிலா வறிவுற்றுப் பிரமா காரம்
  பெற்றவனே பிணிப்பற்ற சீவன் முத்த
னன்னியமே யில்லாத வான்மா வின்க
  ணமர்ந்தாங்கே ரமிப்போனு யகண்ட மான
தன்னிடையே தானாகத் தனித்து நின்று
  தன்னின்பம் புசிப்பவனே சீவன் முத்தன். (25)
அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
  றறிந்திடா நிச்சயமே யடைந்த வற்றுற்

றரும்பிரம சொரூபத்தி னிட்டை கூடித்
தங்குமனோ விகற்பமெலாந் தவிர்ந்தோ னாகிச்
சகம்பரமா னீதெனவே தோற்றுந் தோற்றஞ்
சகலமுமே மறந்துமகா நந்தம் பெற்று
மிரும்பிரம ஞானத்தி னும்பெற் றோனை
மிகமேலாய் விளம்பியிடுஞ் சீவன் முத்தன். (26)

இன்னவிதம் பரமசிவ னெனக்கு முன்ன
மினிமையுட னருள்செய்த சீவன் முத்தன்
றன்னுமிலக் கணமான நிடபோ தத்தைத்
துகளறவே நிதாகநினக் கருளிச் செய்தேன்
சொன்னவிவை வேதத்துஞ் சாத்திரத்துஞ்
சூக்குமமா மரிதாகுங் குய்ய மாகும்
பன்னுமிதைப் பரிவுடனே யொருகா லேனும்
பங்கமறக் கேட்டுணர்வோன் பரமே யாவன். (27)

ஈசனிலை யெனும்வாத மியம்பு வோரா
யிருக்குமுதல் வேதத்தின் கரும காண்டம்
பேசியிடுங் கருமத்தாற் றந்தே கத்தைப்
பேதமதி கொண்டுமிகக் கிலேசிப் பித்துச்
சாசுவத சுவர்க்கத்தைச் சார்வோ மென்று
சஞ்சலமா மதியுடையோ ரொருகா லத்து
மாசிலதாம் பிரமசுக மருவா ரென்று
மகத்தான பவதுக்கந் தனையே சார்வார். (28)

பரமசிவா ராதனையே செய்த வற்றாற்
பற்றுவதா மகண்டான்ம ஞான மென்னுந்
திரமருவு நாவாயாற் பரேச பத்தன்
றீர்க்கமுறும் பவவாரி கடப்ப னன்றிப்
பரியினது கோடெனவே வெறும்பொய் யேனும்
பவவாரி யிதைமற்றோர் கடவா ரென்றே
யரியரிபு நிதாகற்குச் சீவன் முத்த
னமைவுற்ற விலக்கணமங் கருள்செய் தானால். (29)

வேறு.

துன்னுமாயையவித்தைகடாமிலை தொடருமீசனுஞ்சீவனுந்தாமிலை
பின்னமின்றிபகண்டமதாகிய பிரமமேயகமென்றுதெரிந்திடுஞ்
சின்னமில்நிடயாகியபோதமே சீவன்முத்தனுக்கானவிலக்கண
மென்னலாநந்தத்தாண்டவமாடும் மீசன்றன்பரிபூரணரூபமே (30)

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம், 8-க்கு திருவிருத்தம் - 372.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

## ஒன்பதாவது

### விதேகமுத்த னிலக்கணம் உரைக்கும் அத்தியாயம்.

இங்குமிக வரிதான விதேக முத்த
னிலக்கணமே நிதாகநினக் கியம்பக் கேளாய்
தங்குநினை வனைத்தையுமே தவிர்ந்து சுத்த
தற்பரனே தானாகிச் சாந்த னாகித்
துங்கசுக கனமாகித் துச்ச ரூபத்
தொடர்பின்றி மகாமவுன நிலைபெற் றோனாய்
மங்கலிலா வுணர்வுருவாம் பிரம ரூப
மாத்திரமா யிருப்பவனே விதேக முத்தன். (1)

பின்னமிலாச் சருவான்ம சொரூப மாகிப்
பிரிவற்ற பரசாந்த சொரூப மாகித்
துன்னியிடும் பந்தமிலாச் சொரூப மாகித்
தொடர்மோட்சந் தானுமிலாச் சொரூப மாகி
யுன்னுமொரு வடிவுமிலாச் சொரூப மாகி
யுண்மையுணர் வாநந்த சொரூப மாகி
மன்னுபரி பூரணமாம் பிரம ரூப
மாத்திரமா யிருப்பவனே விதேக முத்தன். (2)

பயிலுமகா வாக்கினிலக் கியவான் மாவாய்ப்
பரமசுக கனமான பரமான் மாவாய்ச்
செயலெவையு மில்லாத சுத்தான் மாவாய்ச்
சின்மயமாய்ச் செறிகின்ற சகசான் மாவா
யயலணுவு மணுகாத வெறுமான் மாவா
யறுவிதமாம் விகாரமிலா வகண்டான் மாவாய்
மயலில்பரி பூரணமாம் பிரமான் மாவாய்
மன்னியிருந் திடுவோனே விதேக முத்தன். (3)

பிரமமக மகம்பிரம மென்றிவ் வண்ணம்
பெறுகின்ற தியானமுநிச் சயமு மின்றி
நிருமலமாஞ் சின்மாத்ர சொரூப மாக
நிற்பவனே நிலைபெற்ற விதேக முத்த
னரியபர மகமென்று மல்ல வென்று
மகிலமுமே யுளதென்று மில்லை யென்று
மொருவிதமாம் விகற்பமுமே யின்றி யென்று
மோர்வடிவா யிருப்பவனே விதேக முத்தன். (4)

எப்போது மெவ்விடத்து மெதனை யேனு
மெண்ணியிடும் விகற்பங்க ளிறையு மின்றித்
தற்போதந் தவிர்ந்துபரப் பிரம ரூபந்
தானாகி யிருப்பவனே விதேக முத்தன்
கற்போல விருப்பனெனு நினைவு மின்றிக்
கற்பிதமாய்த் தோற்றியவெப் பொருளு மின்றிச்
சற்போத சுககனமாம் பரமே யாகச்
சலனமிலா திருப்பவனே விதேக முத்தன். (5)

பூதமுதற் பலவிதமாங் கால பேதம்
பொய்யான வெகுவிதமாந் தேச பேத
மோதியிடும் பலவான வத்து பேத
மொன்றுமிலா திருப்பவனே விதேக முத்த
னீததுநீ யிவனவனு னிவளே யாதி
யெவ்விதமாம் பேதமுமோ ரணுவு மின்றிப்
போதகனப் பரப்பிரம வடிவே யாகப்
பொருந்தியிருந் திடுவோனே விதேக முத்தன். (6)

திருமலமாய் நிர்க்குணமாய் நித்தான் மாவாய்
நிலைபெற்ற வறிவுருவாய் நுண்மை யாகிப்
பரவியகா லான்மாவாய்க் கால மின்றிப்
பலவிததே வான்மாவாய்த் தெய்வ மின்றிச்
சருவசக தான்மாவாய்ச் சருவ மின்றிச்
சத்தியமாய்ச் சுககனமாய்ச் சாந்த மாகிப்
புரணமதாம் பரப்பிரம வடிவே யாகப்
பொருந்தியிருந் திடுவோனே விதேக முத்தன். (7)

ஞாதுருஞா னுதியிலாச் சுத்தான் மாவாய்
ஞாலமிலாக் கேவலமாம் பரமான் மாவா
யேதுமொரு சடமுமிலாப் போதான் மாவா
யிறையுமனுன் மாவின்றி யேகான் மாவாய்ப்
பீதிசெயும் விகற்பமிலா வபயான் மாவாய்ப்
பேதமிலா மெய்யுணர்வா நந்தான் மாவா
யாதியிலா வகண்டபரப் பிரமான் மாவா
யமர்ந்தசைவற் றிருப்பவனே விதேக முத்தன். (8)

ஏதுமொரு பந்தமிலா முத்தான் மாவா
யிருமையிலாப் பரசத்தா மாத்ரான் மாவாய்ப்
பேதமிலாக் கேவலமா ஞானன் மாவாய்ப்
பிரிவற்ற கேவலவா நந்தான் மாவாய்த்
தீதுசெயு மகங்கார ரகிதான் மாவாய்த்
திருசியமே யில்லாத திகழ்வான் மாவாய்
வீதலிலா வகண்டபரப் பிரமான் மாவாய்
வெறிதாக விருப்பவனே விதேக முத்தன். (9)

சிவனெனு மீசனெனுஞ் செகத்தீ தென்னுஞ்
செப்பியிடுஞ் சுருதியெனு மிருதி யென்னும்
பாவனமாம் புராணமிதி காச மென்னும்
பலவிதவா கமமென்னு நூல்க ளென்னு
மேவுபொருள் சகலமுமே பிரம மென்னு
மெய்ப்பிரம நானென்னு மயலன் றென்னும்
பாவனையீ தொன்றுமிலா தென்றுஞ் சுத்த
பரமாக விருப்பவனே விதேக முத்தன். (10)

சகலசக சீவபர மான தோற்றஞ்
சந்ததமுஞ் சற்றேனு மில்லை யென்று
மகிலமுமே யறிவுருவாம் பிரம மென்று
மவ்விதமாம் பரப்பிரம நானே யென்றும்
புகலுமொரு பாவனையுஞ் சிறிது மின்றிப்
பூரணசை தன்னியமாத் திரமே யாகிச்
சுககனமாய்ச் சுத்தமதாய்ச் சாந்த மாகிச்
சும்மாவே யிருந்திடுவோன் விதேக முத்தன். (11)

அற்பமுமே யளவுபடா வபரிச் சின்ன
வறிவருவா யணுவுக்கு மணுவாய்த் தூய்தாய்ச்
சொற்பமுமே யயலற்ற துரியா தீத
சொரூபமதா யிருப்பவனே விதேக முத்தன்
கற்பிதமா நாமமுரு வொன்று மின்றிக்
களங்கமிலாப் பரமசுக கனமாய்ச் சுத்த
தற்பதமாம் பரப்பிரமந் தானே யாகித்
தனித்தென்று மிருப்பவனே விதேக முத்தன். (12)

சகலசரா சரத்துக்கு மதீத மாகிச்
சன்மயமாய்ச் சுபமசுபஞ் சற்று மின்றி
யிகழ்வுதருங் கட்டுவிட விரண்டு மின்றி
யேகபரி பூரணமா யகண்டான் மாவாய்
நிகரில்பராற் பரமாகி நிகிலான் மாவாய்
நிகிலமுமே யின்றிநிரந் தரமாய் நின்ற
திகழுசிதா காயபரப் பிரமந் தானாய்த்
திரும்பியிடா திருப்பவனே விதேக முத்தன். (13)

தத்துவமு மதத்துவமுஞ் சற்று மின்றித்
தங்குசடா சடங்களுமே சற்று மின்றி
யத்திரமா மறியாமை யறிவு மின்றி
யசமாதி சமாதிகளு மணுவு மின்றி
யித்திறமே சிந்தையசிந் தைகளு மின்றி
யிலக்கியமு மலக்கியமு மிறையு மின்றி
நித்தியமாம் பரப்பிரமந் தானே யாகி
நிலைபெற்று நிற்பவனே விதேக முத்தன். (14)

சத்தியஞா னாநந்த சொரூப மாகிச்
சந்ததமு முபசாந்த சொரூப மாகி
மெத்தவுமே வியாபகமாஞ் சொரூப மாகி
மிகப்பெரிதாஞ் சிதாகாய சொரூப மாகி
நித்தியசின் மாத்திரமாஞ் சொரூப மாகி
நிகிலபரி பூரணமாய் நிறைந்து நின்ற
சுத்தமதாம் பரப்பிரமந் தானே யாகிச்
சும்மாவே யிருந்திடுவோன் விதேக முத்தன். (15)

எப்போதும் பரப்பிரம மயமே யாகி
யெப்போதும் பகுப்பறவே யிருப்போ னாகி
யெப்போதுஞ் சன்மயமாஞ் சொரூப மாகி
யெப்போதுஞ் சலியாம லிருப்போ னாகி
யெப்போதுஞ் சின்மயமாஞ் சொரூப மாகி
யெப்போதுஞ் சிதாநந்த மயமே யாகி
யெப்போது மகண்டைக ரசமே யாகி
யிருமையிலா திருப்பவனே விதேக முத்தன். (16)

சற்போத சுககனமாஞ் சொரூப மாகிச்
சகலபரி பூரணமாய்ச் சலன மின்றிக்
கற்போலப் பிரஞ்ஞான கனமே யாகிக்
களங்கமிலாப் பரிசுத்த சுபாவ மாகி
யெப்போது மெவைகட்கு மதீத மாகி
யியங்குமனோ வாக்குகளுக் கெட்டா தான
தற்போத ரகிதபரப் பிரமந் தானாய்த்
தன்மயமா யிருப்பவனே விதேக முத்தன். (17)

தேகமுதற் கற்பிதமா முபாதி யின்றித்
திருசியமாம் விடயங்கள் யாவு மின்றி
மோகமதன் காரியமா மெவையு மின்றி
மோனமதா யிருப்பவனே விதேக முத்தன்
யாகமுறு நினைவெவையுஞ் சற்று மின்றிப்
பலவிதமாம் வாதனையுஞ் சிறிது மின்றி
யேகமதாம் பரப்பிரமந் தானே யாகி
யிருமையிலா திருப்பவனே விதேக முத்தன். (18)

நிதாகபல வுலகத்தி னினைவு மின்றி
நிகரில்பரப் பிரமத்தி னினைவு மின்றிச்
சதாநந்த மயமான பரமே யாகிச்
சன்மயமா யிருப்பவனே விதேக முத்த
னுதாரபரி பூரணவா நந்த மாகி
யுவமையிலா நிரதிசயா நந்த மாகிச்
சிதாநந்த மயமான பரமே யாகிச்
சின்மயமா யிருப்பவனே விதேக முத்தன். (19)

பலவிதமாய்த் தோற்றியவோர் நினைவு மின்றிப்
பரவுகுண விகாரங்களெவையு மின்றி
யிலகுசுயஞ் சோதியதாம் பரமே யாகி
யிருளறவே யிருந்திடுவோன் விதேக முத்த
னலையுமனோ விருத்திகளே யணுவு மின்றி
யவ்விதமாங் கரணங்க ளனைத்து மின்றிச்
சலனமிலாப் பரப்பிரமந் தானே யாகிச்
சலியாம லிருப்பவனே விதேக முத்தன். (20)

தேகமவை யொருமூன்றுஞ் சிறிது மின்றித்
தேகமெனத் தெரிந்திடுமோர் நினைவு மின்றி
யாகமுறு பெருத்தன்முதல் விகார மின்றி
யணுவுக்கு மணுவாகி யகண்ட மாகிச்
சோகமுறு துவிதத்தின் றோற்றம் யாவுஞ்
சொற்பமுமே யின்றியசிற் சுபாவ மான
பாகமுறும் பரப்பிரமந் தானே யாகிப்
பங்கமற விருப்பவனே விதேக முத்தன். (21)

பரசிவமாய்ப் பரற்பரமாய்ப் பரமான் மாவாய்ப்
பரசுகமாய்ப் பரிசுத்த சொரூப மாகி
யொருவரினுங் காணவொணு வுண்மை யாகி
யுள்வெளிக ளொன்றுமிலா தகண்ட மாகிச்
சுருதிமுடிச் சாரமதாய்ச் சுத்த சித்தாய்ச்
சொற்பொருள்கள் சொற்பமுமே யின்றி நின்ற
நிருமலமாம் பரப்பிரமந் தானே யாகி
நிச்சலமா யிருப்பவனே விதேக முத்தன். (22)

இதுவதுவென் றியம்பவொணு வேகான் மாவா
யென்றுமுள பரமார்த்த சத்தே யாகி
மதிமுதலுக் கெட்டாத மகத்தாஞ் சித்தாய்
மனவாக்குக் ககோசரவா னந்த மாகித்
திதமருவாத் துவிதங்க ளெவையு மின்றித்
திரமருவு மத்துவித சுபாவ மாகி
திதமுமொரு வடிவான பரமே யாக
நிலைபெற்று நிற்பவனே விதேக முத்தன். (23)

பிரமசுதா ரசந்தனிலே யிருப்போ னாகிப்
பிரமசுதா ரசந்தனையே புசிப்போ னாகிப்
பிரமசுதா ரசந்தனிலே ரமிப்போ னாகிப்
பிரமசுதா ரசந்தனினாற் சுகிப்போ னாகிப்
பிரமசுதா ரசந்தனிலே மூழ்கி னோனாய்ப்
பிரமசுதா ரசந்தனினாற் றிருத்த னாகிப்
பிரமசுதா ரசமதுவே தானாய் நின்றோன்
பின்னமிலாப் பரமான விதேக முத்தன். (24)

பிரமமகா நந்தத்தில் வசிப்போ னாகிப்
பிரமமகா நந்தமநு பவிப்போ னாகிப்
பிரமமகா நந்தத்தான் மகிழ்வோ னாகிப்
பிரமமகா நந்தத்தாற் பிறங்கு வோனாய்ப்
பிரமமகா நந்தத்தா னிறைந்தோ னாகிப்
பிரமமகா நந்தத்தில் லயிப்போ னாகிப்
பிரமமகா நந்தமதே தானாய் நின்றோன்
பின்னமிலாப் பரமான விதேக முத்தன். (25)

பிரமமகா நந்தசரீ ராதி யுற்றுப்
பிரமமகா நந்தமெனுங் குடும்பம் பெற்றுப்
பிரமமகா நந்தசிவார்ச் சனையுற்றோ னாய்ப்
பிரமமகா நந்தசெயம் பெற்றோ னாகிப்
பிரமமகா நந்தசுதா திருத்த னாகிப்
பிரமமகா நந்தமதேதான் மத்த னாகிப்
பிரமமகா நந்தமதே தானாய் நின்றோன்
பின்னமிலாப் பரமான விதேக முத்தன். (26)

சகபரசீ வன்களெனத் தோன்றா நின்ற
சம்சார விவகாரஞ் சற்றுமின்றி
யகிலபரி பூரணமா யகண்ட சத்தா
யறிவுருவா யாநந்த கனமா யொன்றாய்
நிகரில்பர மாகாய சொரூப மாக
நிகழ்கின்ற பரப்பிரமந் தானே யாகிப்
புகலுமொரு விகற்பமுமே யின்றி யென்றும்
பூரணமா யிருப்பவனே விதேக முத்தன். (27)

பரமசிவன் கருணையினு லெனக்கு ரைத்த
பாங்காகப் பரமான விதேக முத்தன்
மருவியிடு மகத்தான விலக்க ணத்தை
மயலறவே நிதாகநினக் கருளிச் செய்தேன்
சுருதிமுடி வனைத்திலுமே சார மாகிச்
சூக்குமமா யரிதான விவ்வர்த் தத்தை
யருமையுடன் றிடமாகக் கேட்டு ணர்ந்தோ
னசரீர பரப்பிரம மாவ னன்றே. (28)

சின்மயமாஞ் சிவத்தினிடைச் சித்தம் வைத்துச்
சிவமதுவே நாமென்றிங் கறியா தோர்க்குச்
சன்மயமாம் பரப்பிரமந் தானே யாகிச்
சலியாம லிருப்பதுவாம் விதேக முத்தத்
தன்மையொரு காலத்துஞ் சித்தி யாது
தத்துவமாய் நவில்கின்றே னிதாக வென்றே
நின்மலமாய் ரிபுமுனிவன் விதேக முத்த
னிலைபெற்ற விலக்கணமே நிகழ்த்தி னுனல். (29)

வேறு.

தோற்றுகின்ற சகபர சீவரின்
றொடர்பியா தொன்றுஞ் சற்றுமிலாமலே
சாற்றுவாக்கு மனங்கட் ககோசர
சச்சிதாநந்த தற்பர மாகவே
வேற்றுமையின்றி யென்று மிருப்பதே
விதேகமுத்த னிலக்கண மென்றிட
லேற்றுமாநந்தத் தாண்டவ மாடுநம்
மீசன்றன்பரி பூரணரூபமே. (30)

ஒன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஆக அத்தியாயம்-9க்கு திருவிருத்தம்-402.

++++++++++++++++++++++++++++++++++++++++++++++

## பத்தாவது

## சருவமும் ஆன்மரூபமென்று உரைக்கும் அத்தியாயம்.



அடையமிக வரிதாகிச் சார மான
வான்மாவின் மகிமையினை யறையக் கேளாய்
சடமலதாய்ச் சத்தியசிற் சுகமா யொன்றாய்ச்
சாந்தமதா மான்மாவே யுளதா மெங்குந்
தடமருவு மவ்வான்மா தானே யாகுந்
தன்வடிவா மான்மாவுக் கயலே யில்லை
கடபடமே முதலியவாய் நானா வாகக்
காண்கின்ற விவையெல்லா மான்ம ரூபம். (1)

அகிலபரி பூரணமா மான்ம ரூப
மகிலத்துக் கப்பாலா மான்ம ரூபஞ்
சகலமதன் சொரூபமதா மான்ம ரூபஞ்
சகலத்தின் பரமாகு மான்ம ரூப
மிகவுருப சாந்தமதா மான்ம ரூப
மெய்யுணர்வா நந்தமதா மான்ம ரூப
நிகரிலதா மான்மாவுக் கயலே யில்லை
நிகிலமுமே நித்தியமு மான்ம ரூபம். (2)

சகலர்க்கும் பிரியமதா மான்ம ரூபஞ்
சாசுவத சொரூபமதா மான்ம ரூப
மகிழ்வுக்கோ ரிடமாகு மான்ம ரூப
மகத்துக்கு மகத்தாகு மான்ம ரூப
மிகழுமறு விகாரமிலா தான்ம ரூப
மிருளற்ற நிருமலமா மான்ம ரூபஞ்
சுககனமா மான்மாவுக் கயலே யில்லை
சொற்பொருளாஞ் சகலமுமே மான்ம ரூபம். (3)

சீவபர பேதமிலா தான்ம ரூபஞ்
சித்தமுத லெவையுமிலா தான்ம ரூப
மேவுமனுன் மாவிலதா மான்ம ரூப
மிருபரமாத் துவிதமதா மான்ம ரூப
மோவவிலாச் சின்மயமா மான்ம ரூப
மோர்வடிவா யுள்ளதுவா மான்ம ரூபம்
பாவனமா மான்மாவுக் கயலே யில்லை
பார்க்கின்ற பார்வையெலா மான்ம ரூபம். (4)

அத்துவிதந் துவிதமுமா மான்ம ரூப
மவ்விதமாஞ் சொலவுமிலா தான்ம ரூப
முத்தமுமாம் பெத்தமுமா மான்மரூப
முத்தமுதற் சொலவுமிலா தான்ம ரூப
மத்திறமே யகிலமிலா தான்ம ரூப
மகண்டபரி பூரணமா மான்ம ரூபஞ்
சத்தியமா யான்மாவுக் கயலே யில்லை
சந்ததமுஞ் சகலமுமே மான்ம ரூபம். (5)

சங்கற்பஞ் சற்றுமிலா தான்ம ரூபஞ்
சதாநந்த சொரூபமதா மான்ம ரூபந்
தங்குற்ற பந்தமிலா தான்ம ரூபந்
தயங்குபர தேவதையா மான்ம ரூப
மங்குற்ற மலமிலதா மான்ம ரூப
மாறுபடா நிட்களமா மான்ம ரூபம்
பொங்குற்ற வான்மாவுக் கயலே யில்லை
போக்கியபோ கங்களெலா மான்ம ரூபம். (6)

சாதமுறுச் சனுதனமா மான்ம ரூபஞ்
சத்தியசிற் சுககனமா மான்ம ரூப
மீதெனவே யெண்ணவொணு தான்ம ரூப
மெப்போது மிறப்பிலதா மான்ம ரூபம்
பேதமிலா தகிலமுமா மான்ம ரூபம்
பிரமாணு தீதமதா மான்ம ரூப
மாதியிலா வான்மாவுக் கயலே யில்லை
யயலெனவே காண்பவெலா மான்ம ரூபம். (7)

துரியமதாந் தெளிவாகு மான்ம ரூபந்
துவிதத்தின் கரியாகு மான்ம ரூப
மரியபரப் பிரமமதா மான்ம ரூப
மபரோட்ச வறிவுருவா மான்ம ரூப
மருவுமசத் தணுவுமிலா தான்ம ரூப
மற்றனிய மெவையுமிலா தான்ம ரூபம்
பிரமமதா மான்மாவுக் கயலே யில்லை
பிரிவெனவே காண்பவெலா மான்ம ரூபம். (8)

சாதனமோர் நான்குமிலா தான்ம ரூபஞ்
சாத்தியமாம் வித்தையிலா தான்ம ரூப
மேதமுறு மவித்தையிலா தான்ம ரூப
மிதன்செய்கை யெவையுமிலா தான்ம ரூப
மாதவனே மிகத்தூய்தா மான்ம ரூப
மானுவ மானமிலா தான்ம ரூபம்
போதகன வான்மாவுக் கயலே யில்லை
புலமுறவே காண்பவெலா மான்ம ரூபம். (9)

அன்னமய கோசமிலா தான்ம ரூப
மமர்பிராண கோசமிலா தான்ம ரூப
மின்னுமனோ கோசமிலா தான்ம ரூபம்
விஞ்ஞான கோசமிலா தான்ம ரூபந்
துன்னுசுக கோசமிலா தான்ம ரூபந்
தொடர்பஞ்ச கோசமிலா தான்ம ரூபம்
பின்னமுறு வான்மாவுக் கயலே யில்லை
பிரிவெனவே காண்பவெலா மான்ம ரூபம். (10)

தூலமுத லுடன்மூன்று மிலதா மான்மா
துவிதமுண ரவத்தைகளு மிலதா மான்மா
மூலமதா மஞ்ஞான மிலதா மான்மா
முத்திதரும் விஞ்ஞான மிலதா மான்மா
நாலுமகா வாக்கியமு மிலாதா மான்மா
நவிலாறு சமாதிகளு மிலதா மான்மா
ஞாலமிலா வான்மாவுக் கயலே யில்லை
ஞாதுருஞா துருஞா னதியெலா மான்ம ரூபம். (11)

ஓங்கார முதலெவையு மிலதா மான்மா
வொழிவற்ற வுணர்வுருவா யொளிரு மான்மா
வாங்கார முதலெவையு மிலதா மான்மா
வாநந்த பூரணமா யமரு மான்மா
நீங்காத சன்மாத்ர மாகு மான்மா
நிச்சலமாய் நிலைபெற்று நிற்கு மான்மா
பாங்கான வான்மாவுக் கயலே யில்லை
பலவிதமாய்ப் பார்ப்பவெலா மான்ம ரூபம். (12)

மூன்றுவித காலத்து முளதா மான்மா
முதனடுவு முடிவுமிலா திருக்கு மான்மா
தோன்றுமொரு விகற்பமுமே யிலதா மான்மா
துகளற்ற சின்மாத்ர மாகு மான்மா
வூன்றுமொரு திரிபுடியு மிலதா மான்மா
வொன்றுமிலா வோர்வடிவா யுளதா மான்மா
சான்றவனே யான்மாவுக் கயலே யில்லை
சகலமுமே சந்ததமு மான்ம ரூபம். (13)

துவிதமொடத் துவிதமுமே யிலதா மான்மா
துரியத்து மதீதமதா யிருக்கு மான்மா
நவையில்சுயஞ் சோதியதாய் நிகழு மான்மா
நமதுநிச சுபாவமதாய் நண்ணு மான்மா
விவையவைமற் றெவைகளுமே யிலதா மான்மா
வேகபரி பூரணமா யிருக்கு மான்மா
தவிர்தலுறு வான்மாவுக் கயலே யில்லை
தனித்தனியாய்க் காண்பவெலா மான்ம ரூபம். (14)

பானமுமற் றபானமுமே யிலதா மான்மா
பரமசிதா காயமதா யிருக்கு மான்மா
மானமெனு மனவாக்குக் கெட்டா தான்மா
மகத்தான வாநந்த கனமா மான்மா
வூனமற வெப்பொருளு மாகு மான்மா
வுண்மையினி லோர்பொருளு மாகா தான்மா
ஞானகன வான்மாவுக் கயலே யில்லை
ஞாலமுயிர் பரமெவையு மான்ம ரூபம். (15)

நிதாகநின தான்மாவுக் கயலில் லாத
நேர்மையினு னீயென்று நின்னுன் மாவை
யுதாரமுறப் பாவித்து மறுப வித்து
முன்னிடையே யுன்னுன்மா நந்தந் தன்னைச்
சதாமருவிப் புசித்துமிகச் சாந்த னுகிச்
சந்தோட வாரிதியின் மிகவு மூழ்கி
யெதாகினுமோர் துயருமிலா தெக்கா லத்து
மின்பகன வடிவாக விருப்பாய் மைந்தா. (16)

அகண்டசுக வான்மாவை யறிய வேண்டி
யடைவாகச் சிரவணமுன் செய்ய வேண்டு
மகண்டசுக வான்மாவை யறிய வேண்டி
யநுதினமுந் திடமனனஞ் செய்ய வேண்டு
மகண்டசுக வான்மாவை யறிய வேண்டி
யநவரதந் திடத்தியானஞ் செய்ய வேண்டு
மகண்டசுக வான்மாவை யறிய வேண்டி
யகம்பிரம மென்றனிசம் பழக வேண்டும். (17)

அகண்டசுக வான்மாவை யுரைக்க வேண்டு
மகண்டசுக வான்மாவை யுணர்த்த வேண்டு
மகண்டசுக வான்மாவை நினைக்க வேண்டு
மகண்டசுக வான்மாவை துதிக்க வேண்டு
மகண்டசுக வான்மாவில் ரமிக்க வேண்டு
மகண்டசுக வான்மாவிற் சுகிக்க வேண்டு
மகண்டசுக வான்மாவிற் கலக்க வேண்டு
மகண்டசுக வான்மாவா யிருக்க வேண்டும். (18)

அகண்டசுக வான்மாவே யாவ ருக்கு
மநவரதம் பிரியமதா யிருப்ப தாலவ்
வகண்டசுக வான்மாவை ஞானுப் யாச
வர்ச்சனையா லர்ச்சிக்க வேண்டு மென்று
மகண்டசுக வான்மாவை யெவ்வி தத்து
மகமெனவே யபரோட்ச மாய றிந்தவ்
வகண்டசுக வான்மாவா யிருப்ப தான
வமலசுக மோட்சத்தை யடைய வேண்டும். (19)

ஆதலினு லகண்டசுக வான்ம ரூப
 மகமென்று மவ்வகமே யனைத்து மென்னும்
பேதமிலா வகண்டான்ம போதந் தன்னைப்
 பெற்றவனுய்ப் பவதுக்கம் யாவுந் தீர்ந்து
போதகன வாநந்த வான்மா வாகப்
 பூரணமா யெப்போதும் பொருந்தி நிற்பாய்
மாதவனே யான்மாவே யனைத்து மன்றி
 மற்றணுவு மான்மாவுக் கயலே யில்லை. (20)

ஆன்மாவே முக்குணமாம் பகுதி யாகு
 மான்மாவே யதன் செய்கை யனைத்து மாகு
மான்மாவே யகங்காரம் புத்தி யாகு
 மான்மாவே மனதாகுஞ் சித்த மாகு
மான்மாவே யுயிராகும் பொறிக ளாகு
 மான்மாவே யுடலாகும் புலன்க ளாகு
மான்மாவே மற்றுமுள தெவையு மாகு
 மான்மாவுக் கயலாயோ ரணுவு மில்லை. (21)

ஆன்மாவே புவியாகுங் கந்த மாகு
 மான்மாவே யப்பாகு மிரத மாகு
மான்மாவே வெளியாகு முருவ மாகு
 மான்மாவே மருத்தாகும் பரிச மாகு
மான்மாவே வானகு மொலியு மாகு
 மான்மாவே பூதங்க ளனைத்து மாகு
மான்மாவே புவனங்க ளனைத்து மாகு
 மான்மாவுக் கயலாயோ ரணுவு மில்லை. (22)

ஆன்மாவே விசுவனுமா நனவு மாகு
 மான்மாவே தைசதனுங் கனவு மாகு
மான்மாவே பிராஞ்ஞனுமாந் துயிலு மாகு
 மான்மாவே துரியனுமாந் துரிய மாகு
மான்மாவே விராட்டுமுதற் சமட்டி யாகு
 மான்மாவே விசுவன்முதல் வியட்டி யாகு
மான்மாவே யறிவுற்ற தனைத்து மாகு
 மான்மாவுக் கயலாயோ ரணுவு மில்லை. (23)

ஆன்மாவே மந்திரதந் திரங்க ளாகு
மான்மாவே செபங்களுடன் றபங்க ளாகு
மான்மாவே யநந்தவித கரும மாகு
மான்மாவே சுகதுக்க மனைத்து மாகு
மான்மாவே யுலகிலுள சனங்க ளாகு
மான்மாவே யுணர்வுற்ற பொருட்க ளாகு
மான்மாவே காரண காரியங்க ளாகு
மான்மாவுக் கயலாயோ ரணுவு மில்லை. (24)

ஆன்மாவே யயன்முதலைம் மூர்த்தி யாகு
மான்மாவே யருக்கன்முதற் றேவ ராகு
மான்மாவே தியானமுடன் யோக மாகு
மான்மாவே யதன்பயனு மனைத்து மாகு
மான்மாவே விவகாரத் துவித மாகு
மான்மாவே பரமார்த்தாத் துவித மாகு
மான்மாவே யகண்டைக சொரூப மாகு
மான்மாவுக் கயலாயோ ரணுவு மில்லை. (25)

பூதங்கள் சகலமுமே யான்ம ரூபம்
புவனங்கள் சகலமுமே யான்ம ரூபஞ்
சாதங்கள் சகலமுமே யான்ம ரூபஞ்
சார்நூல்கள் சகலமுமே யான்ம ரூபம்
வேதங்கள் சகலமுமே யான்ம ரூபம்
வேண்டுபலஞ் சகலமுமே யான்ம ரூபம்
பேதங்கள் சகலமுமே யான்ம ரூபம்
பிரிவுற்ற சகலமுமே யான்ம ரூபம். (26)

ஆகங்கள் சகலமுமே யான்ம ரூப
மாருயிர்கள் சகலமுமே யான்ம ரூபம்
போகங்கள் சகலமுமே யான்ம ரூபம்
போக்கியமாஞ் சகலமுமே யான்ம ரூப
மோகங்கள் சகலமுமே யான்ம ரூப
மூதுணர்வு சகலமுமே யான்ம ரூபம்
யோகங்கள் சகலமுமே யான்ம ரூபம்
யோக்கியமாஞ் சகலமுமே யான்ம ரூபம். (27)

தாகங்கள் சகலமுமே யான்ம ரூபந்
தருகிரியை சகலமுமே யான்ம ரூப
மூகங்கள் சகலமுமே யான்ம ரூப
முறுபேறு சகலமுமே யான்ம ரூபம்
போகின்ற சகலமுமே யான்ம ரூபம்
பொருந்துவதாஞ் சகலமுமே யான்ம ரூப
மாகின்ற சகலமுமே யான்ம ரூப
மறிவுற்ற சகலமுமே யான்ம ரூபம். (28)

பாவுசனஞ் சகலமுமே யான்ம ரூபம்
பதிபாரி சகலமுமே யான்ம ரூபங்
குருசீடர் சகலமுமே யான்ம ரூபங்
கூறுபொருள் சகலமுமே யான்ம ரூபந்
தெரிவித்தை சகலமுமே யான்ம ரூபந்
தீர்த்தங்கள் சகலமுமே யான்ம ரூபம்
வருபதிகள் சகலமுமே யான்ம ரூபம்
வானவர்கள் சகலமுமே யான்ம ரூபம். (29)

பனுவுதிசை சகலமுமே யான்ம ரூபம்
பயில்தேசஞ் சகலமுமே யான்ம ரூப
மணியமகஞ் சகலமுமே யான்ம ரூப
மாங்காரஞ் சகலமுமே யான்ம ரூப
மனமுதலாஞ் சகலமுமே யான்ம ரூப
மால்வெகுளி சகலமுமே யான்ம ரூப
நினைவிலுறுஞ் சகலமுமே யான்ம ரூப
நிகழ்கின்ற சகலமுமே யான்ம ரூபம். (30)

தருமமுதற் செய்வவெலா மான்ம ரூபந்
தைரியமா யிருப்பவெலா மான்ம ரூப
மிருமையெனக் காண்பவெலா மான்ம ரூப
மின்னல்செயும் பீதியெலா மான்ம ரூப
மொருமையெனக் காண்பவெலா மான்ம ரூப
மோய்வுதரு மபயமெலா மான்ம ரூபம்
பிரிவுசெயுஞ் சிந்தை யெலா மான்ம ரூபம்
பிரிவற்ற சிந்தையெலா மான்ம ரூபம். (31)

பேதமுறு மித்தையெலா மான்ம ரூபம்
பிரிவற்ற சத்தையெலா மான்ம ரூபங்
கோதறவே காண்பவெலா மான்ம ரூபங்
குய்யமெனக் காண்பவெலா மான்ம ரூபம்
போதமெனக் காண்பவெலா மான்ம ரூபம்
புனிதமதாய்க் காண்பவெலா மான்ம ரூப
ஞாதுருஞா ஞதியெலா மான்ம ரூப
ஞாலபர சீவரெலா மான்ம ரூபம் (32)

தங்காத பூரணசற் கனமா மான்மா
தளர்வற்ற வாநந்த கனமா மான்மா
மங்காத பிரஞ்ஞான கனமா மான்மா
மாறுபடா வகண்டைக ரசமா மான்மா
விங்கான்மா வங்கான்மா வெங்கு மான்மா
வேகபரி பூரணமா யிருக்கு மான்மா
துங்கான்மா வலதயலோ ரணுவு மில்லை
துவிதமெனக் காண்பவெலாம் பூர ணான்மா. (33)

சருவபரி பூரணமா மான்மா வன்றிச்
சகசீவன் முதலியவை யணுவு மில்லை
பரவுசக சீவபர மனைத்து மென்றும்
பாற்பரமாம் பரமான்ம சொரூப மேயாந்
திரமதுவா யுரைசெய்த விவ்வர்த் தத்திற்
றினையளவு மையமிலை சத்தி யந்தா
னுரைதருமிவ் வர்த்தத்தை யொருகா லேனு
முரமாகக் கேட்டுணர்வோன் பிரம மாவன். (34)

அருள்வடிவா முமாபதியா யநந்த சத்தி
யமர்ந்தவனுய்ச் சுவாதீன மாயை யுற்ற
பரசிவனே விசித்திரகா ரியமா மிந்தப்
பார்முதலாஞ் சகத்துக்கோ ரேது வாகுங்
கருதியிடிற் காரியமாஞ் சகத்த னைத்துங்
காரணமாம் பரமசிவ சொரூப மென்றே
யரியரிபு மாமுனிவ னிதாக னுக்கங்
ககண்டான்ம மகிமைதனை யருள்செய் தானல். (35)

வேறு.

பிரிவுபெற்றுப் பிறங்கியசீவரும் பேணும்பேறு கடந்தருளீசனும்
விரிவுபெற்று விதம்விதமாகவே விளங்கலுற்றவிசித்திரஞாலமுஞ்[ல்
சருவபூரணவான்மசொரூபமேசற்றும்வேறிலேயென்றிங்குச்சாற்றுத
பரமவானந்தத் தாண்டவமாடூம் பரசிவன்பரி பூரணரூபமே. (36)

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் 10-க்கு திருவிருத்தம்-438.

++++++++++++++++++++++++++++++++++++++++

## பதினொன்றாவது

## சருவமும் பிரமமேன்றும் அதுவே நானேன்றும் போத முரைக்கும் அத்தியாயம்.

துகளணுவுந் தொடராத நிதாக கேளாய்
துவிதமெனுஞ் சொலவுமொரு காலு மில்லை
சகலமுமே சந்ததமும் பிரம ரூபஞ்
சத்தியமே சத்தியமே சங்கை யில்லை
யகிலபரி பூரணமாஞ் சிவன்றன் ஞானை
யறைகின்றே னையமிலை யைய மில்லை
சுககனமாம் பரமசிவ னருளிச் செய்த
சுருதிமுடிப் பொருளினது சுருக்க மீதே. (1)

சத்தியமாய்ச் சின்மயமாய்ச் சாந்த மாகிச்
சதாநந்த கனமாகிச் சூக்க மாகி
நித்தியமாய் நிர்க்குணமாய் நிமல மாகி
நிரஞ்சனமாய் நிராகார சொரூப மாகி
யத்துவித பூரணமா யசல மாகி
யான்மாவுக் கபின்னமதாம் பிரம மன்றி
யித்தனையாஞ் சீவசக மாதி யில்லை
யிவையாவு மெப்போதும் பிரம ரூபம். (2)

சங்கற்ப விகற்பமெலாம் பிரம ரூபஞ்
சாகின்ற வுலகமெலாம் பிரம ரூப
மங்குற்ற தேகமெலாம் பிரம ரூப
மவைமருவும் பொறிகளெலாம் பிரம ரூப
மிங்குற்ற சீவரெலாம் பிரம ரூப
மிவர்துய்க்கும் போகமெலாம் பிரம ரூபம்
பங்கற்ற பிரமமலா தணுவு மில்லை
பார்க்கின்ற பார்வையெலாம் பிரம ரூபம். (3)

வித்தரமாம் விடயமெலாம் பிரம ரூபம்
விதம்விதமாய்க் காண்பவெலாம் பிரம ரூப
நித்தியமாய்க் காண்பதுவும் பிரம ரூப
நிலையிலதாய்க் காண்பதுவும் பிரம ரூப
மத்திரமா மஞ்ஞானம் பிரம ரூப
மதன்செயலா மகிலமுமே பிரம ரூபஞ்
சத்தியமாம் பிரமமலா தணுவு மில்லை
சந்ததமுஞ் சகலமுமே பிரம ரூபம். (4)

வானமுத லைம்பூதம் பிரம ரூபம்
வந்தபல பௌதிகமும் பிரம ரூப
மூனமுறு முடன்மூன்றும் பிரம ரூப
மொருமூன்றெ னவத்தைகளும் பிரம ரூப
மானவபி மானிகளும் பிரம ரூப
மறிவுற்ற தகிலமுமே பிரம ரூப
ஞானகனப் பிரமமலா தணுவு மில்லை
ஞாலமுத லெப்பொருளும் பிரம ரூபம். (5)

மாயையெனத் தோற்றுவதும் பிரம ரூப
மனமுதலாய்த் தோற்றுவதும் பிரம ரூபங்
காயமெனத் தோற்றுவதும் பிரம ரூபங்
காண்பனவாய்த் தோற்றுவதும் பிரம ரூப
நேயமெனத் தோற்றுவதும் பிரம ரூப
நிலைமையதாய்த் தோற்றுவதும் பிரம ரூபந்
தூயபரப் பிரமமலா தணுவு மில்லை
தோற்றியிடுந் தோற்றமெலாம் பிரம ரூபம். (6)

குறைவெனவே தோற்றுவதும் பிரம ரூபங்
குணகுணமாய்த் தோற்றுவதும் பிரம ரூப
நிறைவெனவே தோற்றுவதும் பிரம ரூப
நீநானாய்த் தோற்றுவதும் பிரம ரூப
மிறைவனெனத் தோற்றுவதும் பிரம ரூப
மிவன்செயலாய்த் தோற்றுவதும் பிரம ரூப
மறிவுருவாம் பிரமமலா தணுவு மில்லை
யகிலவிதத் தோற்றமுமே பிரம ரூபம். (7)

அகிலசுரா சுரர்களுமே பிரம ரூப
மயன்முதலேம் மூர்த்திகளும் பிரம ரூபம்
புகலுமவர் செய்கையுமே பிரம ரூபம்
பூரணமா மாதேவன் பிரம ரூபந்
திகழுமுமா தேவியுமே பிரம ரூபந்
திகழ்கந்த விநாயகரும் பிரம ரூப
நிகழுபரப் பிரமமலா தணுவு மில்லை
நினைக்கின்ற நினைவெவையும் பிரம ரூபம். (8)

பரமசிவ கணங்களெலாம் பிரம ரூபம்
பரவுமகா முனிவரெலாம் பிரம ரூபஞ்
சுருதிமுடி சுருதியெலாம் பிரம ரூபஞ்
சொல்லியிடு மிருதியெலாம் பிரம ரூப
மருவுபுரா ணங்களெலாம் பிரம ரூப
மற்றுமுள நூல்களெலாம் பிரம ரூபம்
பிரிவில்பரப் பிரமமலா தணுவு மில்லை
பின்னமெனக் காண்பவெலாம் பிரம ரூபம். (9)

அமலமதாம் பிரணவமும் பிரம ரூப
மநந்தமகா வாக்கியமும் பிரம ரூப
நிமலமதாஞ் சிரவணமும் பிரம ரூப
நீதியுறு மனனமுமே பிரம ரூபம்
விமலமதாந் தியானமுமே பிரம ரூபம்
வேறுபடா ஞானமுமே பிரம ரூபஞ்
சமமதுவாம் பிரமமலா தணுவு மில்லை
சந்ததமுஞ் சகலமுமே பிரம ரூபம். (10)

பேசியநூல் விடயமுமே பிரம ரூபம்
பெறுகின்ற நூற்பயனும் பிரம ரூப
மாசறுநூற் சம்பந்தம் பிரம ரூப
மவையினதி காரியுமே பிரம ரூப
மாசிலதாஞ் சாதனமும் பிரம ரூப
மருவியிடுஞ் சாத்தியமும் பிரம ரூபஞ்
சாசுவதப் பிரமமலா தணுவு மில்லை
சந்ததமுஞ் சகலமுமே பிரம ரூபம். (11)

ஏதமிலாப் பத்தியுமே பிரம ரூப
 மீசனது பாவனையும் பிரம ரூபம்
பூதமுதற் காலமுமே பிரம ரூபம்
 பொருந்துபல தேசமுமே பிரம ரூபம்
பேதமுறு வத்துவுமே பிரம ரூபம்
 பேசுபல பேதமுமே பிரம ரூபம்
போதகனப் பிரமமலா தணுவு மில்லை
 புலமுறவே காண்பவெலாம் பிரம ரூபம். (12)

ஆனபல சேத்திரமும் பிரம ரூப
 மங்குசெயு மறம்பாவம் பிரம ரூப
மேனையுள கருமமெலாம் பிரம ரூப
 மிகழ்நரக சுவர்க்கமெலாம் பிரம ரூப
நானனிய ரெனுமயலும் பிரம ரூப
 நரகபயஞ் சுவர்க்கசுகம் பிரம ரூப
ஞானகனப் பிரமமலா தணுவு மில்லை
 ஞாதுருஞா னதியெலாம் பிரம ரூபம். (13)

துக்கசுகந் துதியிகழ்வும் பிரம ரூபந்
 தொடர்சனன மரணமுமே பிரம ரூபந்
தக்கசெய மபசெயமும் பிரம ரூபந்
 தயங்குசடா சடங்களுமே பிரம ரூப
மிக்கசர மசரமுமே பிரம ரூப
 மிருபந்த முத்திகளும் பிரம ரூப
மக்கரமாம் பிரமமலா தணுவு மில்லை
 யன்னியமாய்க் காண்பவெலாம் பிரம ரூபம். (14)

சித்தமுத லெப்பொருளும் பிரம ரூபஞ்
 செறிபஞ்ச கோசமுமே பிரம ரூபம்
வித்தரமாம் விசுவமெலாம் பிரம ரூபம்
 வியட்டியுடன் சமட்டியெலாம் பிரம ரூப
நித்தியமாம் பிரமமலா தணுவுமில்லை
 நிகழ்கின்ற நிகழ்வெவையும் பிரம ரூபஞ்
சத்தியமாய் நவில்கின்றேன் சிவன்றன் னாணை
 சங்கையிலை சங்கையிலை சத்தி யந்தான். (15)

ஆதியுட னந்தமுமே பிரம ரூப
மடிமுடிவு நடுவெவையும் பிரம ரூபம்
பூதமொடு பவுதியமும் பிரம ரூபம்
பொருந்திகழ் பொருளெவையும் பிரம ரூபம்
பேதமிலாப் பிரமமலா தணுவு மில்லை
பிரிவெனவே காண்பவெலாம் பிரம ரூப
மாதியிலாப் பரமசிவன் பதந்தன் ளுணை
யறைகின்றே னையமில்லை சத்தி யந்தான். (16)

திருசியமாய்க் காண்பதுவும் பிரம ரூபந்
திருக்காகக் காண்பதுவும் பிரம ரூபம்
பிரிவெனவே காண்பதுவும் பிரம ரூபம்
பேதமறக் காண்பதுவும் பிரம ரூபம்
புரணமதாம் பிரமமலா தணுவு மில்லை
புலனுறவே காண்பவெலாம் பிரம ரூபஞ்
சருவபரி பூரணமாஞ் சிவன்றன் ளுணை
சாற்றியதிற் சங்கையில்லை சத்தி யந்தான். (17)

துகளுற்ற வஞ்ஞானம் பிரம ரூபந்
துவிதமென மதன்செயலும் பிரம ரூப
மகிழ்வுற்ற விஞ்ஞானம் பிரம ரூப
மாறுபடாச் சகசநிலை பிரம ரூபந்
திகழ்வுற்ற பிரமமலா தணுவு மில்லை
தெரிகின்ற தெரிவெல்லாம் பிரம ரூப
நிகரற்ற பரம சிவன் பதந்தன் ளுணை
நிகழ்த்தியதி லையமில்லை சத்தி யந்தான். (18)

விரிவான சகமெவையும் பிரம ரூபம்
விவகாரம் யாவையுமே பிரம ரூபம்
பரமார்த்தம் யாவையுமே பிரம ரூபம்
பரசீவர் யாவையுமே பிரம ரூபம்
பிரியாத பிரமமலா தணுவு மில்லை
பின்னமெனக் காண்பவெலாம் பிரம ரூபங்
குருவான பரமசிவன் பதந்தன் ளுணை
கூறியதி லையமில்லை சத்தி யந்தான். (19)

சீவபர சகத்வெனவே காண்ப வெல்லாஞ்
சின்மயமாம் பிரமத்திற் கற்பி தந்தா
ஞுவதனு லாரோப சீவ ஞுதி
யநிட்டான மானபரப் பிரம மென்றுங்
கேவலமா மப்பிரம நானே யென்றுங்
கிலேசமற வறிந்ததனுன் முத்த ஞுவாய்
பாவனமாம் பரமசிவன் பதந்தன் ஞுணை
பகர்ந்தநிலோ ரையமிலை சத்தி யந்தான். (20)

சகலவநிட் டானபரப் பிரம மேநான்
சருவான்ம சொரூபபரப் பிரம மேநான்
றிகழ்வுமிகுஞ் சின்மயமாம் பிரம மேநான்
றிடசத்தா மாத்திரமாம் பிரம மேநான்
னிகரில்சுக கனமான பிரம மேநா
னிருமலநிட் களமான பிரம மேநா
னகிலபரி பூரணமாம் பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (21)

நித்தியநிர்க் குணமான பிரம மேநா
னிரந்தரமாய் நிறைவுற்ற பிரம மேநான்
சத்தியசிற் சுககனமாம் பிரம மேநான்
சந்ததமுஞ் சலனமிலாப் பிரம மேநான்
மெத்தவுமே ரகசியமாம் பிரம மேநான்
மிகவுமுப சாந்தபரப் பிரம மேநா
னந்தமிலா வகண்டபரப் பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (22)

சனுதனமாம் பரப்பிரம சொரூப மேநான்
சாசுவத பரப்பிரம சொரூப மேநான்
விநாசமிலாப் பரப்பிரம சொரூப மேநான்
விபுவான பரப்பிரம சொரூப மேநான்
மனுதியிலாப் பரப்பிரம சொரூப மேநான்
மகத்தான பரப்பிரம சொரூப மேநா
னனுமயமாம் பரப்பிரம சொரூப நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (23)

பங்கமிலா துள்ளபரப் பிரம மேநான்
பரஞ்சோதி யானபரப் பிரம மேநான்
கங்குல்பக லெவையுமிலாப் பிரம மேநான்
காரியகா ரணமுமிலாப் பிரம மேநா
னெங்குமுள வேகபரப் பிரம மேநா
னிருமையிலா வகண்டபரப் பிரம மேநா
னங்கமிலா வமலபரப் பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (24)

குருவுக்குங் குருவான பிரம மேநான்
குணாதீத மானபரப் பிரம மேநான்
றெரிவுக்குந் தெரிவான பிரம மேநான்
றிருசியமோ ரணுவுமிலாப் பிரம மேநான்
சுருதிக்கு மெட்டாத பிரம மேநான்
சுத்தசிதம் பரமான பிரம மேநா
னருளுக்கு மருளான பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (25)

காரணமு மாகாத பிரம மேநான்
கற்பனையு மருவாத பிரம மேநா
ஞோரணுவு மாகாத பிரம மேநான்
ஞென்றூறு முணரவொணுப் பிரம மேநான்
பூரணசின் மாத்திரமாம் பிரம மேநான்
புராதனசன் மாத்திரமாம் பிரம மேநா
னூரணமு மறியாத பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (26)

நிரதிசயா நந்தகனப் பிரம மேநா
னித்தநிரஞ் சனமான பிரம மேநான்
மருளணுவு மருவாத பிரம மேநான்
மகாவாக்கின் பொருளான பிரம மேநான்
பரவுபராற் பரமான பிரம மேநான்
பரசிவ பேதமிலாப் பிரம மேநா
னுருவமதா மகண்டபரப் பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (27)

நித்தியமங் களமான பிரம மேனா
னிகிலமுமே நிகழ்த்தியிடும் பிரம மேனான்
சத்தியஞா னுநந்தப் பிரம மேனான்
சகசீவ பரங்களிலாப் பிரம மேனான்
வித்திரமாய் வியாபிக்கும் பிரம மேனான்
வேதாந்த வேத்தியமாம் பிரம மேனா
னத்துவிதா கண்டபரப் பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (28)

சிற்பதமாம் பரப்பிரம சொரூப மேனான்
சின்மயமாம் பரப்பிரம சொரூப மேனான்
கற்பனையில் பரப்பிரம சொரூப மேனான்
களங்கமிலாப் பரப்பிரம சொரூப மேனான்
றற்பதமாம் பரப்பிரம சொரூப மேனான்
றடையற்ற பரப்பிரம சொரூப மேனா
னற்புதமாம் பரப்பிரம சொரூப நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (29)

நித்தியமுஞ் சுத்தபரப் பிரம மேனா
னித்தியமும் புத்தபரப் பிரம மேனா
னித்தியமு முத்தபரப் பிரம மேனா
னித்தியமுந் திருத்தபரப் பிரம மேனா
னித்தியவா நந்தபரப் பிரம மேனா
னித்தநிரா வரணபரப் பிரம மேனா
னத்துவிதா கண்டபரப் பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (30)

சதாநந்த மயமான பிரம மேனான்
சதாநந்த மயமான பிரம மேனான்
சிதாநந்த மயமான பிரம மேனான்
சிதாநந்த மயமான பிரம மேனா
னுதாரபரி பூரணமாம் பிரம மேனா
னுதாரபரி பூரணமாம் பிரம மேனா
னதானசிதா காயபரப் பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (31)

அகமகமென் றிலங்கியிடும் பிரம மோநா
ஞன்மாவுக் கபின்னமதாம் பிரம மோநான்
சகலமுமாய்த் தோற்றியிடும் பிரம மோநான்
சற்றுமெது மாகாத பிரம மோநா
னிகிலபரி பூரணமாம் பிரம மோநா
னிரந்தரமாய் நிலைபெற்ற பிரம மோநா
னகிலவிலட் சணமான பிரம நானென்
றநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (32)

அகண்டபரப் பிரமமலா தணுவு மில்லை
யணுவுமிலை யணுவுமிலை யணுவு மில்லை
யகண்டபரப் பிரமமதே யனைத்து மாகு
மதுவேநீ யதுவேநா னதுவே யாரு
மகண்டபரப் பிரமமதாஞ் சிவன்றன் ஞனை
யறைந்ததிலோ ரையமிலை யைய மில்லை
யகண்டபரப் பிரமமது நானே யென்றிங்
கநவரத மயலறவே யறிவாய் மைந்தா. (33)

என்னிடையே கற்பிதமாய்த் தோன்று நின்ற
வீசசக சீவரெலா மென்னை யன்றிப்
பின்னமதா யொருகாலு மிலவே யில்லை
பிறங்கியவச் சீவேச சகத்தனைத்து
மன்னுபரப் பிரமமதா நானே யென்று
மயக்கமற வறிந்ததனுன் முத்த னுவாய்
சொன்னதிலோ ரையமிலை சத்தி யந்தான்
சுதந்தரமாஞ் சிவஞனை யுண்மை சொன்னேன். (34)

அறிவினிடைக் கற்பிதமாய்க் காண்ப வெல்லா
மதிட்டான வறிவன்றி யனிய மாகா
தறிவுருவே பரப்பிரம மறிவே நீயு
மாதலினு லறிவான நின்னி டத்தி
லறிவுறவே காண்பவெலா மறிவா நீயே
யவ்வண்ணந் திடமாக வறிந்த வற்று
லறிவுருவாம் பரப்பிரம வடிவே யாகி
யனுபிபவ பாசத்தான் முத்த னுவாய். (35)

அப்பினிடைக் காண்கின்ற வலையே யாதி
யகிலமுமவ் வப்பாகு நீதியே போற்
சிற்பரமா நின்னிடையிற் காணு நின்ற
செகசீவ பரங்களெலாஞ் சித்தா நீயே
செப்பியவிவ் வூகத்தான் மறைமா னத்தாற்
சிவாஞ்ஞையினு லெல்லாமு நானே யென்று
மற்பமிலா நான்முனே பிரம மென்று
மறிந்ததனுற் பவபாச முத்த னுவாய். (36)

சித்தினிடைக் காண்கின்ற செகசீ வாதி
சித்துருவாம் பிரமத்துக் கயலே யாகா
தத்திறமாம் பிரமத்துக் கயனு னுகே
னவ்விதமா மெனக்கயலும் பிரம மாகா
தெத்திறமாந் தோற்றமுமே பிரம மென்று
மிருமையுரு வப்பிரம நானே யென்று
மத்துவிதா கண்டபரப் போதந் தன்னை
யடைந்ததனுற் பவபாச முத்த னுவாய். (37)

சகலமுமே சற்கனமாம் பிரம ரூபஞ்
சகலமுமே சிற்கனமாம் பிரம ரூப
மகிலமுமே சுககனமாம் பிரம ரூப
மகிலமுமே யகண்டபரப் பிரம ரூபம்
புகலியவவ் வகண்டபரப் பிரம நானே
பூரணமா னனந்தப் பிரமந் தானென்
றிகழ்வறவே யகண்டபர போதந் தன்னை
யிசைந்ததனுற் பவபாச முத்த னுவாய். (38)

என்னையலா லோரணுவு மயலே யில்லை
யென்னையலா லோரணுவு மயலே யில்லை
பின்னமிலா நானென்றும் பிரமந் தானே
பின்னமிலா நானென்றும் பிரமந் தானே
யன்னியமி லகண்டபரப் பிரம நானே
யன்னியமி லகண்டபரப் பிரம நானென்
றின்னவிதந் திடமான வகண்ட போத
மிசைந்ததனுற் பவபாச முத்த னுவாய். (39)

சந்ததமுஞ் சகலமுமே பிரம மென்றுஞ்
 சலனமிலா வப்பிரம நானே யென்று
மிந்தவித முணரும்வகை யெனவே யீச
 னெனக்கருளா லருளியவிவ் வர்த்தந் தன்னைப்
பந்தமுறு முமுட்சுவெலா நன்று யோர்ந்து
 பவநீங்கிப் பாமுத்தி யடையும் வண்ணம்
மைந்தநினக் குரைசெய்தே னிதனை யன்பான்
 மயக்கமறக் கேட்டுணர்வோன் பரமே யாவன். (40)

பன்னியவிவ் வர்த்தத்தைப் பகர்ந்த வண்ணம்
 பழுதறவே பார்த்துணர வசத்த னேனு
மன்னியநல் லன்புடனே யிதனை நித்த
 மாருது படித்தாலும் பாவித் தாலு
மன்னியருக் குரைத்தாலு மதனு லன்னே
 னகத்திலுள வழுக்கற்றுச் சுத்தி பெற்றுப்
பின்னமிலா வகண்டபர போத முற்றுப்
 பேதமிலாப் பரப்பிரம மாவ னன்றே. (41)

சத்தியசிற் சுகபூன்ற பாசி வத்தைச்
 சலியாது நிரந்தரமா யாரா நிப்போ
னித்தியநிட் களமான வச்சி வத்தை
 நிச்சலமா யறிந்துமனக் கிரந்தி தீர்ந்து
சுத்தபர சிவத்தினிடைக் கலந்து மோட்ச
 சுகமுற்றிங் கச்சிவமே யாவ னன்றிப்
பத்தியிலா வெறுமூட ரொருகா லத்தும்
 பரமான மோட்சசுகம் பற்று ரன்றே. (42)

ஆதலினுன் முமுட்சுவெலாம் பாசி வத்தை
 யநவரத மடைவர்க வாரா தித்தவ்
வேதமிலாப் பரமசிவன் கருணை யாலே
 யெல்லாமும் பரப்பிரம மதுவே நாமென்
றேதியவிஞ் ஞானத்தால் முத்தி தன்னை
 யுறவேண்டு மென்றுரிபு நிதாக னுக்கங்
காதியிலாப் பவபாச மனைத்துந் தீர
 வகண்டபர போதத்தை யருளிச் செய்தான். (43)

வேறு.

திருசியப்பொரு ளாகத் தெரிந்திடுந்
 தெரிவெலாந்திருக் காகிய திற்கனப்
பிரமமல்லது வேறில்லை யப்பரப்
 பிரமநானெனும் போத முறைத்திட
லுரைமனங்கட் ககோசர மாகினு
 மொன்றினோர்பவ துன்பம் விடுக்கவே
யரியவாநந்தத் தாண்டவ மாடுநம்
 மாண்டவன்ற னகண்ட சொரூபமே. (44)

பதினொன்றாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம், 11-க்கு திருவிருத்தம்-482.

++++++++++++++++++++++++++++++++++++++++

## பன்னிரண்டாவது
## சருவமும் பிரமமாத்திர மென்றுரைக்கும்
## அத்தியாயம்.

மிகவுமகா ரகசியமாய் ரகசி யத்து
 மெத்தவுமே ரகசியமாய் மேவு தற்கு
வெகுவரிதா யுள்ளபொரு ணிர்ண யத்தை
 வேதாந்த வேத்தியனும் பரேசன் முன்ன
நிகழ்வுறவே யருள்செய்த வண்ண மீண்டு
 நிகிலர்க்கு மிதமாக நினக்குச் சொல்வேன்
றகுமனதி னொருமையுட னிவ்வர்த் தத்தைத்
 தப்பாது கேட்டுணர்தி தகைமை மைந்தா. (1)

அகிலமுமே யநவரதம் பிரம மாத்ர
 மஞ்ஞான மதன்செயலும் பிரம மாத்ரஞ்
சகலசடா சடங்களுமே பிரம மாத்ரஞ்
 சதசத்தாய்க் காண்பவெலாம் பிரம மாத்ரம்
வெகுவிதமாம் பூதங்கள் பிரம மாத்ரம்
 விதம்விதமாம் புவனங்கள் பிரம மாத்ர
மிகழ்வுமிகுஞ் சரீரமெலாம் பிரம மாத்ர
 மிவைமருவு முயிர்களெலாம் பிரம மாத்ரம். (2)

பனுவுமகா மந்திரமும் பிரம மாத்ரம்
பத்தியுடன் கேட்பதுவும் பிரம மாத்ரம்
வினவுமகா வாக்கியமும் பிரம மாத்ரம்
வேத்தியமா மதன்பொருளும் பிரம மாத்ர
மனியமிலாப் பாவுணர்வும் பிரம மாத்ர
மகண்டமதா முத்தியுமே பிரம மாத்ர
நனிமருவும் பந்தமுமே பிரம மாத்ர
நாநாவாய்க் காண்பவெலாம் பிரம மாத்ரம். (3)

பலவிதமாங் கிரியைகளும் பிரம மாத்ரம்
பற்றியிடும் பலன்களுமே பிரம மாத்ர
மிலகுகுண குணங்களுமே பிரம மாத்ர
மிகழ்வுதுதி யாவையுமே பிரம மாத்ர
நிலைமருவாக் காலமெலாம் பிரம மாத்ர
நிரைநிரையாந் தேசமெலாம் பிரம மாத்ரஞ்
சலனமுறும் வத்துவெலாம் பிரம மாத்ரஞ்
சந்ததமுஞ் சகலமுமே பிரம மாத்ரம். (4)

ஓதவொணு வவித்தையுமே பிரம மாத்ர
முறுமந்தக் கரணமுமே பிரம மாத்ரந்
தீதுசெயு மகங்காரம் பிரம மாத்ரந்
தியங்குமனம் புந்தியுமே பிரம மாத்ரஞ்
சாதமுறு சித்தமுமே பிரம மாத்ரஞ்
சஞ்சலமாம் பொறிகளுமே பிரம மாத்திரம்
வீதலுறுந் தேகமுமே பிரம மாத்ரம்
விசித்ரமாம் விடயமெலாம் பிரம மாத்ரம். (5)

தூலமுடன் சாக்கிரமும் பிரம மாத்ரஞ்
சூக்கமுடன் சொப்பனமும் பிரம மாத்ர
மூலமுடன் சுழுத்தியுமே பிரம மாத்ர
மூன்றினபி மானிகளும் பிரம மாத்ரங்
கோலமுறும் வியட்டியுமே பிரம மாத்ரங்
கூட்டமுறுஞ் சமட்டியுமே பிரம மாத்ரங்
காலமுத லெப்பொருளும் பிரம மாத்ரங்
காண்கின்ற காட்சியெலாம் பிரம மாத்ரம். (6)

தொந்தமறு துரியமுமே பிரம மாத்ரந்
துரியவபி மானியுமே பிரம மாத்ர
மைந்துவித கோசமுமே பிரம மாத்ர
மவையினபி மானிகளும் பிரம மாத்ரம்
வந்தபல பௌதிகமும் பிரம மாத்ரம்
வான்முதலைம் பூதமே பிரம மாத்ரஞ்
சிந்தையுறு மெய்பொருளும் பிரம மாத்ரஞ்
செறிந்தசரா சரங்களெலாம் பிரம மாத்ரம். (7)

இவனவனு மிவளவளும் பிரம மாத்ர
மிதுவதுவு மற்றெதுவும் பிரம மாத்ர
நவில்புருடர் பெண்களுமே பிரம மாத்ர
நடுவான நபுஞ்சகரும் பிரம மாத்ரம்
விவிதசக சீவருமே பிரம மாத்ரம்
விபுவான வீசனுமே பிரம மாத்ர
மெவையெவைதா னெவ்விதமா யெங்கே யெங்கே
யிலங்கினுமே யவையாவும் பிரம மாத்ரம். (8)

இருப்பதெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
மில்லையெனத் தோற்றுவதும் பிரம மாத்ரந்
திருக்கதெனத் தோற்றுவதும் பிரம மாத்ரந்
திருசியமாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரந்
தரித்ததெனத் தோற்றுவதும் பிரம மாத்ரந்
தங்கியதாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரம்
விரித்ததெனத் தோற்றுவதும் பிரம மாத்ரம்.
விதம்விதமாந் தோற்றமெலாம் பிரம மாத்ரம். (9)

வித்தாமாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரம்
விரிவிலதாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரஞ்
சித்திரமாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரஞ்
சிறப்பிலதாய்த் தோற்றுவதும் பிரம மாத்ர
மத்திரமாய்த் தோற்றுவதும் பிரம மாத்ர
மழுத்தமுறத் தோற்றுவதும் பிரம மாத்ர
மெத்திறமாய்த் தோற்றுவதும் பிரம மாத்ர
மிதரமெனுந் தோற்றமெலாம் பிரம மாத்ரம். (10)

ஏகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
மிருமையெனத் தோற்றுவதும் பிரம மாத்ரம்
பாகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ரம்
பங்கறவே தோற்றுவதும் பிரம மாத்ர
நாகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
நரகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
மோகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
முதுணர்வாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரம். (11)

ஆகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
மறிபவனுய்த் தோற்றுவதும் பிரம மாத்ரந்
தாகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ரந்
தண்பொருளாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரஞ்
சோகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ரஞ்
சுகமதுவாய்த் தோற்றுவதும் பிரம மாத்ர
மூகமெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
முணர்பொருளாய்த் தோற்றுவதும் பிரம மாத்ரம். (12)

நீநானுய்த் தோற்றுவதும் பிரம மாத்ர
நிகிலமெனத் தோற்றுவதும் பிரம மாத்ர
நாநாவாய்த் தோற்றுவதும் பிரம மாத்ர
நமதெனவே தோற்றுவதும் பிரம மாத்ர
மானுவ மானமுமே பிரம மாத்ர
மகிழுமிலா பாலாபம் பிரம மாத்ரந்
தானுதி கருமமுமே பிரம மாத்ரந்
தளர்வுதரும் பாவமுமே பிரம மாத்ரம். (13)

தங்குற்ற கிரிநதிகள் பிரம மாத்ரந்
தலங்களொடு தீர்த்தங்கள் பிரம மாத்ர
மங்குற்ற தேவதைகள் பிரம மாத்ர
மத்தேவர் சேவைகளும் பிரம மாத்ரம்
பொங்குற்ற வாரிதிகள் பிரம மாத்ரம்
பொருந்துபல தீவுகளும் பிரம மாத்ரம்
பங்குற்ற வனங்களெலாம் பிரம மாத்ரம்
பறவைமுதற் செந்துகளும் பிரம மாத்ரம். (14)

பிரமன்முதற் றேவர்களும் பிரம மாத்ரம்
பிரமாண்ட கோடிகளும் பிரம மாத்ர
மான்முதலோ ருலகமெலாம் பிரம மாத்ர
மங்குள்ள பேதமெலாம் பிரம மாத்ரம்
பரமிகமா யுணர்வதெலாம் பிரம மாத்ரம்
பார்ப்பதுவு நினைப்பதுவும் பிரம மாத்ரஞ்
சருவவித வுபாதிகளும் பிரம மாத்ரஞ்
சகசீவ பரங்களெலாம் பிரம மாத்ரம். (15)

சத்தியசிற் சுககனமாம் பிரம ரூபஞ்
சகலபரி பூரணமாம் பிரம ரூப
நித்தநிரஞ் சனமாகும் பிரம ரூப
நிட்களநின் மலமாகும் பிரம ரூபஞ்
சுத்தநிரா காரமதாம் பிரம ரூபஞ்
சுயஞ்சோதி வடிவாகும் பிரம ரூப
மத்துவித வத்துவதாம் பிரம ரூப
மகண்டபரி பூரணமாம் பிரம ரூபம். (16)

பராற்பரமாம் பொருளாகும் பிரம ரூபம்
பரமபதப் பொருளாகும் பிரம ரூப
நிராவரணப் பொருளாகும் பிரம ரூப
நிட்கிரியப் பொருளாகும் பிரம ரூபஞ்
சாதியிலாப் பொருளாகும் பிரம ரூபஞ்
சலனமிலாப் பொருளாகும் பிரம ரூபம்
புராதனமாம் பொருளாகும் பிரம ரூபம்
பூரணமாம் பொருளாகும் பிரம ரூபம். (17)

மனுதியிலாப் பொருளாகும் பிரம ரூப
மகத்தான பொருளாகும் பிரம ரூபஞ்
சனுதனமாம் பொருளாகும் பிரம ரூபஞ்
சாசுவதப் பொருளாகும் பிரம ரூபம்
விநாசமிலாச் சத்தாகும் பிரம ரூபம்
விளங்கியிடுஞ் சித்தாகும் பிரம ரூப
மனுதிசுக கனமாகும் பிரம ரூப
மகண்டைக ரசமாகும் பிரம ரூபம். (18)

சற்போத சுககனமாம் பிரம ரூபஞ்
சாலவுப சாந்தமதாம் பிரம ரூபந்
தற்போத சூனியமாம் பிரம ரூபந்
தான்றானு யிருப்பதுவாம் பிரம ரூபங்
கற்போல வசைவிலதாம் பிரம ரூபங்
களங்கமிலாக் கேவலமாம் பிரம ரூப
மெய்ப்போத மொருவடிவாம் பிரம ரூப
மேகபரி பூரணமாம் பிரம ரூபம். (19)

ஞானகன வடிவாகும் பிரம ரூப
ஞாலமிலாப் பரமாகும் பிரம ரூப
மோனமுறு நிலையாகும் பிரம ரூப
முத்தருறும் பதமாகும் பிரம ரூப
மீனமிலாப் பொருளாகும் பிரம ரூப
மெவைக்கும்விலட் சணமாகும் பிரம ரூப
மானியிலாப் பொருளாகும் பிரம ரூப
மகண்டசிதா காயமதாம் பிரம ரூபம். (20)

அறிவுக்கு மறிவாகும் பிரம ரூப
மனைத்துக்கு மப்பாலாம் பிரம ரூப
நிறைவுக்கு நிறைவாகும் பிரம ரூப
நிகிலத்து மேலாகும் பிரம ரூபங்
குறைவற்ற விபுவாகும் பிரம ரூபங்
குணங்களிலா நிர்க்குணமாம் பிரம ரூப
மறுவற்ற மகிழ்வாகும் பிரம ரூப
மனவாக்குக் கெட்டாதாம் பிரம ரூபம். (21)

சத்துக்குஞ் சத்தாகும் பிரம ரூபஞ்
சகலத்துஞ் சாரமதாம் பிரம ரூபஞ்
சித்துக்குஞ் சித்தாகும் பிரம ரூபஞ்
சின்னமிலாப் பொருளாகும் பிரம ரூபம்
வித்துக்கும் வித்தாகும் பிரம ரூபம்
வேதாந்த வேத்தியமாம் பிரம ரூப
மெத்துக்கும் வேறாகும் பிரம ரூப
மெங்குமுள பொருளாகும் பிரம ரூபம். (22)

கேவலமாம் பொருளாகும் பிரம ரூபங்
கிலேசமிலாப் பொருளாகும் பிரம ரூபம்
பாவனமாம் பொருளாகும் பிரம ரூபம்
பரமார்த்தப் பொருளாகும் பிரம ரூபந்
தாவலிலாப் பொருளாகும் பிரம ரூபந்
தத்துவமாம் பொருளாகும் பிரம ரூப
மோவலிலாப் பொருளாகும் பிரம ரூப
மொன்றுமிலா வொருபொருளாம் பிரம ரூபம். (23)

சத்தியமாம் பொருளாகும் பிரம ரூபஞ்
சங்கமிலாப் பொருளாகும் பிரம ரூப
நித்தியமாம் பொருளாகும் பிரம ரூப
நீக்கமிலாப் பொருளாகும் பிரம ரூபம்
வித்தாமாம் பொருளாகும் பிரம ரூபம்
விசேடமிலாப் பொருளாகும் பிரம ரூபஞ்
சுத்தமதாம் பொருளாகும் பிரம ரூபஞ்
சுதந்தரமாம் பொருளாகும் பிரம ரூபம். (24)

பிரமமதே பேசியிடுந் தற்ப தார்த்தம்
பிரமமதே பேசியிடுந் துவம்ப தார்த்தம்
பிரமமதே பேசியிடு மசிப தார்த்தம்
பிரமமதே யகண்டைக ரசப தார்த்தம்
பிரமமதே யகமென்னும் பதத்தி னர்த்தம்
பிரமமதே பிரமமெனும் பதத்தி னர்த்தம்
பிரமமதே யஸ்மியெனும் பதத்தி னர்த்தம்
பிரமமதே யகண்டைக ரசப தார்த்தம். (25)

பிரமமதே யழிவற்ற சற்ப தார்த்தம்
பிரமமதே மகிழ்வுற்ற சிற்ப தார்த்தம்
பிரமமதே பிரியமெனுஞ் சுகப தார்த்தம்
பிரமமதே யகண்டைக ரசப தார்த்தம்
பிரமமதே சகமென்னும் பதத்தி னர்த்தம்
பிரமமதே சிவனெனும் பதத்தி னர்த்தம்
பிரமமதே யீசனெனும் பதத்தி னர்த்தம்
பிரமமதே யகண்டைக ரசப தார்த்தம். (26)

பிரமமதே மாயையெனக் காண்ப தாகும்
  பிரமமதே யவித்தையெனக் காண்ப தாகும்
பிரமமதே சித்தமெனக் காண்ப தாகும்
  பிரமமதே செகத்தெனவுங் காண்ப தாகும்
பிரமமதே சீவனெனக் காண்ப தாகும்
  பிரமமதே யீசனெனக் காண்ப தாகும்
பிரமமதே குரவனெனக் காண்ப தாகும்
  பிரமமதே சீடனெனக் காண்ப தாமே. (27)

பிரமமதே யயனெனவுங் காண்ப தாகும்
  பிரமமதே யரியெனவுங் காண்ப தாகும்
பிரமமதே யரனெனவுங் காண்ப தாகும்
  பிரமமதே யமரரெனக் காண்ப தாகும்
பிரமமதே சிருட்டியெனக் காண்ப தாகும்
  பிரமமதே திதியெனவுங் காண்ப தாகும்
பிரமமதே நாசமெனக் காண்ப தாகும்
  பிரமமதே நிகிலமுமாய்க் காண்ப தாமே. (28)

எங்கெங்கே யெவ்விதமாய்க் கண்ட போது
  மிதரமெனக் கண்டிடுமக் காட்சி யெல்லா
மங்கங்கே யுள்ளவதிட் டான மான
  வறிவுருவாம் பிரமமலா தனிய மாகா
தெங்கெங்கே யலைமுதலாய்க் கண்ட போது
  மிவையெல்லா மாழியலா தனிய மாமோ
வங்கங்கே காண்கின்ற காட்சி யெல்லா
  மப்படியே பிரமமலா தயலே யாகா. (29).

அப்புருவாம் வாரிதியிற் றோன்றி யாங்கே
  யடங்கியிடு மனேகவித வலையு மந்த
வப்புருவே யாவதலான் மத்தி யத்தி
  லன்னியமா யாரேனுங் கண்ட துண்டோ
சிற்பிரம வாரிதியிற் றோன்றி யாங்கே
  சிதைகின்ற செகமுதலா மலையு மந்தச்
சிற்பிரம மாவதலான் மத்தி யத்திற்
  றிறிதுமய லாகாது சத்தி யந்தான். (30)

மண்ணினிடைக் காண்கின்ற விகார மெல்லா
 மருவியவம் மண்ணேயா நீதி போலுந்
*தண்ணினிடைக் காண்கின்ற விகார மெல்லாந்
 தங்கியவத் தண்ணேயா நீதி போலும்
விண்ணினிடைக் காண்கின்ற விகார மெல்லாம்
 விரவியவவ் விண்ணேயா நீதி போலுந்
திண்ணியசிற் பிரமத்திற் காணு நின்ற
 செகசீவ பரங்களெலாம் பிரம மேயாம். (31)

வெருளுடனே தருவினிடைக் கண்ட கள்ளன்
 வெறிதான தருவேயா நீதி போலு
மருளுடனே சுத்திகையிற் கண்ட வெள்ளி
 மற்றந்தச் சுத்திகையா நீதி போலு
மிருளுடனே யிரச்சுவினிற் கண்ட சர்ப்ப
 மெப்போது மிரச்சுவதா நீதி போலும்
பிரமமதிற் காண்கின்ற சகசீ வாதி
 பேதமெலா மெப்போதும் பிரம மேயாம். (32)

அன்னியமா மாரோப மனைத்து மெங்கு
 மந்தந்த வதிட்டான மாவதே போற்
றுன்னுமதிட் டானபரப் பிரமத் தின்கட்
 டோன்றியவா ரோபமதாஞ் சக சீவாதி
மன்னுமதிட் டானபரப் பிரமந் தானு
 மறைமுடியின் சித்தாந்த மனைத்து மீதே
யன்னசிவ னருளியசித் தாந்த மீதே
 யறிஞருடை யநுபவசித் தாந்த மீதே. (33)

ஆதலினாற் பிரமமலா தணுவு மில்லை
 யகிலமுமே யெப்போதும் பிரம மாத்ரம்
பாதகமாம் வாதனையாற் சீவன் போலாய்ப்
 பவக்கடலின் மூழ்குவதும் பிரம மாத்ரஞ்
சாதகமாம் வாதனையாற் சிரவ ணாதி
 சாதனமே பழகுவதும் பிரம மாத்ரம்
பேதமிலா வாதனையாற் பிரம மாகிப்
 பிதியற விருப்பதுவும் பிரம மாத்ரம். (34)

(*தண்ணென்பது நீர்.)

நித்தியமை மித்திகமாங் கருமந் தன்னை
நியமமுடன் செய்வதுவும் பிரம மாத்ர
மத்திரமாங் கருமத்தாற் சித்த சுத்தி
யடைவாக வடைவதுவும் பிரம மாத்ரஞ்
சித்தமதன் சுத்தியொடு சிரவ ணத்தைச்
செவ்வியதாச் செய்வதுவும் பிரம மாத்ரம்
பத்தியுடன் சந்ததமு மனனந் தன்னைப்
பாங்காகப் பழகுவதும் பிரம மாத்ரம். (35)

எப்போதுந் தொடர்பாகத் தியானந் தன்னை
யிடையறவே யியற்றுவதும் பிரம மாத்ரஞ்
சற்போத பிரமத்திற் பழகா நின்ற
சவிகற்ப சமாதியுமே பிரம மாத்ரந்
தற்போத சூனியமா நிருவி கற்ப
சமாதிதனைச் சார்வதுவும் பிரம மாத்ரங்
கற்போல வசைவற்றுப் பிரம மாகிக்
களங்கமற விருப்பதுவும் பிரம மாத்ரம். (36)

மாயைமுத லுபாதியினு ளொனா வென்றே
மயக்கமுற மதிப்பதுவும் பிரம மாத்ர
நேயபர ஞானத்தாற் பிரம மொன்றே
நிலைத்ததெனு நிர்ணயமும் பிரம மாத்ர
மாயதன தவித்தையினுற் சீவ னுனென்
றனியமுற வறிவதுவும் பிரம மாத்ரந்
தூயபர வித்தையினுற் பரனு னென்றே
துவிதமறத் துணிவதுவும் பிரம மாத்ரம். (37)

முந்தியதா மஞ்ஞானம் பிரம மாத்ர
முளைத்தவதன் செய்கையுமே பிரம மாத்ரம்
பந்தமறு விஞ்ஞானம் பிரம மாத்ரம்
பரமான முத்தியுமே பிரம மாத்ரந்
தொந்தமுறு வியவகாரம் பிரம மாத்ரந்
துவிதமிலாப் பாமார்த்தம் பிரம மாத்ரஞ்
சந்ததமுஞ் சகலமுமே பிரம மாத்ரஞ்
சம்புபதந் தன்னுணை சங்கை யில்லை. (38)

நித்தியமாய்ச் சித்தித்த பிரம மல்லா
  னிலையாக வென்றுமொரு பொருளு மில்லை
யெத்திறமா யெவையெவைதா னெங்கே யெங்கே
  யிலங்கினுமத் திறமான வவை யனைத்து
மத்துவித பூரணமா யழியாச் சத்தா
  யான்மாவா யமர்ந்தபரப் பிரம மேயாஞ்
சத்தியசிற் சுகவடிவாஞ் சிவன்றன் ஞானை
  சாற்றியது சத்தியமே சங்கை யில்லை. (39)

பிரமமதே நானென்றுஞ் சங்கை யில்லை
  பிரமமதே நானென்றுஞ் சங்கை யில்லை
பிரமமதே நீயென்றுஞ் சங்கை யில்லை
  பிரமமதே நீயென்றுஞ் சங்கை யில்லை
பிரமமதே மற்றோருஞ் சங்கை யில்லை
  பிரமமதே மற்றோருஞ் சங்கை யில்லை
பிரமமதே சகலமுமாஞ் சங்கை யில்லை
  பிரமமதே சகலமுமாஞ் சங்கை யில்லை. (40)

பிரமமலா தணுவுமிலை யணுவு மில்லை
  பிரமமலா தணுவுமிலை யணுவு மில்லை
சருவமுமே சந்ததமும் பிரமந் தானுஞ்
  சருவமுமே சந்ததமும் பிரமந் தானும்
பரமசிவ னுபயதிருப் பதந்தன் ஞானை
  பரமசிவ னுபயதிருப் பதந்தன் ஞானை
யுரைதருமிவ் வர்த்தமெலாஞ் சத்தி யந்தா
  னுரைதருமிவ் வர்த்தமெலாஞ் சத்தி யந்தான். (41)

சகசீவ பரங்களெனத் தோன்று நின்ற
  சகலமுமே சந்ததமும் பிரம மென்றே
புகல்கின்ற விப்பொருளை யாவ ரேனும்
  புகன்றாலும் பிறருக்குப் போதித் தாலுஞ்
சுகமாகக் கேட்டாலு மதனை லன்னோர்
  சுத்தபர ஞானத்தை விரைவிற் பெற்றிவ்
வகமேவு மாக்கையெலா முடனே நீங்கி
  யாநந்த பூரணமாம் பிரம மாவர். (42)

எள்ளளவு மயலன்றி யெல்லா மென்று
மேகபரப் பிரமமதா யிருந்த போதுங்
கள்ளமுறு மனதுடையோர் பாசி வத்தின்
கருணையிலாக் குற்றத்தால் வேறு வேரு
யுள்ளமதி லுணர்ந்துமகா பவதுக் கத்தை
யுறுவதனுன் முமுட்சுவெலா மெவ்வி தத்துந்
தள்ளவொணுப் பரமசிவன் கருணை பெற்றே
தமதுபவ துக்கத்தைத் தவிர்க்க வேண்டும். (43)

பரமசிவன் கருணையினு லகண்ட ஞானம்
பற்றியதாற் பவதுக்கம் விடுப்ப தற்கிங்
கரியமறை யாதியினு லந்த வந்த
வதிகாரிக் கனுகுணமா யறையப் பட்ட
கிரியைமுத லநேகவித வேது வுண்டு
கிளத்தியவவ் வேதுக்குட் சிரவ ணுதி
யுரமதுவா மவற்றுக்குட் பிரமத் தியான
முத்தமமா மதனுலவ் வருள்சித் திக்கும் (44)

ஆதலினு லறிவுற்றுக் காண்ப வெல்லா
மகண்டவறி வானபரப் பிரம மென்று
மோதியவப் பரப்பிரம நானே யென்று
மொழிவறவே செய்கின்ற பிரமத் யான
சாதனையாற் பரமசிவ னருளைச் சார்ந்து
சலனமிலா வகண்டான்ம ஞானம் பெற்றுப்
போதகன பரப்பிரமந் தானே யாகிப்
பொல்லாத பவத்துயரைப் போக்க வேண்டும். (45)

சதானந்த வடிவான பரேசன் முன்னஞ்
சாலவுமே கருணையினு லருளிச் செய்த
வுதாரமதாம் பொருளிதனை யின்றெல் லோர்க்கு
முபகார மாகநினக் கிங்கு ரைத்தே
னெதாகினுமோ ரணுவுமிதி லைய மில்லை
யெமதீச னியம்பியதி லைய மேது
நிதாகவென ரிபுமுனிவ னன்னேனுக்கு
நிச்சலமாம் பரம்பொருளை நிகழ்த்தி னுனல். (46)

வேறு.

சின்னமேவும் விசித்திரசீவருஞ் சிறிதிலாதெங்கும் வியாபிக்குமீச
னும், பின்னமேவும் விசித்திரஞாலமும் பிரமமாத்திர மென்றிங்குப்
பேசுதல், துன்னுமன்பர்கண் மேவியவிப்பவத் துன்பம்யாவுந் து
டைத்திடவேண்டியே, யன்னவாநந்தத் தாண்டவமாடும் மாண்டவ
ன்ற னகண்டசொரூபமே. (47)

பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் 12-க்கு திருவிருத்தம்-529.

++++++++++++++++++++++++++++++++++++++++

## பதின்மூன்றாவது
## அனைத்துமசத்தென்றும், அவையெல்லாஞ்
## சித்தென்றுமுரைக்கும்
## அத்தியாயம்.

சுருதியிலு மிருதியிலு மாக மத்துஞ்
 சூக்குமமா நூற்களிலு மற்று மெங்கு
மருவமிக வரிதான நிர்ண யத்தை
 மறித்துமுனக் கருள்செய்வே னொருமை யாய்க்கேள்
பிரமமதற் கயலாகக் காணப் பட்ட
 பேதமெலா மெப்போது மசத்தே யாகுஞ்
சருவமதற் கப்பலாய்ச் சலன மில்லாச்
 சத்தியமா யுளதென்றும் பிரம மொன்றே. (1)

எவ்விதமா யறிவதுவு மசத்தே யாகு
 மெவ்விதமாய் நினைவதுவு மசத்தே யாகு
மெவ்விதமாய்க் காண்பதுவு மசத்தே யாகு
 மெவ்விதமாய்க் கேட்பதுவு மசத்தே யாகு
மெவ்விதமாய் வினவுவது மசத்தே யாகு
 மெவ்விதமாய்ச் சொல்லுவது மசத்தே யாகு
மெவ்விதமாய்ப் புசிப்பதுவு மசத்தே யாகு
 மெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (2)

எவ்விதமாந் தலங்களுமே யசத்தே யாகு
 மெவ்விதமாந் தீர்த்தமுமே யசத்தே யாகு
மெவ்விதமாந் தேவதையு மசத்தே யாகு
 மெவ்விதமாஞ் சேவையுமே யசத்தே யாகு
மெவ்விதமாந் தவங்களுமே யசத்தே யாகு
 மெவ்விதமாஞ் செபங்களுமே யசத்தே யாகு
மெவ்விதமாந் திருசியமு மசத்தே யாகு
 மெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (3)

எவ்விதமாம் பொறிகளுமே யசத்தே யாகு
மெவ்விதமாம் புலன்களுமே யசத்தே யாகு
மெவ்விதமாம் போத்தாவு மசத்தே யாகு
மெவ்விதமாம் போக்கியமு மசத்தே யாகு
மெவ்விதமா மகந்தைகளு மசத்தே யாகு
மெவ்விதமா மிதந்தைகளு மசத்தே யாகு
மெவ்விதமாம் பேதமுமே யசத்தே யாகு
மெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (4)

வித்தாமா மாயையுமே யசத்தே யாகும்
விரிந்தவதன் காரியமு மசத்தே யாகுந்
தொத்துமகங் காரமுமே யசத்தே யாகுந்
தொடருமதன் காரியமு மசத்தே யாகும்
புத்தியதன் காரியமு மசத்தே யாகும்
புகன்மனதின் காரியமு மசத்தே யாகுஞ்
சித்தமதன் காரியமு மசத்தே யாகுஞ்
சிதையாம லுளதென்றும் பிரம மொன்றே. (5)

சாதமுறுந் தூலவுடம் பசத்தே யாகுஞ்
சஞ்சலமாஞ் சாக்கிரமு மசத்தே யாகும்
பேதமுறுஞ் சூக்கவுடம் பசத்தே யாகும்
பிரிவுற்ற சொப்பனமு மசத்தே யாகு
மேதமுறு மூலவுடம் பசத்தே யாகு
மிருமையிலாச் சுழுத்தியுமே யசத்தே யாகு
மோதியிடும் பேதமெலா மசத்தே யாகு
மொழிவறவே யுளதென்றும் பிரம மொன்றே. (6)

விச்வனொடு தைசதனு மசத்தே யாகும்
விகற்பமுறுப் பிராஞ்ஞனுமே யசத்தே யாகு
மசுபமிலாத் துரியமுமே யசத்தே யாகு
மவையினமி மானியுமே யசத்தே யாகும்
மிசிரமுறு சமட்டியுமே யசத்தே யாகும்
மேவியிடும் வியட்டியுமே யசத்தே யாகும்
நிசமருவாப் பேதமெலா மசத்தே யாகும்
நீங்காம லுளதென்றும் பிரம மொன்றே. (7)

தானாகத் தோற்றுவது மசத்தே யாகுந்
 தனதெனவே தோற்றுவது மசத்தே யாகு
நீநானாய்த் தோற்றுவது மசத்தே யாகு
 நிகிலமெனத் தோற்றுவது மசத்தே யாகுங்
கோனாகத் தோற்றுவது மசத்தே யாகுங்
 குருவெனவே தோற்றுவது மசத்தே யாகு
நாநாவாந் தோற்றமெலா மசத்தே யாகு
 நாசமிலா துளதென்றும் பிரம மொன்றே. (8)

கத்துருவாய்த் தோற்றுவது மசத்தே யாகுங்
 கருமமெனத் தோற்றுவது மசத்தே யாகுஞ்
சத்ததுவாய்த் தோற்றுவது மசத்தே யாகுஞ்
 சதசத்தாய்த் தோற்றுவது மசத்தே யாகும்
வித்ததுவாய்த் தோற்றுவது மசத்தே யாகும்
 விதம்விதமாய்த் தோற்றுவது மசத்தே யாகு
மெத்திறமாய்த் தோற்றுவது மசத்தே யாகு
 மெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (9)

நல்லதுவாய்த் தோற்றுவது மசத்தே யாகு
 நலமலதாய்த் தோற்றுவது மசத்தே யாகுஞ்
சொல்லியதாய்த் தோற்றுவது மசத்தே யாகுஞ்
 சொனதலதாய்த் தோற்றுவது மசத்தே யாகு
மில்லையெனத் தோற்றுவது மசத்தே யாகு
 மிருப்பதெனத் தோற்றுவது மசத்தே யாகும்
புல்லியிடுந் தோற்றமெலா மசத்தே யாகும்
 பூரணமா யுளதென்றும் பிரம மொன்றே. (10)

வேதமொடு மிருதிகளு மசத்தே யாகும்
 வெகுவிதமா நூற்களுமே யசத்தே யாகு
மேதமொடு குணங்களுமே யசத்தே யாகு
 மிச்சைகளு மனிச்சைகளு மசத்தே யாகும்
பூதமொடு பௌதிகமு மசத்தே யாகும்
 புண்ணியபா வங்களெலா மசத்தே யாகும்
பேதமுறு பொருளனைத்து மசத்தே யாகும்
 பிரிவறவே யுளதென்றும் பிரம மொன்றே. (11)

இங்குற்ற பொருளெவையு மசத்தே யாகு
மிங்கிலதாம் பொருளெவையு மசத்தே யாகு
மங்குற்ற பொருளெவையு மசத்தே யாகு
மங்கிலதாம் பொருளெவையு மசத்தே யாகு
மெங்குற்ற பொருள்களுமே யசத்தே யாகு
மெவ்விதமாம் பொருள்களுமே யசத்தே யாகுஞ்
சங்கற்ப முற்றதெலா மசத்தே யாகுஞ்
சலியாம லுளதென்றும் பிரம மொன்றே. (12)

குறைவுற்ற பொருளெவையு மசத்தே யாகுங்
குறையாத பொருளெவையு மசத்தே யாகு
மறைவுற்ற பொருளெவையு மசத்தே யாகு
மறையாத பொருளெவையு மசத்தே யாகு
மறிவுற்ற பொருளெவையு மசத்தே யாகு
மறியாத பொருளெவையு மசத்தே யாகுஞ்
செறிவுற்ற பொருளெல்லா மசத்தே யாகுஞ்
சேதமுறு துளதென்றும் பிரம மொன்றே. (13)

விதம்விதமா முலகமெலா மசத்தே யாகும்
விண்ணவருந் தானவரு மசத்தே யாகுஞ்
சதுர்விதமாஞ் சாதிகளு மசத்தே யாகுஞ்
சங்கரமாஞ் சாதிகளு மசத்தே யாகு
மதிசயமா மாச்சிரம மசத்தே யாகு
மங்குசெயுஞ் செய்கையெலா மசத்தே யாகுந்
திதமருவா வதன்பலமு மசத்தே யாகுந்
திடமுறவே யுளதென்றும் பிரம மொன்றே. (14)

அஞ்சனமா மஞ்ஞான மசத்தே யாகு
மைந்துமகா பூதமுமே யசத்தே யாகும்
பஞ்சவித தேவதையு மசத்தே யாகும்
பஞ்சவித கோசமுமே யசத்தே யாகும்
விஞ்சையிலாச் சீவர்களு மசத்தே யாகும்
விரிந்தபல வுபாதிகளு மசத்தே யாகுஞ்
சஞ்சலமாக் காண்பவெலா மசத்தே யாகுஞ்
சலனமிலா துளதென்றும் பிரம மொன்றே. (15)

சடுவிதமா மூர்மிகளு மசத்தே யாகுஞ்
சட்பாவ விகாரமுமே யசத்தே யாகுந்
தொடருமரி சடுவர்க்க மசத்தே யாகுந்
தொந்தமுறும் பந்தமெலா மசத்தே யாகும்
படருபல காலமுமே யசத்தே யாகும்
பலதேச வத்துகளு மசத்தே யாகு
மடமையினுற் காண்பதெலா மசத்தே யாகு
மாரும வுளதென்றும் பிரம மொன்றே. (16)

சொன்ன துவுஞ் சொல்லாது மசத்தே யாகுஞ்
சுதந்தரமா யுளதென்றும் பிரம மொன்றே
பின்னமுறக் காண்பதெலா மசத்தே யாகும்
பிரிவறவே யுளதென்றும் பிரம மொன்றே
பன்னியவிவ் வர்த்தத்தைப் பாங்காய்க் கேட்டுப்
பகர்ந்தபடி யுணர்ந்திடுவோன் பரமே யாவ
னின்னமுமே முத்திக்குச் சாட்சாத் தான
வேதுவினை யிதமாக வியம்பக் கேளாய். (17)

சதாநந்த மயமான பிரம மெல்லாஞ்
சதாநந்த மயமான பிரமம் யாருஞ்
சிதாநந்த மயமான பிரம மேநான்
சிதாநந்த மயமான பிரமமே நீ .
நிதாகவதா லென்றுமெலாம் பிரம மென்றும்
நிரந்தரமாம் பிரமமது நானே யென்று
மெதாகினுமோ ரணுவேனு மைய மின்றி
யெப்போது மிடையறவே நிச்ச யிப்பாய். (18)

சந்ததமுஞ் சன்மாத்ர சொரூப மேநான்
சலனமிலாச் சின்மாத்ர சொரூப மேநான்
ருெந்தமிலாச் சுகமாத்ர சொரூப மேநான்
றுவிதமிலாத் தூயபர சொரூப மேநான்
பந்தமிலாப் பரிசுத்த சொரூப மேநான்
பரமவுப சாந்தபர சொரூப மேநா
னந்தமிலாப் பரப்பிரம சொரூப நானென்
றறிதிடமா யநவரத நிச்ச யிப்பாய். (19)

சத்தியசிற் சுக்கனமாஞ் சொரூப மேநான்
சம்சார சங்கமிலர்ச் சொரூப மேநா
னித்தியநிர்க் குணமான சொரூப மேநா
னிரஞ்சனநிட் களமான சொரூப மேநான்
சுத்தபரி பூரணமாஞ் சொரூப மேநான்
சுயஞ்சோதி வடிவான சொரூப மேநா
னத்துவித பரப்பிரம சொரூப நானென்
றிதிடமா யநவரத நிச்ச யிப்பாய். (20)

சகலமுமாஞ் சின்மாத்ர சொரூப மேநான்
சலனமிலாச் சின்மாத்ர சொரூப மேநான்
றுகளிலதாஞ் சின்மாத்ர சொரூப மேநான்
றுவிதமுறுச் சின்மாத்ர சொரூப மேநா
னிகரிலதாஞ் சின்மாத்ர சொரூப மேநான்
னிட்களமாஞ் சின்மாத்ர சொரூப நானென்
றகமதனி லுறுகின்ற நிச்ச யத்தா
லநவரதஞ் சின்மாத்ர மாகி நிற்பாய். (21)

விரிவுற்ற சுகங்களெலாஞ் சித்து மாத்ரம்
விதம்விதமாஞ் சீவரெலாஞ் சித்து மாத்ர
மருளுற்ற வீசனுமே சித்து மாத்ர
மயன்முதலாம் மூர்த்திகளுஞ் சித்து மாத்ரம்
பிரிவுற்ற வவர்செயலுஞ் சித்து மாத்ரம்
பின்னுமுள பேதமெல்லாஞ் சித்து மாத்ர
மருளுற்ற பந்தமுமே சித்து மாத்ர
மயக்கமிலா முத்தியுமே சித்து மாத்ரம். (22)

சித்தமுறு விருத்திகளுஞ் சித்து மாத்ரஞ்
சிந்தைசெயும் பொருள்களுமே சித்து மாத்ரஞ்
சுத்தமுறு சிரவணமுஞ் சித்து மாத்ரஞ்
சூக்குமமா மனனமுமே சித்து மாத்ரம்
வித்தாமாந் தியானமுமே சித்து மாத்ரம்
விமலமதாஞ் சமாதியுமே சித்து மாத்ர
மத்துவித வநுபவமுஞ் சித்து மாத்ர
மாநந்த வநுபவமுஞ் சித்து மாத்ரம். (23)

நிசநிலையி னிற்பதுவுஞ் சித்து மாத்ர
நீக்கமற நிற்பதுவுஞ் சித்து மாத்ரம்
வசமுறவே நிற்பதுவுஞ் சித்து மாத்ரம்
வானெனவே நிற்பதுவுஞ் சித்து மாத்ர
மிசிரமற நிற்பதுவுஞ் சித்து மாத்ர
மெய்யாக நிற்பதுவுஞ் சித்து மாத்ர
மசைவறவே நிற்பதுஞ் சித்து மாத்ர
மகண்டமதாய் நிற்பதுவுஞ் சித்து மாத்ரம். (24)

அனியமுறு மஞ்ஞானஞ் சித்து மாத்ர
மமலமதாம் விஞ்ஞானஞ் சித்து மாத்ர
நனிமருவுஞ் சங்கற்பஞ் சித்து மாத்ர
நாடியிடும் புவனமெலாஞ் சித்து மாத்ர
வினவியிடு நீதானுஞ் சித்து மாத்ரம்
விளம்பியிடு நான்முனுஞ் சித்து மாத்ரம்
பனுவியிடும் பலபொருளுஞ் சித்து மாத்ரம்
பரசிவ சகங்களெலாஞ் சித்து மாத்ரம். (25)

ஆனைமுக னறுமுகனுஞ் சித்து மாத்ர
மம்பிகையு மருள்சிவனுஞ் சித்து மாத்ர
மேனையுள சிவகணமுஞ் சித்து மாத்ர
மினியசிவ பத்தர்களுஞ் சித்து மாத்ர
மீனமிலா முனிவர்களுஞ் சித்து மாத்ர
மிலங்கியிடுஞ் சுரர்களெலாஞ் சித்து மாத்ர
மூனமிலாச் சகுணமுமே சித்து மாத்ர
முத்தமமா நிர்க்குணமுஞ் சித்து மாத்ரம். (26)

பரமசிவ பூசனையுஞ் சித்து மாத்ரம்
பயிலுமரி பூசனையுஞ் சித்து மாத்ர
மருவுமயன் பூசனையுஞ் சித்து மாத்ர
மற்றுமுளோர் பூசனையுஞ் சித்து மாத்ரம்
பெருகுமுமை பூசனையுஞ் சித்து மாத்ரம்
பின்னைமுதற் பூசனையுஞ் சித்து மாத்ரஞ்
சுருவசுரர் பூசனையுஞ் சித்து மாத்ரஞ்
சகலமுமே சந்ததமுஞ் சித்து மாத்ரம். (27)

வானமுதற் பூதமுமே சித்து மாத்ரம்
வந்தபல பௌதிகமுஞ் சித்து மாத்ரம்
பானுமுதன் முச்சுடருஞ் சித்து மாத்ரம்
பரவியிடு முடுக்களுமே சித்து மாத்ர
மூனமிலா மேகமுமே சித்து மாத்ர
முயிர்க்கினிய வருடமுமே சித்து மாத்ரம்
வானிலுறும் பேதமெலாஞ் சித்து மாத்ரம்
வையமுறும் பேதமெலாஞ் சித்து மாத்ரம். (28)

கிருமிமுத லெவ்வுயிருஞ் சித்து மாத்ரங்
கிரிநதியுங் கானகமுஞ் சித்து மாத்ரம்
விரிவுபெறு புரங்களுமே சித்து மாத்ரம்
விசித்திரமாங் கிரியைகளுஞ் சித்து மாத்ரம்
பிரிவுபெறு பலங்களுமே சித்து மாத்ரம்
பிரமாண்ட கோடிகளுஞ் சித்து மாத்ரஞ்
சருவசரா சரங்களுமே சித்து மாத்ரஞ்
சந்ததமுஞ் சகலமுமே சித்து மாத்ரம். (29)

பதிதுணியின் பாரியுமே சித்து மாத்ரம்
பரவுபிதா மாத்ரவுஞ் சித்து மாத்ர
மதிசயமாம் பந்துவெலாஞ் சித்து மாத்ர
மன்னியரு மரிகளுமே சித்து மாத்ரம்
விதிமருவு மாணுனுஞ் சித்து மாத்ரம்
விதிக்கின்ற சற்குருவுஞ் சித்து மாத்ரந்
திதிமருவு முயிர்களெலாஞ் சித்து மாத்ரந்
திருசியமாய்க் காண்பதெலாஞ் சித்து மாத்ரம். (30)

காரணகா ரியமெவையுஞ் சித்தே யாகுங்
கண்காது முதலெவையுஞ் சித்தே யாகு
மாரணமு மதன்முடியுஞ் சித்தே யாகு
மகண்டபா நிச்சயமுஞ் சித்தே யாகும்
பூரணமா யுறுகதியுஞ் சித்தே யாகும்
புகல்கதியைத் தருசிவனுஞ் சித்தே யாகுந்
தாரணியே முதலெவையுஞ் சித்தே யாகுந்
தங்குசடா சடங்களெலாஞ் சித்தே யாகும். (31)

அற்புதமாய்க் காண்பதுவுஞ் சித்தே யாகு
மயலயலாய்க் காண்பதுவுஞ் சித்தே யாகுந்
தற்பதமாய்க் காண்பதுவுஞ் சித்தே யாகுந்
தன்மயமாய்க் காண்பதுவுஞ் சித்தே யாகுஞ்
சிற்பதமாய்க் காண்பதுவுஞ் சித்தே யாகுஞ்
சித்தலதாய்க் காண்பதுவுஞ் சித்தே யாகுங்
கற்பிதமாய்க் காண்பதெலாஞ் சித்தே யாகுங்
காண்கின்ற காட்சியெலாஞ் சித்தே யாகும். (32)

மாயைமுத லுபாதியெலாஞ் சித்தே யாகு
மருவுபர சீவரெலாஞ் சித்தே யாகு
மாயபல வுலகமெலாஞ் சித்தே யாகு
மதனிலுள பேதமெலாஞ் சித்தே யாகுந்
தூயபர சிவனுருவுஞ் சித்தே யாகுந்
துவிதமிலாப் பரவடிவுஞ் சித்தே யாகு
நேயமதாந் தன்வடிவுஞ் சித்தே யாகு
நிகிலமுமே நிறைவுற்ற சித்தே யாகும். (33)

சாவதுவுஞ் சனிப்பதுவுஞ் சித்தே யாகுஞ்
சஞ்சலமாய் நிற்பதுவுஞ் சித்தே யாகும்
போவதுவும் வருவதுவுஞ் சித்தே யாகும்
புண்ணியபா வங்களெலாஞ் சித்தே யாகு
மாவதுவு மழிவதுவுஞ் சித்தே யாகு
மன்னியமா யறிவதுவுஞ் சித்தே யாகு
மோவலிலா திருப்பதுவுஞ் சித்தே யாகு
மொன்றாக வுணருவதுஞ் சித்தே யாகும். (34)

பாகமுறுஞ் சாதனமுஞ் சித்தே யாகும்
பழகியசிற் பாவனையுஞ் சித்தே யாகு
மோகமிலாப் பரவறிவுஞ் சித்தே யாகு
மூதுணர்வாம் பூசனையுஞ் சித்தே யாகுஞ்
சோகமிலாச் சுகநிலையுஞ் சித்தே யாகுஞ்
சுத்தமகா மௌனமுமச் சித்தே யாகு
மேகமதா யிருப்பதுவுஞ் சித்தே யாகு
மியங்கியிடா திருப்பதுவுஞ் சித்தே யாகும். (35)

அரியபல மந்திரமுஞ் சித்தே யாகு
மநந்தவித தந்திரமுஞ் சித்தேயாகுங்
கிரியையுபா சனையெவையுஞ் சித்தே யாகுங்
கேவலமாம் பத்தியுமச் சித்தே யாகு
மிருதயவா காயமுமச் சித்தே யாகு
மிவைமருவுஞ் சிந்தையெலாஞ் சித்தே யாகுந்
திரணமுத லெப்பொருளுஞ் சித்தே யாகுந்
திருசியமாய்த் தெரிவதெலாஞ் சித்தே யாகும். (36)

தேகமுயிர் பொறிபுலனுஞ் சித்தே யாகுந்
தியங்குமனம் புத்தியுமச் சித்தே யாகு
மாகுமகங் காரமுமச் சித்தே யாகு
மலைவுற்ற சித்தமுமச் சித்தே யாகு
மோகமுமுத் தேகமுமச் சித்தே யாகு
மூன்றினபி மானியுமச் சித்தே யாகுஞ்
சோகமிலாத் துரியனுமச் சித்தே யாகுஞ்
சொன்னதெலாந் தொகுத்தந்தச் சித்தே யாகும். (37)

தொந்தமுறு மவத்தையுமச் சித்தே யாகுந்
துரியமெனு மவத்தையுமச் சித்தே யாகு
மைந்துவித கோசமுமச் சித்தே யாகு
மவையினபி மானியுமச் சித்தே யாகுஞ்
சந்ததமுஞ் சகலமுமச் சித்தே யாகுஞ்
சமட்டியுடன் வியட்டியுமச் சித்தே யாகு
மெந்தவிதத் தோற்றமுமச் சித்தே யாகு
மீசசக சீவரெலாஞ் சித்தே யாகும். (38)

சித்ததுவே சன்மாத்ர சொரூப மாகுஞ்
சித்ததுவே சின்மாத்ர சொரூப மாகுஞ்
சித்ததுவே சுகமாத்ர சொரூப மாகுஞ்
சித்ததுவே யகண்டைக சொரூப மாகுஞ்
சித்ததுவே பரப்பிரம சொரூப மாகுஞ்
சித்ததுவே பரமசிவ சொரூப மாகுஞ்
சித்ததுவே பரிசுத்த சொரூப மாகுஞ்
சித்ததுவே பரமான்ம சொரூப மாமே. (39)

சித்ததுவே நித்தியமங் களமு மாகுஞ்
சித்ததுவே நித்தநிரஞ் சனமு மாகுஞ்
சித்ததுவே நிட்களநிர்க் குணமு மாகுஞ்
சித்ததுவே நித்தநிரா மயமு மாகுஞ்
சித்ததுவே நித்தநிரா வரண மாகுஞ்
சித்ததுவே நிரதிசயா நந்த மாகுஞ்
சித்ததுவே நிருமலநிட் கிரிய மாகுஞ்
சித்ததுவே நீக்கமற நிறைந்த தாமே. (40)

சித்ததுவே பரமவுப சாந்த மாகுஞ்
சித்ததுவே பரமபத சொரூப மாகுஞ்
சித்ததுவே பரமான சொரூப மாகுஞ்
சித்ததுவே பராற்பரமாஞ் சொரூப மாகுஞ்
சித்ததுவே பரவித்தை சொரூப மாகுஞ்
சித்ததுவே பரசித்தி சொரூப மாகுஞ்
சித்ததுவே பரசத்தா சொரூப மாகுஞ்
சித்ததுவே பரிபூன்ற சொரூப மாமே. (41)

சித்ததுவே பாவனமாஞ் சொரூப மாகுஞ்
சித்ததுவே பரதத்வ சொரூப மாகுஞ்
சித்ததுவே சுத்தசிதா காய மாகுஞ்
சித்ததுவே சுயஞ்சோதி சொரூப மாகுஞ்
சித்ததுவே விகாரமிலாச் சொரூப மாகுஞ்
சித்ததுவே விசேட மிலாச் சொரூப மாகுஞ்
சித்ததுவே யதீதபர சொரூப மாகுஞ்
சித்ததுவே யகண்டபர சொரூப மாமே. (42)

சித்ததுவே சருவசம சொரூப மாகுஞ்
சித்த துவே சருவான்ம சொரூப மாகுஞ்
சித்ததுவே சங்கமிலாச் சொரூப மாகுஞ்
சித்ததுவே பங்கமிலாச் சொரூப மாகுஞ்
சித்ததுவே யெங்குமுள சொரூப மாகுஞ்
சித்ததுவே யேகான்ம சொரூப மாகுஞ்
சித்ததுவே பரதெய்வ சொரூப மாகுஞ்
சித்ததுவே பரப்பிரம சொரூப மாமே. (43)

சித்ததுவே யயனுடைய நிசசொ ரூபஞ்
சித்ததுவே யரியுடைய நிசசொ ரூபஞ்
சித்ததுவே யானுடைய நிசசொ ரூபஞ்
சித்ததுவே யமருடை நிசசொ ரூபஞ்
சித்ததுவே நாருடைய நிசசொ ரூபஞ்
சித்ததுவே நம்முடைய நிசசொ ரூபஞ்
சித்ததுவே நின்னுடைய நிசசொ ரூபஞ்
சித்ததுவே நிகிலருடை நிசசொ ரூபம். (44)

எத்திறமா மதிட்டானத் தெவைதான் றோன்று
மிலங்கியவவ் வாரோப மஃதே யாகுஞ்
சுத்திகையிற் கற்பிதமாய்த் தோற்றும் வெள்ளி
சுத்திகையே யாகுவதைக் கண்டோ மன்றோ
வித்திறமே சித்தினிடைத் தோன்று நின்ற
வீசசக சீவரொலாஞ் சித்தே யாகுஞ்
சித்தையலா லணுவுமிலை யெல்லாஞ் சித்தே
சின்மயமாஞ் சிவனுணை யுண்மை சொன்னேன். (45)

ஆதலினு னீசித்து நானுஞ் சித்தே
யநந்தசக சீவேச ரனைத்துஞ் சித்தே
யோதியவா றதிதிடமா யிடைவி டாம
லொழிவறவே யுள்ளத்தி னிச்ச யிப்பாய்
பேதமறப் பெறுகின்ற நிச்ச யத்தாற்
பின்னமிலாப் பரப்பிரம ஞானம் பெற்று
மாதவவிப் பவத்துயரை விரைவின் மாற்றி
மகத்தான மோட்சசுக மருவி நிற்பாய். (46)

சித்தேநீ சித்தேநான் சித்தே யெல்லாஞ்
சித்தையலா தணுவுமிலை யெல்லாஞ் சித்தே
யித்தேக முதலியவோ ரணுவு மில்லை
யித்தேச முதலியவோ ரணுவு மில்லை
யெத்தேக முதலியவுஞ் சித்தே யாகு
மெத்தேச முதலியவுஞ் சித்தே யாகும்
பத்தேச்சை நிறைவேற்றும் பரேச னுணை
பகர்ந்ததிலோ ரையமிலை பரமார்த் தந்தான். (47)

சின்மயனுன் சின்மயனுன் சித்தே யெல்லாஞ்
சின்மயனுன் சின்மயனுன் சித்தே யெல்லாஞ்
சன்மயனுன் சன்மயனுன் சத்தே யெல்லாஞ்
சன்மயனுன் சன்மயனுன் சத்தே யெல்லாந்
தன்மயனுன் றன்மயனுன் ருனே யெல்லாந்
தன்மயனுன் றன்மயனுன் ருனே யெல்லா
நின்மலமா யிவ்வண்ண நிதாக வென்று
நீக்கமற நிரந்தரமாய் நிச்ச யிப்பாய். (48)

சாதமடைந் திறப்புற்ற சீவர்க் கெல்லாஞ்
சன்மசரா மரணபரம் பரையா மிந்தக்
கேதமுறும் பவதாப மனைத்துந் தீரக்
கிருபையினுற் பரமசிவன் பகர்ந்த வண்ணம்
வேதமுதற் சகலத்தும் பெறுவ தற்கு
வெகுவரிதா மிப்பொருளை விளம்பி னேனு
ஞேதியவிவ் வர்த்தத்தை யொருகா லேனு
முள்ளபடி கேட்டுணர்வோன் பிரம மாவன். (49)

சனனசரா மரணமுறுஞ் சீவ ரெல்லாஞ்
சன்மமுத லெவையுமிலாச் சிவத்தை யோர்ந்து
மனனமுடன் றியானித்தே மாயா மோக
மாற்றிமனக் கிரந்தியறுத் தபய ராகி
யனியமிலா வகண்டபர ஞானங் கொண்ட
யத்துவித பரப்பிரம மாவ ரென்றே
யனையரிபு மாமுனிவ னிதாக னுக்கங்
கரிதான பரம்பொருளை யருள்செய் தானுல். (50)

வேறு.

சகலசீவபரங்க ளசத்தென்றுஞ் சந்ததஞ்சக லங்களுஞ் சித்தென்று
மகிலபூரண சித்ததுநீயென்று மந்தமின்றிய சித்தது நானென்றும்
வெகுவிதந்திடமாயிக்குப்பேசியவேதவீற்றின்பொருட்களனைத்துமே
திகழுமாநந்தத் தாண்டவமாநெந் தேவன்றன்பரிபூரணரூபமே. (51)

பதின்மூன்ருவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம், 13-க்கு திருவிருத்தம்-580.

++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

## பதினான்காவது

### அகண்ட சொரூபாநு சந்தான முரைக்கும் அத்தியாயம்.

சகலமுமாஞ் சித்தாந்த ரகசி யத்தைச்
சங்கிரக மாகவிதிற் சாற்றக் கேளாய்
பகராலுறுந் துவிதமொடத் துவித மில்லை
பரமவுப சாந்தமதாம் பிரம மொன்றே
யிகழ்வறவே யெப்போது முளதா மெங்கு
மேகமதாம் பிரமமதே நீயு நானு
மகிலமுமப் பரப்பிரம சொரூப மேயா
மாதலினா லவ்வண்ண மநுசந் திப்பாய். (1)

அகமென்றும் பரப்பிரம சொரூப மானே
னகமென்றும் பரமசிவ சொரூப மானே
னகமென்றும் பரமான்ம சொரூப மானே
னகமென்றும் பராற்பரமாஞ் சொரூப மானே
னகமென்றும் பரிசுத்த சொரூப மானே
னகமென்றும் பரிபூன்ற சொரூப மானே
னகமென்று மகண்டபர சொரூப னென்றே
யநவரத மிதிடமா யநுசந் திப்பாய். (2)

அகமென்று மழிவற்ற சத்தா கின்றே
னகமென்றுந் திகழ்வுற்ற சித்தா கின்றே
னகமென்று நிரதிசய சுகமா கின்றே
னகமென்று மகண்டைக ரசமா கின்றே
னகமென்று மெவ்விடத்து நிறைந்து நின்றே
னகமென்று மெல்லாமு மாகா நின்றே
னகமென்று மகண்டபரப் பிரம மென்றே
யநவரத மிதிடமா யநுசந் திப்பாய். (3)

அகமென்றுந் தற்பொருளாம் பரமா கின்றே
னகமென்றுந் துவம்பொருளாம் பரமா கின்றே
னகமென்று மசிபொருளாம் பரமா கின்றே
னகமென்று மகண்டைக ரசமா கின்றே
னகமென்று மெவைகட்கு முள்ளா கின்றே
னகமென்று மெவைகட்கும் வெளியா கின்றே
னகமென்று மகண்டபரப் பிரம மென்றே
யநவரத மிதிடமா யநுசந் திப்பாய். (4)

அகமென்று நித்தியமாஞ் சொரூப மானே
னகமென்று நிர்க்குணமாஞ் சொரூப மானே
னகமென்று நிரஞ்சனமாஞ் சொரூப மானே
னகமென்று நிராவரண சொரூப மானே
னகமென்று நிட்களமாஞ் சொரூப மானே
னகமென்று நிராமயமாஞ் சொரூப மானே
னகமென்று நிறைந்தபர சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (5)

அகமென்றும் விபுவான சொரூப மானே
னகமென்றும் வீதலுருச் சொரூப மானே
னகமென்று மக்கரமாஞ் சொரூப மானே
னகமென்று மாநந்த சொரூப மானே
னகமென்று மோட்சமதாஞ் சொரூப மானே
னகமென்று மோசகனுஞ் சொரூப மானே
னகமென்று மகண்டபர சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (6)

அகமகில காரணமாஞ் சொரூப மானே
னகமகில பூரணமாஞ் சொரூப மானே
னகமகில சிவபர சொரூப மானே
னகமணுவு மாகாத சொரூப மானே
னகமனிச முபசாந்த சொரூப மானே
னகமனிச மொன்றான சொரூப மானே
னகமனிச மகண்டபர சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (7)

அகமகில காரியமாஞ் சொரூப மானே
னகமகில காரகனுஞ் சொரூப மானே
னகமகில பாலகனுஞ் சொரூப மானே
னகமகில நாசகனுஞ் சொரூப மானே
னகமனிச மெவையுமலாச் சொரூப மானே
னகமகமா யமைவுற்ற சொரூப மானே
னகமனிச மகண்டபர சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (8)

அகமகில பூதமுமாஞ் சொரூப மானே
னகமகில பௌதிகமாஞ் சொரூப மானே
னகமகில சாட்சியமாஞ் சொரூப மானே
னகமகில சான்றான சொரூப மானே
னகமனிச மனியமிலாச் சொரூப மானே
னகமனிச மத்துவித சொரூப மானே
னகமனிச மகண்டபர சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (9)

அகமனிச நீயென்னுஞ் சொரூப மானே
னகமனிச நானென்னுஞ் சொரூப மானே
னகமனிச மனியரெனுஞ் சொரூப மானே
னகமனிச மகிலான்ம சொரூப மானே
னகமனிச மசஞ்சலமாஞ் சொரூப மானே
னகமனிச மசங்கபர சொரூப மானே
னகமனிச மகண்டபர சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (10)

அகமனிசஞ் சின்மயமாஞ் சொரூப மானே
னகமனிசஞ் சிற்கனமாஞ் சொரூப மானே
னகமனிசஞ் சின்மாத்ர சொரூப மானே
னகமனிசஞ் சிதம்பரமாஞ் சொரூப மானே
னகமனிசஞ் சிதாகாய சொரூப மானே
னகமனிசஞ் சைதன்ய சொரூப மானே
னகமனிசஞ் சிற்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (11)

அகமகில வாதார சொரூப மானே
னகமகில வாகார சொரூப மானே
னகமனிய மணுவுமிலாச் சொரூப மானே
னகமகமே யாகியுள சொரூப மானே
னகமனிச மசரீர சொரூப மானே
னகமமல வாகாய சொரூப மானே
னகமமல பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய் (12)

அகமகில குருவான சொரூப மானே
னகமகில சீடனுமாஞ் சொரூப மானே
னகமகில சாதன மாஞ் சொரூப மானே
னகமகில சாத்தியமாஞ் சொரூப மானே
னகமகில வேதாந்த சொரூப மானே
னகமவையின் வேத்தியமாஞ் சொரூப மானே
னகமமல பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (13)

அகமென்றும் புராதனமாஞ் சொரூப மானே
னகமென்றும் பூரணமாஞ் சொரூப மானே
னகமென்று மச்சுதமாஞ் சொரூப மானே
னகமென்று மவிநாச சொரூப மானே
னகமென்றுங் கேவலமாஞ் சொரூப மானே
னகமென்றுங் கேதமிலாச் சொரூப மானே
னகமென்றும் பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (14)

அகமென்று மகண்டபர தெய்வ மானே
னகமென்று மமலபர போத மானே
னகமென்றும் பரசத்தா சொரூப மானே
னகமென்றும் பரமசுக சொரூப மானே
னகமென்றும் பரஞ்சோதி சொரூப மானே
னகமென்றும் பரமபத சொரூப மானே
னகமென்றும் பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய் (15)

அகமகில வாந்தரமாஞ் சொரூப மானே
னகமகில வான்மாவாஞ் சொரூப மானே
னகமகில மங்களமாஞ் சொரூப மானே
னகமணுவு மாசிலதாஞ் சொரூப மானே
னகமனிசந் துரியபர சொரூப மானே
னகந்துரியா தீதபர சொரூப மானே
னகமனிசம் பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (16)

அகமகில காலத்துக் கதீத மானே
னகமகில தேசத்துக் கதீத மானே
னகமகில வத்துவினுக் கதீத மானே
னகமென்று மனத்துக்கு மதீத மானே
னகமணுவு மகந்தையிலாச் சுபாவ மானே
னகமணுவு மிதந்தையிலாச் சுபாவ மானே
னகமமல பரப்பிரம மானே னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (17)

அகமென்றுஞ் சன்மாத்ர சொரூப மானே
னகமென்றுஞ் சின்மாத்ர சொரூப மானே
னகமென்று நன்மாத்ர சொரூப மானே
னகமென்று நடுவான சொரூப மானே
னகமென்று மத்துவித சொரூப மானே
னகமார்க்கு மான்மாவாஞ் சொரூப மானே
னகமென்றும் பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (18)

அகமென்று நீங்காத சுகமா கின்றே
னகமெங்கு நிச்சலமாய் நிறைந்து நின்றே
னகமென்றுஞ் சங்கற்ப மிலாது நின்றே
னகமொன்று லறியவொணுப் பரமா கின்றே
னகமென்றும் புத்திமுத லிலாது நின்றே
னகம்புத்திக் கப்பாலாம் பதமா கின்றே
னகமென்றும் பரப்பிரம மானே னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (19)

அகமணுவு மாயையிலாச் சொரூப மானே
னகமாயா குணமுமிலாச் சொரூப மானே
னகமனது முதலுமிலாச் சொரூப மானே
னகங்காம முதலுமிலாச் சொரூப மானே
னகமாக்கை முதலுமிலாச் சொரூப மானே
னகமவையின் விகாரமிலாச் சொரூப மானே
னகமமல பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (20)

அகம்விசுவ ஞதியிலாச் சொரூப மானே
னகநனவு முதலுமிலாச் சொரூப மானே
னகந்துரிய வறிவான சொரூப மானே
னகந்தூய பரமசிவ சொரூப மானே
னகந்தோட மெவையுமிலாச் சொரூப மானே
னகம்பவமே யின்றியசிற் சொரூப மானே
னகமென்றும் பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (21)

அகமென்றும் ப்ரபுவான சொரூப மானே
னகமென்றும் பிரஞ்ஞான சொரூப மானே
னகமென்றும் விபுவான சொரூப மானே
னகமென்றும் விஞ்ஞான சொரூப மானே
னகமென்றுஞ் சகலமுமாஞ் சொரூப மானே
னகஞ்சச்சி தாநந்த சொரூப மானே
னகமென்றும் பரப்பிரம சொரூப மானே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (22)

அகமென்று நிரஞ்சனமாம் பிரம மானே
னமமென்று நிட்களமாம் பிரம மானே
னகமென்று நிராமயமாம் பிரம மானே
னகமென்று நிருமலமாம் பிரம மானே
னகமென்று நிர்க்குணமாம் பிரம மானே
னகமென்று நிருபமமாம் பிரம மானே
னகமென்று நிமலபர மானே னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (23)

அகமகில நாமமுரு வான ஞால
மனைத்துக்கு மதிட்டான சொரூப மானே
னகமுன்பின் பக்கங்கள் கீழ்மே லெங்கு
மகண்டவறி வாகியுள சொரூப மானே
னகமணிய மணுவுமிலா தகமே யாக
வமையுற்ற வாநந்த சொரூப மானே
னகமனிச மகண்டபர சொரூப னென்றே
யநவரத மதிதிடமா யநுசந் திப்பாய். (24)

அகமான்ம ஞானமிலா மூட ராலிங்
கடையமிக வரிதான சொரூப மாஞே
னகமான்ம ஞானிகளா லடைவ தற்கிங்
கறவுமெளி தானபர சொரூப மாஞே
னகமகில வியாபகமாய் நிறைந்து நின்ற
வகண்டசிதா காயபர சொரூப மாஞே
னகமமல பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மறிதிடமா யநுசந் திப்பாய். (25)

அகமனிசஞ் சட்பாவ விகார மின்றி
யகண்டவடி வானபர சொரூப மாஞே
னகமனிசம் பந்தமிலா நித்த முக்த
மாகியுள வகண்டபர சொரூப மாஞே
னகமனிச மசஞ்சலமா யமர்ந்து நின்ற
வாநந்த பூரணமாஞ் சொரூப மாஞே
னகமமல பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மறிதிடமா யநுசந் திப்பாய். (26)

அகமணுவுஞ் சங்கற்ப விகற்ப மின்றி
யறவுமுப சாந்தபர சொரூப மாஞே
னகமிரவு பகலொன்று மென்று மின்றி
யகண்டவொளி யானபர சொரூப மாஞே
னகமென்று மகந்தைமுத லணுவு மின்றி
யகண்டபர மாநந்த சொரூப மாஞே
னகமென்றும் பரப்பிரம சொரூப னென்றே
யநவரத மறிதிடமா யநுசந் திப்பாய். (27)

அகமனிச மகங்கரமே யிலாது நின்ற
வகண்டவறி வானபரப் பிரம மாஞேன்
பகருமகங் காரமதே பவமா மென்றும்
பரமார்த்த மாகவகங் கரமே யில்லை
யகமலதிங் கோரணுவு மிலவே யில்லை
யகண்டபரி பூரணமா யுள்ளோ ஞனே
நிகழுமகம் பரப்பிரம மாஞே னென்றே
நிரந்தரமாய் நித்தமுநீ யநுசந் திப்பாய். (28)

நீயுமக நானுமக மற்று முள்ள
நிகிலமக மிகிலணுவு மைய மில்லை
தூயவகம் பாப்பிரம மானே னென்றே
தொடர்பாகத் துவிதமற வநுசந் திப்பாய்
மாயையிலை மாயைசெயுஞ் செயலு மில்லை
மற்றுமொரு பேதமுமே யிலவே யில்லை
நேயமதாம் பாப்பிரம நானே யென்று
நிரந்தரமாய் நித்தமுநீ யநுசந் திப்பாய். (29)

அகமலது தற்பதமாம் பொருளு மில்லை
யகமலது துவம்பதமாம் பொருளு மில்லை
யகமலதிங் கசிபதமாம் பொருளு மில்லை
யகமலதிங் ககண்டமெனும் பொருளு மில்லை
யகமலது சத்துமிலை யசத்து மில்லை
யகமலது சித்துமிலை சடமு மில்லை
யகமலதிங் கொருபொருளு மென்று மில்லை
யகம்பிரம மென்றனிச மநுசந் திப்பாய். (30)

அகமலதிங் கிவனென்னும் பேத மில்லை
யகமலதிங் கிவளென்னும் பேத மில்லை
யகமலதிங் கிதுவென்னும் பேத மில்லை
யகமலதிங் கதுவென்னும் பேதமில்லை
யகமலதிங் கிருப்பதெனும் பேத மில்லை
யகமலதிங் கில்லையெனும் பேதமில்லை
யகமலதிங் கணுவேனும் பேத மில்லை
யகம்பிரம மென்றனிச மநுசந் திப்பாய். (31)

இதுவென்று காண்பதுவும் பிரம மேயாம்
யானென்று காண்பதுவும் பிரம மேயா
மதுவென்று காண்பதுவும் பிரம மேயா
மநேகமதாய்க் காண்பதுவும் பிரம மேயாந்
திதமென்று காண்பதுவும் பிரம மேயாந்
திரமிலதாய்க் காண்பதுவும் பிரம மேயா
மெதுவென்று காண்பதுவும் பிரம மேயாம்
யானதுவே யென்றனிச மநுசந் திப்பாய். (32)

மூலமதா மஞ்ஞானம் பிரம மேயா
முளைக்கின்ற சித்தமுதற் பிரம மேயாங்
கோலமுறுந் தேகமுதற் பிரம மேயாங்
கூறுபடும் புல்களெலாம் பிரம மேயாங்
காலமொடு தேசமெலாம் பிரம மேயாங்
காண்கின்ற வத்துவெலாம் பிரம மேயா
மாலயமாம் பரப்பிரமந் தானே யெல்லா
மதுநானென் றிதிடமா யநுசந் திப்பாய். (33)

வானாதி பூதமெலாம் பிரம மேயாம்
வந்தபல பௌதிகமும் பிரம மேயா
நானனென் றெண்ணுவதும் பிரம மேயா
நானலதா யெண்ணுவதும் பிரம மேயா
நீநானென் றெண்ணுவதும் பிரம மேயா
நினைக்கின்ற நினைவெவையும் பிரம மேயா
மானாத பரப்பிரமந் தானே யெல்லா
மதுநானென் றிதிடமா யநுசந் திப்பாய். (34)

வசனிக்கும் வசனமிலை வாக்கு மில்லை
வரமான கீதையிலை வத்தா வில்லை
நிசமற்ற சகமில்லை சீவ ரில்லை
நேயபொரு ளளிக்கின்ற வீச னில்லை
கசடற்று நிர்க்குணமாய் நித்த மாகிக்
களங்கமற நிரந்தரமாய் நிறைந்து நின்ற
வசைவற்ற பரப்பிரமந் தானே யெல்லா
மதுநானென் றிதிடமா யநுசந் திப்பாய். (35)

அகம்பிரம மகம்பிரம மக்மே யெல்லா
மகம்பிரம மகமெல்லா மென்றிவ் வண்ண
மகம்பிரம விருத்திதிட மாகு மட்டு
மநவரத மிடையறவே யநுசந் திப்பா
யகம்பிரம விருத்திதிட மான பின்ன
ரகம்பிரம பாவனையுந் தூரத் தள்ளி
யகம்பிரமப் பொருளாகி யகண்டா நந்த
வநுபவமுற் றசைவறவே யமர்ந்து நிற்பாய். (36)

நித்தியமாய் நிட்களமாய் நிருவி கற்ப
நிரஞ்சனமாய் நிராமயமாய் நிமல மாகிச்
சத்தியமாய்ச் சுககனமாய்ச் சலன மின்றிச்
சனாதனமாய்ச் சாலவுப சாந்த மான
சித்துருவாம் பரப்பிரம நானே யென்று
சிரத்தையுட னப்யாசஞ் செய்வோ ரிங்கே
யத்துவித வநுபூதி யடைந்த வற்று
லகண்டபர மாகுவதி லைய மில்லை. (37)

ஆதலினு லகிலமுமே பிரம மென்று
மகமந்தப் பரப்பிரமந் தானே யென்றும்
பேதமுறுந் தோற்றமெலாம் போகு மட்டும்
பிரியமுடன் பிரிவறவே நித்த மாகச்
சாதகமாம் பாவனையே செய்த வற்றாற்
சஞ்சலவிட் சேபமெலாந் தொலைந்த பின்ன
ரேதையுமே நினையாமற் சுகமே யாக
வெப்போதுஞ் சும்மாவே யிருக்க வேண்டும். (38)

இத்திறமே பரமசிவ னெனக்கி சைத்த
விவ்வர்த்தந் தனிலணுவு மைய மில்லை
சத்தியமே சத்தியமே சங்கை யில்லை
சம்புபதந் தன்னுணை சங்கை யில்லை
யித்தையொரு காலேனுங் கேட்டு ணர்ந்தோ
னேகபரப் பிரமமதாய் முத்த னவன்
மெத்தவுமே யெவ்விடத்து மரிதா மிந்த
மெய்ப்பொருளை நினக்கருளால் விளம்பி னேனுல். (39)

புத்திரனே பூதியுட னுருத்தி ராக்க
பூடணமே பூண்டுசிவ் பத்தி கூர்ந்திங்
கத்துவித பரமசிவத் தியானந் தன்னை
யாதரவா யநவரத மனுட்டிப் போரே
யித்துனிசெய் சம்சார பாசந் தீர்ந்தவ்
வேகபர சிவவடிவா யிருப்ப ரென்றே
யுத்தமனும் ரிபுமுனிவ னிதாக னுக்கங்
கொருமைதரும் பாவனையே யுரைசெய் தானுல். (40)

வேறு.

தோற்றலுற்ற விசித்திரசீவருந்துவிதம்போன்ற விசித்திரஞாலமும்
போற்றலுற்ற புராதனவீசனும் பூரணப்பர மன்றியில்வேறிலை
சாற்றுமப்பரஞ்சந்ததநானெனுஞ்சகலநானெனுந்தியானமுரைத்திட
லேற்றுமாநந்தத்தாண்டவமாடுநம் மீசன்றன்பரிபூரணரூபமே. (41)

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் 14-க்கு திருவிருத்தம்-621.

---

# பதினைந்தாவது
## சித்த ஜயோபாய முரைக்கும்
## அத்தியாயம்.

பரமமதா மோட்சத்தை யுடனே நல்கும்
 பரம்பொருளை மற்றுமுனக் குரைப்பக் கேளாய்
சருவமுமே சந்ததமும் பிரமா காரஞ்
 சகலமுமே சாந்தமதாம் பிரமா கார
மரியவனே யகிலமெனக் காண்ப தெல்லா
 மகண்டபரி பூரணமாம் பிரமா காரம்
பிரிவுறவே யொருபொருளு மென்று மில்லை
 பின்னமெனக் காண்பதெலாம் பிரமா காரம். (1)

எதுவெதுவா யிசைப்பதுவும் பிரமா கார
 மெவையெவையாய் நினைப்பதுவும் பிரமா காரம்
விதிமருவு மறைவாக்கும் பிரமா காரம்
 வேதாந்த வாக்கியமும் பிரமா கார
மதிசயமாங் குருவாக்கும் பிரமா கார
 மகண்டமகா வாக்கியமும் பிரமா காரந்
திதமருவு யோகமுமே பிரமா காரந்
 திகழ்கின்ற ஞானமுமே பிரமா காரம். (2)

பிரியமறப் பேசுவதும் பிரமா காரம்
 பிரியமதாய்ப் பேசுவதும் பிரமா காரஞ்
சிரவணமே செய்வதுவும் பிரமா காரஞ்
 சிந்தனையே செய்வதுவும் பிரமா காரந்
திரமருவுந் தியானமுமே பிரமா காரந்
 திடமான சமாதியுமே பிரமா கார
முரமருவு நிச்சயமும் பிரமா கார
 முத்தமமாஞ் சிரத்தையுமே பிரமா காரம். (3)

குரவனரு ளுபதேசம் பிரமா காரங்
குருவரனைச் சேவித்தல் பிரமா காரம்
பரவுபல சாதனமும் பிரமா காரம்
பற்றியிடுஞ் சாத்தியமும் பிரமா காரந்
திருசியமாம் பொருளெவையும் பிரமா காரந்
திருக்காகி யுளபொருளும் பிரமா காரஞ்
சருவமுமே சந்ததமும் பிரமா காரஞ்
சகசீவ பரங்களெலாம் பிரமா காரம். (4)

பிரமமலா தன்னியமாய்க் காண்ப தெல்லாம்
பீதிதருந் துயர்நல்கு மாத லாலே
திருசியமாய்க் காண்பதெலாந் திருக்கே யாகத்
திகழ்கின்ற பிரமமெனப் ரவிலா பித்துச்
சருவமுமே பிரமமெனு நினைவுந் தள்ளிச்
சலியாமல் வெறிதாக விருக்கு நிட்டை
நிரதிசய சுகநல்கும் பயத்தைத் தீர்க்கு
நிச்சயமே யதனாலந் நிட்டை சார்வாய். (5)

சகலமுமே தள்ளிவெறி தாக நிற்றல்
சகலத்தின் றியாகமெனச் சாற்ற லாகுஞ்
சகலமெனச் சாற்றியது மனதே யாகுஞ்
சலமனதைத் தள்ளுவதே சகலத் தியாக
மிகழ்மனதின் றியாகமதே யகங்கா ராதி
யாவற்றின் றியாகமுமா மஃதே மற்று
நிகிலசக சீவபரத் தியாக மாகு
நிதாகவதே நிரதிசயா நந்த நல்கும். (6)

மனதுடைய தியாகமதே மகத்தாம் வெற்றி
மனதுடைய தியாகமதே மகத்தாஞ் சித்தி
மனதுடைய தியாகமதே மகத்தா மின்ப
மனதுடைய தியாகமதே மகத்தாம் யோக
மனதுடைய தியாகமதே மகத்தா ஞான
மனதுடைய தியாகமதே மகத்தா மோட்ச
மனதுடைய தியாகமதே சகலத் தியாக
மனதுடைய தியாகமதே சித்தத் தியாகம். (7)

சித்தமதே மகத்தான மாயை யாகுஞ்
சித்தமதே யுடல்பொறிக ளுயிரு மாகுஞ்
சித்தமதே சீவனுமாஞ் சகத்து மாகுஞ்
சித்தமதே சம்சார பாச மாகுஞ்
சித்தமதே சுருதிமுத னூலு மாகுஞ்
சித்தமதே விசாரமுத லனைத்து மாகுஞ்
சித்தமதே குணதோட மனைத்து மாகுஞ்
சித்தமதே சடமசட் மனைத்து மாமே. (8)

சித்தமதே மகத்தான பாவ மாகுஞ்
சித்தமதே மகத்தான மலமு மாகுஞ்
சித்தமதே மகத்தான வாதி யாகுஞ்
சித்தமதே மகத்தான் வியாதி யாகுஞ்
சித்தமதே மகத்தான் பீதி யாகுஞ்
சித்தமதே மகத்தான் பந்த மாகுஞ்
சித்தமதே சிந்தையெலாஞ் செய்வ தாகுஞ்
சித்தமதே சகலமுமாய்த் தெரிவ தாமே. (9)

சித்தமிலாக் காலத்திற் சகசீ வாதி
சிறிதுமிலை யஃதுளதே லவைவு முண்டு
புத்திரனே யாதலினாற் சித்தந் தானே
புகல்சீவ பரனால மனைத்து மாகுஞ்
சித்தமதை யெவ்விதமுஞ் செயிக்க வேண்டுஞ்
சித்தசெய மாத்திரமே நிகரில் வெற்றி
யித்துனிசெய் சித்தத்தின் செயவு பாய
மேதென்னி லினியிதனை யியம்பக் கேளாய். (10)

சித்தமென வொருகாலு மிலவே யில்லை
சின்மயமாம் பரப்பிரம மொன்றே யென்று
நித்தபரி பூரணமாய் நிலைத்த தென்னு
நிரந்தரமா நிச்சயமே சித்தந் தன்னைப்
புத்திரனே யெளிதாகச் செயிப்ப தற்குப்
புரையற்ற வுபாயமிதாற் சித்த நாசஞ்
சத்தியமாய்ச் சித்திக்குஞ் சித்தி யானாற்
சகலமுமே சின்மயமாய்ப் பிரகா சிக்கும். (11)

சித்தமென வொருபொருளிங் குள்ள தென்று
சிறிதேனுஞ் சிந்தித்தா லுடனே சித்தே
சித்தமதாய்த் தோற்றியிடு மதுவே சீவ
செகபரமாய்த் தோற்றுமதாற் றுன்ப மூண்டாம்
புத்திரனே யாதலினாற் சித்த மென்றோர்
பொருளென்று மில்லையெலாஞ் சித்தே யென்னு
மித்திறமா முறுதியினாற் சித்தந் தன்னை
யெளிதாகச் செயித்தென்று மின்பஞ் சார்வாய். (12)

சித்தசெய மாத்திரமே மகத்தாம் வெற்றி
சித்தசெய மாத்திரமே மகத்தாஞ் சித்தி
சித்தசெய மாத்திரமே மகத்தாம் யோகஞ்
சித்தசெய மாத்திரமே மகத்தா ஞானஞ்
சித்தசெய மாத்திரமே மகத்தாஞ் சுத்தி
சித்தசெய மாத்திரமே மகத்தா முத்தி
சித்தசெய மாத்திரமே துன்ப நீக்கஞ்
சித்தசெய மாத்திரமே சிறந்த வின்பம். (13)

சித்தசெய மெதுவதுவே சித்தத் தியாகஞ்
சித்தத்தின் றியாகமதுஞ் சிற்சொ ரூபம்
புத்திரநின் னிசவடிவுஞ் சிற்சொ ரூபம்
புகல்சித்த முதலியதுஞ் சிற்சொ ரூபஞ்
சத்தியமாய்ச் சகலமுமே சிற்சொ ரூபஞ்
சந்ததமச் சிற்சொரூப நானே யென்னு
மித்திறமா முறுதியினாற் சித்தந் தன்னை
யெளிதாகச் செயித்தென்று மின்பஞ் சார்வாய். (14)

நானென்றுஞ் சித்தான பிரம வத்து
நவில்சித்த முதலியது மந்த நானே
நானன்றி யன்னியமா யணுவு மில்லை
நாநாவாய்க் காண்பதெலாம் பரமா நானே
நானெங்கும் பூரணமாஞ் சொரூப மானே
னென்றும் பொன்றாத சொரூப மானே
னொன்றென்று மொன்றான சொரூப னென்றே
நழுவாத வுறுதியினாற் சித்தம் வெல்லாய். (15)

நானென்றும் பூதமெலா மிலாது நின்றோ
　னென்றும் பௌதிகமு மிலாது நின்றோ
னென்று மாக்கைமுத லிலாது நின்றோ
　னென்று மவத்தையெலா மிலாது நின்றோ
னென்றும் புராதனமாம் பொருளா கின்றோ
　னென்றும் பூரணமா மறிவா கின்றோ
னென்றும் பரப்பிரம மானே னென்றே
　கழுவாத வுறுதியினாற் சித்தம் வெல்வாய். (16)

சிதாகாய மன்றியிலோ ரணுவு மில்லை
　சிதாகாய மெதுவதுவே யனைத்து மாகுஞ்
சிதாகாய மானபரப் பிரம மேநீ
　சிதாகாய மானபரப் பிரம மேநான்
சிதாகாய மானபரப் பிரமம் யாருஞ்
　சிதாகாய மானபரப் பிரம மெல்லாஞ்
சிதாகாய மகமென்னு நிச்ச யத்தாற்
　சித்தசெயஞ் செய்தென்றுஞ் சித்தாய் நிற்பாய். (17)

சிதாகாய மெதுவதுவே நிகழா நிற்குஞ்
　சிதாகாய மெதுவதுவே நிறைந்து நிற்குஞ்
சிதாகாய மெதுவதுவே சித்த மாகுஞ்
　சிதாகாய மெதுவதுவே மனது மாகுஞ்
சிதாகாய மலதிங்கோ ரணுவு மில்லை
　சிதாகாய மதுதானே யாவு மாகுஞ்
சிதாகாய மகமென்னு நிச்ச யத்தாற்
　சித்தசெயஞ் செய்தென்றுஞ் சித்தாய் நிற்பாய். (18)

சிதாகாய மதுதானே நரரு மாகுஞ்
　சிதாகாய மதுதானே சுரருமாகுஞ்
சிதாகாய மதுதானே யயனு மாகுஞ்
　சிதாகாய மதுதானே யரியு மாகுஞ்
சிதாகாய மதுதானே யரனு மாகுஞ்
　சிதாகாய மதுசாட்சாத் சிவனு மாகுஞ்
சிதாகாய மதுநானென் றுறுதி கொண்டே
　சித்தசெயஞ் செய்தென்றுஞ் சித்தாய் நிற்பாய். (19)

சிதாகாய மென்பதுதா னேதா மென்னிற்
 சின்னமிலா தெங்குமுள சித்தே யாகுஞ்
சிதாகாய மதுதானே சீவ ராகுஞ்
 சிதாகாய மதுதானே செகங்க ளாகுஞ்
சிதாகாய மதுதானே யீச னாகுஞ்
 சிதாகாய மதுதானே யெல்லா மாகுஞ்
சிதாகாய மதுநானென் றுறுதி கொண்டே
 சித்தசெயஞ் செய்தென்றுஞ் சித்தாய் நிற்பாய் (20)

சத்தியசிற் சுககனமாஞ் சொரூப மேநான்
 சாசுவத மானபர சொரூப மேநா
னித்தநிரா வரணபர சொரூப மேநா
 னிரதிசயா நந்தகன சொரூப மேநா
னத்துவித பூரணமாஞ் சொரூப மேநா
 னகிலமுமா மகண்டபர சொரூப மேநா
னுத்தமமாம் பரமான்ம சொரூப நானென்
 றுறுதியினாற் சித்தசெய முறுவாய் மைந்தா. (21)

ஆன்மாவே யிவையாவு மையமில்லை
 யான்மாவே யுள்ளபொரு ளைய மில்லை
யான்மாவே பரமபத மைய மில்லை
 யான்மாவே பரம்பொருளா மைய மில்லை
யான்மாவே நின்சொரூப மைய மில்லை
 யான்மாவே பரசொரூப மைய மில்லை
யான்மாவே யகமென்னு நிச்ச யத்தை
 யடைந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (22)

ஆன்மாவே பூதமெலா மைய மில்லை
 யான்மாவே புவனமெலா மைய மில்லை
யான்மாவே மனமாதி யைய மில்லை
 யான்மாவே மற்றுளது மைய மில்லை
யான்மாவே யகிலமுமா மைய மில்லை
 யான்மாவே பரப்பிரம மைய மில்லை
யான்மாவே யகமென்னு நிச்ச யத்தை
 யடைந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (23)

ஆன்மாவே யுலகமெலாம் படைப்ப தாகு
மான்மாவே யுலகமெலாம் பரிப்ப தாகு
மான்மாவே யுலகமெலா மழிப்ப தாகு
மான்மாவே யகிலமுமாய் விளங்க லாகு
மான்மாவே யணுவுமிலா தகண்ட மாகு
மான்மாவே யத்துவித சொரூப மாகு
மான்மாவே யகமென்னு நிச்ச யத்தை
யடைந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (24)

ஆன்மாவே யான்மாவுக் காசா னாகு
மான்மாவே யான்மாவின் சீட னாகு
மான்மாவே யான்மாவை யறிவ தாகு
மான்மாவே யான்மாவா யிருப்ப தாகு
மான்மாவே யான்மாவைப் பரிப்ப தாகு
மான்மாவே யகண்டபரி பூன்ற மாகு
மான்மாவே யகமென்னு நிச்ச யத்தை
யடைந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (25)

ஆன்மாவே மந்திரமா மான்மா வுக்கே
யான்மாவே செபமாகு மான்மாவுக்கே
யான்மாவே தீர்த்தமுமா மான்மா வுக்கே
யான்மாவே தானமுமா மான்மா வுக்கே
யான்மாவே தலமாகு மான்மா வுக்கே
யான்மாவே பலமாகு மான்மா வுக்கே
யான்மாவே யகிலமுமா மதுவே நானென்
றறிந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (26)

ஆன்மாவே சிரவணமா மான்மா வுக்கே
யான்மாவே மனனமுமா மான்மா வுக்கே
யான்மாவே தியானமுமா மான்மா வுக்கே
யான்மாவே சமாதியுமா மான்மா வுக்கே
யான்மாவே ஞானமுமா மான்மா வுக்கே
யான்மாவே மோட்சமுமா மான்மா வுக்கே
யான்மாவே யகிலமுமா மதுவே நானென்
றறிந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (27)

ஆன்மாவே நாராகுஞ் சுரரு மாகு
மான்மாவே யயனுகு மரியு மாகு
மான்மாவே யரனுகுஞ் சிவனு மாகு
மான்மாவே யுமைமுதலாஞ் சத்தி யாகு
மான்மாவே நீயாகு நானு மாகு
மான்மாவே மற்றுமுளோ ராரு மாகு
மான்மாவே யகிலமுமா மதுவே நானென்
றறிந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (28)

ஆன்மாவே சகசீவ பரங்க ளாகு
மான்மாவே யனைத்துக்கு மதீத மாகு
மான்மாவே யழியாத வுண்மை யாகு
மான்மாவே சுயஞ்சோதி சுபாவ மாகு
மான்மாவே நித்தியமாஞ் சுத்த மாகு
மான்மாவே நிரதிசயா நந்த மாகு
மான்மாவே யகிலமுமா மதுவே நானென்
றறிந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (29)

ஆன்மாவே துரியபர சொரூப மாகு
மான்மாவே துரியத்து மதீத மாகு
மான்மாவே விமலபர சொரூப மாகு
மான்மாவே விபுவான சொரூப மாகு
மான்மாவே யவிநாச சொரூப மாகு
மான்மாவே யகண்டபர சொரூப மாகு
மான்மாவே யகிலமுமா மதுவே நானென்
றறிந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (30)

ஆன்மாவே சாலவுப சாந்த மாகு
மான்மாவே சத்தியசிற் சுகமு மாகு
மான்மாவே யகண்டபரி பூன்ற மாகு
மான்மாவே யத்துவித சொரூப மாகு
மான்மாவே யலதிங்கோ ரணுவு மில்லை
யான்மாநீ யான்மாநா னான்மா வெல்லா
மான்மாவே யகிலமுமா மதுவே நானென்
றறிந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (31)

நித்தியனா னிட்களனா னிரஞ்ச னன்னா
னிருமலனா னிகிலபரி பூன்ற னானே
சத்தியனான் சாந்தனுநான் சனாத னன்னான்
சகலமுநான் சாசுவத சம்பு நானே
சுத்தனுநான் சுககனனான் சுதந்த ரன்னான்
சூக்குமனான் சுயஞ்சோதி சொரூப னானே
முத்தனுநான் மோட்சமுநான் மோச கன்னான்
மோகமிலா முதுணர்வா மூர்த்தி நானே. (32)

புராதனனான் புருடனுநான் பூர ணன்னான்
புனிதனுநான் புரையற்ற பொருளு நானே
செராமரண சூனியனான் சிற்க னன்னான்
சின்மயனான் சிதாகாய சொரூப னானே
நிராமயனா னிர்க்குணனா னிரந்த ரன்னா
னிருபமனா னிரதிசயா னந்த னானே
பராற்பரனான் பரசிவனான் பரமான் மாநான்
பரம்பொருளான் பரப்பிரம சொரூப னானே. (33)

பகவனுநான் பரேசனுநான் பரிசுத் தன்னான்
பசுபாசம் படைப்பவனா னழிப்போ னானே
சுககனனான் சுகமதனை நல்கு வோனான்
சோர்விலனான் சுயம்புவதாஞ் சொரூப னானே
நிகிலமுநா னிகிலசகத் கார ணன்னா
னிகிலமிலா நிட்கிரிய சொரூப னானே
யகமில்லனான் சரைமரண மணுகா தோனா
னகண்டமதா மத்துவித சொரூப னானே. (34)

சிவசக பரமான சொரூப நானே
சீவன்முதற் சிறிதுமிலாச் சொரூப நானே
கேவலமாம் பரப்பிரம சொரூப நானே
கெம்பீர மானபர சொரூப நானே
பாவனமாம் பரப்பிரம சொரூப நானே
பரமசிதா காயபர சொரூப நானென்
றுவலுட னகண்டபரப் பிரம ஞான
மடைந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (35)

செகசீவ பரங்களெனச் சிறிது மில்லை
செகசீவ பரங்களெனச் சிறிது மில்லை
யகிலமுமே யகண்டபரப் பிரம ரூப
மகிலமுமே யகண்டபரப் பிரம ரூப
நிகிலமுமாம் பரப்பிரம சொரூப நானே
நிகிலமுமாம் பரப்பிரம சொரூப நானென்
றகமுறவே யகண்டபரப் பிரம ஞான
மடைந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (36)

கற்போல வசைவற்றுக் களங்க மற்றுக்
கறையற்றுக் கலந்தெங்கு நிறைந்த தான
சற்போத சுககனமாம் பிரமந் தானே
சகசீவ பரங்களெனக் காண்ப தாலே
யெப்போது மெல்லாமும் பிரம மென்று
மேகபரி பூரணமா மதுநா னென்று
மிப்போதந் தனையுரமா யிசைந் திவற்று
லெளிதாகச் சித்தசெய மிசைவாய் மைந்தா. (37)

அனர்த்தத்தின் வித்தான வவித்தை யில்லை
யதன்செயலா மகங்கார முதலு மில்லை
யனைத்துக்குங் காரணமா மாயை யில்லை
யதனுடைய காரியமு மணுவு மில்லை
சனித்தசக சீவபரந் தானு மில்லை
சகலமுமே சந்ததமும் பரமே யென்றுந்
தனித்தபர நானென்றுந் திடஞா னத்தாற்
றப்பாது சித்தசெயஞ் சார்வாய் மைந்தா. (38)

மகிழ்வுதரு ஞானமிலை ஞேய மில்லை
மாற்றியிடும் பந்தமிலை வீடு மில்லை
யகிலமுமே யகண்டசிதா காய மான
வத்துவித பரப்பிரம சொரூப மேயா
மிகழ்வறவே யெல்லாமாய் நிறைந்து நின்ற
வேகபரி பூரணவச் சொரூப நானென்
றகமுறவே யகண்டபர ஞானந் தன்னை
யடைந்ததனாற் சித்தசெய மடைவாய் மைந்தா. (39)

சித்தமில்லை சித்தமில்லை சித்தே யெல்லாஞ்
  சித்தமில்லை சித்தமில்லை சித்தே யெல்லாஞ்
சத்தியமே சத்தியமே சங்கை யில்லை
  சம்புபதந் தன்னுணை சங்கை யில்லை
சித்தநான் சித்தநான் சித்தே யெல்லாஞ்
  சித்தநான் சித்தநான் சித்தெல் லாமென்
றித்திறமாந் திடபோத மிசைந் திவற்று
  வெளிதாகச் சித்தசெய மிசைவாய் மைந்தா. (40)

எனக்கயலாய் மாயையில்லை யீச னில்லை
  யெனக்கயலா யவித்தையில்லை சீவ னில்லை
யெனக்கயலாய்த் தாமதமாம் பகுதி யில்லை
  யெனக்கயலாய்த் தங்கியிடுஞ் சகத்து மில்லை
யெனக்கயலாய்ப் பார்க்குமொரு பொருளு மில்லை
  யெனக்கயலாய்ப் பரப்பிரமந் தானு மில்லை
யெனக்கயலா யெவையுமில்லை யெல்லா நானென்
  றித்திறமா முறுதியினுற் சித்தம் வெல்வாய். (41)

எனக்கயலாய்த் தற்பதமாம் பொருளு மில்லை
  யெனக்கயலாய்த் துவம்பதமாம் பொருளு மில்லை
யெனக்கயலா யசிபதமாம் பொருளு மில்லை
  யெனக்கயலா யகண்டமதாம் பொருளு மில்லை
யெனக்கயலா வாச்சியமாம் பொருளு மில்லை
  யெனக்கயலா யிலட்சியமாம் பொருளு மில்லை
யெனக்கயலா யெவையுமில்லை யெல்லா நானென்
  றித்திறமா முறுதியினுற் சித்தம் வெல்வாய். (42)

எனக்கயலாய்ச் சத்தான பொருளு மில்லை
  யெனக்கயலாய்ச் சித்தான பொருளு மில்லை
யெனக்கயலாய்ச் சுகமான பொருளு மில்லை
  யெனக்கயலாய்ச் சுத்தமதாம் பொருளு மில்லை
யெனக்கயலாய்த் துவிதமெனும் பொருளு மில்லை
  யெனக்கயலா யத்துவிதப் பொருளு மில்லை
யெனக்கயலா யெவையுமில்லை யெல்லா நானென்
  றித்திறமா முறுதியினுற் சித்தம் வெல்வாய். (43)

எனக்கயலாய்க் காண்பதெலா மித்தை யேயா
மெனக்கயலாய்க் காண்பதெலா மசத்தே யாகு
மெனக்கயலாய்க் காண்பதெலா மிந்த்ர சால
மெனக்கயலாய்க் காண்பதெலா மிரச்சு சர்ப்ப
மெனக்கயலாய்க் காண்பதெலா மலடி மைந்த
னெனக்கயலாய்க் காண்பதெலா சசவி ஷாண
மெனக்கயலா யணுவுமில்லை யெல்லா நானென்
றித்திறமா முறுதியினாற் சித்தம் வெல்வாய். (44)

பிரமமெலா மதுவேநா னென்றிவ் வண்ணம்
பேதமிலா வுணர்வுதிட மாகு மட்டும்
பிரமமெலாம் பிரமமெலாம் பிரம நானே
பிரமமெலாம் பிரமமெலாம் பிரம நானென்
றொருமைதரும் பாவனையே செய்ய வேண்டு
மோதியவிப் பாவனைதா னுரக்கும் போது
சருவமுமே பிரமமெனு மதுநா னென்னுஞ்
சலனமிலாப் பரஞானஞ் சகச மாகும். (45)

ஆதலினா லகிலமுமே பிரம மென்று
மகண்டபரப் பிரமமது நானே யென்றுஞ்
சாதகமாம் பாவனையாற் சகச ஞானஞ்
சார்ந்தனுற் சித்தசெயந் தனையுஞ் சார்வா
யோதியவா சித்தசெயஞ் சார்வா யாகி
லொன்றுமுனக் கதன்பின்பு செய்வ தில்லை
யேதுமுணர் பரமசிவ னெனக் குரைத்த
வியல்பாக யாவுமுனக் குரைத்தே னன்பால். (46)

நிதாகநினக் கிவ்வண்ண முரைத்த தெல்லா
நிச்சயமே வெகுவிதமாய் நிகழ்த்தி யென்ன
சதாவுமகம் பிரமமெனு நிச்ச யத்தைச்
சற்றேனுந் தவிராது சாதிப் பாயே
லதாலெளிதிற் சித்தசெய மடைந்திங் கத்தா
லகண்டபரப் பிரமசுக மடைந்து வாழ்வா
யுதாரபரி பூரணமாஞ் சிவன்றன் றானை
யுரைத்ததிலோ ரையமில்லை யுண்மை சொன்னேன். (47)

எவ்விதமாய்க் காண்பதுவும் பரமே யென்று
மேகபரி பூரணவப் பரநா மென்றுந்
செவ்வியதாம் பாவனையே செய்த வற்றாற்
சித்தசெயம் பெற்றவரே முத்த ராவ
ரிவ்விதமாய்ப் பரசிவனு லிசைக்கப் பட்ட
விப்பொருளை யுறுதியுட னொருகா லேனுந்
தவ்வியிடா மனதுடனே கேட்டு ணர்ந்தோர்
தப்பாது பரப்பிரமந் தாமே யாவர். (48)

நார்சுரராய்த் திரியக்காய் நகவ னாதி
நாநாவாய் நாடியிடு நாட்ட மெல்லாந்
தெரிவுருவாய்த் திகழ்கின்ற தேவ தேவன்
றிருவுருவே யென்றுநிடத் தியானஞ் செய்தே
யிருகுணமு மிகந்தமல சத்வ மேலா
யிருக்கின்ற சூக்கமனோ விருத்தி கொண்டே
பரமசிவன் பரிபூன்ற சொரூபந் தன்னைப்
பார்த்திடலா மற்றொன்றாற் பார்க்க வொண்ணு. (49)

ஆதலினு லறிவுற்றுக் காண்ப தெல்லா
மறிவுருவாம் பரசிவமே யதுவே நாமென்
றேதமிலாத் தியானத்தாற் சூக்க மான
விதயத்தின் விருத்தியினுற் சிவங்கண் டோரே
பீதிசெயுஞ் சித்தத்தைச் செயித்தெப் போதும்
பெரிதான பிரமசுகம் பெறுவ ரென்றே
சீதளமா ரிபுமுனிவ னிதாக னுக்குச்
சித்தசெய வுபாயத்தைச் செப்பி னனல். (50)

வேறு.

சித்தமூலஞ் செறிந்தசெகம்பல சீவரீசருஞ் சிற்பரமேயெனு
மத்தமின்றிய வப்பரநானெனு மசலமாய்ப்பெறு நிச்சயஞானமே
மெத்தவுத்தம சித்தசெயந்தனை மேவநல்ல வுபாயமெனச்சொலல்
நித்தியாநந்தத்தாண்டவமாடுநந் நிகரிலீசனகண்டசொரூபமே. (51)

பதினைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 15-க்கு திருவிருத்தம்-672.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

## பதினெருவது

### சித்த சாந்தி யுரைக்கும் அத்தியாயம்.

நிதாகபரா நந்தபரம் பொருளை மீண்டு
நினக்குமிகக் கருணையினு னிகழ்த்தக் கேளா
யிதானவையெவ் வுலகத்து மரிதா மித்தை
யிதயத்திற் சிந்திப்போ ரெவ்வி தத்துஞ்
சதாநந்த கனமான பரமே யாகிச்
சலனமுறுச் சாந்தநிலை சார லாவ
ரதாலனிச மகண்டபர நானே யென்றிங்
காதரவாய்ச் சிந்தித்துச் சாந்த னுவாய். (1)

சந்ததமும் பரப்பிரமா நந்த நானே
சலனமிலாப் பரப்பிரமா நந்த நானே
புந்தியுறும் பரப்பிரமா நந்த நானே
பூரணமாம் பரப்பிரமா நந்த நானே
சிந்தையிலாப் பரப்பிரமா நந்த நானே
சின்மயமாம் பரப்பிரமா நந்த நானே
யந்தமிலாப் பரப்பிரமா நந்த நானென்
றநவரதஞ் சிந்தித்துச் சாந்த னுவாய். (2)

நித்தியமாம் பரப்பிரமா நந்த நானே
நிரதிசய பரப்பிரமா நந்த நானே
சத்தியமாம் பரப்பிரமா நந்த நானே
சாசுவத பரப்பிரமா நந்த நானே
யத்தமிலாப் பரப்பிரமா நந்த நானே
யகண்டமதாம் பரப்பிரமா நந்த நானே
யத்துவித பரப்பிரமா நந்த நானென்
றநவரதஞ் சிந்தித்துச் சாந்த னுவாய். (3)

சிதாநந்த மயமாகு மாயை யாதி
சிதாநந்த மயமாகு மீச னாதி
சிதாநந்த மயமாகு மவித்தை யாதி
சிதாநந்த மயமாகுஞ் சித்த மாதி
சிதாநந்த மயமாகுஞ் சீவ னாதி
சிதாநந்த மயமாகுஞ் சிவனே யாதி
சிதாநந்த மயமெல்லா மதுநா னென்றே
சிரத்தையுடன் சிந்தித்துச் சாந்த னுவாய். (4)

சதானந்த மயமான பிரம மெல்லாஞ்
சதானந்த மயமான பிரம மேநான்
சிதானந்த மயமான பிரம மெல்லாஞ்
சிதானந்த மயமான பிரம மேநா
னுதாரபரி பூரணமாம் பரமே யெல்லா
முதாரபரி பூரணமாம் பரநா னென்றே
நிதாகமிக வருந்திவிடா முயற்சி யோடு
நித்தமுநீ சிந்தித்துச் சாந்த னுவாய். (5)

மித்தையெனுஞ் சித்தமுமே யென்று மில்லை
மிகப்பொய்யாஞ் சகமுதலு மென்று மில்லை
மித்தையெனும் வார்த்தையுமே யென்று மில்லை
மிகமிகவு மூடரெனுஞ் செனமு மில்லை
சத்தியசிற் சுகபரமே யெல்லா மென்றுஞ்
சந்ததமு மப்பரம நானே யென்று
மித்திறமே திடமான முயற்சி யோடு
மெப்போதுஞ் சிந்தித்துச் சாந்த னுவாய். (6)

தீங்கான சித்தமுத லெவையு மில்லை
திருசியமாய்த் தெரிகின்ற சகமு மில்லை
யாங்கார முதலியதோ ரணுவு மில்லை
யகிலமுமே யகண்டபரப் பிரம மேயாம்
நீங்காம லெங்குமொரு நிறைவாய் நின்ற
நிமலவறி வானபர நானே யென்று
தூங்காது தூங்குநிலை கிட்டு மட்டுந்
தொடர்பாகச் சிந்தித்துச் சாந்த னுவாய். (7)

இகபரமென் றிறையளவு மெங்கு மில்லை
யெல்லாமும் பரப்பிரம மான நானே
சுககனமாம் பரப்பிரம சொரூப நானே
சுத்தவறி வானபர சொரூப நானே
யகமகமென் றிலங்குபர சொரூப நானே
யகண்டவடி வானபர நானே யென்று
சகலமனோ விகற்பமுமே தவிரு மட்டுஞ்
சந்ததமுஞ் சிந்தித்துச் சாந்த னுவாய். (8)

இகழ்வில்பர சத்தான சொரூப நானே
யிலங்குபர சித்தான சொரூப நானே
நிகரில்பர மாநந்த சொரூப நானே
நிகிலமுமாய் நிறைந்தபர சொரூப நானே
பகுதிமுத லெவையுமிலாச் சொரூப நானே
பாற்பரமாம் பரப்பிரம நானே யென்று
சகமுதலாய்த் தோற்றுவது மறையு மட்டுஞ்
சந்ததமுஞ் சிந்தித்துச் சாந்த னுவாய். (9)

சகலமுமே சந்ததமும் பிரம ரூபஞ்
சகசீவ பரங்களெலாம் பிரம ரூப
நிகிலமுமாம் பரப்பிரம சொரூப நானே
நிரஞ்சனமாம் பரப்பிரம சொரூப நானே
யகமனிச மகண்டபரப் பிரமந் தானே
யகமமல பரப்பிரமந் தானே யென்று
சகமுதலாய்த் தோற்றுவது மறையு மட்டுஞ்
சந்ததமுஞ் சிந்தித்துச் சாந்த னுவாய். (10)

சத்தியமாய்ச் சகமெவையு மென்று மில்லை
சஞ்சலமாஞ் சித்தமதே சகம்போற் றோன்றும்
புத்திரனே யாதலினாற் சித்தந் தானே
பொய்யான சகமென்று புகல லாகுஞ்
சித்தமதே மகத்தான தோட மாகுஞ்
சித்தமதே மகத்தான மாயை யாகுஞ்
சித்தமதே சிசுவென்னச் சுழல்வ தாகுஞ்
சித்தமதே தேகமுத லனைத்து மாமே. (11)

சித்தமதே சீவனெனத் தெரிவ தாகுஞ்
சித்தமதே சகலமுமாய்த் தெரி வதாகும்
புத்திரனே யாதலினாற் சகசீ வாதி
புகல்சித்த மயமேயா மந்தச் சித்த
மெத்தவுமே யசத்தாகு மித்தை யாகு
மிகப்பொய்யா மலடிமக னிகரே யாகுஞ்
சத்தலதா முயற்கோட்டின் சமான மாகுஞ்
சந்ததமுஞ் சூனியமாஞ் சங்கை யில்லை. (12)

சித்தமதே யவிசார தசையின் மைந்தா
செகசீவ பரங்களெனத் தெரிந்த போதுஞ்
சித்தமதே விசாரிக்கிற் செகசீ வாதி
சிறிதுமிலாச் சித்தான பிரம மேயாஞ்
சித்தசெய மெளிதாகச் சேர வேண்டிச்
சித்தமய மானசெக முதலாம் யாவுஞ்
சித்ததுவாம் பரமென்று மதுநா னென்றுஞ்
சிரத்தையுடன் சிந்தித்துச் சாந்த னுவாய். (13)

மனமெனவுஞ் சித்தமதே தோற்ற லாகு
மனமதுவே மகத்தான மாயை யாகு
மனமதுவே சீவசக மனைத்து மாகு
மனமதுவே தேகமுத லனைத்து மாகு
மனமதுவே மகத்தான பவமு மாகு
மனமதுவே மகத்தான பாச மாகு
மனமதுவே மகத்தான பாவ மாகு
மனமதுவே மகத்தான துன்ப மாமே. (14)

மனமதுவே மகத்தான பகையு மாகு
மனமதுவே மகத்தான பயமு மாகு
மனமதுவே சங்கற்ப வடிவ மாகு
மனமதுவே சஞ்சலமாஞ் சுபாவ மாகு
மனமதுவே நரரசுரர் சுரரு மாகு
மனமதுவே யயனரியு மரனு மாகு
மனமதுவே பிரமாண்ட கோடி யாகு
மனமதுவே பின்னுமுள தெவையு மாமே. (15)

மனமதுதான் சலவுணர்வு வடிவ மாகு
மனமதுவே சகலமுமாய்த் தெரிவ தாகு
மனமதுதான் சகலமுமாய் மதிக்க லாகு
மனமதுவே சகலமெனப் புகல லாகு
மனமதுதான் மெத்தவுமே மித்தை யாகு
மனமதுமகேந் திரசால நிகரே யாகு
மனமதுதா னெப்போது மசத்தே யாகு
மனமென்று மலடிமக னிகரே யாமால். (16)

மனததுதா னவிசார தசையின் மைந்தா
　　மயக்கமுறு சகமுதலாய்த் தோற்றி னுலு
மனதுருவை மாறுது விசாரஞ் செய்தான்
　　மற்றதுதான் மகத்தான சித்தே யாகு
மனததனை யெளிதாகச் செயித்தெப் போது
　　மகத்தான சித்துருவே யாக வேண்டி
மனதுமுத லெல்லாஞ்சித் ததுநா னென்றே
　　மாறுது சிந்தித்துச் சாந்த னுவாய். (17)

மனோசபமே திடமாக மன்னுமட்டு
　　மற்றுள்ள வியாபார மனைத்தும் விட்டு
வினோதமதா யாவுஞ்சித் ததுநா னென்றே
　　விருப்பமுடன் விடாதுமிகச் சிந்தை செய்தான்
மனோசயமாய் மகத்தான வறிவு நிக்கு
　　மற்றதனுற் சகமுதலா மிருளி றக்கு
மினோதயமே யாகியிடி விருளெங் கேனு
　　மிருப்பதனை யாரேனுங் கண்ட துண்டோ. (18)

அனகவறி வானபரப் பிரமந் தானே
　　யவித்தையினு லசைவுறுமேன் மனதாய்த் தோற்றும்
வினவுமறி வானபரப் பிரமந் தானே
　　வித்தையினு லசைவறுமேற் பரமே யாகு
மனததுவுஞ் சலனமுட னிருக்கு மாகின்
　　மகத்தான சீவபர சகமாய்த் தோற்று
மனததுவே சலனமிலா திருக்கு மாகின்
　　மாசற்ற வறிவான பரமே யாமால். (19)

ஆதலினு லறிவுற்ற மனதே யாதி
　　யகிலமுமே யறிவான பிரம மென்றும்
பேதமிலா வப்பிரம நானே யென்றும்
　　பிரிவறவே யெப்போதுஞ் சிந்தை செய்து
சாதகமாஞ் சிந்தனையான் மனதை வென்று
　　சலமனதின் சலனமெலாந் தவிர்ந்த பின்ன
ரோதியவச் சிந்தனையு மொழிந்தெப் போது
　　முணர்வுருவாம் பரமாகிச் சாந்த னுவாய். (20)

போதகன மானபரப் பிரம நானே
பூரணவா நந்தபரப் பிரம நானே
யேதுமிலா துள்ளபரப் பிரம நானே
யெப்போது மசஞ்சலமாம் பிரம நானே
யாதிமுடி வற்றபரப் பிரம நானே
யகண்டவடி வானபர நானே யென்று
சாதகமாஞ் சிந்தனையான் மனதை வென்று
சலனமிலாப் பரமாகிச் சாந்த னுவாய். (21)

ஒருவடிவா யுள்ளபரப் பிரம நானே
யுணர்வுருவா யோய்ந்தபரப் பிரம நானே
நிரதிசயா நந்தபரப் பிரம நானே
நிகிலமுமாய் நிறைந்தபரப் பிரம நானே
பரவுபரா காயபரப் பிரம நானே
பாற்பரமாம் பரப்பிரம நானே யென்று
மருவுதிட பாவனையான் மனதை வென்று
மாசற்ற பரமாகிச் சாந்த னுவாய். (22)

நிருமலமாம் பரப்பிரம சொரூப நானே
நித்தியமாம் பரப்பிரம சொரூப நானே
சருவமுமாம் பரப்பிரம சொரூப நானே
சகலமிலாப் பரப்பிரம சொரூப நானே
கிரியையிலாப் பரப்பிரம சொரூப நானே
கேவலமாம் பரப்பிரம சொரூப நானென்
றரியதிட பாவனையான் மனதை வென்றவ்
வகண்டபர வடிவாகிச் சாந்த னுவாய் (23)

எனக்கயலாய்க் காரணமஞ் ஞான மில்லை
யெனக்கயலாய்க் காரியவாங் கார மில்லை
யெனக்கயலாய்ப் புத்தியில்லை சித்த மில்லை
யெனக்கயலாய் மனதுமில்லை மலமு மில்லை
யெனக்கயலா யுயிர்களில்லை பொறிக ளில்லை
யெனக்கயலா யுடலுமில்லை புலனு மில்லை
யெனக்கயலா யெவையுமில்லை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (24)

எனக்கயலா யாச்சிரம வன்ன மில்லை
யெனக்கயலா யறம்பாவ மெமையு மில்லை
யெனக்கயலாய்த் தோடமிலை குணமு மில்லை
யெனக்கயலாய்த் துன்பமிலை யின்ப மில்லை
யெனக்கயலாய்ச் செபமுமிலை தவமு மில்லை
யெனக்கயலாய் மந்திரதந் திரமு மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (25)

எனக்கயலாய்த் தலமுமிலை தீர்த்த மில்லை
யெனக்கயலாய்த் தெய்வமிலை சேவை யில்லை
யெனக்கயலாய்ப் பத்தியிலை பலனு மில்லை
யெனக்கயலாய் நாகமிலை நரக மில்லை
யெனக்கயலாய்க் காலமிலை தேச மில்லை
யெனக்கயலாய்க் கண்டிடுமோர் வத்து மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (26)

எனக்கயலாய்ச் சாதியிலை நீதி யில்லை
யெனக்கயலாய்க் கோத்திரமுங் குலமு மில்லை
யெனக்கயலாய்த் தந்தையிலை தாயு மில்லை
யெனக்கயலாய்த் தமருமிலை பிறரு மில்லை
யெனக்கயலாய் நயவரிலை பகைவ ரில்லை
யெனக்கயலாய் நிந்தையிலை துதியு மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (27)

எனக்கயலாய்க் காமமிலை கோப மில்லை
யெனக்கயலாய் லோபமிலை மோக மில்லை
யெனக்கயலாய் மச்சரமு மதமு மில்லை
யெனக்கயலாய் மானமவ மான மில்லை
யெனக்கயலாய்ப் பயமுமிலை நயமு மில்லை
யெனக்கயலாய்ப் பாசமிலை நாச மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (23)

எனக்கயலா யுயர்வுமிலை தாழ்வு மில்லை
யெனக்கயலா யுய்புமொரு விருத்தி யில்லை
யெனக்கயலாய்ப் போகமிலை போத்தா வில்லை
யெனக்கயலாய்ப் போக்கியமாம் பொருளு மில்லை
யெனக்கயலாய்க் கருமமிலை கர்த்தா வில்லை
யெனக்கயலாய்க் காரியமாம் பொருளு மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (29)

எனக்கயலாய்த் தேகமிலை சென்ம மில்லை
யெனக்கயலாய்ச் சைசவயவ் வனமு மில்லை
யெனக்கயலாய்ச் சரையுமிலை மரண மில்லை
யெனக்கயலாய்ச் சிறிதுமொரு விகார மில்லை
யெனக்கயலா யுள்ளுமிலை வெளியு மில்லை
யெனக்கயலா யடிநடுவு முடிவு மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (30)

எனக்கயலாய்ப் பூதமிலை புவன மில்லை
யெனக்கயலாய்ப் பௌதிகமாம் பொருளு மில்லை
யெனக்கயலாய்ச் சலனமிலை சாந்தி யில்லை
யெனக்கயலாய்ச் சத்தியிலை சித்தி யில்லை
யெனக்கயலாய்ப் பவமில்லை பந்த மில்லை
யெனக்கயலாய்ப் பரமுமிலை வீடு மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (31)

எனக்கயலாய்ச் சைவமுதன் மதமு மில்லை
யெனக்கயலாய்ச் சிவன்முதலாந் தெய்வ மில்லை
யெனக்கயலாய்ச் சொல்லியவா கமமு மில்லை
யெனக்கயலாய்ச் சுருதியிலை நூலு மில்லை
யெனக்கயலாய் மிருதியிலை புராண மில்லை
யெனக்கயலாய் மேவுமிதி காச மில்லை
யெனக்கயலா யெவையுமிலை பரமே நானென்
றெப்போதும் பாவித்துச் சாந்த னுவாய். (32)

எனக்கயலாய்த் தள்ளியிடும் பொருளு மில்லை
 யெனக்கயலாய்க் கூட்டியிடும் பொருளு மில்லை
யெனக்கயலாய்ச் சத்தியமாம் பொருளு மில்லை
 யெனக்கயலாய் மித்தையெனும் பொருளு மில்லை
யெனக்கயலாய்த் திருசியமாம் பொருளு மில்லை
 யெனக்கயலாய்த் திருக்கான பொருளு மில்லை
யெனக்கயலா யெவையுமில்லை பரமே நானென்
 றெப்போதும் பாவித்துச் சாந்த னாவாய். (33)

எனக்கயலாய் மூன்றுவித தேக மில்லை
 யெனக்கயலாய் மொழிந்திடுமூன் றவத்தை யில்லை
யெனக்கயலாய்ப் பஞ்சவித கோச மில்லை
 யெனக்கயலாய்ப் படருமபி மானி யில்லை
யெனக்கயலா வியட்டியில்லை சமட்டி யில்லை
 யெனக்கயலாய்ச் சகசீவ பரமே யில்லை
யெனக்கயலா யணுவுமில்லை பரமே நானென்
 றெப்போதும் பாவித்துச் சாந்த னாவாய். (34)

பிரமவடி வானவெனக் கிதர மாகப்
 பிறங்கியிடு மிதுவென்னும் பொருளு மில்லை
பிரமவடி வானவெனக் கிதர மாகப்
 பிறங்கியிடு மகமென்னும் பொருளு மில்லை
பிரமவடி வானவெனக் கிதர மாகப்
 பிறங்குமொரு பொருளுமொரு கானு மில்லை
பிரமவடி வகமென்றே யிடை விடாமற்
 பிரியமுடன் பாவித்துச் சாந்த னாவாய். (35)

அன்னியமாய்க் காண்பதெலாம் பிரம மாத்ர
 மாதலினா லனைதுபரப் பிரம மொன்றே
யின்னவித மிருந்திடினு நினக்கிப் போதிங்
 கியம்பியிடுங் குருசீட னுலகமாதி
பின்னமெனத் தோற்றிடுமேற் பேத மெல்லாம்
 பிரமமெனு மப்பிரம நானே யென்னு
மன்னுதிட பாவனையான் மனதை வென்று
 மகத்தான பிரமமதாய்ச் சாந்த னாவாய். (36)

ஆன்மாவுக் கயலாக வணுவு மில்லை
யகிலமுமே யநவரத மான்மா வேயா
மான்மாவுக் கயலாகப் பிரம மில்லை
யப்பிரமந் தனக்கயலா யான்மா வில்லை
யான்மாவே யகண்டபரப் பிரம மாகு
மகண்டபரப் பிரமமதே யான்மா வாகு
மான்மாவாம் பரப்பிரம மகமே யென்றிங்
கனிசமுநீ பாவித்துச் சாந்த னுவாய். (37)

ஆன்மாவே யகிலவதிட் டான மாகு
மான்மாவே யனைத்துக்குஞ் சார மாகு
மான்மாவே யகிலமுமாஞ் சொரூப மாகு
மான்மாவே யனைத்துமிலாச் சொரூப மாகு
மான்மாவே யத்துவித சொரூப மாகு
மான்மாவே யகண்டபரப் பிரம மாகு
மான்மாவாம் பரப்பிரம மகமே யென்றிங்
கனிசமுநீ பாவித்துச் சாந்த னுவாய். (38)

ஆன்மாவே நித்தியமாஞ் சத்து மாகு
மான்மாவே நிருமலமாஞ் சித்து மாகு
மான்மாவே நிரதிசயா னந்த மாகு
மான்மாவே நிகிலபரி பூன்ற மாகு
மான்மாவே நிட்களமாஞ் சொரூப மாகு
மான்மாவே நிறைந்தபரப் பிரம மாகு
மான்மாவாம் பரப்பிரம மகமே யென்றிங்
கனிசமுநீ பாவித்துச் சாந்த னுவாய். (39)

சன்மயமாம் பரப்பிரம சொரூப மெல்லாஞ்
சன்மயமாம் பரப்பிரம சொரூப நானே
சின்மயமாம் பரப்பிரம சொரூப மெல்லாஞ்
சின்மயமாம் பரப்பிரம சொரூப நானே
நின்மலமாம் பரப்பிரம சொரூப மெல்லா
நின்மலமாம் பரப்பிரம நானே யென்று
தன்மயமாம் பாவனையான் மனதை வென்று
தற்பரமே தானுகிச் சாந்த னுவாய். (40)

அகிலமுமே பரப்பிரம மைய மில்லை
யகமந்தப் பரப்பிரம மைய மில்லை
நிகிலமுமாம் பரப்பிரம மதுநா னென்றே
நிரந்தரமாய்ப் பாவித்து மனதை வென்று
சுககனமாம் பரப்பிரமந் தானே யாகிச்
சும்மாவே யிருக்கின்ற சாந்தி தானே
தகைமைமிகும் பூசனையாந் தான மாகுந்
தவமாகுஞ் செபமாகுஞ் சமாதி யாமே. (41)

ஆதலினு லமலமதா மனதி னாலே
யநவரதம் பரப்பிரம விசாரஞ் செய்தே
போதகன பரப்பிரமந் தானே யெல்லாம்
பூரணமாம் பரப்பிரம மதுநா னென்று
சாதகமாம் பாவனையே திடமாய்ச் செய்து
சஞ்சலமா யுளமனதை நன்றாய் வென்று
சோதிமிகும் பரப்பிரமந் தானே யாகிச்
சும்மாவே யிருக்கின்ற சாந்தி சார்வாய். (42)

வித்தரமாம் வாரிதியிற் றோன்று நின்ற
வீசிமுதல் வாரிதியே யாவதே போற்
சித்துருவா மென்னிடையிற் றோன்று நின்ற
செகசீவ பரங்களெலாஞ் சித்தா நானே
யத்திறமா நானென்றும் பிரம மென்றே
யநவரதம் பாவித்து மனதை வென்று
சுத்தமதாம் பரப்பிரமந் தானே யாகிச்
சும்மாவே யிருக்கின்ற சாந்தி சார்வாய். (43)

நில்லாம லெங்குமொரு நிகழ்வாய் நின்ற
நிகிலபரி பூரணமாம் பிரம ரூப
மல்லாம லோரணுவு மெங்கு மில்லை
யகிலமுமே யகண்டபரப் பிரம மேயா
மெல்லாமாம் பரப்பிரம நானே யென்றிங்
கெப்போதும் பாவித்து மனதை வென்று
சொல்லாலுஞ் சொல்லவொணுப் பரமே யாகிச்
சும்மாவே யிருக்கின்ற சாந்தி சார்வாய். (44)

பூதமொடு பௌதிகமும் புவனம் யாவும்
புராணமுதற் புகல்கின்ற பலவா றாலும்
வேதமொடு வேதாந்த மவற்றின் கேள்வி
வேறறவே யதன்மனன நிதித்தி யாச
மீதுமுத லெப்பொருளு மென்று மில்லை
யெல்லாமும் பரப்பிரம மதுநா னென்றே
சாதகமாம் பாவனையான் மனதை வென்று
சற்றேனுஞ் சலியாது சாந்த னுவாய். (45)

அறைந்தபொரு ளனைத்தையுமே வாக்கு மாத்ர
மறக்காம லாதரவாய் மனதிற் கொண்டு
செறிந்தமன தொருமையுட னெல்லா மென்றுஞ்
சின்மயமாம் பரப்பிரம மதுநா னென்றே
நிறைந்தபர பாவனையான் மனதை வென்று
நிச்சலனு யெப்போதுஞ் சாந்த னுவா
யறைந்ததெலாஞ் சத்தியமே யைய மில்லை
யகண்ட பர சிவனுனை யையமில்லை. (46)

மனந்தனினுற் செய்வதுவே செய்த தாகு
மற்றொன்றுற் செய்வதெலாஞ் செய்த தாகா
தினந்தினமுந் திடமான மனதி னுலே
திருசியமாய்க் காண்பதெலாந் திருக்கே யான
வனந்தபரப் பிரமமெனு மதுநா னென்னு
மகண்டபர பாவனையே செய்வா யாகிற்
கனந்தருமப் பாவனையான் மனதை வென்று
கலங்காம லெப்போதுஞ் சாந்த னுவாய். (47)

மனதென்றும் வாக்கென்று மற்ற தென்று
மருவியவிப் பேதமுமே யெனக்கிங் கில்லை
கனவிலுறும் பொருள்களிலெப் பொருளை யேனுங்
காண்கின்ற தனக்கயலாக் கண்ட துண்டோ
நனவிலுறும் பொருள்களுமவ் விதமே யாக
நாடியிடு ஞானவடி வான நானே
யெனுமுராமாம் பாவனையான் மனதை வென்றவ்
வேகபர வடிவாகிச் சாந்த னுவாய். (48)

சகலமுமே சின்மயமாம் பிரம மென்றுஞ்
சந்ததமப் பரப்பிரம நாமே யென்று
மகமுறவே பாவிப்போர் மனதை வென்றவ்
வகண்டபர வடிவாகிச் சாந்த ராவர்
நிகிலசகன் னயகனுஞ் சிவனெ னக்கு
நிகழ்த்தியவா நிதாகநினக் குரைத்தே னெல்லாந்
தகைமைமிகு மிப்பொருளைக் கேட்டு ணர்ந்தோர்
தப்பாது பரப்பிரமந் தாமே யாவர். (49)

சுருதிமுடி வாக்கியமே சொன்ன தோர்ந்து
சூக்குமமூல் வழிச்சென்று பாசி வத்தை
யருமையுடன் பாவித்தவ் வருள்பெற் றோரே
யலைமனதின் விகற்பமதாஞ் சகசீ வாதி
சருவமுமே பிரமமெனுஞ் சாட்சாத் காரஞ்
சார்ந்ததனுன் மோட்சசுகஞ் சார்வ ரென்றே
பெருமைமிகும் ரிபுமுனிவ னிதாக னுக்குப்
பிரிவின்மனச் சாந்தியினைப் பேசி னனல். (50)

வேறு.

தவ்வியோடு மனத்தின்விகற்பமாய்த் தங்குகின்ற சகமுதலியாவுமே
யெவ்வமின்றிய சிற்பரமாமெனு மேகமாமது நாமெனுஞ்சிந்தையா
லிவ்விகற்பமனந்தவிர்ந்தென்றுமே யேகசாந்தியிசைந்திடலாமென
திவ்வியாநந்தத்தாண்டவமாடுநந் தேவதேவனகண்டசொரூபமே. ()

பதினாறுவது அத்தியாயம்
முற்றிற்று.
ஆகஅத்தியாயம்-16க்கு திருவிருத்தம்-723.

++++++++++++++++++++++++++++++++++++++++

## பதினேழாவது

## பரசொரூப ஞானத்தாற் பரசொரூப ஸ்திதியுரைக்கும் அத்தியாயம்.

மிகமிகவும் ரகசியமாய் மேவுதற்கு
மிகவரிதாய் மெத்தவுமே வியப்புடைத்தாய்த்
தகைமைமிகு மதிகாரிக் குடனே மோட்சந்
தருவதுவா யுள்ளபர நிர்ண யத்தை
மகிழ்வுடனே நிதாகநினக் கின்னஞ் சொல்வேன்
மாசற்ற மனதுடனே யிதனைக் கேளாய்
சுககனமாம் பரப்பிரம ஞான மெத்த
சுத்தமன துடையோர்க்கே சுலப மாகும். (1)

அனந்தவித சென்மத்தி லநுட்டிப் புற்ற
வறங்களெலாம் பரிபாக மான வர்க்கே
கனந்தருமிப் பரப்பிரம ஞானஞ் சற்றுங்
கலங்காத மனதினிடை யெளிதாத் தோன்றுந்
தினந்தினமுந் தவிராம லிச்சென் மத்திற்
றிடமாகப் பரப்பிரம வப்யா சத்தை
மனந்கனிநூற் செய்வோர்க்கு மனதின் சுத்தி
மருவியபின் பரஞான மனதிற் றேன்றும். (2)

தனதுமன முயற்சியினாற் பிரமாப் யாசந்
தவிராது செய்துமனே செயம்பெற் றோர்க்கே
யனையபர வுணர்வெளிதா யுதிக்கு மன்றி
யன்னியருக் கெளிதாக வுதியா தென்றுஞ்
சொனவுணர்வு சுகநல்குந் துயரைத் தீர்க்குஞ்
சுபத்துக்குஞ் சுபமாகுஞ் சுலப மாகுஞ்
சனனமுதல் விகாரமெலாந் தவிர்த்துத் தன்னைச்
சத்தியசிற் சுககனமாம் பரமே யாக்கும். (3)

பரவடிவாய்ப் பவமின்றி யிருப்போ ருக்கே
பகைமனதாற் பவபீதி தோன்ற லாலே
திருசியமா மனதுமுத லியாவு மென்றுந்
திருக்கான பிரமமென்று மதுநா மென்றுங்
கருதுபர பாவனையான் மனதை வென்று
கலங்காம லிருப்போர்க்கே பரஞா னத்தான்
மருளுருவாம் பவபீதி நீங்கு மன்றி
மற்றேர்க்கிப் பவபீதி நீங்கா தென்றும். (4)

ஆதலினுன் மனத்துடைய விகார மான
வகிலமுமே சலவுணர்வா மனதே யென்று
மோதுமன மொருகாலுஞ் சலன மில்லா
வுணர்வுருவாம் பரமென்று மதுநா னென்றும்
பேதமிலாப் பாவனையான் மனதை வென்று
பின்னமிலாப் பரப்பிரம ஞானம் பெற்றே
யேதமிகும் பவபீதி விடுத்தெப் போது
மேகபர வடிவாகி யிருப்பாய் மைந்தா. (௫)

மனமுதலாய்க் காண்பதெலாம் பிரம மேயா
  மனதுமில்லை மற்றுமொரு பொருளு மில்லை
கனபவமாய்க் காண்பதெலாம் பிரம மேயாங்
  கலக்கமுறும் பவமில்லை களங்க மில்லை
நனிபயமாய்க் காண்பதெலாம் பிரம மேயா
  நாடியிடும் பயமில்லை நாட்ட மில்லை
யனிசமக மனியமிலாப் பிரம மென்றே
  யறிவுசெறிந் தகண்டபர வடிவே யாவாய். (6)

வகைவகையாய்க் காண்பதெலாம் பிரம மேயாம்
  வகுப்புற்ற வொருபொருளு மென்று மில்லை
தொகை தொகையாய்க் காண்பதெலாம் பிரம மேயாந்
  தொகுப்புற்ற வொருபொருளு மென்று மில்லை
சகமுதலாய்க் காண்பதெலாம் பிரம மேயாஞ்
  சகசீவ பரங்களெலா மென்று மில்லை
யகமனிச மனியமிலாப் பிரம மென்றே
  யறிவுசெறிந் தகண்டபர வடிவே யாவாய். (7)

குருமுதலாய்க் காண்பதெலாம் பிரம மேயாங்
  குருசீடர் முதலியவாய் வேறொன் றில்லை
யுருமுதலாய்க் காண்பதெலாம் பிரம மேயா
  முருவருவ முதலியவாய் வேறொன் றில்லை
திருசியமாய்க் காண்பதெலாம் பிரம மேயாந்
  திருசியமென் றொருபொருளு மென்று மில்லை
யருவமதாம் பரப்பிரம மதுநா னென்றே
  யறிவுசெறிந் தகண்டபர வடிவே யாவாய். (8)

எல்லாமு மெப்போதும் பிரம மேயா
  மெல்லாமென் றொருபொருளு மென்று மில்லை
நில்லாம லெங்குமொரு நிறைவாய் நின்ற
  நிகிலபரி பூரணவப் பிரம நானே
யல்லாம லயலாகா தென்றே யென்று
  மகண்டபரப் பிரமமுணர் ஞானம் பெற்றிப்
பொல்லாத பவபீதி விடுத்தெப் போதும்
  பூரணமா யுள்ளபரப் பிரம மாவாய். (9)

மோகமுதற் காண்பவெலாம் பிரம மேயா
முளைத்தவதன் செயலெல்லாம் பிரம மேயா
மாகமுதற் காண்பவெலாம் பிரம மேயா
மருவுமதன் செயலெல்லாம் பிரம மேயாந்
தேகமுதற் காண்பவெலாம் பிரம மேயாந்
திரணமுத லெப்பொருளும் பிரம மேயா
மேகமதாம் பரப்பிரம மதுநா னென்னு
மிவ்வுணர்வா லெப்போதும் பரமே யாவாய். (10)

கிரியைமுதற் சாதனமும் பிரம மேயாங்
கிட்டியிடுஞ் சாத்தியமும் பிரம மேயாம்
பிரியமதாய்ப் புசிப்பதெலாம் பிரம மேயாம்
பெறுகின்ற வுலகமெலாம் பிரம மேயாந்
திரிகுணமா முருவமெலாம் பிரம மேயாந்
திரிவிதமா மூர்த்திகளும் பிரம மேயா
மிருமையிலா விப்பிரம நானே யென்னு
மிவ்வுணர்வா லெப்போதும் பரமே யாவாய். (11)

உத்தமமாஞ் சுரரெவரும் பிரம மேயா
மூனமிலா முனிவரும் பிரம மேயா
மத்தியமா மானுடரும் பிரம மேயா
மற்றுமுள வுயிர்களெலாம் பிரம மேயாஞ்
சித்தமுத லெப்பொருளும் பிரம மேயாஞ்
செகசீவ பரங்களெலாம் பிரம மேயா
மத்துவித பரப்பிரம மதுநா னென்னு
மறிவுசெறிந் ததகண்டபர வடிவே யாவாய். (12)

பரப்பிரமந் தனக்கயலாய்க் ககன மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்க் காற்று மில்லை
பரப்பிரமந் தனக்கயலா யங்கி யில்லை
பரப்பிரமந் தனக்கயலா யப்பு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் புவியு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் புலன்க ளில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்றே
பரபோதம் பெற்றதனாற் பரமே யாவாய். (13)

பரப்பிரமந் தனக்கயலாய்ப் பூத மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் புவன மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் போக மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் போத்தா வில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்க் கரும மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்க் கர்த்தா வில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்றே
பரபோதம் பெற்றதனாற் பரமே யாவாய். (14)

பரப்பிரமந் தனக்கயலாய் மோக மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்த் தேக மில்லை
பரப்பிரமந் தனக்கயலா யோக மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய் ஞான மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் பந்த மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய் மோட்ச மில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்றே
பரபோதம் பெற்றதனாற் பரமே யாவாய். (15)

பரப்பிரமந் தனக்கயலா யகந்தை யில்லை
பரப்பிரமந் தனக்கயலா யிதந்தை யில்லை
பரப்பிரமந் தனக்கயலாய் வியட்டி யில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ச் சமட்டி யில்லை
பரப்பிரமந் தனக்கயலா யிகமு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் பரமு மில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்றே
பரபோதம் பெற்றதனாற் பரமே யாவாய். (16)

பரப்பிரமந் தனக்கயலாய்க் காண்பா னில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்க் காட்சி யில்லை
பரப்பிரமந் தனக்கயலாய் நானு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய் நீயு மில்லை
பரப்பிரமந் தனக்கயலா யாரு மில்லை
பரப்பிரமந் தனக்கயலா யெவையு மில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்றே
பரபோதம் பெற்றதனாற் பரமே யாவாய். (17)

பரப்பிரமந் தனக்கயலாய்ச் செபமு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்த் தவமு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்த் தலமு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்த் தீர்த்த மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்த் தெய்வ மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ச் சேவை யில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்றே
பரபோதம் பெற்றதனாற் பரமே யாவாய். (18)

பரப்பிரமந் தனக்கயலாய்க் குரவ னில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ச் சீட னில்லை
பரப்பிரமந் தனக்கயலாய் விசார மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ப் பலமு மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்க் கால மில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்த் தேச மில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்னும்
பாவனையா லுணர்வுற்றுப் பரமே யாவாய். (19)

பரப்பிரமந் தனக்கயலாய் மாயை யில்லை
பரப்பிரமந் தனக்கயலா யீச னில்லை
பரப்பிரமந் தனக்கயலா யவித்தை யில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ச் சீவ னில்லை
பரப்பிரமந் தனக்கயலாய்ச் சகத்தே யில்லை
பரப்பிரமந் தனக்கயலோ ரணுவு மில்லை
பரப்பிரம மெல்லாமா மதுநா னென்னும்
பாவனையா லுணர்வுற்றுப் பரமே யாவாய். (20)

பிரமமுடன் சமானமொரு பொருளு மில்லை
பிரமத்துக் கதிகமொரு பொருளு மில்லை
பிரமமலா தன்னியமா யணுவு மில்லை
பிரமமதே யாவையுமாய்ப் பிறங்க லாகும்
பிரமமதே யாவர்க்கும் பிரிய மாகும்
பிரமமதே பிறங்கியபே ரின்ப மாகும்
பிரமமதே யெல்லாமா மதுநா னென்னும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (21)

பிரமமதே பிரமத்தின் சீட னாகும்
பிரமமதே பிரமத்தின் குருவு மாகும்
பிரமமதே பிரமத்தின் றெய்வ மாகும்
பிரமமதே பிரமத்தின் பூசை யாகும்
பிரமமதே பிரமத்தின் றியான மாகும்
பிரமமதே பிரமத்தின் ஞான மாகும்
பிரமமதே யெல்லாமா மதுநா னென்னும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (22)

பிரமமதே பிரமத்தின் றந்தை யாகும்
பிரமமதே பிரமத்தின் ருயு மாகும்
பிரமமதே பிரமத்தின் றனய ராகும்
பிரமமதே பிரமத்தின் றமரு மாகும்
பிரமமதே பிரமத்தின் பகைவ ராகும்
பிரமமதே பிரமத்தி னய்வ ராகும்
பிரமமதே யெல்லாமா மதுநா னென்னும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (23)

பிரமமதே பிரமத்தின் குற்ற மாகும்
பிரமமதே பிரமத்தின் குணமு மாகும்
பிரமமதே பிரமத்தின் பயமு மாகும்
பிரமமதே பிரமத்தின் செயமு மாகும்
பிரமமதே பேதங்க ளனைத்து மாகும்
பிரமமதே பிரிவணுவும் பெருத தாகும்
பிரமமதே யெல்லாமா மதுநா னென்னும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (24)

பிரமமதே யஞ்ஞான மெனவுந் தோன்றும்
பிரமமதே யகங்கார மெனவுந் தோன்றும்
பிரமமதே புத்திமன தெனவுந் தோன்றும்
பிரமமதே சித்தமுத லெனவுந் தோன்றும்
பிரமமதே சீவசக மெனவுந் தோன்றும்
பிரமமதே சிவவடிவ மெனவுந் தோன்றும்
பிரமமதே யாவையுமா மதுநா னென்னும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (25)

பிரமமதே தூலவடி வெனவுந் தோன்றும்
பிரமமதே சூக்கவடி வெனவுந் தோன்றும்
பிரமமதே மூர்த்தவடி வெனவுந் தோன்றும்
பிரமமதே யமூர்த்தவடி வெனவுந் தோன்றும்
பிரமமதே மூலவடி வெனவுந் தோன்றும்
பிரமமதே முழுவதுமாய்த் தோன்ற லாகும்
பிரமமதே யாவையுமா மதுநா னென்னும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (26)

பிரமமதே சத்தியெனத் தோன்ற லாகும்
பிரமமதே சித்தியெனத் தோன்ற லாகும்
பிரமமதே சடமெனவுந் தோன்ற லாகும்
பிரமமதே சித்தெனவுந் தோன்ற லாகும்
பிரமமதே வெகுவிதமாய்த் தோன்ற லாகும்
பிரமமதே தோன்றியிடுந் தோற்ற மெல்லாம்
பிரமமதே யாவையுமா மதுநா னென்னும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (27)

பிரமமதே யான்மாவா மான்மாத் தானே
பிரமமதாம் பிரமத்துக் கயலன் றான்மா
பிரமமய மாகியவிவ் வான்மா வுக்குப்
பின்னமதா யொருபொருளு மென்று மில்லை
பிரமமய மாகியவிவ் வான்மாத் தானே
பின்னமெனப் பிறங்கியிடும் பொருள்க ளெல்லாம்
பிரமமய வான்மாவே தானென் றெண்ணும்
பின்னமிலாப் போதத்தாற் பிரம மாவாய். (28)

தான்றானே தானாகச் சொலிக்குஞ் சோதி
தான்றானே தானாக நிலைத்த வின்பந்
தான்றானே தானாக விருக்கு முண்மை
தான்றானே சகலபரி பூன்ற வத்து
தான்றானே தனக்குநிக ரில்லாத் தெய்வந்
தான்றானே தனக்கனிய மிலாத வத்து
தான்றானே பிரமமெனுந் திடபோ தத்தாற்
றானாக விருக்கின்ற பிரம மாவாய். (29)

தான்றானே தவிராது நின்ற சத்து
  தான்றானே தடையறவே நிகழுஞ் சித்து
தான்றானே நிகரற்ற பரமா நந்தந்
  தான்றானே நிகிலத்து நிகழ்சித் தாந்தந்
தான்றானே யகிலமகா வாக்கி னர்த்தந்
  தான்றானே யகண்டபரி பூர ணான்மா
தான்றானே பிரமமெனுந் திடபோ தத்தாற்
  றானாக விருக்கின்ற பிரம மாவாய். (30)

தான்றானே சீவத்வ மிழந்த வத்து
  தான்றானே யீசத்வ மிழந்த வத்து
தான்றானே யபின்னபரப் பிரம வத்து
  தான்றானே யகண்டபரப் பிரம வத்து
தான்றானே யத்துவித மான வத்து
  தான்றானே யகண்டபரி பூன்ற வத்து
தான்றானே தானென்னுந் திடபோ தத்தாற்
  றானாக விருக்கின்ற பிரம மாவாய். (31)

தான்றானே யுபாதியெலா மிலாத வத்து
  தான்றானே யொருதகளு முறாத வத்து
தான்றானே யத்யந்தஞ் சுத்த வத்து
  தான்றானே யகிலர்க்கும் பிரிய வத்து
தான்றானே யாகாயம் போன்ற வத்து
  தான்றானே யகண்டபர மான்ம வத்து
தான்றானே தானென்னுந் திடபோ தத்தாற்
  றானாக விருக்கின்ற பிரம மாவாய். (32)

தான்றானே பகுதிமுதற் கதீத வத்து
  தான்றானே பாரற்பரமாய் நிலைத்த வத்து
தான்றானே பரிச்சேத மிலாத வத்து
  தான்றானே பரிசுத்த மான வத்து
தான்றானே பிரஞ்ஞான கனமாம் வத்து
  தான்றானே பரப்பிரம மான வத்து
தான்றானே தானென்னுந் திடபோ தத்தாற்
  றானாக விருக்கின்ற பிரம மாவாய். (33)

தான்ருனே நித்தியமாம் பிரம ரூபந்
தான்ருனே நிட்களமாம் பிரம ரூபந்
தான்ருனே நிரஞ்சனமாம் பிரம ரூபந்
தான்ருனே நிருமலமாம் பிரம ரூபந்
தான்ருனே நிரந்தரமாம் பிரம ரூபந்
தான்ருனே நிராமயமாம் பிரம ரூபந்
தான்ருனே நிறைந்தபர சொரூப மென்னுந்
தவிராத போதத்தாற் பரமே யாவாய். (34)

நான்ருனே சகலமுமாம் பிரம ரூப
நான்ருனே சகலமிலாப் பிரம ரூப
நான்ருனே சத்தியமாம் பிரம ரூப
நான்ருனே சனாதனமாம் பிரம ரூப
நான்ருனே சலனமிலாப் பிரம ரூப
நான்ருனே சாசுவதப் பிரம ரூப
நான்ருனே சாந்தபர சொரூப மென்னு
நழுவாத போதத்தாற் பரமே யாவாய். (35)

நான்ருனே மாயையிலாப் பிரம ரூப
நான்ருனே யவித்தையிலாப் பிரம ரூப
நான்ருனே யீசனிலாப் பிரம ரூப
நான்ருனே சீவனிலாப் பிரம ரூப
நான்ருனே சகங்களிலாப் பிரம ரூப
நான்ருனே சாந்தமதாம் பிரம ரூப
நான்ருனே சுத்தபர சொரூப மென்னு
நழுவாத போதத்தாற் பரமே யாவாய். (36)

நான்ருனே நாசமிலாப் பிரம ரூப
நான்ருனே நவையற்ற பிரம ரூப
நான்ருனே பாசமிலாப் பிரம ரூப
நான்ருனே பராற்பரமாம் பிரம ரூப
நான்ருனே யத்துவிதப் பிரம ரூப
நான்ருனே யகண்டபரப் பிரம ரூப
நான்ருனே சுத்தபரப் பிரம மென்னு
நழுவாத போதத்தாற் பரமே யாவாய். (37)

ஞானலது சத்துமிலை யசத்து மில்லை
நானலது சதசத்தாம் பொருளு மில்லை
ஞானலது சித்துமிலை யசித்து மில்லை
நானலது சிதசித்தாம் பொருளு மில்லை
ஞானலது துவிதமொடத் துவித மில்லை
நானலது தோன்றிடுமோர் பொருளு மில்லை
ஞானனிசம் பரப்பிரம மதுநா னென்னு
நழுவாத போதத்தாற் பரமே யாவாய். (38)

பிரமமக மகம்பிரமம் பிரம மெல்லாம்
பிரமமலா தயலணுவு மில்லை யென்றே
யுரமருவு முணர்வுதனை யுறுவோ ரெல்லா
முணர்வுருவாம் பிரமமதே யாவ ரன்றி
யொருபொழுது மயலாகா ருண்மை சொன்னே
னுரைத்ததிலோ ரையமிலை சத்தி யந்தான்
சருவபரி பூரணமாஞ் சம்பு வாணை
சத்தியமே சத்தியமே சங்கை யில்லை. (39)

பிரமமலா தயலாக வணுவு மில்லை
பிரமத்துக் கயலெல்லாம் பிராந்தி யேயாம்
பிரமமலா தயலாக வணுவு மில்லை
பிரமத்துக் கயலெல்லா மித்தை யேயாம்
பிரமமலா தயலாக வணுவு மில்லை
பிரமத்துக் கயலெல்லா மசத்தே யாகும்
பிரமமலா தயலாக வணுவு மில்லை
பிரமத்துக் கயலெல்லாம் பிரம மேயாம். (40)

கனவினிடைத் திருசியமாய்க் காணப்பட்ட
கடபடமே முதலியவு மித்தை யேபோ
னனவினிடைத் திருசியமாய் நாடப் பட்ட
நாநாவாஞ் சகசீவ பரமு மித்தை
யனையதெலா மறிகின்ற திருக்கே யான
வான்மாவுக் கபின்னமதாம் பிரம மொன்றே
யநவரத மழியாத வுண்மை வத்து
வறைந்ததிலோ ரணுவேனு மைய மில்லை. (41)

ஆதலினு லுலகமெலா மித்தை யாகு
மங்குள்ள வுயிர்களெலா மித்தை யாகும்
பேதமுறுஞ் சிவவடிவு மித்தை யாகும்
பின்னமுறு மரிவடிவு மித்தை யாகு
மீதியுள சுரர்வடிவு மித்தை யாகு
மெய்போன்ற வெப்பொருளு மித்தை யாகு
மாதிமுடி வொன்றுமிலா தகண்ட மாகி
யியாம லுளதென்றும் பிரம மொன்றே. (42)

சகலவதிட் டானபரப் பிரமத் தின்கட்
சகமுதலாய்த் தோற்றியவிம் மித்தை யுந்தான்
றுகளறவே சோதிக்கிற் றுவித மற்ற
தூயவதிட் டானபரப் பிரம மேயா
மிகழ்வுறவே யிரச்சுவினின் மித்தை யாக
விலங்கியிடுஞ் சர்ப்பத்தைச் சோதிக் குங்கா
லதியதனை யதிட்டான விரச்சு வன்றி
யன்னியமா யாரேனுங் கண்ட துண்டோ. (43)

இன்னவித மதிட்டான வாரோ பங்க
ளிரண்டையுமே நன்றாகச் சோதித் திங்கு
முன்னியவா ரோபமதாஞ் சகசீ வாதி
மூலவதிட் டானமதாம் பிரம மென்றும்
பின்னமிலா வப்பிரம நானே யென்றும்
பேதமிலாப் பரப்பிரம ஞானந் தன்னைத்
தன்னுடைய துகளற்ற மனத்தாற் பெற்றுத்
தளர்வுதரும் பவபீதி தவிர்க்க வேண்டும். (44)

புத்திரனே தனதுமன முயற்சி யொன்றாற்
பூரணமாம் பரப்பிரம ஞானம் பேறு
மித்தகமை ஞானத்தாற் பரமா முத்தி
யாவர்க்கு மிவ்விடத்தே யெளிதா யெய்து
மத்துவித ஞானத்தி னப்பா சத்தி
லணுவேனு மொருகாலும் பயமு மில்லை
யித்திறமே யிருக்கையினு மிதனப் யாச
மியற்றுவதி லேதேனும் வருத்த முண்டோ. (45)

வருத்தமிலா திருக்கையினும் வருத்தம் போல
 வருத்துற்ற மாபாவி மனதிற் றோன்றும்
விருத்தமதாம் பாவமெலாம் வீந்து மெத்த
 விமலமதா மனதுடையோர்க் கிவ்வப் யாசங்
கருத்திலுற மிகவெளிதா மாத லாலே
 கலங்காம லெப்போது ஞானப் யாசந்
திருத்தமுறச் செய்வோர்க்குத் தேவ தேவன்
 றிருவருளாற் றிடஞானந் திகழு மன்றே. (46)

அகம்பிரமம் பிரமமக மகமெல்லா மென்
 றகண்டபர ஞானத்தி னப்யா சத்தைத்
தகும்பிரம ஞானத்தாற் றிடமா மட்டுந்
 தவிராது சந்ததமும் பழகு வோர்க்கே
யகம்பிரம மெனுஞான மகண்ட மான
 வவ்வீசன் றிருவருளாற் சகச மாகுந்
தகும்பிரம ஞானத்தாற் சகச மானுற்
 றளர்வுதரும் பவபீதி தானே நீங்கும். (47)

பாவனமாம் பரஞானஞ் சகச மானுற்
 பார்ப்பதெலா மத்யந்தா பாவ மேயாம்
யாவையுமே யத்யந்தா பாவ மேயாம்
 யானீயு மத்யந்தா பாவ மேயாஞ்
சீவரெலா மத்யந்தா பாவ மேயாஞ்
 செகபாமு மத்யந்தா பாவ மேயாங்
கேவலமாம் பரப்பிரம மான தானே
 கெம்பீர பூரணமா யுள்ள தாமே. (48)

அகிலமுமே யத்யந்தா பாவ மாகி
 யகண்டபர வடிவாகித் தானே நிற்கி
லிகழ்வுறுமிப் பவபீதி மீண்டுந் தோன்ற
 விடமில்லை யாதலினுன் முமுட்சு வெல்லாஞ்
சகலமுமே பிரமமென்று மதுநா னென்றுஞ்
 சந்ததமுஞ் சலியாம லப்யா சித்தே
துகளில்பா ஞானமடைந் ததனு லிந்தத்
 துயர்மயமாம் பவபீதி தொலைக்க வேண்டும். (49)

நீக்கமிலா தெங்குமொரு நிறைவாய் நின்ற
நிகழ்வுருவாம் பரப்பிரம மெல்லா மென்றும்
வாக்குமன மொன்றுக்கு மெட்டா தான
வரையற்ற பரப்பிரம மதுநா னென்றுஞ்
சூக்கமதா மனதுடனே யப்யா சித்துச்
சுத்தமதாம் பரப்பிரம ஞானம் பெற்றுப்
போக்கவொணுப் பவபீதி யனைத்தும் போக்கிப்
பூரணமா யுள்ளபரம் பொருளே யாவாய். (50)

கல்லாத கல்வியெலாங் கற்ற போதுங்
கலக்கமிலாப் பரப்பிரம ஞான மொன்றை
யல்லாது பவபீதி விடுக்க வொண்ணு
தாதலிஞ லாதரவாய் நீயெப் போது
மெல்லாமும் பிரமமென்னு மதுநா னென்னு
மேகமதாம் பரப்பிரம ஞானம் பெற்றே
பொல்லாத பவபீதி யனைத்தும் போக்கிப்
பூரணமா யுள்ளபரம் பொருளே யாவாய். (51)

பிரமமய மாகியதன் ணுன்ம ரூபப்
பெருமையினைப் பரமசிவ னுரைத்த வண்ணங்
கருணையிஞ லியாவர்க்கு மிதமே யாகக்
கலக்கமற நிதாகனினக் குரைத்தே னன்பாற்
சருவபரி பூரணமாஞ் சிவன்றன் ணுணை
சாற்றியதிற் சற்றேனுஞ் சங்கை யில்லை
யரியபொரு ளானவிதை யொருகா லேனு
மன்புடனே கேட்டுணர்வோன் பிரம மாவன். (52)

சமதமமே முதலியவாஞ் சாத னங்கள்
சார்ந்தனிசம் வேதாந்த விசாரஞ் செய்திங்
கமலமதாம் பரசிவமே யெல்லா மென்று
மச்சிவமே நாமென்று மறிவுற் ருேரே
மமர்பயமாம் பவபீதி விடுத்தெப் போது
மாசற்ற பரசுகமாய்ச் சுகிப்ப ரென்றே
நிமலமதாய் ரிபுமுனிவ னிதாக னுக்கு
நிகரற்ற பரம்பொருளை நிகழ்த்தி னுனல். (53)

வேறு.

அகளிலாதமனத்தின் முயற்சியாற் றூயஞானப்பழக்கந்தொடர்ந்தவர், சகலமும்பர மப்பரனானெனுஞ் சலனமின்றியஞானஞ்செறிந்ததா, லிகலுமிப்பவ பீதிவிடுத்துடனேகமாம்பரமாகுவரென்றிடன் மகிழுமானந்தத்தாண்டவமாடுமெம் மாசிலீச னகண்டசொரூபமே.(54).

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் 17-க்கு திருவிருத்தம்-777.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

## பதினெட்டாவது
## அகண்ட சொரூபத்தியானம் உரைக்கும்
## அத்தியாயம்.

மிகவுமகா ரகசியமாய் வேதாந் தத்து
  மெத்தவுமே ரகசியமாய் விளம்ப லுற்ற
மகிமைமிகும் பரம்பொருளை மற்றுஞ் சொல்வேன்
  மாசற்ற மனதுடனே யிவ்வர்த் தத்தை
யகமுறவே யாதரவாய்க் கேட்டு ணர்ந்தோ
  ரகண்டபர வடிவாகிச் சீவன் முத்திச்
சுகமருவி யுபாதியெலாந் தொலைந்த பின்னர்ச்
  சுத்தமதாம் பரப்பிரம சொரூப மாவர். (1)

சகமுதலாய்த் தோற்றியவித் தோற்ற மெல்லாஞ்
  சத்தியசிற் சுககனமாம் பிரம ரூப
மகமகமென் றறிவுருவா யமர்ந்த சீவ
  ரனைவருமே யகண்டபரப் பிரம ரூபம்
புகல்வகையே பாவித்துப் பூன்றஞானம்
  பொருந்தினவர் பூரணமாம் பரமே யாவர்
பகர்வதிலோ ரணுவேனு மைய மில்லை
  பரமசிவன் றன்னுணை பரமார்த் தந்தான். (2)

இதுவெனவே காண்பதுவும் பிரம ரூப
  மியானெனவே காண்பதுவும் பிரம ரூப
மதுவெனவே காண்பதுவும் பிரம ரூப
  மன்னியமாய்க் காண்பதுவும் பிரம ரூபந்
திதமெனவே காண்பதுவும் பிரம ரூபந்
  திடமலதாய்க் காண்பதுவும் பிரம ரூப
மெதுவெனவே காண்பதுவும் பிரம ரூப
  மியம்பியதி லெவ்வளவு மைய மில்லை. (3)

குருவானு மானுனும் பிரம ரூபங்
குணமேலாஞ் சாதனமும் பிரம ரூபஞ்
சிரவணமு மனனமுமே பிரம ரூபஞ்
செய்கின்ற தியானமுமே பிரம ரூப
மரியபொரு ளறிவதுவும் பிரம ரூப
மப்பொருளா யிருப்பதுவும் பிரம ரூபஞ்
சருவமுமே சந்ததமும் பிரம ரூபஞ்
சாற்றியதிற் சற்றேனுஞ் சங்கை யில்லை. (4)

சாதனமுஞ் சாத்தியமும் பிரம ரூபஞ்
சாந்திமுதற் சற்குணமும் பிரம ரூபம்
வேதனமும் வேத்தியமும் பிரம ரூபம்
வேதாந்த சாத்திரமும் பிரம ரூபம்
பேதமறப் பெறும்பேறும் பிரம ரூபம்
பின்னுமுள வெப்பொருளும் பிரம ரூப
மாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
வப்பிரம மகமெனவே தியானஞ் செய்வாய். (5)

அடிமுடிவு நடுவுகளும் பிரம ரூப
மான்மாவு மனுன்மாவும் பிரம ரூபம்
படிமுதலாம் பூதமுமே பிரம ரூபம்
பரவியிடும் பௌதிகமும் பிரம ரூபஞ்
சடமசடஞ் சகலமுமே பிரம ரூபஞ்
சத்தியமும் மசத்தியமும் பிரம ரூபந்
திடமருவு மப்பிரம நானே யென்று
திரமாக வெப்போதுந் தியானஞ் செய்வாய். (6)

அத்தமிலாப் பரப்பிரம சொரூப நானே
யகங்கார முதலியதோ ரணுவு மில்லை
சித்துருவாம் பரப்பிரம சொரூப நானே
சித்தமுத லொருபொருளு மென்று மில்லை
சத்தியமாம் பரப்பிரம சொரூப நானே
சகசீவர் முதலியதோ ரணுவு மில்லை
சுத்தபரப் பிரமமெலா மதுநா னென்றே
சுகமாக வெப்போதுந் தியானஞ் செய்வாய். (7)

ஏகமதாம் பரப்பிரம சொரூப நானே
யிதுவதுவென் றிலங்கியிடும் பொருளே யில்லை
மோகமிலாப் பரப்பிரம சொரூப நானே
முன்னியதாய் முளைக்கின்ற பொருளே யில்லை
பாகமிலாப் பரப்பிரம சொரூப நானே
பலவிதமாய்ப் பகுப்புற்ற பொருளே யில்லை
யேகபரப் பிரமமெலா மதுநா னென்றே
யிடையறவே யெப்போதுந் தியானஞ் செய்வாய். (8)

அகமெனவே தோற்றுவதும் பரமா நானே
யகமென்றிங் கயலாக வொன்று மில்லை
சகமெனவே தோற்றுவதும் பரமா நானே
சகமென்றிங் கயலாக வொன்று மில்லை
நிகழ்பானுய்த் தோற்றுவதும் பரமா நானே
நிகழ்பானென் றயலாக வொன்று மில்லை
சகலமுமே பரமான நானே யென்று
சலியாம லெப்போதுந் தியானஞ் செய்வாய். (9)

பூரணமா யுள்ளபரப் பிரம மன்றிப்
பூதமுத லெப்பொருளு மென்று மில்லை
காரணமா யுள்ளபரப் பிரம மன்றிக்
காரியமா யொருபொருளு மென்று மில்லை
ஈரணமில் சின்மயமாம் பிரம மன்றிச்
செகசீவ பரங்களெனச் சிறிது மில்லை
யாரணவீ றறிவிக்கு மகண்ட மான
வப்பிரம மகமெனவே தியானஞ் செய்வாய். (10)

சித்தமுத லெப்பொருளு மென்று மில்லை
சின்மயமாய் நிறைந்தபரப் பிரம மொன்றே
சத்தியமா யுளதாகு மற்ற வெல்லாஞ்
சத்தியமே யாகாவாஞ் சசவி ஷாண
மொத்துளதா யோதியவப் பிரமந் தானே
யுன்னுடைய வான்மாவா மதனுன் மைந்தா
வத்துவித பரப்பிரம மகமே யென்றிங்
கநவாத மதிதிடமாய்த் தியானஞ் செய்வாய். (11)

சாற்றியவப் பரப்பிரம சொரூப மொன்றுஞ்
சத்தியசிற் சுககனமாம் பூன்ற மாகுந்
தோற்றியவிச் சகவடிவ நாநா வாகுந்
துக்கசட வசத்தியமாஞ் சின்ன மாகும்
போற்றியவிப் பரப்பிரம சொரூபந் தானே
புத்திரநின் னான்மாவா மாத லாலே
யேற்றியவப் பரப்பிரம நானே யென்றிவ்
விருமையற வெப்போதுந் தியானஞ் செய்வாய். (12)

கறையற்ற பரப்பிரம மொன்றே யுண்மை
காண்பதுவுங் கேட்பதுவு மெவையு மில்லை
நிறைவுற்ற பரப்பிரம மொன்றே யுண்மை
நினைப்பதுவு நினையாது மெவையு மில்லை
மறைவற்ற பரப்பிரம மொன்றே யுண்மை
மற்றவெலா மொருகாலு மிலவே யில்லை
குறைவற்ற வப்பிரம நானே யென்று
கோதறவே யெப்போதுந் தியானஞ் செய்வாய். (13)

சூக்கமதாம் பரப்பிரம மொன்றே யுண்மை
சொற்பொருளாய்த் தோன்றியதோ ரணுவு மில்லை
நீக்கமிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை
நீநானே முதலானோ ரணுவு மில்லை
யாக்கையிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை
யன்னியமா யணுவேனு மிலவே யில்லை
வாக்குமுதற் கெட்டாவப் பரநா னென்றே
வருத்தமற வெப்போதுந் தியானஞ் செய்வாய். (14)

திருசியமா யெனக்கயலோ ரணுவு மில்லை
திருக்கான வென்னிடையிற் றோன்று நின்ற
சருவமுமே பரமான நானே யென்று
சற்குருவா மென்வாக்காற் றியானஞ் செய்வா
யிருமையற விவ்வண்ண முபதே சித்தே
னென்றணுவு மபிமான மெனக்கிங் கில்லை
குருவானும் பரமசிவ னெனக் குரைத்த
குற்றமிலா வுபதேச வசன மீதே. (15)

சத்குருவி னுபதேச வசனத் தாலே
சகலமுமே சத்தியசிற் சுகமாய் நின்ற
நிர்க்குணமாம் பிரமமென்று மதுநா னென்று
நிச்சலமாய் நீயென்றுந் தியானஞ் செய்வா
யெக்குருவி னுபதேச வசனந் தானு
மிவ்விதமே யன்றியிதின் வேறே யில்லை
முக்குணமுங் கடந்துவெறுஞ் சித்தே யான
மூலபர சிவனுணை மொழிந்த துண்மை. (16).

சற்குருவுஞ் சின்மயமாம் பிரம ரூபஞ்
சகலமுமே சின்மயமாம் பிரம ரூப
நிர்க்குணமா மப்பிரம நானே யென்று
நிச்சலமாய் நீயென்றுந் தியானஞ் செய்வாய்
சற்குருவாம் பரமசிவ னெனக்கு முன்னஞ்
சத்தியமாய்ச் சாற்றியசித் தாந்த மீதே
துர்க்குணமோ ரணுவுமுறு வேதாந் தங்க
ளணிவாகச் சொல்லியசித் தாந்த மீதே. (17).

நிருமலமாம் பரப்பிரம மானே னானே
நிட்களமாம் பரப்பிரம மானே னானே
நிருபமமாம் பரப்பிரம மானே னானே
நிர்க்குணமாம் பரப்பிரம மானே னானே
நிரதிசய பரப்பிரம மானே னானே
நிரஞ்சனமாம் பரப்பிரம மானே னானே
நிரவயவ பரப்பிரம நானே யென்று
நிச்சலமாய் நீயென்றுந் தியானஞ் செய்வாய். (18).

அகிலவதிட் டானபரப் பிரம மேநா
னகண்டபரி பூரணமாம் பிரம மேநான்
றுகளணுவு மற்றபரப் பிரம மேநான்
றூயசிதா காயபரப் பிரம மேநான்
சகமுதலோ ரணுவுமிலாப் பிரம மேநான்
சாலவுப சாந்தபரப் பிரம மேநா
னிகரிலதாம் பரப்பிரம நானே யென்று
நிச்சலமாய் நீயென்றுந் தியானஞ் செய்வாய். (19).

நித்தியமாய் நிகழ்கின்ற பிரம மோநா
னிகிலமுமாய் நிறைகின்ற பிரம மோநான்
சத்தியமாய்ச் செறிகின்ற பிரம மோநான்
சலனமிலா திருக்கின்ற பிரம மோநான்
சுத்தசுக வடிவான பிரம மோநான்
சுபத்துக்குஞ் சுபமான பிரம மோநா
னத்துவித மானபரப் பிரம நானென்
றசஞ்சலமா யநவரதந் தியானஞ் செய்வாய். (20)

துன்னியதே காதியிலாப் பிரம நானே
துரியவறி வானபரப் பிரம நானே
வன்னமுத லெவையுமிலாப் பிரம நானே
வகையற்ற வகண்டபரப் பிரம நானே
யன்னியமோ ரணுவுமிலாப் பிரம நானே
யகண்டவடி வானபரப் பிரம நானே
பின்னமிலாப் பரப்பிரம நானே யென்று
பிரிவறவே யெப்போதுந் தியானஞ் செய்வாய். (21)

மோகமுத லெப்பொருளு மென்று மில்லை
முழுவதுமே யகண்டபரப் பிரம ரூபம்
பாகமுற வெப்பொருளு மென்று மில்லை
பகுப்புற்ற பொருளெல்லாம் பிரம ரூபந்
தேகசக முதலியவோ ரணுவு மில்லை
திருசியமாய்த் தெரிவதெலாம் பிரம ரூப
மேகமதாம் பரப்பிரம நானே யென்றிவ்
விருமையற வெப்போதுந் தியானஞ் செய்வாய். (22)

திருசியமா யொருபொருளும் வேறிங் கில்லை
தெரிவதெலாந் திருக்கான பிரம மென்று
மிருமையிலா வப்பிரம நானே யென்றும்
யானந்தப் பரப்பிரமந் தானே யென்றுஞ்
சருவமுமே யவ்விதமா நானே யென்றுஞ்
சந்ததமுஞ் சலியாமற் றியானிப் பாயேற்
பிரிவெனவே நின்மனதிற் பிறங்கா நின்ற
பெயர்க்கவொண்ணாப் பேதமலம் யாவுந் தீரும். (23)

சகமுதலா யெண்ணுவதைத் தூரத் தள்ளிச்
சகலமுமே பிரமமெனத் தியானஞ் செய்வா
யகமுடலென் றெண்ணுவதைத் தூரத் தள்ளி
யகம்பிரம மென்றனிசந் தியானஞ் செய்வாய்
சகலமுமே பிரமமென்று மதுநா னென்றுஞ்
சந்ததமுஞ் சலியாமற் றியானஞ் செய்தா
லகமனியஞ் சகமுதலீ தனிய மென்னு
மயலெல்லா மனுதினமு மடைவாய்த் தீரும். (24)

தேகமக மெனுநினைவைத் தூரத் தள்ளித்
தெரிவான பிரமமக மெனத்தியா னிப்பா
யாகமக மெனுநினைவைத் தூரத் தள்ளி
யறிவான பிரமமக மெனத்தியா னிப்பாய்
பாகமுறும் பலநினைவைத் தூரத் தள்ளிப்
பார்ப்பதெலாம் பரப்பிரம மெனத்தியா னிப்பா
யேகமகம் யானெவையு மெனத்தியா னித்தே
யிப்பேத மியாவையுநீ விடுவாய் மைந்தா. (25)

இத்தேக நானல்ல விவைநா னல்ல
வித்தேக நானல்ல விவைநா னல்ல
சித்தேயாம் பரப்பிரம நானெப் போதுஞ்
சித்தேயாம் பரப்பிரம நானெப் போது
முத்தேச முற்றபொரு ளொன்று மில்லை
யுன்னியிடத் தகுபொருளு மொன்று மில்லை
சித்தேயா மெல்லாமு மதுநா னென்றே
சிரத்தையுடன் றியானித்திப் பேதந் தீர்வாய். (26)

இத்தேக முதலியவை யணுவு மில்லை
யித்தேக முதலியவை யணுவு மில்லை
யெத்தேக முதலியவுஞ் சித்தே யாகு
மெத்தேக முதலியவுஞ் சித்தே யாகுஞ்
சித்தேநான் சித்தேநான் சித்தே யெல்லாஞ்
சித்தேநான் சித்தேநான் சித்தே யெல்லாஞ்
சித்தேயாம் பரப்பிரம மதுநா னென்றே
சிரத்தையுடன் றியானித்திப் பேதந் தீர்வாய். (27)

18

தகும்பிரமந் தனக்கயலா யணுவு மில்லை
தயங்கியவிச் சகசீவ பரங்க ளெல்லாந்
தகும்பிரம வடிவேயா மதுவே நீயாந்
தத்துவமாய் நவில்கின்றே னாத லாலே
யகம்பிரம மகம்பிரம மகமே யெல்லா
மகம்பிரம மகம்பிரம மகமெல் லாமென்
றகம்பிரம பாவனையே திடமாய்ச் செய்திவ்
வயலணுவு மணுகாம லழிப்பாய் மைந்தா. (28)

செகம்பரமுஞ் சீவர்களுஞ் சிறிது மில்லை
சின்மயமாம் பரப்பிரமந் தானே யெல்லாந்
தகும்பிரம மதுநானே நானே யெல்லாந்
தகும்பிரம மதுநானே நானெல் லாமென்
றகம்பிரம பாவனையே யனிசஞ் செய்தா
லதனாலிவ் வயலெல்லா மழிந்தே போகுந்
திகம்பரனாய் நிறைந்தெங்குந் திகழா நின்ற
தெரிவுருவாஞ் சிவனையே யுண்மை சொன்னேன். (29)

அலைமனதி னொருமையிலாத் தன்மை யாலே
யகம்பிரம பாவனையே செய்யச் சத்தி
யிலதெனினு மெப்போதுஞ் சிரத்தை யோடே
யான்பிரமம் யான்பிரமம் யானே யெல்லாஞ்
சலனமிலாப் பரமேநான் பரநா னென்னுஞ்
சத்தமிதை யுரைத்தாலு மிவ்வ றத்தா
னிலைமருவா தலைமனது மெள்ள மெள்ள
நிச்சலமாய் நிகழ்த்தியபா வனையி னிற்கும். (30)

நிரந்தரமாய்ப் பாவனையின் மனது நின்று
னிச்சலமா மகண்டபர ஞான முண்டாய்த்
திரிந்தலையு மனதினிடை விகற்ப மாகத்
தெரிகின்ற பேதமெலா முடனே தீருந்
தெரிந்திடுமிப் பேதமெலாந் தீரு மட்டுந்
திருசியமாய்த் தெரிவதெலாம் பரமே யென்றும்
பொருந்தியவப் பரப்பிரம நானே யென்றும்
பூரணமா யெப்போதுந் தியானஞ் செய்வாய். (31)

சகலமெனுஞ் சத்தமில்லை யருத்த மில்லை
சஞ்சலமாந் தெய்வமில்லை தீர்த்த மில்லை
பகுதியில்லை பகுதியுடை விகார மில்லை
பரனுமில்லை சீவனில்லை சகத்து மில்லை
நிகிலமுமே சின்மயமாய் நிறைந்து நின்ற
நிட்களமாம் பரப்பிரம மதுநா னென்றே
யிகழ்வுதரும் பேதமெலா மிறக்கு மட்டு
மெப்போது மிடையறவே தியானஞ் செய்வாய். (32)

சருவமுமே மாயையிதி லைய மில்லை
சருவமுமே மித்தையிதி லைய மில்லை
சருவமுமே துச்சமிதி லைய மில்லை
சருவமுமே யசத்திதனி லைய மில்லை
சருவமுமே சந்ததமும் பிரம மென்றுஞ்
சத்தியசிற் சுககனமா மதுநா னென்றுஞ்
சருவமெனும் பேதமெலாந் தீரு மட்டுஞ்
சந்ததமுஞ் சலியாமற் றியானஞ் செய்வாய். (33)

சருவமுமே பரப்பிரம மைய மில்லை
சருவமுமே பரப்பிரம மைய மில்லை
பிரமமதே நானென்று மைய மில்லை
பிரமமதே நானென்று மைய மில்லை
சருவமெனும் பிரமமெனும் பேத மில்லை
சகலமுமே யகண்டபரப் பிரம மென்றே
மருவியவிப் பேதமெலா மாயு மட்டு
மயலறவே யெப்போதுந் தியானஞ் செய்வாய். (34)

சின்மயமாம் பரப்பிரமந் தானே யெல்லாஞ்
சதசத்தா யொருபொருளு மென்று மில்லை
சின்மயமாம் பரப்பிரமந் தானே யெல்லாஞ்
சித்தமுத லொருபொருளு மென்று மில்லை
தன்மயமாம் பரப்பிரமந் தானே யெல்லாந்
தயங்குசக சீவபர மொன்று மில்லை
நின்மலமாம் பரப்பிரம மதுநா னென்றே
நிச்சலமாய் நீயென்றுந் தியானஞ் செய்வாய். (35)

அத்திரமாந் தேகமிலை யதனுக் கேது
வாகியவைம் பூதமிலை பொறிக ளில்லை
புத்தியிலை சித்தமிலை மனது மில்லை
பொருந்துமகங் காரமிலை பந்த மில்லை
முத்தியிலை மோசகனு மீச னில்லை
மோட்சமுறுஞ் சீவனிலை முழுது மில்லை
யத்துவிதப் பிரமமெலா மதுநா னென்றே
யசஞ்சலமாய் நீயென்றுந் தியானஞ் செய்வாய். (36)

அறிவுருவாம் பிரமத்திற் றோன்று நின்ற
வகிலமுமே யறிவுருவா யிருப்ப தாலே
யறிவுருவா மகண்டபரப் பிரமத் துக்கிங்
கன்னியமா யணுவேனு மிலவே யில்லை
யறிவுருவாம் பரப்பிரம மெல்லா மென்று
மவ்விதமாம் பரப்பிரம நானே யென்று
மறிவுருவாம் பரநீயாய்ப் பேத மியாவு
மழியுமள வதிதிடமாய்த் தியானஞ் செய்வாய். (37)

சருவமெனு முருவத்தைத் தூரத் தள்ளிச்
சருவமுமே பிரமமென நிச்ச யித்துப்
பிரமமதே நானென்று நானே யந்தப்
பிரமமெனும் பாவனையான் மயலே யாக
மருவியவிப் பேதமதை யனைத்து மாய்த்து
மற்றந்தப் பாவனையுந் தூரத் தள்ளி
நிருமலமா நின்னுடைய நிசரூ பத்தி
னிச்சலமாய் நீயென்று நிலைத்து நிற்பாய். (38)

நிச்சலமாய் நிற்பதெனு நினைவுந் தள்ளி
நிசரூப மாத்திரமாய்த் தள்ள லென்னு
மிச்செயலு மிகழ்ந்துமனோ வாக்கு கட்கிங்
கெட்டாத கேவலமாஞ் சொரூப மாகி
யுச்சமதாஞ் சகசநிலை யறுவாய் மைந்தா
வோதுவதற் கினியொன்று மிடமிங் கில்லை
நிச்சயமாய்ப் பரமசிவ னெனக்கு முன்ன
நிகழ்த்தியதா நிசரூப நிட்டை யீதே. (39)

பேதமெலா மனுவுமிலா தறவுந் தள்ளிப்
பின்னமிலாப் பரமான வான்மா வின்க
ணேனதயுமே நினையாம லின்ப மேலா
யியங்காம லிருப்பதுவே சகச நிட்டை
சாதகமா மிந்நிட்டை நிருவி கற்ப
சமாதியென வங்கங்கே சாற்ற லாகு
மோதியதே யகண்டபர சாட்சாத் கார
வுணர்வெனவு மங்கங்கே யுரைக்க லாமால். (40)

திடமான நிட்டையிதே சீவன் முத்தித்
திறமையென வங்கங்கே செப்ப லாகுந்
தடமான நிட்டையிதே யுபசாந் திக்குத்
தகுந்தபடி பூமிகையோர் நான்கு மாகு
மிடமான விந்நிட்டை யிசைந்தோ ருக்கே
யித்துயர்செய் பவபீதி யிறக்கு மன்றி
மடமான மற்றெதனை யிசைந்த போது
மகத்தான பவபீதி மாயா தென்றும். (41)

நிறைவுறுமிந் நிட்டையுளோர் நீச ரேனு
நிருமலமாம் பரமாகி முத்த ராவ
ரறைவதிலோ ரனுவேனு மைய மில்லை
யறுதியிதே யாதலினுன் முமுட்சு வெல்லாங்
குறைவறவே யிந்நிட்டை கூடு மட்டுங்
கூறுபடும் பேதமெலாம் பிரம மென்று
மறிவுருவா மப்பிரம மகமே யென்று
மகண்டபர பாவனையே பழக வேண்டும். (42)

பேதமெலா நீங்கிநிச நிட்டை சேரப்
பின்னருமே பரமார்த்தம் பேசக் கேளா
யீதெனவே யொருபொருளு மென்று மில்லை
யெல்லாமு மெப்போதும் பிரம ரூபம்
பூதமொடு பௌதிகமும் பிரம ரூபம்
புவனமொடு பொருளெவையும் பிரம ரூபஞ்
சாதமுறுஞ் சகலமுமே பிரம ரூபஞ்
சகசீவ பரங்களெலாம் பிரம ரூபம். (43)

மாயையிலை மருவுமகங் கார மில்லை
மனதுமிலை புத்தியிலை சித்த மில்லை
காயமிலை கருமமிலை கருத்தா வில்லை
காண்கின்ற பொறிகளிலை புலன்க ளில்லை
யாயபல வுயிர்களிலை யமர ரில்லை
யயனுமிலை யரியுமிலை யரனு மில்லை
யேயபொரு ளவையுமிலை யெல்லா மென்று
மேகபரி பூரணமாம் பிரம ரூபம். (44)

மாயையிலாத் தன்மையினான் மாயோ பாதி
மருவியிடு மீசனுடை வகுப்பு மில்லை
யாயபல வவித்தையிலாத் தன்மை யாலே
யவைமருவுஞ் சீவருடை வகுப்பு மில்லை
தூயவய னிலாமையினாற் சிருட்டி யில்லை
துலங்குமரி யிலாமையினாற் றிதியு மில்லை
நேயவர னிலாமையினா னாச மில்லை
நிகிலமுமே நிறைந்தபரப் பிரம ரூபம். (45)

பூசனைசெய் தெய்வமிலாத் தன்மை யாலே
பூசையிலை பூசிப்போர் தாமு மில்லை
மோசகமாந் தெய்வமிலாத் தன்மை யாலே
மோட்சமிலை முமுட்சையுளோர் தாமு மில்லை
பேசுமொரு திருசியமு மிலாமை யாலே
பிறங்கியிடுந் திருக்குமொரு காணு மில்லை
மாசணுவு மருவாத வறிவே யாக
மன்னியிடும் பரப்பிரமந் தானே யெல்லாம். (46)

கருதியிடுங் காரணமே யிலாமை யாலே
காரியமா யொருபொருளு மென்று மில்லை
மருவியிடுங் கருத்தாவே யிலாமை யாலே
மற்றவனான் மருவியிடும் பலனு மில்லை
சருவமெனுஞ் சத்தமுமே யிலாமை யாலே
சருவமென வொருபொருளு மென்று மில்லை
நிருமலமாய் நிட்களமாய் நிறைந்து நின்ற
நிகழ்வுருவாம் பரப்பிரமந் தானே யெல்லாம். (47)

பகுதியெனுங் காரணமு மிலவே யில்லை
  பகுதிதருங் காரியமு மிலவே யில்லை
விகுவிதமா மொருபொருளு மிலவே யில்லை
  விசித்திரமா மொருபொருளு மிலவே யில்லை
சகலமெனு மொருபொருளு மிலவே யில்லை
  சகசீவ பரங்களெலா மிலவே யில்லை
யகிலமுமே யகண்டபரி பூன்ற மான
  வறிவுருவாம் பரப்பிரம சொரூப மேயாம். (48)

ஒருபொருளு மொருகாலு மிலவே யில்லை
  யுள்ளதெலா மகண்டபரப் பிரம மாகும்
பிரமமதே நானாகு நானே யந்தப்
  பிரமமெனும் பாவனையா லகண்ட ஞான
மருவினவர் பேதமெலா முடனே மாற்றி
  மகத்தான சொரூபநிலை யடைவ ரென்றே
யரியசிவ னருளியவா றறைந்தே னித்தை
  யன்புடனே கேட்டுணர்வோர் பரமே யாவர். (49)

அருமையுட னகண்டபர சிவரூ பத்தை
  யநவரதந் தியானித்தவ் வருள்பெற் றோர்க்கே
நிருமலமாம் பரஞான மனதிற் றோன்றி
  நீக்கவொணா வஞ்ஞான மனைத்து நீங்கிப்
பரமதுவா யிருக்கின்ற முத்தி யன்றிப்
  பகர்முத்தி மற்றோருக் கில்லை யென்றே
பிரியமுடன் ரிபுமுனிவ னிதாக னுக்குப்
  பேதமிலாப் பரம்பொருளைப் பேசி னனால். (50)

வேறு.

கற்பிதப்பொருள் யாவையுமென்றுமே களங்கமின்றிய சிற்பரமா மெனுஞ், சிற்பரமதா னானெனுந்தியானத்தாற் சின்மயானந்த ஞானஞ்செறிந்ததா. லற்பமும்பவ பீதியிலாமலே யகண்டமாம்பர மாயிடலாமென, றற்பரானந்தத் தாண்டவமாடுநந் தாணுவின்பரி பூரணரூபமே. (51)

ஆக அத்தியாயம்-18-க்கு திருவிருத்தம்-828.

## பத்தொன்பதாவது

### ஞானியினது மகிமை யுரைக்கும் அத்தியாயம்.

தகும்பொருளை நிதாகநினக் கின்னஞ் சொல்வேன்
றடையறவே பரஞானந் திடமா மட்டும்
மிகும்பிரிய மேவியநன் மனதி னோடே
மெய்யான விப்பொருளை யொருமை யாய்க்கேள்
சகம்பரமுஞ் சீவர்களுஞ் சுத்தப் பொய்யே
சகலமுமே சின்மயமாம் பிரம ரூபந்
தகும்பிரம மதுவேநின் னிசசொ ரூபந்
தற்பரமே சகலர்க்கு நிசசொ ரூபம். (1)

அகம்பிரம மெனக்கயலாய்ச் சித்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சடமு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் மித்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யிருமை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யொருமை யில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (2)

அகம்பிரம மெனக்கயலாய் மாயை யில்லை
யகம்பிரம மெனக்கயலா யீச னில்லை
யகம்பிரம மெனக்கயலா யவித்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சீவ னில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சகத்து மில்லை
யகம்பிரம மெனக்கயலா யொன்று மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (3)

அகம்பிரம மெனக்கயலாய்ப் பூத மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் புவன மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் நாரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சூரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் திரியக் கில்லை
யகம்பிரம மெனக்கயலா யெவையு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (4)

அகப்பிரம மெனக்கயலாய்ப் பாவ மில்லை
யகம்பிரம மெனக்கயலா யறமு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் துக்க மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் சுகமு மில்லை
யகம்பிரம மெனக்கயலா யிகமு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பரமு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (5)

அகம்பிரம மெனக்கயலாய்த் தந்தை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தாய மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தமரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பிறரு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்க் குருவு மில்லை
யகம்பிரம மெனக்கயலா யெவரு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய்மைந்தா. (6)

அகம்பிரம மெனக்கயலாய்த் தீர்த்த மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தான மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்த் தெய்வ மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பூசை யில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ச் செயலு மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் பயனு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (7)

அகம்பிரம மெனக்கயலாய்த் தேக மில்லை
யகம்பிரம மெனக்கயலாய்ப் போக மில்லை
யகம்பிரம மெனக்கயலா யோக மில்லை
யகம்பிரம மெனக்கயலாய் ஞானமில்லை
யகம்பிரம மெனக்கயலாய் மோட்ச மில்லை
யகம்பிரம மெனக்கயலோ ரணுவு மில்லை
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றயலறவே யநவரத மறிவாய் மைந்தா. (8)

அகம்பிரம ஞானந்தா னிருவி கற்ப
மாகுமள வகிலமுமே பிரம மாகுந்
தகும்பிரம நானுரு நானே யந்தத்
தற்பரமாம் பிரமமெனு மப்யா சத்தாற்
செகம்பரமுஞ் சீவர்களுஞ் சிறிதுந் தோன்றாச்
சின்மயமா யிருக்கின்ற வகண்டா கார
வகம்பிரம ஞானத்தை யடைந்தே யத்தா
லனுதிபவ பாசத்தை யறுப்பாய் மைந்தா. (9)

அன்னியமே தோன்றாத வகண்டா கார
வறிவுதனை யடைந்தவனே முத்த னாமே
யின்னவித மகண்டபர ஞான முற்றோ
னிவ்வுலகி லெவ்விடத்து மரியனாவ
னுன்னவொணாப் பலகோடி சீவ ருக்கு
ளூரமான ஞானமுளோ னொருவன் றானே
யன்னவனைத் தரிசித்த மாத்திரத்தா
லறமேலா யகமெல்லா மழியு மன்றே. (10)

திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்
திடஞானி தெரிசனமே தேவ பூசை
திடஞானி தெரிசனமே செப தபங்கள்
திடஞானி தெரிசனமே செயு மறங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல்
திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை
திடஞானி தெரிசனமே மேவு தற்குத்
திரிவிதமா முலகத்து மரிதா மியார்க்கும். (11)

வரமான ஞானிக்கு மகிழ்வி னோடே
வளமான போசனமே யளிப்ப தாலுந்
திரமான ஞானிக்குத் தேவை யான
திரவியமே சிரத்தையொடு கொடுப்ப தாலும்
பரமான ஞானிக்குப் பத்தி யோடே
பலவிதமாம் பணிவிடையே செய்வ தாலு
மரிதான மோட்சசுக மெளிதே யாக
வடைந்திடலா மனுவுமிதி லைய மில்லை. (12)

ஞானியுடை யருச்சனையே செய்வ தாலே
ஞானபல மடைந்ததனாற் சீவன் முத்தி
யானபர மாநந்த மடைய லாகு
மதன்பின்பு பரமான விதேக முத்தி
தானுமதா லடைந்திடலா மாத லாலே
தளர்வுதரும் பவபீதி யனைத்துந் தள்ளி
யானியிலா முத்திநிலை யடைய வேண்டி
லறிஞனுடை யருச்சனையே செய்ய வேண்டும். (13)

நிதாகதிட ஞானியுடை நிச்ச யத்தை
நினக்குரமாய் மீளவுமே நிகழ்த்தக் கேளாய்
சதாநந்த கனமான பிரம மோநான்
சலனமிலாச் சாந்தபரப் பிரம மோநான்
சிதாகாய வடிவான பிரம மோநான்
செகசீவ பரங்களிலாப் பிரம மோநா
முதாரபரி பூரணமாம் பரநா னென்றே
யுணர்வுடையோ னுரமான நிச்ச யங்காண். (14)

உத்தமமா யொன்றான பிரம மோநா
னுள்ளுக்கு முள்ளான பிரம மோநா
னித்தியமாய் நீங்காத பிரம மோநா
னிறைவுக்கு நிறைவான பிரம மோநான்
சத்தியமாய்ச் சலியாத பிரம மோநான்
சருவான்ம சொரூபபரப் பிரம மோநா
னத்துவித பூரணமாம் பரநா னென்றே
யறிஞனுடை யழுத்தமுறு நிச்ச யங்காண். (15)

குணதோட மொன்றுமிலாப் பிரம மோநான்
குருவுக்குங் குருவான் பிரம மோநான்
கணமாதி காலமிலாப் பிரம மோநான்
கற்பனைக ளியாவுமிலாப் பிரம மோநா
னிணையொன்று மில்லாத பிரம மோநா
னேகபரி பூரணமாம் பிரம மோநா
னனுவேனு மணியமிலாப் பரநா னென்றே
யறிஞனுடை யழுத்தமுறு நிச்ச யங்காண். (16)

திரிகுணமுங் கடந்தபரப் பிரம மேநான்
றிகழ்புத்திக் கப்பாலாம் பிரம மேநான்
சுருதியுமே கடந்தபரப் பிரம மேநான்
சுழுன்மனதுக் கப்பாலாம் பிரம மேநான்
சருவமுமே கடந்தபரப் பிரம மேநான்
சரீரமுதற் கப்பாலாம் பிரம மேநா
னொருபுணர்வு மொன்ருத பரநா னென்றே
யுணர்வுடையோ னுரமான நிச்சய யங்காண். (17)

சாக்கிரமுங் கடந்தபரப் பிரம மேநான்
சார்கனவுங் கடந்தபரப் பிரம மேநான்
றூக்கமுமே கடக்தபரப் பிரம மேநான்
றுவிதமெலாங் கடந்தபரப் பிரம மேநா
னுக்கைகளுக் கப்பாலாம் பிரம மேநா
னபிமானிக் கப்பாலாம் பிரம மேநா
னீக்கமற நிறைவுற்ற பரநா னென்றே
நிகரற்ற வறிஞனுடை நிச்சய யங்காண். (18)

அலையுணர்வுக் கப்பாலாம் பிரம மேநா
னவித்தைக்கு மப்பாலாம் பிரம மேநான்
பலபொருளுக் கப்பாலாம் பிரம மேநான்
பரத்துக்கும் பரமான பிரம மேநா
னிலைமருவு முணர்வுருவாம் பிரம மேநா
னிகிலபரி பூரணமாம் பிரம மேநான்
சலனமிலாப் பரப்பிரம நானே யென்று
சாந்திமிகு மறிஞனுடை நிச்சய யங்காண். (19)

பேசியவிந் நிச்சயமுஞ் சமாதி விட்டுப்
பிரிவுற்ற காலத்தி லுள்ள தன்றிப்
பாசமிலாச் சமாதியினி லிருக்குங் காலைப்
பாவியவிந் நிச்சயமு மறிஞற் கில்லை
சாசுவத சமாதிதனிற் சலன மற்றுச்
சங்கற்ப விகற்பங்க ளனைத்து மற்றே
யாசில்பர மானந்த வருப வத்தோ
டாவரண மின்றியசஞ் சலமாய் நிற்பன். (20)

சலனமிலாச் சிலைபோலுங் காட்டம் போலுஞ்
சங்கற்ப விகற்பங்க ளொன்று மின்றிக்
கலனமுறாப் பிரமத்திற் பாலு நீருங்
கலப்பதுபோல் வேறறவே கலந்து சற்று
மலைவறவே வெறிதாகச் சுகித் திருக்கு
மறிஞனுடை யங்கிட்டை மகிமை தன்னை
நிலைமருவா மனத்தாலும் வசனத் தாலு
நினைந்திடவும் பகர்ந்திடவு மார்தாம் வல்லோர். (21)

அாறுத லரியாத லயனே யாத
லன்றியுள வநேகவித வமா ராதல்
பரஞானி மகிமைதனைக் கிஞ்சிலேனும்
பழுதறவே பாங்காகப் பகர்வ தற்கிங்
கொருபோதும் வல்லரல மனவாக் குக்க
ளொன்றாத மகிமைசொல' வார்தாம் வல்லோ
ரிருண்மேவா விவ்விதமா ஞானஞ் சார
லெவ்வுலகந் தனிலுமிக வரிதே யாமால். (22)

திரமான வகம்பிரம மென்னு ஞானந்
திரிவிதமா முலகத்து மரிதே யாகு
முரமாக வகம்பிரம ஞான மேவி
யுணர்வுருவாம் பரப்பிரம சொரூப நிட்டை
பிரியாத பரஞானி தன்னைக் கண்டு
பேசுவதே மிகவரிதா மொருகா லந்தப்
பரஞானி பணிவிடையே கிட்டு மாகிற்
பிரமான மோட்சநிலை தானுங் கிட்டும். (23)

ஞானிபத தீர்த்தத்தாற் றானஞ் செய்வோன்
ஞானகன் வடிவான பரமே யாவ
னனெவெகு சென்மத்தி லநுட்டிப் புற்ற
வறங்களெல்லாம் பரிபாக மான வர்க்கே
யீனமிலா ஞானியுடைத் தெரிச னந்தி
யெளிதாக விச்சென்மந் தன்னி லெய்து
மூனமிலா ஞானியுடைத் தெரிச னந்தி
யுறுவோர்க்குப் பவபீதி மீண்டு முண்டோ. (24)

இன்னவித மியம்பியதும் பிரம மேயா
மேகபரி பூரணமாம் பிரம மல்லா
தன்னியமாய்க் காண்பதெலாஞ் சுத்தப் பொய்யே
யவையெல்லா மத்தியந்தா பாவ மேயாம்
பன்னியதி லையமிலை யாத லாலே
பார்ப்பதெலாம் பிரமமென்று மதுநா னென்றும்
பின்னமிலா வகண்டபர ஞானம் பெற்றுப்
பேதமிலாப் பரப்பிரம வடிவே யாவாய். (25)

சங்கிரக மாகநினக் கிந்த வண்ணஞ்
சகலத்தின் சித்தாந்த மாகா நின்ற
பங்கமிலாப் பரம்பொருளைப் பகர்ந்தே னன்பாற்
பகர்ந்தபடி பழுதறவே கேட்டு ணர்ந்தோன்
சங்கமிலாப் பரப்பிரம வடிவே யாவன்
சாற்றியதை யனுதினமும் படிப்போன் றானுந்
துங்கபர ஞானத்தை யடைவாய் மேவித்
தூயபர வடிவாகிச் சுகமே சார்வன். (26)

பரஞானந் திடமாகும் பொருட்டு மீண்டும்
பழுதறவே பரமார்த்தம் பகரக் கேளா
யொருநாளு மொருபொருளு மெங்கு மில்லை
யுள்ளதெலா மகண்டபரப் பிரமா காரம்
பிரிவான வுலகமெலாம் பிரமா காரம்
பிறங்கியிடுஞ் சீவரெலாம் பிரமா காரம்
பரமான வீசனுமே பிரமா காரம்.
பரபதமு மகண்டபரப் பிரமா காரம். (27)

ஊனாகத் தோன்றுவதும் பிரமா கார
முயிர்முதலாய்த் தோன்றுவதும் பிரமா காரங்
கோனாகத் தோன்றுவதும் பிரமா காரங்
குருமுதலாய்த் தோன்றுவதும் பிரமா காரம்
நாநாவாய்த் தோன்றுவதும் பிரமா காரம்
நவநவமாய்த் தோன்றுவதும் பிரமா காரம்
நீநானாய்த் தோன்றுவதும் பிரமா காரம்
நிகழ்கின்ற தோற்றமெலாம் பிரமா காரம். (28)

அத்திறமாம் பரப்பிரம மானே னானே
யகங்கார மற்றபரப் பிரம நானே
யித்துவித மெவையுமிலாப் பிரம நானே
யேகசிதா காயபரப் பிரம நானே
சத்தியசிற் சுககனமாம் பிரம நானே
சலனமிலாச் சாந்தபரப் பிரம நானே
நித்தியமங் களமான பரநா னென்றே
நிச்சலமா யெப்போது நிச்ச யிப்பாய். (29)

அனைத்துமிலாச் சன்மாத்ர சொரூப நானே
யனைத்துமிலாச் சின்மாத்ர சொரூப நானே
யனைத்துமிலாச் சுகமாத்ர சொரூப நானே
யனைத்துமிலாச் சுத்தபர சொரூப நானே
யனைத்துமிலா வத்துவித சொரூப நானே
யனைத்துமிலா வனுமயமாஞ் சொரூப நானே
யனைத்துமிலா வகண்டபர சொரூப நானென்
றசஞ்சலமா யநவரத நிச்ச யிப்பாய். (30)

எப்போது மழியாத சொரூப நானே
யெப்போது மட்சரமாஞ் சொரூப நானே
யெப்போது மிருமையிலாச் சொரூப நானே
யெப்போது மேகமதாஞ் சொரூப நானே
யெப்போதும் பரிசுத்த சொரூப நானே
யெப்போதும் பிரஞ்ஞான சொரூப நானே
யெப்போதும் பரப்பிரம சொரூப நானென்
றிடையறவே யெளிதாக நிச்ச யிப்பாய். (31)

எப்போது மிருக்கின்ற சொரூப நானே
யெப்போது மிலங்கியிடுஞ் சொரூப நானே
யெப்போது மினிதான சொரூப நானே
யெப்போது மின்பகன சொரூப நானே
யெப்போது மெல்லாமாஞ் சொரூப நானே
யெப்போது மெவையுமிலாச் சொரூப நானே
யெப்போதும் பரப்பிரம சொரூப நானென்
றிடையறவே யெளிதாக நிச்ச யிப்பாய். (32)

எப்போதுஞ் சித்தாந்த சொரூப நானே
யெப்போதுஞ் சின்மயமாஞ் சொரூப நானே
யெப்போதுஞ் சத்தான சொரூப நானே
யெப்போதுஞ் சாந்தபர சொரூப நானே
யெப்போதுஞ் சுத்தமதாஞ் சொரூப நானே
யெப்போதுஞ் சூக்கபர சொரூப நானே
யெப்போதும் பரப்பிரம சொரூப நானென்
றிடையறவே யெளிதாக நிச்ச யிப்பாய். (33)

எப்போதுஞ் சமமான சொரூப நானே
யெப்போதுஞ் சலியாத சொரூப நானே
யெப்போது நிலைபெற்ற சொரூப நானே
யெப்போது நிச்சலமாஞ் சொரூப நானே
யெப்போது நிருமலமாஞ் சொரூப நானே
யெப்போது நிட்களமாஞ் சொரூப நானே
யெப்போது நிறைந்தபர சொரூப நானென்
றிடையறவே யெளிதாக நிச்ச யிப்பாய். (34)

எப்போது மாயையிலாச் சொரூப நானே
யெப்போது மவித்தையிலாச் சொரூப நானே
யெப்போது மீசனிலாச் சொரூப நானே
யெப்போதுஞ் சீவனிலாச் சொரூப நானே
யெப்போது மகண்டபர சொரூப நானே
யெப்போது மத்துவித சொரூப நானே
யெப்போது மேகபர சொரூப நானென்
றிடையறவே யெளிதாக நிச்ச யிப்பாய். (35)

எப்போது மான்மாவே பிரம மாகு
மெப்போதும் பிரமமதே யான்மா வாகு
மெப்போதும் பிரமத்துக் கயலன் றான்மா
வெப்போது மான்மாவுக் கயலொன் றில்லை
யெப்போது மெல்லாமு மான்மா வேயா
மெப்போது மெல்லாமும் பிரம மேயா
மெப்போது மான்மாவாம் பரநா னென்றே
யிருமையற வெளிதாக நிச்ச யிப்பாய். (36)

ஓதியவிவ் வகண்டபர நிச்ச யத்தா
 னுன்னுடைய மன்றினிடை யுதியா நின்ற
பேதமெலா மனுவுமிலா தொழிப்பாய் மைந்தா
 பேதமதே மகத்தான பீதி யாகு
மேதுமிலாச் சுழுத்தியினிற் பேத மில்லா
 திருப்பதனு லெள்ளளவும் பீதி யில்லை
பேதமுறு நனவுகனு விவ்வி ரண்டிற்
 பேதமிருக் கின்றதனுற் பீதி கண்டோம். (37)

ஆதலினுன் மகத்தான பீதிக் கெல்லா
 மாலயமா யிருக்கின்ற பேதந் தன்னைப்
பேதமிலா வகண்டபர நிச்ச யத்தின்
 பிரியாத பழக்கத்தா லொழிப்பாய் மைந்தா
வோதியவிவ் வகண்டபர நிச்ச யத்தை
 யுற்றவனே பவ்பாச முத்த னுனேன்
சாதகமா விதையென்றும் பழகு வோனுஞ்
 சம்சார பாசத்தான் முத்த னுவன். (38)

அநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே யகண்டபர ஞானி யானே
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே யிவ்வுலகிற் புருட னுனே
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே யான்மசுக மநுப விப்போ
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே யாந்தையிலாச் சீவன் முத்தன். (39)

அநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே யகிலர்க்கு மேலாய் நின்றே
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே பவதுக்க மனைத்துந் தீர்ந்தோ
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே நிரதிசயா நந்தஞ் சார்ந்தோ
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
 யடைந்தவனே யகண்டபரப் பிரம மானேன். (40)

அநவரத மகம்பிரம நிச்ச யத்தை
யடைந்தவனே பேதமெலா மறவி டுத்தோ
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
யடைந்தவனே பீதியெலா மறவொ ழித்தோ
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
யடைந்தவனே யபயபதத் தமர்ந்து நின்றோ
னநவரத மகம்பிரம நிச்ச யத்தை
யடைந்தவனே யாநந்த வடிவா கின்றோன். (41)

பிரமமக மகம்பிரம மென்றிவ் வண்ணம்
பேதமிலா வகம்பிரம நிச்ச யத்தைச்
சரிவரவே சந்ததமும் பழகா நின்றோன்
சத்தியசிற் சுககனமாம் பரமே யாவ
னரியவனே யாதலினு னீயெப் போது
மன்புடனே யகம்பிரம நிச்ச யத்தைப்
பிரிவறவே பழகியதாற் பேதந் தீர்ந்து
பின்னமிலா வகண்டபரப் பிரம மாவாய். (42)

இருமையிலா வகண்டபர நிச்ச யத்தி
னியல்புதனை நிதாகநினக் கின்னஞ் சொல்வேன்
சருவமெனக் காண்கின்ற நாம ரூபஞ்
சற்றுமொரு காலத்து மிலவே யில்லை
பிரிவெனவே காண்கின்ற நாம ரூப
பேதமெலா மகண்டபரப் பிரம மாகுந்
தெரிவுருவா மப்பிரம நானே யென்னுந்
திடவுணர்வே யகண்டபர நிச்ச யங்காண். (43)

யானென்றுந் தேகமலன் றேகி யல்லன்
யானென்றும் பொறிகளலன் புலன்க ளல்லன்
யானென்று முயிர்களலன் வுள்ள மல்லன்
யானென்றும் புத்தியலன் சித்த மல்லன்
யானென்று மிகவுமகங் கார மல்லன்
யானென்று மிதன்மூலாஞ் ஞான மல்லன்
யானென்றும் பரப்பிரம மெனக்கு வேறு
மெள்ளளவு மிலையெனவே நிச்ச யிப்பாய். (44)

யானென்றுஞ் சனிப்பனலன் மரிப்போ னல்லன்
யானென்று மந்தனலன் வெதிர னல்லன்
யானென்று மீனனலன் பெலவா னல்லன்
யானென்று நினைப்பனலன் மறப்போ னல்லன்
யானென்று மஞ்ஞனல னறிஞ னல்லன்
யானென்றும் பெத்தனலன் முத்த னல்லன்
யானென்றும் பரப்பிரம மெனக்கு வேறு
யெள்ளளவு மில்லையெனவே நிச்ச யிப்பாய். (45)

யானென்றுங் கருவியலன் கரும மல்லன்
யானெவையும் செய்கின்ற கருத்தா வல்லன்
யானென்றும் போகமலன் போக்ய மல்லன்
யானெவையும் புசிக்கின்ற போத்தா வல்லன்
யானென்று ஞானமலன் ஞேய மல்லன்
யானெவையு மறிகின்ற ஞாதா வல்லன்
யானென்றும் பரப்பிரம மெனக்கு வேறு
யெள்ளளவு மில்லையெனவே நிச்ச யிப்பாய். (46)

யானென்றும் பஞ்சவித கோச மல்லன்
யானென்று மவையினபி மானி யல்லன்
யானென்று மூன்றுவித தேக மல்லன்
யானென்று மவையினபி மானி யல்லன்
யானென்று மூன்றுவித வவத்தை யல்லன்
யானென்று மவையறியுஞ் சாட்சி யல்லன்
யானென்றும் பரப்பிரம மெனக்கு வேறு
யெள்ளளவு மில்லையெனவே நிச்ச யிப்பாய். (47)

யானென்றுஞ் சமட்டியலன் வியட்டி யல்லன்
யானென்று மவையினபி மானி யல்லன்
யானென்றுந் திரிபுடியா தொன்று மல்லன்
யானென்றுந் திருசியமே தொன்று மல்லன்
யானென்றுஞ் சீவனல னீச னல்லன்
யானென்றுஞ் சகமுதலே தொன்று மல்லன்
யானென்றும் பரப்பிரம மெனக்கு வேறு
யெள்ளளவு மில்லையெனவே நிச்ச யிப்பாய். (48)

யானென்றுஞ் சத்தியசிற் சுகமாம் வத்து
யானென்றுஞ் சகலமுமாய் நிறைந்த வத்து
யானென்று நித்தியமங் களமாம் வத்து
யானென்று நிரதிசயா நந்த வத்து
யானென்று மத்துவித மான வத்து
யானென்று மகண்டபரி பூன்ற வத்து
யானென்றும் பரப்பிரம வத்து வேறொன்
றெள்ளளவு மிலையெனவே நிச்ச யிப்பாய். (49)

யானென்று நிச்சலமாய் நின்ற வத்து
யானென்று நிருமலமாய் நிகழும் வத்து
யானென்று மெவைக்குமினி தான வத்து
யானென்று மேகபரி பூன்ற வத்து
யானென்றுஞ் சருவான்ம சொரூப வத்து
யானென்றுஞ் சலனமிலாச் சாந்த வத்து
யானென்றும் பரப்பிரம வத்து வேறொன்
றெள்ளளவு மிலையெனவே நிச்ச யிப்பாய். (50)

யானென்று நிட்களமாம் பிரம ரூபம்
யானென்று நிருமலமாம் பிரம ரூபம்
யானென்று நிர்க்குணமாம் பிரம ரூபம்
யானென்று நிரஞ்சனமாம் பிரம ரூபம்
யானென்று நிராமயமாம் பிரம ரூபம்
யானென்று நிகரற்ற பிரம ரூபம்
யானென்று மகண்டபரப் பிரம ரூப
மெனக்கயலே யில்லையென நிச்ச யிப்பாய். (51)

யானென்றுஞ் சன்மயமாம் பிரம ரூபம்
யானென்றுஞ் சின்மயமாம் பிரம ரூபம்
யானென்றுஞ் சுகமயமாம் பிரம ரூபம்
யானென்றுஞ் சுத்தபரப் பிரம ரூபம்
யானென்று மிருமையிலாப் பிரம ரூபம்
யானென்று மேகபரப் பிரம ரூபம்
யானென்று மகண்டபரப் பிரம ரூப
மெனக்கயலே யில்லையென நிச்ச யிப்பாய். (52)

சாற்றியவிவ் வகண்டபர நிச்ச யத்தின்
சந்ததமுஞ் சலியாத பழக்கத் தாலே
தோற்றியவிப் பலவிதமா நாம ரூபத்
துவிதத்தின் றேற்றமெலா மற மறந்தே
யேற்றியவிவ் வகண்டபரப் பிரமத் தின்க
ணெப்போது மேகரச மாகி நின்று
போற்றியநின் சொரூபசுக மநுப வித்துப்
பூரணமாம் பரப்பிரம வடிவே யாவாய். (53)

துவிதமெலாங் காண்கின்ற கனவே போலாந்
துவிதமெலாங் கந்தர்வ நகரே போலாந்
துவிதமெலாங் கானலினீர் நிகரே யாகுந்
துவிதமகேந் திரசால நிகரே யாகும்
துவிதமெலாஞ் சசசிருங்க நிகரே யாகுந்
துவிதமெலா நரசிருங்க நிகரே யாகுந்
துவிதமெலா மலடிமக னிகரே யாகுந்
துவிதமெலா மாகமலர் நிகரே யாமால். (54)

ஆசிரிய னடைவாகச் சீட னுக்கிங்
கத்துவித வுபதேசஞ் செய்கா லத்தும்
பாசமுறுந் துவிதத்தை யுண்மை யாகப்
பகரவிலை யவன்மனதை யநுச ரித்தே
பேசியுடன் பரமார்த்த மாகா நின்ற
பின்னமிலா வத்துவித முபதே சிப்ப
னேசமுடன் யானுமமாய் நினக்குச் சொல்லு
நீதியிதி னிகழ்த்தியவோர் திட்டாந் தங்கேள். (55)

தந்தைமுதன் மரணத்திற் பந்து வன்றித்
தளர்தனயன் றிரவியமே தந்த மைத்து
வந்தசன மழுகின்ற நீதி யன்றோன்
வழங்குதனப் பொருட்டன்றி யுண்மை யன்றே
யந்தவித மாசிரியன் சீட னுக்கிங்
கத்துவிதம் புகலுங்காற் றுவித மோதன்
மைந்தவிதி லையமிலை யதனாற் றெய்த
மறந்தென்று மத்துவித வடிவே யாவாய். (56

அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றநவரத மதிதிடமாய் நிச்ச யித்து
மிகும்பிரம பாவனையே தொடர்பாய்ச் செய்து
மேவியவித் துவிதமெலா மிக மறந்தே
யகம்பிரம ஞானமது நிருவி கற்ப
மானவுட னசஞ்சலமாய்ச் சிலையே போலத்
தகும்பிரம வடிவாகித் தளர்வு தீர்ந்து
தடையற்ற வாநந்த மநுப விப்பாய். (57)

சகம்பணியும் பரமசிவ னெனக்கு முன்னஞ்
சகலர்க்கு மிதமாக வருளிச் செய்த
வகம்பிரம ஞானத்தை நினக்கிவ் வண்ண
மருள்செய்தே னெங்குமிக வரிதா மிந்தத்
தகும்பொருளின் சிரவணமே யாதி செய்வோன்
றடையற்ற வகண்டபர ஞானம் பெற்றே
யகம்பிரம வாக்கினிலக் கியமாய் நின்ற
வகண்டபர வடிவாவ னைய மில்லை. (58)

வேதமுத லோதலினல் யாகந் தன்னல்
விரதத்தா லியமமுதல் யோகாங் கத்தாற்
சாதகமாந் தானத்தான் மற்று முள்ள
சகலவித கருமத்தாற் பரசி வத்தைப்
பேதமற வறிவமெனு மிச்சை யுண்டாம்
பின்னமிலாச் சிவவடிவா மகாலிங் கத்தைத்
தீதறவே யநவரதம் பூசிப் போர்க்கே
திடஞானமுண்டாகி மோகந் தீரும். (59)

அகிலபரி பூரணமா யனைத்து முண்டா
யடங்குவதற் காலயமாஞ் சிவரூ பந்தா
னிகரின்மகா லிங்கமித னநுசந் தானம்
நிரந்தரமாய்ச் செய்வதுவே யிவற்றின் பூசை
யகமதனி லிப்பூசை செய்வோ ருக்கே
யகண்டபர சிவனருளா லறிவுண் டாமென்
றிகழ்வறவே ரிபுமுனிவ னிதாக னுக்கங்
கினமுறுப் பரம்பொருளை யிசைத்தா னன்றே. (60)

வேறு.

நேசமாய்ப்பர நிச்சயமேவிய நிருவிகற்பக ஞானமடைந்ததா
ஞசமேவிய விப்பலபேதமா நாமரூப மனைத்துமறந்துடன்
பாசமின்றிய சிற்பரரூபமாய்ப் பந்தம்யாவும் விடுத்திடலாமென
வாசிலாநந்தத் தாண்டவமாடுநம் மாண்டவன்பரி பூரணரூபமே.(61)

பத்தொன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 19-க்கு திருவிருத்தம்-889.

++++++++++++++++++++++++++++++++++++++++

## இ ரு ப தா வ து

## பரசோரூப நிச்சயத்தாற் பரமுத்தி யுரைக்கும் அத்தியாயம்.

சகலவித வுலகத்துஞ் சார்வ தற்குச்
சாலவுமே யரிதான நிர்ண யத்தை
மிகவரிதாம் பரஞான முரக்கும் வண்ண
மீளவுமே நிதாகநினக் கருளக் கேளா
யிகபரமா யிலங்கியவிந் நாம ரூப
மெல்லாமு மெப்போதும் பிரம ரூப
மகிலபரி பூரணமா யகண்ட மான
வப்பிரம மகிலர்க்கு மான்ம ரூபம். (1)

நான்பிரம நீபிரம நாநா வாக
நாடியிடு முலகமெலாம் பிரம ரூபந்
தான்பிரமந் தமர்பிரமந் தனக்கு வேறாய்த்
தங்கியிடுஞ் சனங்களெலாம் பிரம ரூபங்
கோன்பிரமங் குருபிரமங் குறித்துக் கண்ட
கூறுபடும் பொருளெல்லாம் பிரம ரூபங்
கான்பிரமங் கிரிபிரமங் காணு நின்ற
காரியகா ரணமெல்லாம் பிரம ரூபம். (2)

அத்துவித பூரணமாம் பிரமத் துக்கிங்
கன்னியமா யணுவேனு மிலவே யில்லை
வித்தரமாய்க் காண்பதெலாம் பிரம ரூபம்
விபுவான பிரமமதே யான்ம ரூபம்
புத்திரனே யாதலினு லென்று மெல்லாம்
பூரணமாம் பரப்பிரம ரூப மென்று
நித்தியமா மப்பிரம நானே யென்று
நிச்சலமா முறுதியினன் முத்த னுவாய். (3)

உத்தமமாம் வேதமெலாம் பிரம ரூப
முபநிடதம் யாவையுமே பிரம ரூபம்
வித்தாமாங் கர்லமெலாம் பிரம ரூபம்
விதம்விதமாந் தேசமெலாம் பிரம ரூபஞ்
சித்திரமாம் வத்துவெலாம் பிரம ரூபஞ்
சிற்சடமாய்த் தெரிவதெலாம் பிரம ரூபஞ்
சத்தியமா மப்பிரம நானே யென்னுஞ்
சலனமிலா வுறுதியினன் முத்த னாவாய். (4)

அானரியு மயனுருவும் பிரம ரூப
மமரர்நரர் திரியக்கும் பிரம ரூபம்
விரவுமையும் பாசிவனும் பிரம ரூபம்
விநாயகனும் வேலவனும் பிரம ரூபம்
பரமசிவ கணமெவையும் பிரம ரூபம்
பாசீவ சகங்களெலாம் பிரம ரூப
நிருமலமா மப்பிரம நானே யென்னு
நிச்சலமா முறுதியினன் முத்த னாவாய். (5)

பிரணவமா மந்திரமும் பிரம ரூபம்
பின்னுமுள மந்திரமும் பிரம ரூபம்
பரவியபஞ் சாட்சரமும் பிரம ரூபம்
பத்தியுட னதன்செபமும் பிரம ரூபம்
புரைமருவா ரேசகமும் பிரம ரூபம்
பூரகமுங் கும்பகமும் பிரம ரூபஞ்
சருவமுமா மப்பிரம நானே யென்னுஞ்
சலனமிலா வுறுதியினன் முத்த னாவாய். (6)

அஞ்சனமா மஞ்ஞானம் பிரம ரூப
மகங்கார முதலியதும் பிரம ரூபம்
பஞ்சமகா பூதமுமே பிரம ரூபம்
பலவிதமாம் பௌதிகமும் பிரம ரூப
மிஞ்சியுள பொருளெவையும் பிரம ரூப
மெய்போன்ற துவிதமெலாம் பிரம ரூபஞ்
சஞ்சலமி லப்பிரம நானே யென்னுஞ்
சலியாத வுறுதியினன் முத்த னாவாய். (7)

பேதமெனத் தோற்றியவித் துவித மெல்லாம்
பின்னமிலா வத்துவிதப் பிரம மென்றே
யோதியவிந் நிச்சயமிங் குமரா யுற்றோ
னுடனிந்தப் பவபாச முத்த னுவன்
பேதமுறு மாமூட ரொருகா லத்தும்
பின்னமிலா வகண்டபர முத்தி மேவா
ரேதுமிதி லையமிலை யெவையு மோர்ந்த
வெமதீச னியம்பியதி லைய முண்டோ. (8)

அற்பமுமே யறியாத சிலமா மூட
ரத்துவித மாதரியார் வெறும் பொய்யான
கற்பிதமாந் துவிதமிதே யுண்மை யென்று
கதறுவராம் மாமூட ருடனே யென்று
மற்பமுமே பேசவொணா தன்னோ ருக்கோ
ரணுவேனு மளிக்கவொணா தவரைக் கண்டாற்
சொற்பமுமே வணங்கவொணா தவரெப் போதுஞ்
சுத்தமகா மூடரென வுணர வேண்டும். (9)

கற்பிதமாந் துவிதமிதே யுண்மை யென்று
கதறியிடுங் கயவர்களைக் கண்ட போது
மற்பமிலா வத்துவித மறிந்த தீர
ரக்கயவ ரொருகாலு மில்லை யென்றும்
பற்பலவாய்ப் பார்க்கின்ற துவித மெல்லாம்
பரமசிதா காயபரப் பிரம மென்றுந்
தற்பிரமந் தாமென்று முறுதி கொண்டே
தமதுநிலை தவிராம லிருக்க வேண்டும். (10)

சருவமுமே சின்மாத்ர மாத லாலுஞ்
சருவமுமே சுகமாத்ர மாத லாலு
மிருமையெனுந் துவிதமொரு காலு மில்லை
யித்துவித வாதிகளு மென்று மில்லை
யொருவடிவா நமக்கயலே யிலாமை யாலே
யொருகாலு மொருபயமு மில்லை யென்றே
*தாளமிலா வத்துவித வுறுதி கொண்டே
தமதுநிலை தவிராம லிருக்க வேண்டும். (11)

* தாளம்—அசைவு.

சத்தியசிற் சுககனமாம் பிரம மல்லாற்
சகமுதலாந் துவிதமொரு காலு மில்லை
சித்திரமாய்த் தோற்றியவித் துவித மெல்லாஞ்
சின்மயமாம் பரப்பிரம சொரூப மேயாம்
புத்திரனே பூரணமாஞ் சிவன்றன் ஞானை
புகன்றதிலோ ரையமிலை யாத லாலே
யத்துவித நிச்சயமே யடைந்த வற்று
லகண்டபர வடிவாகி முத்த னுவாய். (12)

பலகால வாதனையாற் றுவிதந் தானே
பரமார்த்த மென்றுநினை வுதித்த போதுந்
தொலையாத துவிதவடி வாகத் தானே
துவிதத்தை நினையாம லவற்றை யெல்லா
மலையாத வதிட்டான வறிவாய் நின்ற
வத்துவித மானபர வடிவே யாகச்
சலியாம லெப்போது நினைத்தே யத்தாற்
சத்தியசிற் சுகவடிவாய் முத்த னுவாய். (13)

அலைமனது முதலியதற் கதீத மாகி
யகங்கார முதலியதற் கதீத மாகி
நிலைமருவாக் காலத்துக் கதீத மாகி
நிகிலசக சீவர்க்கு மதீத மாகி
யிலகுமறை யீற்றிற்கு மதீத மாகி
யித்துவிதம் யாவுக்கு மதீத மான
சலனமிலாப் பரவடிவே யனைத்து மென்று
சந்ததமு நினைத்தனன் முத்த னுவாய். (14)

சதாநந்த மயமான பிரம நானே
சன்மாத்ர மானபரப் பிரம நானே
சிதாநந்த மயமான பிரம நானே
சின்மாத்ர மானபரப் பிரம நானே
யுதாரபரி பூரணமா மெனக்கு வேறு
யோரணுவுந் துவிதமொரு காலு மில்லை
சதாவுமெலாம் பரமான நானே யென்று
சலியாது பாவித்து முத்த னுவாய். (15)

சுத்தபர மாநந்த சொரூப நானே
 சூனியவா நந்தபர சொரூப நானே
நித்தபர மாநந்த சொரூப நானே
 நிசாநந்த மானபர சொரூப நானே
யத்துவித வாநந்த சொரூப நானே
 யகண்டபர மாநந்த சொரூப நானே
யித்துவித மணுவேனு மெனக்கு வேறு
 யில்லையெனவே பாவித்து முத்த னுவாய். (16)

புத்தபர மாநந்த சொரூப நானே
 பூரணவா நந்தபர சொரூப நானே
முத்தபர மாநந்த சொரூப நானே
 மோனமகா நந்தபர சொரூப நானே
சத்தியஞா னநந்த சொரூப நானே
 சாந்தபர மாநந்த சொரூப நானே
யித்துவித மணுவேனு மெனக்கு வேறு
 யில்லையெனவே பாவித்து முத்த னுவாய். (17)

அத்துவித வடிவான வெனக்கு வேறு
 யணுவுமில்லை யகண்டபர நானே யென்று
மித்திறமா நிச்சயமே செய்தெப் போது
 மிணையற்ற பிரமசுக மிசைவா யிங்கே
புத்திரனே திடமான நிச்ச யந்தான்
 பூரணமா ஞானத்துக் கிலக்க ணங்கா
ணத்திறமா நிச்சயமே யகண்ட முத்தி
 யடைந்தபய மாகுவதற் கேதுவா மால். (18)

நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
 நின்மனதின் சங்கையெலா மடைவாய் நீங்கு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
 நின்மனது நின்னிடையே சாந்தி மேவு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
 நின்மனது நிர்மலமாய் நிறைந்து நிற்கு
நிச்சயமே திடமாகச் செய்ய்ச் செய்ய
 நின்மனது நிரதிசயா நந்தஞ் சாரும். (19)

நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது துவிதமெலா மிழந்த தாகு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனதிங் கத்துவித மடைந்த தாகு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது சீவத்வ மிறந்த தாகு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நிறைந்தபரப் பிரம மாமே. (20)

நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நிகரற்ற நிராஞ் சாரு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நிரதிசய திருத்தி மேவு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நித்தியமங் களமே யாகு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நிசவடிவி னிலேத்த தாமே. (21)

நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நினைவெவையு மறந்த தாகு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது பயமெவையு மிறந்த தாகு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனதிங் கபயபதஞ் செறிந்த தாகு
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நின்சகச சொரூப மாமே. (22)

மனதுசதா நின்சகச சொரூப மானுன்
மற்றதுதான் மீளாது மாய்ந்து போகு
மனதுடைய மீளாத மாய்வு தானே
மகத்தான மோட்சநிலை யதனுன் மைந்தா
மனததனை மீளாது மாய்க்க வேண்டி
மகத்தான பரப்பிரம நிச்ச யத்தை
முனதொருமை யுடன்செய்து மனதை மாய்த்து
மகத்தான முத்திநிலை மருவி நிற்பாய். (23)

அகண்டபரப் பிரமத்துக் கயலே யில்லை
யகிலமுமவ் வகண்டபரப் பிரம மென்று
மகண்டபரப் பிரமமது வகமே யென்று
மகமந்த வகண்டபரப் பிரம மென்று
மகண்டபர பாவனையே திடமாய்ச் செய்திவ்
வயலனுவுந் தோன்றும லழிந்த பின்பவ்
வகண்டபர பாவனையுஞ் செயாது தள்ளி
யாநந்த வடிவாக வமர்ந்து நிற்பாய். (24)

உன்னியவவ் வாநந்த வடிவுந் தள்ளி
யுரமாக வொருவடிவே யாகி நிற்பா
யன்னியமி லொருவடிவென் பதையுந் தள்ளி
யதன்பின்பு நிர்க்குணமே யாகி நிற்பாய்
மன்னியவந் நிர்க்குணமென் பதையுந் தள்ளி
மனவாக்குக் கெட்டாத வடிவாய் நிற்பா
யன்னதையுந் தள்ளியபின் னறிவு மாத்ர
மாயதையு மிழந்தான்ம மாத்ர மாவாய். (25)

அன்னதையுந் தள்ளியபின் பிரம மாத்ர
மாயிடுவாய் மற்றதையுந் தள்ளி யிங்குச்
சொன்னவெலா மிழந்துவெறி தாக நிற்பாய்
சொன்னதையுந் தள்ளிமிக வெறிதாய் நிற்பாய்
பின்னுளமே முதலியவோ ருபாதி யின்றிப்
பேசவொணாச் சூனியமா நிலையி னிற்பா
யின்னவித சூனியமு மிழந்த பின்ன
ரெவ்வடிவோ வவ்வடிவே யாகி நிற்பாய். (26)

நிற்பதெனுந் தன்மையுமே யிழந்த பின்னர்
நீநீயா யிருக்கின்ற சுபாவந் தன்னைச்
சொற்பமுமே வாக்கானு மனத்தி னானுஞ்
சொல்லவொணா தெண்ணவொணா தாத லாலே
தற்பரமாஞ் சகசநிலை சார்ந்த பின்னர்த்
தான்றானே தானாகத் தனித் திருப்பா
யற்பமுமே விகற்பமிலா வவ்வி ருப்பை
யறைந்திடவு நினைந்திடவு மார்தாம் வல்லோர். (27)

சொல்லியவிவ் விதமாக வனைத்துந் தள்ளிச்
சுத்தபர வடிவாகிச் சுயமாய் நிற்பா
யல்லதெலாந் தள்ளுமே யகண்ட மான
வகமெனவே யநவரத மநுசந் திப்பா
யெல்லையிலா வகண்டபர நானே யென்றிங்
கெப்போதும் பழகியவிவ் வநுசந் தானங்
கல்லெனவே திடமான நிருவி கற்பங்
கைவசமே யாகுவதிற் காரணங் காண். (28)

ஆதலினு லனைத்துக்கு மதீத மான
வகண்டபரப் பிரமமக மென்றெப் போதுஞ்
சாதகமாம் பாவனையே செய்தக் காலே
சஞ்சலமாம் விகற்பமெலாந் தவிர்ந்தெப் போதும்
பேதமிலாப் பரப்பிரம ஞானி யாகிப்
பின்னமிலாப் பரப்பிரம வடிவே யாவா
யீதையலா லெளிதாக முத்தி சார
வேறொன்று முபாயமிலை யிதுவே யுண்மை. (29)

எப்போது மகண்டபரப் பிரமந் தன்னை
யெளிதாகப் பாவித்தே யிருமை தீர்வா
யெப்போது மகண்டபரப் பிரமந் தன்னை
யெளிதாகப் பாவித்தே யொருமை சார்வா
யெப்போது மகண்டபரப் பிரமந் தன்னை
யெளிதாகப் பாவித்தே துன்பந் தீர்வா
யெப்போது மகண்டபரப் பிரமந் தன்னை
யெளிதாகப் பாவித்தே யின்பஞ் சார்வாய். (30)

எப்போதும் புத்தபரப் பிரம நானே
யெப்போதும் பூரணமாம் பிரம நானே
யெப்போது நித்தபரப் பிரம நானே
யெப்போது நிர்க்குணமாம் பிரம நானே
யெப்போதுஞ் சுத்தபரப் பிரம நானே
யெப்போதுஞ் சுககனமாம் பிரம நானே
யெப்போது முத்தபரப் பிரம நானென்
றெளிதாகப் பாவித்தே முத்த னவாய். (31)

எப்போதுஞ் சாந்தபரப் பிரம நானே
  யெப்போதுஞ் சலனமிலாப் பிரம நானே
யெப்போது மேகபரப் பிரம நானே
  யெப்போது மிருமையிலாப் பிரம நானே
யெப்போதுந் தூயபரப் பிரம நானே
  யெப்போதுந் தோடமிலாப் பிரம நானே
யெப்போது மகண்டபரப் பிரம நானென்
  றெளிதாகப் பாவித்தே முத்த னுவாய். (32)

எப்போது மியம்பாமன் மௌன மாகி
  யெவருடனுங் கூடாம லேகாந் தத்திற்
கற்போல வசையாம லிருந்து சற்றுங்
  கலங்காத மனதுடனே யொருமை யாகிச்
சற்போத சுககனமாம் பரநா னென்றே
  சந்ததமும் பாவித்துச் சாந்த னுகித்
தற்போத சூனியனுய் விகற்பந் தீர்ந்து
  தற்பதமே தானுகி முத்த னுவாய். (33)

தேகமுத லொருகாலு நானன் றென்றுந்
  தெரிவுருவாம் பரப்பிரம நானே யென்றும்
பாகமுற வொருபொருளு மில்லை யென்றும்
  பலபொருளும் பரப்பிரமந் தானே யென்று
மேகபர பாவனையே யிடைவி டாம
  லெப்போது மினிமையுடன் செய்வா யாகின்
மோகமெலா மொழிந்துடனே முத்த னுவாய்
  மொழிந்ததிலோ ரையமிலை சத்தி யந்தான். (34)

சத்தியசிற் சுககனமாம் பரமே நானுஞ்
  சத்தியசிற் சுககனமாம் பரமே நீயுஞ்
சத்தியசிற் சுககனமாம் பரமே யாருஞ்
  சத்தியசிற் சுககனமாம் பரமே யெல்லாஞ்
சத்தியசிற் சுககனமாம் பரமே யல்லாற்
  சகசீவ பரங்களெனச் சிறிது மில்லை
சத்தியசிற் சுககனயாஞ் சிவன்றன் னுணை
  சாற்றியதிற் சங்கையிலை சத்தி யந்தான். (35)

பூதமெலாஞ் சத்தியசிற் சுகமே யாகும்
புவனமெலாஞ் சத்தியசிற் சுகமே யாகுஞ்
சாதமெலாஞ் சத்தியசிற் சுகமே யாகுஞ்
சனியாதுஞ் சத்தியசிற் சுகமே யாகும்
வேதமெலாஞ் சத்தியசிற் சுகமே யாகும்
விரிநூலுஞ் சத்தியசிற் சுகமே யாகு
மாதவவச் சத்தியசிற் சுகநா னென்றே
மயங்காம லெப்போது மநுசந் திப்பாய். (36)

சாதனமுஞ் சத்தியசிற் சுகமே யாகுஞ்
சாத்தியமுஞ் சத்தியசிற் சுகமே யாகும்
வேதனமுஞ் சத்தியசிற் சுகமே யாகும்
வேத்தியமுஞ் சத்தியசிற் சுகமே யாகும்
பேதமெலாஞ் சத்தியசிற் சுகமே யாகும்
பின்னெவையுஞ் சத்தியசிற் சுகமே யாகு
மாதவவச் சத்தியசிற் சுகநா னென்றே
மயக்கமற வெப்போது மநுசந் திப்பாய். (37)

அகமெனலுஞ் சத்தியசிற் சுகமே யாகு
மயலெனலுஞ் சத்தியசிற் சுகமே யாகுஞ்
செகமெவையுஞ் சத்தியசிற் சுகமே யாகுஞ்
சீவரெலாஞ் சத்தியசிற் சுகமே யாகு
நிகழ்பரனுஞ் சத்தியசிற் சுகமே யாகு
நிகிலமுமச் சத்தியசிற் சுகமே யாகுஞ்
சகலமுமாஞ் சத்தியசிற் சுகநா னென்றே
சலனமற வெப்போது மநுசந் திப்பாய். (38)

தாரணியே முதலியதாய்க் காண்ப தெல்லாந்
தற்பரமாஞ் சத்தியசிற் சுகசொ ரூபங்
காரணகா ரியமாகக் காண்ப தெல்லாங்
களங்கமிலாச் சத்தியசிற் சுகசொ ரூபம்
பூரணமாம் பொருளுக்கும் பூன்ற மாகப்
புகல்பொருளுஞ் சத்தியசிற் சுகசொ ரூப
மாரணவீ றறிவிக்கு மச்சொ ரூப
மகமெனவே யநிதிடயா யநுசந் திப்பாய். (39)

இருமையென வொருமையென வியம்ப லுற்ற
வெப்பொருளுஞ் சத்தியசிற் சுகசொ ரூப
மரியமறை முதலவற்றின் சித்தாந்தங்க
ளகிலமுமச் சத்தியசிற் சுகசொ ரூபஞ்
சருவசக சீவர்க்குஞ் சாட்சி யான
சம்புவுமச் சத்தியசிற் சுகசொ ரூபஞ்
சுருதிமுடி யறிவிக்கு மச்சொ ரூபஞ்
சுயமெனவே யெப்போது மநுசந் திப்பாய். (40)

தேகமுதற் றிருசியமுந் திருக்குந் தானுந்
தெளிவான சத்தியசிற் சுகசொ ரூபம்
போகமொடு போக்கியமும் புசிப்போன் றானும்
பூரணமாஞ் சத்தியசிற் சுகசொ ரூபம்
பாகமிலாப் பரப்பிரம ஞானந் தானும்
பரமான சத்தியசிற் சுகசொ ரூப
மாகமவீ றறிவிக்கு மச்சொ ரூப
மகமெனவே யநவரத மநுசந் திப்பாய். (41)

சத்தியசிற் சுககனமாம் பிரமந் தானே
சகலமென்று மப்பிரம நானே யென்று
மித்திறமாந் திடமான வநுசந் தான
மெப்போது மிடையறவே செய்தே யித்தாற்
சத்தியசிற் சுககனவப் பரமே யாகிச்
சங்கற்ப விகற்பங்க ளனைத்துந் தள்ளி
யத்துவித பூரணமா யிருப்ப தான
வகண்டபர முத்திதனை யடைவாய் மைந்தா. (42)

பரமசிவன் கருணையினு லெனக் குரைத்த
பரம்பொருளை நினக்கருளாற் பகர லுற்றே
னரியதினு மரிதான விவ்வர்த் தத்தை
யத்யந்த மூடரிடை விவேகி யானே
ரொருபொழுது முரைக்கவொண தன்றே ரின்பா
லோதியவிப் பொருண்மிகவும் புனித மேனும்
புரைமருவு மம்மூடர் புணர்ச்சி யாலே
புனிதமிலாப் பொருளெனவே வியர்த்தமாகும். (43)

விமலபர விவேகவலி யுள்ள தீரர்
விடயாசை மிருந்தவெறு மூட ரோடே
மமதையுட னொருகாலும் பேச வொண்ணு
மற்றவரை மனத்தாலு மநிக்க வொண்ணு
வமலபர வுணர்வுரமாய் முத்தி சேர
வகிலவிட யாசைவிட லன்றூ வேது
நிமலமிலா மூடருடன் சகவா சத்தா
னீத்தவிட யாசையுமே மீளு மன்றே (44)

நற்பிரம விவேகவலி யுள்ள தீரர்
நாரிமுதற் சுகத்திச்சை நண்ணும் போதும்
பற்பலவாய்த் தோற்றியவச் சுகத்தை யெல்லாம்
பரப்பிரம சொரூபசுக மெனவே யோர்ந்து
கற்பிதமாம் விடயசுக மநுப விக்கக்
கனவிலுமே நினையாது தைரி யத்தோ
டற்பமிலா வகண்டபர சுகமே சேர
வகண்டபர ஞானபெல மடைய வேண்டும். (45)

வேதமுத னூற்களெலா மிகவுங் கற்ற
வேதியரே யாகினுமிவ் வகண்ட ஞானம்
பேதமறப் பொருந்தாதோ ரொருகா லத்தும்
பிராமணரே யாகியிடா ரனுபவீ தந்தான்
சாதியடை யாளமலாற் பிராம ணத்வஞ்
சாருவதிற் சாதகமன் றதனு லென்றும்
பேதமிலாப் பரப்பிரம வநுபவீ தத்தைப்
பெற்றவரே பிராமணராய் முத்த ராவர். (46)

பேதமறப் பரப்பிரம வறிவுற் றோரே
பிராமணரென் றங்கங்கே பேச லாகு
மீதியுளோர் சாதியினுற் பிராம ணத்வ
மேவினரென் றிவ்விதமாம் ரகசி யார்த்த
மேதையுமே யெனக்கருளா லீசன் சொன்ன
வியல்பாக நிதாகநினக் கியம்பி னேனு
ஞேதியவிவ் வர்த்தத்தை யொருகா லேனு
முள்ளபடி கேட்டுணர்வோன் பரமே யாவன். (47)

மாதருநற் சூத்திரரு மற்றுள் ளோரு
மகிமைமிகு மிப்பொருளைக் கிரந்த வாக்காற்
பேதமறக் கேட்டுணர விச்சிப் பாரேற்
பிராமணரின் முகமாகக் கேட்க வேண்டும்
வேதமுடிப் பொருளிதனை யாவரேனும்
விதியுடனே யுரமாகக் கேட்டு ணர்ந்தாற்
பீதிசெயும் பவபந்த மனைத்துந் தீர்ந்து
பின்னமிலாப் பரவடிவே யாவ ரன்னோர். (48)

அகிலமுமே யகண்டபர சிவமே யென்று
மச்சிவமே யகமென்றும் பழகா நின்ற
மகிமைமிகுந் தியானமெனும் பூசை யாலே
மனதலைவற் றறிவுருவாய் முத்தி மேவும்
வெகுவிதமா மறையாலுங் கருமத் தாலும்
விசித்திரமாய்ப் பழகியிடும் யோகத் தாலும்
வகைவகையாய் மற்றுமுள வுபாயத்தாலும்
வரமான முத்திதனை மனது மேவா. (49)

சிரவணமு மனனமுமே செய்த பின்னர்ச்
சின்மயமாம் பரமசிவ நானே யென்று
புரையறவே பழகியிடுந் தியான மாகும்
பூசனையாற் பூரணமாஞ் சிவஞா னத்தை
யிருளறவே யெளிதாக வடைந்து மோட்ச
மிசைந்திடலா மிதிலைய மில்லை யென்றே
பிரியமுடன் ரிபுமுனிவ னிதாக னுக்குப்
பின்னமிலாப் பரம்பொருளைப் பேசி னானல். (50)

வேறு.

பிரமசிந்தனைசந்ததம்செய்வதாற் பேதமின்றியஞானமடைந்துடன்
றிரியுஞ்சித்த விகற்பமனைத்துமே தீர்ந்தகண்ட சொரூபம தாகவே
யிருமையின்றி யிருப்பதுவாகிய வேகமுத்தி யிசைந்திட லாமென
வரியவாநந்தத்தாண்டவமாடுநம் மாண்டவன்றனகண்டசொரூபமே. (51)

இருபதாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம்-20-க்கு திருவிருத்தம்-9140.

++++++++++++++++++++++++++++++++++++++++

# இருபத்தொன்றுவது

## பிரமான்ம சிந்தனே யுரைக்கும் அத்தியாயம்.

அத்துவித பூரணமாம் பிரம மல்லா
லயலில்லே யென்பதனே மீண்டு மீண்டுஞ்
சத்தியசிற் சுககனமாம் பிரம ஞானஞ்
சலனமறத் திடமாகும் பொருட்டுச் சொல்வாஞ்
சித்திரமாய்த் தோற்றியவிச் சகசீ வாதி
சின்மயமாம் பிரமமலால் வேறே யில்லேச்
சுத்திகையிற் ருேற்றியிடும் ரசத மந்தச்
சுத்திகையே யல்லாமல் வேறே யுண்டோ. (1)

எப்போது மசத்தான சகசீ வாதி
யிலாமையினு லியம்புவதற் கிடமே யில்லே
யெப்போதுஞ் சத்தான பிரம ரூப
மேகமதா லியம்புவதற் கிடமே யில்லே
யெப்போது முண்மைநிலே யிவித மேனு
மிவ்விவகா ரத்தசையிற் பிரமாப் யாச
மெப்போதுஞ் செய்பவருக் கிதமே யாக
வேகபர நிர்ணயமே யிங்குச்சொல் வாம். (2)

மகிமைமிகு மகண்டபர நிர்ண யத்தை
மங்களபூ ருவமாகப் படிக்க வேண்டும்
விகலமிலா விதியுடனே படிப் போருக்கே
விக்கினமே யில்லாம லகண்ட ஞான
மகமதனி லெளிதாக வுதிக்கு மிங்கே
யாதலினு லகண்டபர நிர்ண யத்தைப்
புகல்பொழுது மங்களபூ ருவமே யாகப்
பூரணமாம் விதியுடனே புகல வேண்டும். (3)

சத்தியசிற் சுககனமாம் பிரம மல்லாற்
சகசீவ பரங்களெலா மிலவே யில்லே
யத்திரமாய்த் தோற்றியவிச் சகசீ வாதி
யகிலமுமே யகண்டபரப் பிரம மேயாம்
புத்திரனே நீநானு மற்றுள் ளோரும்
பூரணமாம் பரப்பிரம சொரூபந் தானு
மத்துவித பூரணமாஞ் சிவன்றன் னுணே
யறைந்ததனி லணுவேனு மைய மில்லே. (4)

அகிலமுமாம் பரப்பிரம சொரூப மேனா
னறிவுருவாம் பரப்பிரம சொரூப மேனான்
சகலமிலாப் பரப்பிரம சொரூப மேனான்
சாந்தமதாம் பரப்பிரம சொரூப மேனா
னிகரிலதாம் பரப்பிரம சொரூப மேனா
னீக்கமிலாப் பரப்பிரம சொரூப மேனா
னிகழ்விலதாம் பரப்பிரம சொரூப நானெனன்
றெப்போது மிடையறவே சிந்தை செய்வாய். (5)

சத்தியமாம் பரப்பிரம சொரூப மேனான்
சலனமிலாப் பரப்பிரம சொரூப மேனா
னித்தியமாம் பரப்பிரம சொரூப மேனா
னிரஞ்சனமாம் பரப்பிரம சொரூப மேனான்
சுத்தமதாம் பரப்பிரம சொரூப மேனான்
சுககனமாம் பரப்பிரம சொரூப மேனா
னத்துவித பரப்பிரம சொரூப நானெனன்
றழுத்தமுட னநவரதஞ் சிந்தை செய்வாய். (6)

புராதனமாம் பரப்பிரம சொரூப மேனான்
பூரணமாம் பரப்பிரம சொரூப மேனான்
சராசரமில் பரப்பிரம சொரூப மேனான்
சாசுவத பரப்பிரம சொரூப மேனான்
பராற்பரமாம் பரப்பிரம சொரூப மேனான்
பாசமிலாப் பரப்பிரம சொரூப மேனா
னிராமயமாம் பரப்பிரம நானே யென்று
நிச்சலமாய் நீயென்றுஞ் சிந்தை செய்வாய். (7)

நாதாந்த மானபரப் பிரம மேனா
ளுடுவதற் கெட்டாத பிரம மேனான்
வாதாந்த மானபரப் பிரம மேனான்
வாக்குமுதற் கெட்டாத பிரம மேனான்
போதாந்த மானபரப் பிரம மேனான்
புத்திமுதற் கெட்டாத பிரம மேனான்
வேதாந்த வேத்தியமாம் பரனா னென்றே
வேறறநீ யெப்போதுஞ் சிந்தை செய்வாய். (8)

தன்மயமாம் பரப்பிரம சொரூப மேநான்
றனக்கயலில் பரப்பிரம சொரூப மேநான்
சன்மயமாம் பரப்பிரம சொரூப மேநான்
சதாநந்த பரப்பிரம சொரூப மேநா
னின்மலமாம் பரப்பிரம சொரூப மேநா
னிராகார பரப்பிரம சொரூப மேநான்
சின்மயமாம் பரப்பிரம நானே யென்று
சிரத்தையுட னெப்போதுஞ் சிந்தை செய்வாய். (9)

அமலமதாம் பரப்பிரம சொரூப மேநா
னகண்டமதாம் பரப்பிரம சொரூப மேநான்
விமலமதாம் பரப்பிரம சொரூப மேநான்
விகாரமிலாப் பரப்பிரம சொரூப மேநான்
மமதையிலாப் பரப்பிரம சொரூப மேநான்
மானமிலாப் பரப்பிரம சொரூப மேநான்
சமதையிலாப் பரப்பிரம நானே யென்று
சந்ததமுஞ் சலியாது சிந்தை செய்வாய். (10)

துன்னியதே காதியிலாச் சொரூப மேநான்
றுரியவரி வானபர சொரூப மேநா
னென்னதியா னென்பதிலாச் சொரூப மேநா
னேகபரி பூரணமாஞ் சொரூப மேநான்
சென்னியமோ ரணுவுமிலாச் சொரூப மேநான்
செனமசரா மரணமிலாச் சொரூப மேநா
னன்னியமி லகண்டபர சொரூப நானென்
றதிதிடமா யநவரதஞ் சிந்தை செய்வாய். (11)

ஒருபொழுதும் பந்தமிலாச் சொரூப நானே
யொருபொழுது மோட்சமிலாச் சொரூப நானே
துரிசணுவுந் தொடராத சொரூப நானே
துவந்துவமோ ரணுவுமிலாச் சொரூப நானே
திருசியமே தொன்றுமிலாத் திகழ்வு நானே
திவ்வியசின் மாத்திரமாந் தெய்வ நானே
யிருமையிலா வேகபரம் பொருணு னென்றே
யெப்போது மிடையறவே சிந்தை செய்வாய். (12)

ஒருவடிவா யுள்ளபர சொரூப நானே
 யுள்வெளிக ளொன்றுமிலாச் சொரூப நானே
பரமசிதா காயபர சொரூப நானே
 பயமணுவும் பற்றியிடாச் சொரூப நானே
சருவபரி பூரணமாஞ் சொரூப நானே
 சருவத்தின் சித்தாந்த சொரூப நானே
யிருமையிலா வகண்டபர சொரூப நானென்
 றெப்போது மிடையறவே சிந்தை செய்வாய். (13)

சின்மாத்ர மானபர சொரூப நானே
 சின்மயமாம் பரமசிவ சொரூப நானே
சன்மாத்ர மானபர சொரூப நானே
 சதாநந்த கனமான சொரூப நானே
தன்மாத்ர மானபர சொரூப நானே
 தான்றானுய்த் தனித்தபர சொரூப நானே
நன்மாத்ர மானபரம் பொருளு னென்றே
 நழுவாது தைரியமாய்ச் சிந்தை செய்வாய். (14)

கற்பிதவா காரமிலாச் சொரூப நானே
 காரியமோ ரணுவுமிலாச் சொரூப நானே
யற்புதவாகாரபர சொரூப நானே
 யகண்டபர மாகாய சொரூப நானே
தற்பதலட் சியமான சொரூப நானே
 தன்வடிவா மகண்டபர சொரூப நானே
யற்பமிலாப் பரப்பிரம சொரூப நானென்
 றநவரத மதிதிடமாய்ச் சிந்தை செய்வாய். (15)

சித்தமுத லொருபொருளு மிலவே யில்லை
 சின்மயமாம் பரப்பிரம சொரூப மெல்லாஞ்
சத்தியமா யொருபொருளு மிலவே யில்லை
 சன்மயமாம் பரப்பிரம சொரூப மெல்லா
மித்துவித மொருகாலு மிலவே யில்லை
 யேகமதாம் பரப்பிரம சொரூப மெல்லா
மத்துவித பரப்பிரம மதுநா னென்றே
 யநவரத மதிதிடமாய்ச் சிந்தை செய்வாய். (16)

புந்திமுதற் கதீதபர சொரூப நானே
பூரணமாய்ப் பொருந்தியசிற் சொரூப நானே
சந்ததமுஞ் சலனமிலாச் சொரூப நானே
சகலவுபா திகளுமிலாச் சொரூப நானே
தொந்தமிலா வத்துவித சொரூப நானே
துகளிலதா மகண்டபர சொரூப நானே
யந்தமிலாப் பரப்பிரம சொரூப நானென்
றத்துவித சித்தனையே யனிசஞ் செய்வாய் (17)

மன்னியமுத் தேகமிலாச் சொரூப நானே
மயங்கியமூன் றவத்தையிலாச் சொரூப நானே
துன்னியவைங் கோசமிலாச் சொரூப நானே
துக்கசுகத் தொடர்பிலதாஞ் சொரூப நானே
யின்னதெனு வியம்பவொணாச் சொரூப நானே
யிருமையிலா வேகபர சொரூப நானே
யன்னியமி லகண்டபர சொரூப நானென்
றத்துவித சிந்தனையே யனிசஞ் செய்வாய். (18)

காமாதி விருத்தியிலாச் சொரூப நானே
கலங்குமகங் காரமிலாச் சொரூப நானே
யோமாதி கருமமிலாச் சொரூப நானே
யுறுபயனே ரணுவுமிலாச் சொரூப நானே
நாமாதி விசேடமிலாச் சொரூப நானே
நாநாவாம் பேதமிலாச் சொரூப நானே
யாமாகா தென்னவொணாச் சொரூப நானென்
றத்துவித சிந்தனையே யனிசஞ் செய்வாய். (19)

ஞாலமுதற் பூதமிலாச் சொரூப நானே
ஞாதுருஞா னதியிலாச் சொரூப நானே
காலமுதற் பேதமிலாச் சொரூப நானே
கருதுபல தேசமிலாச் சொரூப நானே
கோலமுறும் வத்துவிலாச் சொரூப நானே
குணதோட மெவையுமிலாச் சொரூப நானே
யாலயமி லகண்டபர சொரூப நானென்
றத்துவித சிந்தனையே யனிசஞ் செய்வாய். (20)

சலனமஞே விருத்தியிலாச் சொரூப நானே
சந்தேக மனுவுமிலாச் சொரூப நானே
திலமளவுந் திருசியமில் சொரூப நானே
தெரிவுருவாய்த் திகழ்கின்ற சொரூப நானே
பலவிதமாம் பேதமிலாச் சொரூப நானே
பரசீவ சகங்களிலாச் சொரூப நானே
யலைவுபெறு வகண்டபர சொரூப நானென்
றத்துவித சிந்தனையே யனிசஞ் செய்வாய். (21)

சந்ததமுஞ் சின்மயமாம் பிரம நானே
சலனமிலாச் சின்மயமாம் பிரம நானே
சிந்தையிலாச் சின்மயமாம் பிரம நானே
சின்னமிலாச் சின்மயமாம் பிரம நானே
பந்தமிலாச் சின்மயமாம் பிரம நானே
பங்கமிலாச் சின்மயமாம் பிரம நானே
யந்தமிலாச் சின்மயமாம் பிரம நானென்
றத்துவித சிந்தனையே யனிசஞ் செய்வாய். (22)

எப்போதுந் தைரியமா யிடைவி டாம
லேகபர சிந்தனையே செய்வா யாகிற்
சற்போத சுககனமாம் பரமே நீயாய்ச்
சங்கற்ப விகற்பங்க ளனைத்துந் தீர்ந்து
தற்போத சூனியனுய்த் தானே தானுய்த்
தனித்திந்தப் பவபாச முத்த னுவா
யிப்போதிங் கியம்பியவிவ் வர்த்தந் தன்னி
லெள்ளளவு மையமிலை யுறுதி யீதே. (23)

அநவரத மாதரவா யிடைவி டாம
லத்துவித சிந்தனையே செய்வா யாகின்
மனதிலுள சங்கையெலா முடனே தீர்ந்து
மகத்தான சொரூபசுக மருவி நிற்பாய்
சொனவிதமாய்ச் சொரூபசுகஞ் சார்வ தற்கே
சோர்வுதருஞ் சங்கமெலாந் தூரத் தள்ளி
யனகநின தான்மாவுக் கபின்ன மான
வகண்டபரப் பிரமத்திற் சங்கஞ் செய்வாய். (24)

சத்தியமாம் பரப்பிரம சொரூப நானே
சலனமிலாப் பரப்பிரம சொரூப நானே
நித்தியமாம் பரப்பிரம சொரூப நானே
நிருமலமாம் பரப்பிரம சொரூப நானே
சுத்தமதாம் பரப்பிரம சொரூப நானே
சுககனமாம் பரப்பிரம சொரூப நானென்
றத்துவித நிச்சயமே யனிசஞ் செய்த
லகண்டபரப் பிரமத்தின் சங்க மாமே. (25)

அகமென்றுந் தேகமலன் பொறிக ளல்ல
னகமென்று முயிர்களல னுள்ள மல்ல
னகமென்றும் புத்தியலன் சித்த மல்ல
னகமென்றும் புன்மையகங் கார மல்ல
னகமென்று மிதன்மூலாஞ் ஞான மல்ல
னகமென்று மித்துவித மெவையு மல்ல
னகமென்று மத்துவிதப் பிரம மென்னு
மகம்பிரம நிச்சயமே யகண்ட சங்கம். (26)

அகமென்று மூன்றுவித தேக மல்ல
னகமென்று மூன்றுவித வவத்தை யல்ல
னகமென்று மைந்துவித கோச மல்ல
னகமென்று மவையினபி மானி யல்ல
னகமென்றுஞ் சமட்டியலன் வியட்டி யல்ல
னகமென்றுஞ் சகசீவ் பாங்க ளல்ல
னகமென்று மகண்டபரப் பிரம மென்னு
மகம்பிரம நிச்சயமே யகண்ட சங்கம். (27)

அகண்டபரப் பிரமமதே சத்துக் கெல்லா
மத்யந்த சத்தாக விருப்ப தாலவ்
வகண்டபரப் பிரமத்தின் சங்கந் தானே
யறிஞரினுற் சற்சங்க மென்ன லாகு
மகண்டபரப் பிரமமதே மகத்துக் கெல்லா
மத்யந்த மகத்தாக விருப்ப தாலவ்
வகண்டபரப் பிரமத்தின் சங்கந் தானே
யறிஞரினுன் மகத்சங்க மென்ன லாமே. (28)

அகம்பிரம நிச்சயமே சத்தின் சங்க
மகம்பிரம நிச்சயமே மகத்தின் சங்க
மகம்பிரம நிச்சயமே யான்ம் சங்க
மகம்பிரம நிச்சயமே யகண்ட சங்க
மகம்பிரம நிச்சயமே யகண்டத் தியான
மகம்பிரம நிச்சயமே யகண்ட ஞான
மகம்பிரம நிச்சயமே யகண்ட மோட்ச
மகம்பிரம நிச்சயமே யனைத்து மாகும். (29)

அகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே யகண்டபரத் தியான மாகு
மகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே யகண்டபர சமாதி யாகு
மகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே யகண்டபர ஞான மாகு
மகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே யகண்டபரப் பிரம மாமே. (30)

அகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே யநாதிபவ பந்தந் தீர்க்கு
மகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே யகண்டபர மோட்ச நல்கு
மகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே யநந்தவித துன்பந் தீர்க்கு
மகம்பிரம நிச்சயமே தொடர்பாய்ச் செய்யி
னதுதானே நிரதிசயா நந்த நல்கும். (31)

ஆகலினு லநவரத மிடைவி டாம
லதிதிடமா யகம்பிரம நிச்ச யத்தைச்
சாதகமாய்ப் பழகியதான் மனதி லுள்ள
சங்கற்ப விகற்பங்க ளனைத்துந் தீர்ந்து
பேதமிலா வகண்டபரப் பிரம ஞானம்
பெற்றதனு லகண்டசுக மநுப விப்பா
யோதியவா றகண்டசுக மநுபவித் தோர்க்
கொருகாலும் பவத்துன்ப மீண்டு மில்லை. (32)

சந்ததமு மகம்பிரம நிச்ச யத்தைச்
  சலியாமற் பழகிமன்றே விகற்பந் தீர்ந்திங்
கந்தமிலா வகண்டசுக மநுப வித்தவ்
  வகண்டபரப் பிரமவடி வானே ருக்குப்
பிந்தியுமிப் பவத்துன்ப மடையும் வண்ணம்
  பேதமுறு மேதுவனு வேனு மில்லை
தொந்தமிலா வகண்டபரப் பிரம மானோர்
  துவிதமுறும் பவத்துயரைத் தொடர்வ தெங்ஙன். (33)

அகமெனவே தோற்றுவது மான்மா கார
  மன்னியமாய்த் தோற்றுவது மான்மா கார
மிகழ்மனதாய்த் தோற்றுவது மான்மா கார
  மெந்நினைவாய்த் தோற்றுவது மான்மா காரம்
பகையுடலாய்த் தோற்றுவது மான்மா காரம்
  பலபுலனாய்த் தோற்றுவது மான்மா காரஞ்
சகலமுமாய்த் தோற்றுவது மான்மா காரஞ்
  சகசீவ பரங்களெலா மான்மா காரம். (34)

திருவிலகங் காரமுமே யான்மா காரந்
  திகழ்புத்தி சித்தமுமே யான்மா கார
மொருவலுறுங் காமமுமே யான்மா கார
  முலோபமொடு கோபமுமே யான்மா கார
மருவலுறு மோகமுமே யான்மா கார
  மதமான மச்சரமு மான்மா காரஞ்
சருவமன்றே விருத்திகளு மான்மா காரஞ்
  சதசத்தாய்க் காண்பதெலா மான்மா காரம். (35)

குறைவறுநாற் சாதனமு மான்மா காரங்
  குருபானு மாணனு மான்மா கார
மறுவிதமா மிலிங்கமுமே யான்மா கார
  மத்துவித நிர்ணயமு மான்மா கார
மறைமுடியின் சிரவணமு மான்மா கார
  மனனமொடு தியானமுமே யான்மா கார
நிறைவுதரு ஞானமுமே யான்மா கார
  நிலைபெற்ற மோட்சமுமவ் வான்மா காரம். (36)

சலனமுறு மத்யாசு மான்மா காரஞ்
சம்பந்த மொருமூன்று மான்மா கார
மலைவறுசற் சாத்திரமு மான்மா கார
மநுபந்த சதுட்டயமு மான்மா காரம்
பெலமருவும் பூமிகளு மான்மா காரம்
பிராரத்த மொருமூன்று மான்மா காரம்
பலவிதமாஞ் சத்திகளு மான்மா காரம்
பழகியிடுஞ் சமாதிகளு மான்மா காரம். (37)

சருவமுமே சந்ததமு மான்மா காரஞ்
சலனமிலா வான்மாவே பிரமா காரம்
பிரமமதே பிறங்கியவிவ் வான்மா காரம்
பேசியவா பேதமொரு காலு மில்லை
சருவமுமே யான்மாவுக் கபின்ன மான
சத்தியசிற் சுககனமாம் பிரம மென்றே
யொருமையுணர் நிச்சயமே திடமாய்ப் பெற்றே
னுடனேயிப் பவபாச முத்த னுவான். (38)

பேதமுறுஞ் சகசீவ பரங்க ளெல்லா
பிரமமென்று மப்பிரம நானே யென்று
மோதியவிச் சிந்தனையைப் பிரமாப் யாசி
யொழியாம லெப்போதும் பழக வேண்டுஞ்
சாதகமாஞ் சிந்தனையின் பெலத்தி னாலே
சலமனதின் விகற்பமெலாந் தவிர்ந்த பின்ன
ரீதையுமே பழகாமற் பரமே யாகி
யெந்நினைவு நினையாம லிருக்க வேண்டும். (39)

புத்திரனே யாதலினு னீயெப் போதும்
பூரணமாம் பாவனையே செய்திங் கத்தாற்
சித்தமதன் விகற்பமெலாந் தீர்ந்த பின்னர்ச்
சின்மயமாம் பரப்பிரம வடிவே யாகி
யித்தனையு மிதாத்தை நினையா வண்ண
மெப்போது மியங்காது வெறித்தி ருப்பாய்
நித்தமுமே வெறிதாகிங் குளனு னென்னு
நினைவையுமே நீக்கிநிச வடிவாய் நிற்பாய். (40)

நினைவையெலா நீக்கிமனோ வாக்குக் கெட்டா
நிசவடிவாய் நிற்பதுவே நிறைந்த முத்தி
நினைவனுவும் வேறாக நிகழு மாகி
னினைவதுவே மகத்தான் பந்த மாகு
நினைவறவே நிற்கின்ற நிட்டை தானே
நிசமான வத்துவித நிலைமை யாகு
நினைவறவே நிற்கின்ற நிட்டை தானே
நிரதிசய வாநந்த நிலைமை யாமால். (41)

நினைவதுவே மகத்தான துன்ப மாகு
நினைவதுவே மகத்தான தோட மாகு
நினைவதுவே யநந்தவித சென்ம மாகு
நினைவதுவே யத்யந்த பீதி யாகு
நினைவதுவே நிகிலமகா பாவ மாகு
நினைவதுவே நீக்கவொணாத் தாப மாகு
நினைவதுவே யிதயமகா கிரந்தி யாகு
நினைவதுவே யித்துவிதம் யாவு மாமே. (42)

ஆதலினு லநேகவித நினைவை யெல்லா
மகண்டபர பாவனையா நினைவாற் றள்ளிச்
சாதகமாம் பாவனையா னினைவெல் லாமுஞ்
சற்றேனு முதியாது மறந்த பின்ன
ரோதியவப் பாவனையு மொழிந்தெப் போது
முரைமனதுக் கெட்டாத வுண்மை யாகிப்
பேதமற விருப்பவனே பந்தந் தீர்ந்து
பின்னமிலா வகண்டபர முத்தி பெற்றோன். (43)

அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றகண்டபர பாவனையே செய்வோர்க் கல்லாற்
சகம்பரமே முதலியதாய்க் காண்போர்க் கென்றுஞ்
சஞ்சலமா நினைவெவையுந் தொலையா தென்றே
திகம்பரனும் பரமசிவ னெமக் குரைத்த
திடமான வகண்டபர நிர்ண யத்தைத்
தகும்பிரமாப் யாசிகளுக் கிதமே யாகத்
தத்துவமாய் நிதாகநினக் குரைத்தே னனே. (44)

சாற்றியவிவ் வகண்டபர நிர்ண யந்தான்
சகமுதலி னினைவையெலாஞ் சாந்த மாக்குஞ்
சாற்றியவிவ் வகண்டபர நிர்ண யந்தான்
சார்கின்ற துயரையெலாஞ் சாந்த மாக்குஞ்
சாற்றியவிவ் வகண்டபர நிர்ண யந்தான்
சலனமிலா மோட்சசுக முடனே நல்குஞ்
சாற்றியவிவ் வகண்டபர நிர்ண யத்தைச்
சலனமறக் கேட்டுணர்வோன் பரமே யாவன். (45)

பத்தியுட னகண்டபர சிவத்தின் றியானம்
பழகியதா னிரதிசய திருத்தி மேவி
யித்தனையுஞ் சங்கற்ப விகற்ப மின்றி
யெப்போது மேகபர சிவமே யாகி
மெத்தவுமே சாந்தமதா மனது தானே
மெய்யான முத்திநிலை மேவு மன்றி
மத்தமதாய்ச் சங்கற்ப விகற்ப முற்ற
மனதந்த முத்திநிலை மருவா தென்றும். (46)

நித்தமுமே யகண்டபர சிவனா னென்றே
நினைப்பதுவாஞ் சிவபத்தி மிகுந்தோன் றானே
சித்தமுறும் விகற்பமெலா முடனே தீர்ந்து
சின்மயமாம் பரமசிவந் தானே யாகி
யித்துனிசெய் பவக்கடலை யெளிதாய்த் தாண்டி
யேகமதா முத்திநிலை யிசைவ னென்றே
சுத்தமதாய் ரிபுமுனிவ னிதாக னுக்குச்
சூட்சுமமாம் பரம்பொருளைச் சொன்னா னன்றே. (47)

வேறு.

அந்தமற்றவகண்ட பரம்பொரு ளகமெனச்செயுந் தியானபெலத்தினாற், சிந்தையுற்றவிகற்பமனைத்துமே சிறிதுமின்றிச்சிதைந் துடனிப்பவ, பந்தமியாவும்விடுத் துயர்முத்தியைப்பற்றலாமெனவிங்குப்பகர்ந்திடல், சுந்தரானந்தத்தாண்டவமாடுநெஞ்சுத்தவீசனகண்டசொரூபமே. (48)

இருபத்தொன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 21-க்கு திருவிருத்தம்-988.

++++++++++++++++++++++++++++++++++++++++++

## இருபத்திரண்டாவது

### அகண்ட சொரூப நிச்சயமுரைக்கும் அத்தியாயம்.

—oo:o:oo—

சகலசரா சரங்கட்குஞ் சாட்சி யாகிச்
சகலர்க்கு மான்மாவாய்ச் சித்த மாகிச்
சகலசக தநிட்டான சொரூப மாகிச்
சகலமுமே தானாகி நிறைந்து நின்ற
சகலபரி பூரணமாம் பிரமந் தன்னை
சகலருமே யெளிதாக வறியும் வண்ணஞ்
சகலசகன் னாயகனும் பரேசன் முன்னஞ்
சாற்றியவா றிதாகநினக் கின்னஞ் சொல்வாம். (1)

சத்தியசிற் சுககனமாய்ச் சாந்த மாகிச்
சலனமிலாச் சாசுவத சொரூப மாகி
நித்தியநிட் களமாகி நிருவி கற்ப
நிரஞ்சனமாய் நிராகார சொரூப மாகி
யத்துவித மானபரப் பிரம நானே
யணுவுமிதி லையமில்லை யென்றெப் போதும்
புத்திரநீ திடமாக நிச்ச யித்துப்
பூரணமாம் பிரமசுக மநுப விப்பாய். (2)

நானனென் றறிவதுவுஞ் சிற்சொ ரூப
நாநாவாய்த் தெரிவதுவுஞ் சிற்சொ ரூப
நீநானென் றறிவதுவுஞ் சிற்சொ ரூப
நிகிலமெனத் தெரிவதுவுஞ் சிற்சொ ரூப
ஞானான்மா வென்பதுவுஞ் சிற்சொ ரூப
ஞானகன மென்பதுவுஞ் சிற்சொ ரூபம்
பரானன்மா வென்பதுவுஞ் சிற்சொ ரூபம்
பரப்பிரம மென்பதுவுஞ் சிற்சொ ரூபம். (3)

சித்தமெனத் தெரிவதுவுஞ் சிற்சொ ரூபஞ்
சிவனெனத் தெரிவதுவுஞ் சிற்சொ ரூப
மத்தனெனத் தெரிவதுவுஞ் சிற்சொ ரூப
மவன்செயலாய்த் தெரிவதுவுஞ் சிற்சொ ரூபம்
பத்தனெனத் தெரிவதுவுஞ் சிற்சொ ரூபம்
பரபதமாய்த் தெரிவதுவுஞ் சிற்சொ ரூப
முத்தனெனத் தெரிவதுவுஞ் சிற்சொ ரூப
மோட்சமெனத் தெரிவதுவுஞ் சிற்சொ ரூபம். (4)

மோகமுத லுடன்மூன்றுஞ் சிற்சொ ரூப
மூன்றுவித வவத்தைகளுஞ் சிற்சொ ரூப
மாகுமபி மானிகளுஞ் சிற்சொ ரூப
மறிவுற்ற தகிலமுமே சிற்சொ ரூபம்
யாகமுறுப் பரம்பொருளுஞ் சிற்சொ ரூபம்
பரப்பிரம ஞானமுமச் சிற்சொ ரூபஞ்
சோகமிலாச் சுகவடிவுஞ் சிற்சொ ரூபஞ்
சுத்தபர மாகுவதுஞ் சிற்சொ ரூபம். (5)

உத்தமமாய்க் காண்பதுவுஞ் சிற்சொ ரூப
மூனமதாய்க் காண்பதுவுஞ் சிற்சொ ரூப
மத்திமமாய்க் காண்பதுவுஞ் சிற்சொ ரூப
மகத்தாகக் காண்பதுவுஞ் சிற்சொ ரூபஞ்
சத்தியமாய்க் காண்பதுவுஞ் சிற்சொ ரூபஞ்
சஞ்சலமாய்க் காண்பதுவுஞ் சிற்சொ ரூபம்
வித்தரமாய்க் காண்பதுவுஞ் சிற்சொ ரூபம்
விதம்விதமாய்க் காண்பதெலாஞ் சிற்சொ ரூபம். (6)

ஆக்கையிலா வகண்டபர சித்து நானே
யாநந்த கனமான சித்து நானே
வாக்குமுதற் கெட்டாத சித்து நானே
வானெனவே வரையற்ற சித்து நானே
போக்குவர வெவையுமிலாச் சித்து நானே
புரையற்ற பூரணமாஞ் சித்து நானே
நீக்கமிலாச் சித்துருவாம் பரநா னென்றே
நிரந்தரமாய் நீயென்று நிச்ச யிப்பாய். (7)

சந்ததமுஞ் சாந்தமதாஞ் சித்து நானே
சராசரமோ ரணுவுமிலாச் சித்து நானே
பந்தமிலாப் பரவடிவாஞ் சித்து நானே
பரம்பொருளாய்ப் பரவியிடுஞ் சித்து நானே
சிந்தைமுதற் கெட்டாத சித்து நானே
செகசீவ பரங்களிலாச் சித்து நானே
நிந்தையுறாச் சித்துருவாம் பரநா னென்றே
நிரந்தரமாய் நீயென்று நிச்ச யிப்பாய். (8)

எப்போதும் பரப்பிரமஞ் சத்தே யன்றி
யிப்பிரம மொருகாலு மசத்தே யாகா
தெப்போதுஞ் சத்தான பரநா னென்னு
மித்திறமா முறுதியுளோன் சத்தே யாவ
னெப்போதுஞ் சத்தான பரநா னென்னு
மித்திறமா முறுதியிலோ னசத்தே யாவ
னெப்போதுஞ் சத்தான பரநா னென்னு
மித்திறமா நிச்சயமே யிசைவாய் மைந்தா. (9)

சத்துமில்லை யசத்துமில்லை சதசத் தில்லை
சகலமில்லை கிஞ்சிலில்லை சனிப்ப தில்லை
சித்துமில்லை சீவனில்லை செகத்து மில்லை
செறிகின்ற நாமமில்லை ரூப மில்லை
முத்தனில்லை பெத்தனில்லை மோட்ச மில்லை
முன்னுமில்லை பின்னுமில்லை முழுது மில்லை
யத்துவித பரப்பிரம மொன்றே யுண்மை
யதுநானென் றழுத்தமுற நிச்ச யிப்பாய். (10)

நித்தமில்லை யனித்தமில்லை நிகில மில்லை
நீயுமில்லை நானுமில்லை யாரு மில்லை
சுத்தமில்லை யசுத்தமில்லை சுகமு மில்லை
சோர்வுமில்லை சுபமுமில்லை யசுப மில்லை
பத்தனில்லை பத்தியில்லை பாச மில்லை
பரவியிடும் பதியுமில்லை பலமு மில்லை
யத்துவித பரப்பிரம மொன்றே யுண்மை
யதுநானென் றழுத்தமுற நிச்ச யிப்பாய். (11)

ஒருமையில்லை யிருமையில்லை பலவு மில்லை
யுருவமில்லை யருவமில்லை யொன்று மில்லை
பெருமையில்லை சிறுமையில்லை யருமை யில்லை
பேதமில்லை யபேதமில்லை பின்ன மில்லை
கருமமில்லை காரணமில்லை கர்த்தா வில்லை
காண்கின்ற காட்சியில்லை காண்பா னில்லை
யிருமையிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை
யிதுநானென் றெப்போது நிச்ச யிப்பாய். (12)

தேகமிலை பொறிகளிலை யுயிர்க ளில்லை
   தியங்கியிடு மனதுமிலை மதியு மில்லை
யாருமகங் காரமிலை சித்த மில்லை
   யவித்தையிலை வித்தையிலை யனாத்து மில்லை
போகமிலை போக்யமிலை போத்தா வில்லை
   பூதமிலை புவனமிலை புலன்க ளில்லை
யேகமதாம் பரப்பிரம மொன்றே யுண்மை
   யிதுநானென் றெப்போது நிச்ச யிப்பாய். (13)

கோலமுறுந் தெய்வமிலை சேவை யில்லை
   கூடியிடுந் தீர்த்தமிலை தவமு மில்லை
சீலமுறுந் தானமிலை தருமமில்லை
   செய்கின்ற செபமுமிலை தபமு மில்லை
காலமிலை தேசமிலை வத்து வில்லை
   காரியகா ரணமாக வொன்று மில்லை
யாலயமில் பரப்பிரம மொன்றே யுண்மை
   யதுநானென் றறிதிடமா நிச்ச யிப்பாய். (14)

கற்பிதமாய்க் காண்பதெலாம் பிரம ரூபங்
   காரியகா ரணமெல்லாம் பிரம ரூப
நிற்பனவு நடப்பனவும் பிரம ரூப
   நீநானு நிகிலமுமே பிரம ரூபந்
தற்பதமுந் துவம்பதமும் பிரம ரூபந்
   தடையற்ற வசிபதமும் பிரம ரூப
மற்பமிலா வாநந்த கனமே யான
   வப்பிரம மகமெனவே நிச்ச யிப்பாய். (15)

ஐந்துவித பூதமுமே பிரம ரூப
   மநந்தவித பௌதிகமும் பிரம ரூபந்
தொந்தமுறுஞ் சீவரெலாம் பிரம ரூபந்
   துவிதமுறு சகங்களெலாம் பிரம ரூபம்
பந்தமிலா வீசனுமே பிரம ரூபம்
   பார்க்கின்ற பார்வையெலாம் பிரம ரூப
மந்தமிலா வாநந்த கனமே யான
   வப்பிரம மகமெனவே நிச்ச யிப்பாய். (16)

ஐந்துவித மூர்த்திகளும் பிரம ரூப
மவருடைய செய்கையெலாம் பிரம ரூப
மிந்திரிய மியாவையுமே பிரம ரூப
மிலங்கியிடும் விடயமெலாம் பிரம ரூபஞ்
சந்ததமுஞ் சகலமுமே பிரம ரூபஞ்
சதசத்தாய்க் காண்பவெலாம் பிரம ரூபந்
தொந்தமிலா வப்பிரம நானே யென்று
தொடர்பாக வெப்போது நிச்ச யிப்பாய். (17)

பஞ்சவித கோசமுமே பிரம ரூபம்
பரவுமபி மானிகளும் பிரம ரூப
மஞ்சனமா மவித்தையுமே பிரம ரூப
மமலமதாம் வித்தையுமே பிரம ரூபம்
வஞ்சகமாம் பந்தமுமே பிரம ரூபம்
வரமான முத்தியுமே பிரம ரூபஞ்
சஞ்சலியா வப்பிரம நானே யென்று
சலியாம லெப்போது நிச்ச யிப்பாய். (18)

தகும்பிரமாப் யாசியுமே பிரம ரூபந்
தடையற்ற ஞானியுமே பிரம ரூப
மிகவரனும் வரியானும் பிரம ரூப
மேன்மையுறு வரிட்டனுமே பிரம ரூபந்
திகழ்சீவன் முத்தனுமே பிரம ரூபந்
தேகமிலா முத்தனுமே பிரம ரூப
நிகரிலதாம் பரப்பிரம நானே யென்று
நிரந்தரமாய் நீயென்று நிச்ச யிப்பாய். (19)

அலைமனதா னினைப்பதுவும் பிரம ரூப
மறைவாக்கா லுரைப்பதுவும் பிரம ரூபஞ்
சலவுடலாற் செய்வதுவும் பிரம ரூபஞ்
சாற்றுமனோ வாக்குடலும் பிரம ரூபம்
பலவிதமாந் திருசியமும் பிரம ரூபம்
பரசீவ சகங்களெலாம் பிரம ரூபங்
கலனமிலா வப்பிரம நானே யென்று
கலங்காம லெப்போது நிச்ச யிப்பாய். (20)

காமமிருங் கருமமெலாம் பிரம ரூபங்
காமித்த பலன்களெலாம் பிரம ரூப
நேமமிகு நிட்காமம் பிரம ரூப
நிருமலமாம் பலன்களெலாம் பிரம ரூபந்
தாமதமு மிராசதமும் பிரம ரூபந்
தயங்கியிடுஞ் சத்துவமும் பிரம ரூப
மேமமிலா வப்பிரம நானே யென்றிங்
கெப்போது மிடையறவே நிச்ச யிப்பாய். (21)

உச்சமதா மறைப்பொருளும் பிரம ரூப
முத்தமமா நூற்பொருளும் பிரம ரூப
நிச்சயமாங் குருவருளும் பிரம ரூப
நிருமலமா யறிவதுவும் பிரம ரூப
மச்சமிலாச் சிந்தனையும் பிரம ரூப
மகம்பிரம பாவனையும் பிரம ரூபந்
துச்சமிலா வப்பிரம நானே யென்று
தொடர்பாக வெப்போது நிச்ச யிப்பாய். (22)

மகத்தான மாயையென வவித்தை யென்ன
மகத்தான பந்தமென முத்தி யென்ன
மகத்தான சித்தமெனச் சீவ ரென்ன
மகத்தான சகங்களென வீச னென்ன
மகத்தான நாமமென ரூப மென்ன
மதிக்கின்ற மனதுடைய நினைவ னைத்து
மகத்தான பரப்பிரம சொரூப மன்றி
மற்றணுவு மிலையெனவே நிச்ச யிப்பாய். (23)

நினைவதனு னிகழ்கின்ற சகசீ வாதி
நிகிலமுமே நினைவுருவா மனதே யாகு
மனததுதா னறிவுருவாய் நிகழா நின்ற
மகத்தான பரப்பிரம வடிவே யாகுங்
கனவறிவாம் பிரமமலா தயலே யில்லை
காண்பதெலாங் களங்கமிலாப் பிரம மென்று
மனியமிலா வப்பிரம நானே யென்று
மநவரத மழுத்தமுற நிச்ச யிப்பாய். (24)

அறிவுருவா மதிட்டானப் பிரமத் தின்க
ணுரோப வடிவாக வவிவே கத்தா
லறிவுறுமச் சகலமுமே யறிவா மன்றி
யன்னியமா யணுவேனு மிலவே யில்லை
மறைமுடியின் சித்தாந்த மனைத்து மீதே
மகத்துக்க ளநுபூதி நிலையு மீதே
நிறைவுறவே பரமசிவ னெனக் குரைத்த
நிசமான நிர்ணயமு நிதாக வீதே. (25)

சருவமுமே சந்ததமு மில்லை யென்னல்
சலனமிலாச் சத்தான மந்தி ரங்காண்
சருவமுமே சந்ததமும் பிரம மென்னல்
சகலத்து மேலான மந்தி ரங்காண்
சருவமுமே பிரமமென நிச்ச யித்தல்
சாலவுமே மகத்தான மந்தி ரங்காண்
சருவமுமே நினையாது வெறி திருத்தல்
சந்ததமுஞ் சகலத்து மதீத மாமே. (26)

சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சந்ததமு மாதேவ பூசை யாகுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சந்ததமு மாதேவ நாம மாகுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சந்ததமு மாதேவ பத்தி யாகுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சந்ததமு மாதேவத் தியான மாமே. (27)

சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சருவத்தின் றியாகமெனச் சாற்ற லாகுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சலமனதின் றியாகமெனச் சாற்ற லாகுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சதசத்தின் றியாகமெனச் சாற்ற லாகுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சமதையிலாப் பரம்பதமாய்ச் சாற்ற லாகும். (28)

சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சகலமனக் கற்பனையு நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சகலமனோ வாதனையு நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சலமனதின் றுகளையெலா நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சலமனதின் றுயரையெலா நாசஞ் செய்யும். (29)

சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சார்கின்ற பாவமெலா நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சார்கின்ற பீதியெலா நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சார்கின்ற வாதியெலா நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சார்கின்ற வியாதியெலா நாசஞ் செய்யும். (30)

சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சதசத்தாய்க் காண்பதெலா நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சஞ்சலமாந் துவிதமெலா நாசஞ் செய்யுஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சலனமிலா வத்துவித ஞான நல்குஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சந்ததமு நிரதிசயா நந்த நல்கும். (31)

சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சஞ்சலமாந் தேகமுத லுபாதி நீக்குஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சஞ்சலமாஞ் சீவத்வந் தனையும் போக்குஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சகசீவ பரங்களெனு நினைவைத் தீர்க்குஞ்
சருவமுமே பிரமமெனு நிச்ச யந்தான்
சத்தியசிற் சுகக்னமாம் பரமே யாக்கும். (32)

சருவமுமே பிரமமென்று மதுநா னென்றுஞ்
சலனமிலா நிச்சயமே செய்யச் செய்யச்
சருவமெனும் பிரமமெனு நானீ தென்னுஞ்
சங்கற்ப விகற்பமெலா மடைவாய்த் தீர்ந்து
சருவபரி பூரணமாம் பரமே யாகிச்
சலனமிலா திருப்பதுவா முத்தி பேருஞ்
சருவசகன் ஞயகனுஞ் சிவன்றன் ஞானே
சாற்றியதிற் சற்றேனுஞ் சங்கை யில்லை. (33)

அகிலமுமே பிரமமென்னு மதுநா னென்னு
மதிதிடமா நிச்சயமே யப்பா சித்தல்
பகர்பரம மோட்சமுற முந்தி யேது
பழகியவந் நிச்சயமும் பின்பு தானே
சகசமதாய் நழுவியிடு மதனுன் மைந்தா
சகலமுமே பிரமமென்னு மதுநா னென்னு
மிகவுரமா நிச்சயமே யப்பா சித்து
மெய்யான மோட்சநிலை மேவு வாயே. (34)

அகிலமுமே பிரமமெனக் காணு வண்ண
மன்னியமாய்க் காண்பதெலாம் பிராந்தி யேயா
மிகழ்நரக மென்பதுவும் பிராந்தி யேயா
மிதனுலே வருந்துயரும் பிராந்தி யேயா
மகிழ்சொர்க்க மென்பதுவும் பிராந்தி யேயா
மற்றதனுல் வருஞ்சுகமும் பிராந்தி யேயாஞ்
சகலசக சீவர்களும் பிராந்தி யேயாஞ்
சகதீச னென்பதுவும் பிராந்தி யேயாம். (35)

விதியுடனே யரியானும் பிராந்தி யேயாம்
விராட்டுடனே சுராட்டுமிகப் பிராந்தி யேயா
மதியிலுறுஞ் சம்ராட்டும் பிராந்தி யேயா
மற்றுமுள தேவரெலாம் பிராந்தி யேயாங்
கதிமருவு மதியினனும் பிராந்தி யேயாங்
கருதுமவர் காரியமும் பிராந்தி யேயா
நிதமுனிவர் சித்தர்களும் பிராந்தி யேயா
நிகழ்கின்ற மனுக்களெலாம் பிராந்தி யேயாம். (36)

சருவசுரா சுரர்களுமே செய்யா நின்ற
சமரமுதற் சரிதமெலாம் பிராந்தி யேயாம்
விரவுமயன் செயலான சிருட்டி யாதி
விதம்விதமாஞ் சரிதமெலாம் பிராந்தி யேயா
மரியுடைய பாலனமே முதலாஞ் செய்கை
யவதார லீலையெலாம் பிராந்தி யேயா
மானுடைய சங்கார முதலாஞ் செய்கை
யவதார லீலையெலாம் பிராந்தி யேயாம். (37)

வன்னமுட னாச்சிரம பேத முற்ற
வகைவகையா மானிடரும் பிராந்தி யேயா
முன்னியவர் சிவவிண்டு வாதி தேவ
ருபாசனையே செய்வதுவும் பிராந்தி யேயாம்
பன்னியிடு மந்திரதந் திரமே யாதி
பலவிதமாஞ் செயலுமிகப் பிராந்தி யேயா
மன்னியமாய்க் காண்கின்ற சகசீ வாதி
யகிலமுமே யத்யந்தம் பிராந்தி யேயாம். (38)

சகலவதிட் டானபரப் பிரமத் தின்கண்
சகலவிதப் பிராந்தியுமே தோன்ற லாலே
யகிலமுமவ் வதிட்டானப் பிரம மன்றி
யன்னியமா யணுவுமிலை யாதலாலே
நிகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
நிரந்தரமா மப்பிரம நானே யென்று
மகிலமெனப் பிரமமெனத் தோன்றும் பேத
மழியுமள வழுத்தமுற நிச்ச யிப்பாய். (39)

சருவமென வொருகாலு மிலவே யில்லை
சருவமுமே சந்ததமும் பிரம மென்று
முரைமனதுக் கெட்டாத வகண்ட மான
வுணர்வுருவா மப்பிரம நானே யென்று
மிருமையிலாத் திடமான நிச்ச யத்தை
யெப்போது மிதயத்திற் பழகு வாயேற்
பிரிவெனவே தோன்றியவிப் பேத மெல்லாம்
பெயர்ந்துடனே பவபாச முத்த னாவாய். (40)

அகிலமுமே பிரமமென்று மதுநா னென்று
மதிதிடமா முறுதியுடன் வாக்கி னாலே
புகல்பவனும் பூரணமாம் பரமே யாவன்
புகன்றபடி யகண்டபர நிச்ச யத்தை
யகமதனி லநவரதம் பழகா நின்றோ
னகண்டபர மாகுவதி லைய முண்டோ
மிகவுரமா நிச்சயமே மோட்சந் தன்னை
மேவுவதின் முக்கியகா ரணமா மைந்தா. (41)

அநவரத மகம்பிரம நிச்ச யத்தை
யாதரவோ டதிதிடமா யப்யா சிக்கின்
மனதிலுள விகற்பமெலா முன்பு தீர்த்து
மற்றதுதான் விறகற்ற வன்னி யேபோற்
றனதுநிச வதிட்டானப் பிரமத் தின்கண்
டான்றானே சாந்தியுறு மாத லாலே
சொனவிதமா யகம்பிரம நிச்ச யத்தைச்
சுகமுறவே முமுட்சுவெலாம் பழக வேண்டும். (42)

இத்திறமா யெல்லோர்க்கு மிதமே யாக
வீசனரு ளகண்டபர நிச்ச யத்தைப்
புத்திரனே நினக்கருளாற் புகன்றே னன்றோய்ப்
புகன்றபடி யிப்பொருளை யொருகா லேனும்
பத்தியுடன் கேட்டுணர்வோன் பரமே யாவன்
பகர்ந்ததிலோ ரணுவேனு மைய மில்லை
யெத்துகளு மில்லாம லெவையு மோர்ந்த
வெமதீச னியம்பியதி லைய முண்டோ. (43)

அத்துவித பூரணமாம் பரசி வத்துக்
கன்னியமாய்த் தோற்றியவித் துவித மெல்லாஞ்
சித்தமதன் விகாரமலா துண்மை யன்று
சித்தந்தா னகண்டபர நிச்ச யத்தாற்
சத்தியசிற் சுககனமாம் பரசி வத்திற்
சாந்தியுறிற் சித்தத்தின் விகார மான
வித்துவிதத் தோற்றமெலா முடனே தீரு
மேதுவலாற் காரியமற் றிருப்ப துண்டோ. (44)

சிந்துவிடை யுண்டான சைந்த வந்தான்
சிந்துவினிற் கலந்தவுடன் கரைவ தேபோற்
றெருந்தமிலா வகண்டபர சிவத்திற் பொய்யாய்த்
தோற்றியவிச் சித்தமுதற் றுவித மெல்லா
மந்தமிலா வகண்டபர நிச்ச யத்தா
லங்கொன்றாய்க் கலந்தவுடன் கரையு மென்றே
பந்தமற ரிபுமுனிவ னிதாக னுக்குப்
பகுப்பற்ற பரம்பொருளைப் பகர்ந்தா னன்றே. (45).

வேறு.

மறுவிலாச்சச்சி தாநந்தமாகவே மன்னுதற்பர மேயிச்சகலமும்
பிறிதிலப்பர நானெனு நிச்சயம் பெற்றதாற்பவ பந்தம்விடுத்துட
னறிவுமாத்திரமாகவிருப்பதா மமலமோட்சமடைந்திடலாமெனல்
சிறிதிலாநந்தத் தாண்டவமாடுநெஞ் சிற்சபேச னகண்டசொரூபமே.

இருபத்திரண்டாவது அத்தியாயம் (46).
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 22-க்கு திருவிருத்தம்-1034.

---

++++++++++++++++++++++++++++++++++++++++

## இருபத்து மூன்றாவது
## அத்துவித வுண்மை யுரைக்கும்
## அத்தியாயம்.

சத்தியசிற் சுககனமாம் பிரம மொன்றே
சந்ததமுஞ் சலியாம லுள்ள தாமற்
றித்துவித மியாவையுமே யொருகா லத்து
மில்லையெனு மேகபர நிர்ண யத்தை
யுத்தமனே யகண்டபரப் பிரம ஞான
முாமாகும் பொருட்டுனக் கின்னஞ் சொல்வே
னத்துவித நிர்ணயமே மறை புராண
மனைத்திலுமே யத்யந்த சார மாகும். (1).

பேதமில்லை பேதமில்லை பேத மில்லை
பேதிக்கும் பொருளுமொரு காலு மில்லை
பூதமில்லை பௌதிகமாம் பொருளு மில்லை
புவனமில்லை புவனமுறும் பொருளு மில்லை
யேதமில்லை குணமுமில்லை யெவையு மில்லை
யிதுவெனவிங் கிலங்கியிடும் பொருளே யில்லை
யாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
வறிவுருவாம் பரப்பிரம மொன்றே யுண்மை. (2).

பெரிதுமிலை சிறிதுமிலை நடுவு மில்லை
 பின்னுமிலை முன்னுமிலை நடுவு மில்லை
யரிதுமிலை யெளிதுமிலை நடுவு மில்லை
 யயலுமிலை தனதுமிலை நடுவு மில்லை
யொருமையிலை யிருமையிலை நடுவுமில்லை
 யுள்ளுமிலை வெளியுமிலை யொன்று மில்லை
சருவபரி பூரணமாய்ச் சலியாச் சித்தாய்ச்
 சாந்தமதா யுளதுபரப் பிரம மொன்றே. (3)

சகலமிலை கிஞ்சிலிலை யுபய மில்லை
 சத்துமிலை யசத்துமிலை யுபய மில்லை
சுகமுமிலை துயருமிலை யுபய மில்லை
 சுத்தமிலை யசுத்தமிலை யுபய மில்லை
யிகழ்வுமிலை யுயர்வுமிலை யுபய மில்லை
 யிகமுமிலை பரமுமிலை யெவையு மில்லை
யகிலபரி பூரணமா யகண்ட சித்தா
 யசஞ்சலமா யுளதுபரப் பிரம மொன்றே. (4)

வினவியிடுஞ் சீடனிலை குருவு மில்லை
 விளங்கியிடும் வித்தையிலை யவித்தை யில்லை
துனிமருவும் பந்தமிலை மோட்ச மில்லை
 துவிதமிலை யத்துவிதந் தானு மில்லை
நனிமகிழுஞ் சுபமுமிலை யசுப மில்லை
 நானுமிலை நீயுமிலை யாரு மில்லை
யனியமிலா வறிவுருவா யகண்ட மாகி
 யசஞ்சலமா யுளதுபரப் பிரம மொன்றே. (5)

மடமையிலை மனதுமிலை மதியு மில்லை
 மயங்குமகங் காரமிலை சித்த மில்லை
விடயமிலை விடயமுணர் பொறியு மில்லை
 வினையுமிலை வினையுற்ற சீவ னில்லை
யுடலுமிலை யுடலினபி மானி யில்லை
 யுயிருமிலை யொருகாலு மொன்று மில்லை
திடவடிவாய்த் திருசியமோ ரணுவு மின்றித்
 தெரிவுருவா யுளதுபரப் பிரம மொன்றே. (6)

போகமிலை போகமுறும் போக்தா வில்லை
போக்கியமாம் பொருளுமிலை திருத்தி யில்லை
மோகமுறு மூடனிலை விவேகி யில்லை
முத்தனிலை பெத்தனிலை முமுட்சு வில்லை
பாகமுறும் பத்தனிலை பத்தி யில்லை
பாசமிலை பசுவுமிலை பதியு மில்லை
யேகபரி பூரணமா யிகழாச் சித்தா
யெப்போது முளதுபரப் பிரம மொன்றே. (7)

ஆசையிலை யாசிக்கும் பலனு மில்லை
யாசையுடன் செய்கின்ற செயலு மில்லை
பூசையிலை பூசிக்குந் தெய்வ மில்லை
பூசையினாற் பொருந்தியிடும் பலனு மில்லை
பேசலிலை பேசியிடும் பொருளு மில்லை
பேசுவதாற் பெறுகின்ற பலனு மில்லை
சாசுவத பூரணமாய்ச் சலியாச் சித்தாய்ச்
சந்ததமு முளதுபரப் பிரம மொன்றே. (8)

மனதிலுள காமமுதல் விருத்தி யில்லை
மயக்கமுறுஞ் சங்கற்ப விகற்ப மில்லை
சனனமுதற் சட்பாவ விகார மில்லை
சாக்கிரமே முதலியமூன் றவத்தை யில்லை
நனவுமுதற் கப்பாலாந் துரிய மில்லை
நாநாவாய் நாடியிடு நினைவே யில்லை
தினையளவுந் திருசியமே யின்றி யென்றுந்
தெரிவுருவா யுளதுபரப் பிரம மொன்றே. (9)

சாதனமுஞ் சாத்தியமு மெவையு மில்லை
சற்சங்க மசற்சங்க மெவையு மில்லை
வேதனமும் வேத்தியமு மெவையு மில்லை
விசாரணைமற் றப்யாச மெவையு மில்லை
யோதுபவ னுணர்பவனிங் காரு மில்லை
யுறுகதியு முறுதலுமற் றெவையு மில்லை
போதகன வடிவாகிப் பூன்ற மாகிப்
புரையறவே யுளதுபரப் பிரம மொன்றே. (10)

தானமிலை தீர்த்தமிலை தலமு மில்லை
 தருமமிலை தெய்வமிலை சேவை யில்லை
யாணியிலை விருத்தியிலை யடைவோ னில்லை
 யறமுமிலை யகமுமிலை யனைத்து மில்லை
ஞானமிலை பத்தியிலை கரும மில்லை
 ஞாதுருஞா னநிகளோ ரணுவு மில்லை
யீனமிலாச் சன்மயமா யிலங்குஞ் சித்தா
 யின்புருவா யுளதுபரப் பிரம மொன்றே. (11)

படிமுதலாய்த் தோற்றியிடு முலகு மில்லை
 பாதாள முதலியதா முலகு மில்லை
கடபடமே முதலியதாம் பொருளு மில்லை
 காரியகா ரணமாக வொன்று மில்லை
யடர்பலவாம் பிரமாண்டத் திரளு மில்லை
 யவையவையி னபிமானி தானு மில்லை
செடமலதாய்ச் சின்மயமாய்ச் செகசீ வாதி
 சிறிதுமிலா துளதுபரப் பிரம மொன்றே. (12)

குறைவதுவு நிறைவதுவு மெவையு மில்லை
 குறிப்பதுவுங் குலாவுவது மெவையு மில்லை
செறிவதுவும் பிரிவதுவு மெவையு மில்லை
 சேர்கின்ற செயாபசெய மெவையு மில்லை
யறிவதுவு நினைவதுவு மனைத்து மில்லை
 யத்யான்ம முதலியவோர் மூன்று மில்லை
நிருமலமாய் நிர்க்குணமாய் நிகழுஞ் சித்தாய்
 நிரந்தரமா யுளதுபரப் பிரம மொன்றே. (13)

சத்துவமே முதலியமுக் குணமு மில்லை
 சைவமுதற் பலவிதமா மதமு மில்லை
வித்தாமாம் வேதாந்த மதமு மில்லை
 விதம்விதமா மாகமநூ லெவையு மில்லை
யத்துவித மறிவிக்கும் வாக்கு மில்லை
 யைக்கியமே யறிவிக்கும் வாக்கு மில்லை
சுத்தபரி பூரணமாய்ச் சொலவுக் கெட்டாச்
 சுபாவமதா யுளதுபரப் பிரம மொன்றே. (14)

ஆணுமில்லை பெண்ணுமில்லை யலியு மில்லை
யசரமில்லை சரமுமில்லை யனைத்து மில்லை
சேணுமில்லை மருத்துமில்லை சிகியு மில்லை
செலமுமில்லை தலமுமில்லை புலனு மில்லை
காணலில்லை கேட்டலில்லை தோற்ற மில்லை
கற்பிதமாய்க் காண்கின்ற தெவையு மில்லை
வாணிமுதற் ககோசரமாம் வத்து வாகி
வரம்பிலதா யுளதுபரப் பிரம மொன்றே. (15)

இட்டரில்லை சிட்டரில்லை துட்ட ரில்லை
யியற்றியிடும் லௌகிகவை திகமு மில்லை
கட்டையில்லை நெடியதில்லை தடித்த தில்லை
கருமையில்லை வெண்மையில்லை செம்மை யில்லை
நட்டமில்லை லாபமில்லை நடுவு மில்லை
நாமமில்லை ரூபமில்லை நாநா வில்லை
திட்டமதாந் திருசியமோ ரணுவு மின்றித்
திகழுருவா யுளதுபரப் பிரம மொன்றே. (16)

வன்னமுட னாச்சிரம வகுப்பு மில்லை
வரமான சாந்தியில்லை தாந்தி யில்லை
துன்னியிடுந் தருமமில்லை யதர்ம மில்லை
தோடமில்லை குணமுமில்லை குணியு மில்லை
மன்னியிடும் பாவமில்லை யபாவ மில்லை
மாயையில்லை மாயைசெயுஞ் செயலு மில்லை
பின்னமிலாப் பூரணமாய்ப் பிறங்குஞ் சித்தாய்ப்
பிரிவறவே யுளதுபரப் பிரம மொன்றே. (17)

புகழ்வுமில்லை யிகழ்வுமில்லை புகழ்வோ னில்லை
பூடணமுந் தூடணமு மெவையு மில்லை
விகலமிலா விதியுமில்லை நிடேத மில்லை
விதிக்கின்ற வெகுவிதமா நூலு மில்லை
யகமுமில்லை பிறருமில்லை யயலே யில்லை
யமலமில்லை மலமுமில்லை யனைத்து மில்லை
சகலபரி பூரணமாய்ச் சலியாச் சித்தாய்ச்
சந்ததமு முளதுபரப் பிரம மொன்றே. (18)

சன்னியமாந் தூலமுதற் றேக மில்லை
சைசவமு மெவ்வனமுஞ் சரையு மில்லை
யின்னன்மிகு மாணமிலை சனன மில்லை
யிங்குற்ற பந்துவிலை யபந்து வில்லை
பன்னியிடுஞ் சத்துருமித் திரரு மில்லை
பரலோக முதலியவோர் பகுப்பு மில்லை
யன்னியமோ ரணுவுமிலா தகண்ட மாகி
யசஞ்சலமா யுளதுபரப் பிரம மொன்றே. (19)

விரவியிடுந் திக்குமிலை விதிக்கு மில்லை
விரிதிக்குப் பாலகர்க டாமு மில்லை
யரனுமிலை யரியுமிலை யயனு மில்லை
யநந்தவித வமரரிலை யசுர ரில்லை
நரருமிலை திரியக்குத் தானு மில்லை
நகவனமே முதலியதா வரமு மில்லை
பரமசிதா காயமதாய்ப் பரசத் தாகிப்
பங்கமிலா துளதுபரப் பிரம மொன்றே. (20)

விசுவன்முதல் வியட்டியபி மானி யில்லை
விராட்டுமுதற் சமட்டியபி மானி யில்லை
யசுபமிலாத் துரியமொடு துரிய னில்லை
யன்னமய முதலியவைங் கோச மில்லை
மிசிரமுறு மத்யாச மெவையு மில்லை
மெய்போன்ற சகசீவ பரமே யில்லை
நசுவரமோ ரணுவுமிலா தகண்ட மாகி
நாசமிலா துளதுபரப் பிரம மொன்றே. (21)

கற்பிதமா யொருபொருளு மிலவே யில்லை
காலமிலை தேசமிலை வத்து வில்லை
சிற்பிரமந் தானென்னுந் தியான மில்லை
சின்மயமே பாவிக்குஞ் சித்த மில்லை
சற்பிரமந் தானெனுமோர் பேத மில்லை
சன்மாத்ரந் தானெனுமோர் பேத மில்லை
யற்பமுமே பேதமிலா தகண்ட மாகி
யசஞ்சலமா யுளதுபரப் பிரம மொன்றே. (22)

மானமிலை மானமிகும் பொருளு மில்லை
மகத்துமிலை யணுவுமிலை மத்தி யில்லை
ஞானமிலை ஞேயமிலை ஞாதா வில்லை
ஞாபிக்குந் திரிபுடியே தொன்று மில்லை
நானமதென் றெண்ணியிடு மயலே யில்லை
நவையுற்ற சம்சார மணுவு மில்லை
வானமென வகண்டசிதா காய மாகி
வரையிலதா யுளதுபரப் பிரம மொன்றே. (23)

பிரமாத்ரு சைதன்யந் தானு மில்லை
பிரமேய சைதன்யந் தானு மில்லை
பிரமாண சைதன்யந் தானு மில்லை
பிறங்குபல சைதன்யந் தானு மில்லை
நிருமாணஞ் செயலுற்ற தெவையு மில்லை
நிருமாணஞ் செய்கின்றோன் றானு மில்லை
பரிணாமம் விவர்த்தமுத லெவையு மின்றிப்
பங்கமிலா துளதுபரப் பிரம மொன்றே. (24)

மனதுடைய வாதனைக ளெவையு மில்லை
மனதுடைய விருத்திகளு மெவையு மில்லை
நனவுமுதற் சம்சார மணுவு மில்லை
நாடியிடுஞ் சம்சாரி தானு மில்லை
துணிமருவுந் துவிதமொரு காலு மில்லை
துக்கசுக முதலியவோ ரணுவு மில்லை
யணியமிலா தகண்டபரி பூன்ற மாகி
யசஞ்சலமா யுளதுபரப் பிரம மொன்றே. (25)

துன்னுமுட ஞனென்றுஞ் சகமெய் யென்றுந்
தோற்றியிடுந் துவிதமுணர் விருத்தி யில்லை
மன்னுகரி நானென்று மற்ற தெல்லா
மயலென்றுஞ் சாட்சியுணர் விருத்தி யில்லை
யன்னியமி லகண்டபர நானே யென்றிங்
கறியுமகண் டாகார விருத்தி யில்லை
பின்னமுறும் விருத்திகளே தொன்று மின்றிப்
பேதமிலா துளதுபரப் பிரம மொன்றே. (26)

சகலமனோ விருத்திகளு முதிப்ப தில்லை
சகலமனோ விருத்திகளு நசிப்ப தில்லை
சகலமனோ விருத்திகளின் றோற்ற மில்லை
சகலமனோ விருத்திகளி னடக்க மில்லை
சகலமனோ விருத்திகளின் பாவ மில்லை
சகலமனோ விருத்திகளி னபாவ மில்லை
சகலமனோ விருத்திகளு மின்றி யென்றுஞ்
சாந்தமதா யுளதுபரப் பிரம மொன்றே. (27)

சருவமனோ விருத்திகளின் சாட்சித் தன்மை
சற்றுமிலை சருவமெனு நினைவு மில்லை
பிரமமக மகம்பிரம மெனவே செய்யும்
பிரமான்ம பாவனையுஞ் சிறிது மில்லை
சருவமெனச் சாட்சியெனப் பிரம மென்னச்
சருவான்ம சொரூபமெனப் பிரிவே யில்லை
யொருபிரிவு மொன்றும லகண்ட மாகி
யோருணர்வா யுளதுபரப் பிரம மொன்றே. (28)

இருளுமிலை யொளியுமிலை வெளியு மில்லை
யிருமூன்று சமாதிகளு மிலவே யில்லை
வருபிரம வித்துமிலை வரனு மில்லை
வரியானும் வரிட்டனுமற் றொரு மில்லை
யொருபொருளு மொருகாலு மிலவே யில்லை
யுள்ளவெலா முணர்வுருவாம் பிரம மென்றும்
பிரமமதே நானென்று மகண்ட ஞானம்
பெற்றவனே பவபாச முத்த னவன். (29)

ஓதியவிவ் வகண்டபரப் பிரம ஞான
முறாதவனே மகத்தான பாவி யானோன்
பேதமிலா வகண்டபரப் பிரம ஞானம்
பெறாதவனே மகத்தான ரோகி யானோன்
சாதகமா மகண்டபரப் பிரம ஞானஞ்
சார்ந்தவனே சம்சார முத்த னானோ
னாதலினான் முமுட்சுவெலா மெவ் விதத்து
மகண்டபர ஞானத்தை யடைய வேண்டும். (30)

அகிலமுமே யகண்டபரப் பிரம மென்னு
மப்பிரம நானென்னுந் துணிவு கொண்டே
யகமுறவே திடமான வநுப வத்தை
யடைந்தவனவ் வகண்டபர வடிவே யாகி
யிகல்மனதின் சங்கற்ப விகற்ப மெல்லா
மிழந்துடனே பவபாச முத்த னவன்
பகர்பொருளி லணுவேனு மைய மில்லை
பரமசிவன் றன்னுணை பரமார்த் தந்தான். (31)

எல்லாமாம் பிரமமது நானே யென்னு
மேகபர ஞானத்தை யிசையா மூடன்
கல்லாத கல்வியெலாங் கற்ற போதுங்
கரையில்லாப் பவக்கடலை கடவா னென்றுஞ்
சொல்லாலுஞ் சொல்லவொணு மகிமை கூர்ந்த
சுத்தபர ஞானத்தைப் பெற்ற வன்றான்
பொல்லாத பவக்கடலை யெளிதாய்த் தாண்டிப்
பூரணமாம் பரப்பிரம தீரஞ் சார்வன். (32)

உரமான வகண்டபர நிச்சயத்தை
யுற்றவனே யுலகத்தில் ஞானி யானோன்
பிரியாத வகண்டபர நிச்ச யத்தைப்
பெற்றவனே பரப்பிரம சொரூப மானோ
னரிதான விப்பொருளைப் பரேசன் முன்ன
மருளியவா றிதாகநினைக் கறைந்தே னித்தைப்
பரமான வன்புடனே யொருகா லேனும்
பங்கமறக் கேட்டுணர்வோன் பரமே யாவன். (33)

ஒருமையில்லை யிருமையில்லை பலவு மில்லை
யுருவமில்லை யருவமில்லை யொன்று மில்லை
மருளுமில்லை தெருளுமில்லை மனமே யில்லை
மகத்துமில்லை யணுவுமில்லை மற்றொன் றில்லை
கருதுசக சீவரில்லை யீச னில்லை
காரியமுங் காரணமு மெவையு மில்லை
யிருண்மருவாப் பரமசிவ சோதி யொன்றே
யெப்போது மேகமதா யிருக்கும் வத்து. (34)

மாயைமுதற் கற்பிதமாம் பொருளே யின்றி
மகத்துக்கு மகத்தாகி யசங்க மாகி
மேயமொடு மாதுருமா னங்க ளின்றி
மிகப்பெரிதாம் பூமான்ம சொரூப மாகி
நேயமதாய் நிரதிசயா நந்த மாகி
நித்தபரி சுத்தமதாய் நிறைந்த சித்தா
யேகமதாம் பந்தமிலா நித்த முத்த
வியல்பான பரசிவமே யிருக்கும் வத்து. (35)

இருக்குமுதல் வேதாந்த வசனத் தாலு
மிவையருளு மாசிரிய வசனத் தாலுந்
தருக்கமெனுந் திடமான மனனத் தாலுந்
தடையறவே செய்கின்ற தியானத் தாலு
மருக்கன்முதற் சோதிக்குஞ் சோதி யான
வறிவுருவாம் பரமசிவ மறிந்த வன்றான்
றிருக்குருவா மகண்டபர சிவமே யாகித்
திருசியமாம் பவபந்த மனைத்துந் தீர்வன். (36)

சித்துருவாஞ் சிவவடிவை யறிந்த வன்றான்
செனனமொடு சரைமரண மாதிவ் யாதி
யித்தனையு மில்லாம விழந்தெப் போது
மித்துவிதத் தோற்றமிறை யேனு மின்றி
யத்துவித பூரணமாஞ் சிவமே யாக
வமைவதுவா மகண்டபர முத்தி சார்வன்
சத்தியமே யிதுவென்று நிதாக னுக்குச்
சற்குருவாம் ரிபுமுனிவன் சாற்றி னானல். (37)

வேறு.

பூதபௌதிக மாதியனைத்துமே பொய்யலாவிலையில்லையதென்னவே
நேதிசெய்தபி னித்தியநிட்கள நிருவிகற்பக மானபரம்பொருண்
மீதியாயுளதென் றுமாகவே மெய்ப்பொருட்டனையிங்குவிளம்புதல்
தீதிலாநந்தத்தாண்டவமாடுநந் தேவதேவ னகண்டசொரூபமே (38)

இருபத்துமூன்றுவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 23-க்கு திருவிருத்தம்-1072.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

## இருபத்திநான்காவது

### ஆநந்த சொரூப பாவனையால் ஆநந்தாப்தி யுரைக்கும் அத்தியாயம்.

—∘∘※∘∘—

அகிலசகன் றயகனும் பரேசன் முன்ன
மனுமயமா மகண்டபரப் பிரமா நந்த
மகிமைதனை மாசறவே யுரைத்த வண்ண
மைந்தநினக் கிவ்வோத்தின் மற்றுஞ் சொல்வே
னிகிலமுமே யகண்டபரி பூன்ற மான
நிரதிசயா நந்தபரப் பிரம மேயாஞ்
சுககனமாம் பரப்பிரம மதுநா னென்று
சோர்வறவே சிந்தித்துச் சுகித் திருப்பாய். (1)

சங்கமிலாச் சனாதனவா நந்த நானே
சலனமிலாச் சாசுவதா நந்த நானே
துங்கமதாந் தூயபரா நந்த நானே
துவிதமிலா வத்துவிதா நந்த நானே
பங்கமிலாப் பரமசிவா நந்த நானே
பாசமிலாப் பரமான்மா நந்த நானே
யெங்குமுள பரப்பிரமா நந்த நானென்
றெப்போதும் பாவித்துச் சுகித் திருப்பாய். (2)

கருதியிடும் விடயமிலா நந்த நானே
காரியகா ரணமுமிலா நந்த நானே
நிருமலமாய் நிகழ்பரமா நந்த நானே
நீக்கமிலா நித்தியவா நந்த நானே
யொருவடிவா யுள்ளபரா நந்த நானே
யுணர்வுருவா யொளிர்பரமா நந்த நானே
யிருமையிலா வேகபரா நந்த நானென்
றெப்போதும் பாவித்துச் சுகித் திருப்பாய். (3)

கருத்திலுறுங் களங்கமிலா நந்த நானே
கற்பிதமோ ரணுவுமிலா நந்த நானே
விருத்தியுணர் விமலபரா நந்த நானே
விருத்திக்கு மதீதபரா நந்த நானே
திருத்திதருந் திவ்வியவா நந்த நானே
திருசியமோ ரணுவுமிலா நந்த நானே
யருத்திசெயு மகண்டபரா நந்த நானென்
றநவரதம் பாவித்துச் சுகித் திருப்பாய். (4)

அழிவற்ற வட்சயவா நந்த நானே
யகண்டபத லட்சியவா நந்த நானே
பழுதற்ற ஞானபரா நந்த நானே
பரம்பொருளா யுள்ளபரா நந்த நானே
மொழியற்ற மோனபரா நந்த நானே
மோகமிலா மோட்சபரா நந்த நானே
யொழிவற்ற பூன்றபரா நந்த நானென்
றுரமாகப் பாவித்துச் சுகித் திருப்பாய். (5)

சடமருவாச் சின்மயவா நந்த நானே
சலியாத சன்மயவா நந்த நானே
மடமையுறு நிருமலவா நந்த நானே
மயக்கமிலா நிர்க்குணவா நந்த நானே
திடவடிவாய்த் திகழ்பரமா நந்த நானே
திலமளவும் பேதமிலா நந்த நானே
யிடர்மருவா வேகபரா நந்த நானென்
றெளிதாகப் பாவித்துச் சுகித் திருப்பாய். (6)

இணையொன்று மிலாதபரா நந்த நானே
யிலதுளதென் றெண்ணமிலா நந்த நானே
குணமூன்று மிலாதபரா நந்த நானே
குய்யமதா யுள்ளபரா நந்த நானே
நணுநாம ரூபமிலா நந்த நானே
நாசமிலா நற்சொரூபா நந்த நானே
யணுவேனும் பேதமிலா நந்த நானென்
றதிதிடமாய்ப் பாவித்துச் சுகித் திருப்பாய். (7)

கலனமறக் கண்டபரா நந்த நானே
கருமத்தா லுற்றபரா நந்த நானே
பலவிதமாய்ப் பற்றியவா நந்த நானே
பத்தியினு லுற்றபரா நந்த நானே
யுலகிலுள வாநந்த மனைத்து நானே
யுரைமனதுக் ககோசரவா நந்த நானே
யிலகியிடு மகண்டபரா நந்த நானென்
றிடையறவே பாவித்துச் சுகித் திருப்பாய். (8)

மிகமிகவு மகிழ்பரமா நந்த நானே
மெய்யுணர்வாய் மேவுபரா நந்த நானே
சகலமுமாய்ச் சார்ந்தபரா நந்த நானே
சாந்தமதாய்ச் செறிந்தபரா நந்த நானே
துகண்மருவாச் சுத்தபரா நந்த நானே
தொந்தமிலா முத்தபரா நந்த நானே
யகமருவா வகண்டபரா நந்த நானென்
றுகரவாய்ப் பாவித்துச் சுகித் திருப்பாய். (9)

விமலமதாய் விளங்குபரா நந்த நானே
விசேடமிலா வேத்தியவா நந்த நானே
சமமதுவாய்ச் செறிந்தபரா நந்த நானே
சங்கற்ப விகற்பமிலா நந்த நானே
நிமலமதாய் நிலைத்தபரா நந்த நானே
நிகிலமுமாய் நிறைந்தபரா நந்த நானே
யமலமதா யமர்ந்தபரா நந்த நானென்
றனிசமுநீ பாவித்துச் சுகித் திருப்பாய். (10)

வித்தையினால் விளங்குபரா நந்த நானே
வித்தைக்கு மதீதபரா நந்த நானே
மித்தையிலாச் சத்தியவா நந்த நானே
மேவுவதற் கரியபரா நந்த நானே
யித்துவித மெவையுமிலா நந்த நானே
யேகபரி பூரணவா நந்த நானே
யத்துவித மானபரா நந்த நானென்
றனிசமுநீ பாவித்துச் சுகித் திருப்பாய். (11)

மாயைமுதற் கதீதபரா நந்த நானே
மகாவாக்கி னிலக்கியவா நந்த நானே
தூயசிதா காயபரா நந்த நானே
துக்கசுக மெவையுமிலா நந்த நானே
நேயமதாய் நிகழ்பரமா நந்த நானே
நிகரற்ற நிரதிசயா நந்த நானே
யேயமிலா வேகபரா நந்த நானென்
றிருமையறப் பாவித்துச் சுகித் திருப்பாய். (12)

ஆதிமுடி வொன்றுமிலா நந்த நானே
யான்மாவுக் கபின்னபரா நந்த நானே
சோதியிரு ளெவையுமிலா நந்த நானே
சூக்குமமாய்ச் செறிந்தபரா நந்த நானே
பேதமிலாப் பூரணவா நந்த நானே
பின்னமறப் பிறங்குபரா நந்த நானே
யேதமிலாப் பரப்பிரமா நந்த நானென்
றிருமையறப் பாவித்துச் சுகித் திருப்பாய். (13)

சந்ததமுஞ் சலனமிலா நந்த நானே
சமாதியினுற் சார்ந்தபரா நந்த நானே
பந்தமறப் பிறங்குபரா நந்த நானே
பரம்பதமாய்ப் பற்றுபரா நந்த நானே
சிந்தையறச் செறிந்தசிதா நந்த நானே
செகத்தோற்றஞ் சிறிதுமிலா நந்த நானே
யந்தமிலா வகண்டபரா நந்த நானென்
றயலறவே பாவித்துச் சுகித்திருப்பாய். (14)

பரமவுப சாந்தபரா நந்த நானே
பாற்பரமாய்ப் பரவியவா நந்த நானே
யிருமையிலா திலகுபரா நந்த நானே
யேகமதா யிருந்தபரா நந்த நானே
சரமசர மெவையுமிலா நந்த நானே
சகசீவ பரங்களிலா நந்த நானே
யொருவடிவா யுள்ளபரா நந்த நானென்
றொழிவறவே பாவித்துச் சுகித் திருப்பாய். (15)

சொல்லவொணுச் சுபாவபரா நந்த நானே
சுயஞ்சோதி யானபரா நந்த நானே
தொல்லையதாந் துரியபரா நந்த நானே
துரியத்து மதீதபரா நந்த நானே
யல்லலிலா வகண்டபரா நந்த நானே
யனைத்துக்கு மதீதபரா நந்த நானே
யெல்லையிலா வேகபரா நந்த நானென்
றெப்போதும் பாவித்துச் சுகித் திருப்பாய். (16)

விஞ்ஞேதமதாய் விளங்கியவா நந்த நானே
விதம்விதமாய் விளங்கியவா நந்த நானே
கஞ்ஞேதயமாய்க் கண்டபரா நந்த நானே
கறையறவே நின்றபரா நந்த நானே
மஞ்ஞெசயமாய் வந்தபரா நந்த நானே
மனதாலு மறியாவா நந்த நானே
யிஞ்ஞேதயநே ரிலங்குபரா நந்த நானென்
றெப்போதும் பாவித்துச் சுகித் திருப்பாய். (17)

தத்துவமாய்த் தயங்குபரா நந்த நானே
தடையற்ற தன்மயவா நந்த நானே
சுத்தமதாய்த் துலங்குபரா நந்த நானே
சுகாதீத மானபரா நந்த நானே
யெத்துணியு மிலாதபரா நந்த நானே
யெவ்விடத்து மிலங்கியவா நந்த நானே
யத்துவிதா கண்டபரா நந்த நானென்
றநவரதம் பாவித்துச் சுகித் திருப்பாய். (18)

ஒருபொருளே சன்மயமாஞ் சொரூப மாகு
மொருபொருளே சின்மயமாஞ் சொரூப மாகு
மொருபொருளே சுகமயமாஞ் சொரூப மாகு
மொருபொருளே சுத்தபர சொரூப மாகு
மொருபொருளே யத்துவித சொரூப மாகு
மொருபொருளே யகண்டபர சொரூப மாகு
மொருபொருளே பரப்பிரம மதுநா னென்றே
யொருமையுடன் பாவித்து முத்த னுவாய். (19)

ஒருபொருளே யசலமதாஞ் சொரூப மாகு
மொருபொருளே யட்சரமாஞ் சொரூப மாகு
மொருபொருளே மகத்தான சொரூப மாகு
மொருபொருளே யுவமையிலாச் சொரூப மாகு
மொருபொருளே மஞ்ஞோகரமாஞ் சொரூப மாகு
மொருபொருளே யுபசாந்த சொரூப மாகு
மொருபொருளே பரப்பிரம மதுநா னென்றே
யொருமையுடன் பாவித்து முத்த னுவாய். (20)

ஒருபொருளே யகந்தையிலாச் சொரூப மாகு
மொருபொருளே யிதந்தையிலாச் சொரூப மாகு
மொருபொருளே மமதையிலாச் சொரூப மாகு
மொருபொருளே சமதையிலாச் சொரூப மாகு
மொருபொருளே யிதரமிலாச் சொரூப மாகு
மொருபொருளே யெங்குமுள சொரூப மாகு
மொருபொருளே பரப்பிரம மதுநா னென்றே
யொருமையுடன் பாவித்து முத்த னாவாய். (21)

ஒருபொருளே காமமிலாச் சொரூப மாகு
மொருபொருளே கோபமிலாச் சொரூப மாகு
மொருபொருளே லோபமிலாச் சொரூப மாகு
மொருபொருளே போகமிலாச் சொரூப மாகு
மொருபொருளே மதமுமிலாச் சொரூப மாகு
மொருபொருளே மச்சரமில் சொரூப மாகு
மொருபொருளே பரப்பிரம மதுநா னென்றே
யொருமையுடன் பாவித்து முத்த னாவாய். (22)

சந்ததமுந் தேகமிலாச் சொரூப நானே
சத்தியசிற் சுககனமாஞ் சொரூப நானே
பந்தமிலாப் பரப்பிரம சொரூப நானே
பவபாசம் பற்றியிடாச் சொரூப நானே
சிந்தைமுத லெவையுமிலாச் சொரூப நானே
சிதாகாய மானபர சொரூப நானே
யந்தமிலா வகண்டபர சொரூப நானென்
றநவரதம் பாவித்து முத்த னாவாய். (23)

நித்தியமாம் பரப்பிரம சொரூப நானே
நிருமலமாம் பரப்பிரம சொரூப நானே
சத்தியமாம் பரப்பிரம சொரூப நானே
சாந்தமதாம் பரப்பிரம சொரூப நானே
சுத்தமதாம் பரப்பிரம சொரூப நானே
சுககனமாம் பரப்பிரம சொரூப நானே
யத்துவித பரப்பிரம சொரூப நானென்
றநவரதம் பாவித்து முத்த னாவாய். (24)

உதாரபரி பூரணமாம் பிரம மோநா
　னுத்தமமா யுள்ளபரப் பிரம மோநா
னெதாகினுமோர் பிரிவுமிலாப் பிரம மோநா
　னேகபரி பூரணமாம் பிரம மோநான்
சித்தாநந்த மயமான பிரம மோநான்
　செகசீவ பரங்களிலாப் பிரம மோநான்
சதாநந்த கனமான பரநா னென்றே
　சங்கையறப் பாவித்து முத்த னுவாய். (25)

இந்தவிதம் பாவனையே செய்யச் சத்தி
　யிலதேனு மகண்டபர விடய மான
சுந்தரமாஞ் சத்தத்தை வாக்கி னாலே
　சோர்வறவே படித்தாலு மதனுன் மெள்ளச்
சிந்தையுமே யடைவாக வொருமைப் பட்டுச்
　சின்மயமாம் பாவனையுஞ் சேரு மந்தா
லந்தமிலா வகண்டபர ஞான முண்டா
　யகண்டமதா மோட்சநிலை யடைய லாமே. (26)

பாவனையாற் சீக்கிரமாய் முத்தி பேறும்
　படிப்பதனு லடைவாக முத்தி பேறு
மாவதனுன் முமுட்சுவெலாஞ் சீக்கி ரத்தி
　லகண்டபர மோட்சத்தை யடைய வேண்டிற்
பாவனமாம் பாவனையே யிடைவி டாமற்
　பலகாலு மாதரவாய்ப் பழகல் வேண்டுங்
கேவலமாம் பாவனையா லசத்த ரெல்லாங்
　கிளத்தியவா சத்தத்தைப் படிக்க வேண்டும். (27)

தேகமுதல் யானென்றுஞ் சகத்த னைத்துந்
　திரமென்றும் வெகுகால மாகி யுற்ற
பாகமுறும் வாதனைதா னகண்ட மாகப்
　பழகியிடும் பாவனையா னசிப்ப தன்றி
யேகபர வுறுதிதனை யெப்போ தேனு
　மிசைந்ததனு லெளிதாக நசியா தார்க்கு
மாகையினு லநவரத மிடைவி டாம
　லகண்டபர பாவனையே பழகல் வேண்டும். (28)

ஆதலினு னீயென்று மிடைவி டாம
லகண்டபர பாவனையே செய்தி மைந்தா
வீதிலதே லகம்பிரம மகமெல் லாமென்
றிதுமுதலா வியம்பியநற் சத்தந் தன்னைப்
பேதமறப் படித்திடுமற் றதனுன் ஞானம்
பெற்றவனுய்ப் பவபாச முத்த னுவா
யீதுறுதி யிதிலணுவுஞ் சங்கி யாதே
யெமதீச னியம்பியதிற் சங்கை யுண்டோ. (29)

அகிலமுமே யகண்டபரா நந்த மான
வசங்கபரப் பிரமமதா மதுநா னென்று
மகிமைமிகு மிப்பொருளை முமுட்சு வெல்லா
மதித்துடனே மோட்சநிலை மருவும் வண்ணம்
நிகிலசகன் னுயகனும் பரேசன் முன்ன
நிகழ்த்தியவா நிதாகநினக் குரைத்தே னன்பாற்
பகாலுறு மிப்பொருளை யொருகா லேனும்
பழுதறவே கேட்டுணர்வோன் பரமே யாவன். (30)

காலமுதற் சிலசிலவாங் கார ணத்திற்
காரியமாஞ் சகமெவையு முதிக்கு மென்றே
சீலமிலாச் சிலமூடர் சொல்வ ரன்னோர்
செப்பியிடும் வாதமெலாஞ் சுத்தப் பொய்யே
யாலயமாம் பரமசிவ சத்தி யாலே
யகிலமுமவ் வதிட்டான பரசி வத்திற்
கோலமுறக் கற்பிதமா மதுவு மந்தக்
கூறுபடாப் பரசிவமே யுண்மை யோரில். (31)

சுருதியினு லூகத்தா லநுப வத்தாற்
சோதிக்கிற் கற்பிதமாஞ் சகசீ வாதி
சருவமுமே சகலவதிட் டான மான
சன்மயமாம் பரமசிவ சொரூப மன்றி
யொருசிறிது மன்னியமா யென்று மில்லை
யுத்தமவிங் குரைத்ததெலா முண்மை யென்றே
நிருமலமாய் ரிபுமுனிவ னிதாக னுக்கு
நிகரற்ற பரம்பொருளை நிகழ்த்தி னுல். (32)

வேறு.

சருவமுஞ்சச்சிதாநந்தமாகிய சங்கமற்றபரம்பொருளென்னவு, மிருமையின்றியவப்பரமப்பொரு ளென்றுமேயகமென்னவுஞ்செய்திடும் பிரிவில்பாவனையாற் பரமுத்தியைப்பெற்றிருந் திடலாமெனப்பேசுதல், பரமவாநந்தத்தாண்டவமாடுநம்பரசிவன் றனகண்டசொரூபமே.

இருபத்திநான்காவது அத்தியாயம் (33)

முற்றிற்று.

ஆக அத்தியாயம்-24-க்கு திருவிருத்தம்-1105.

---

††††††††††††††††††††††††††††††††††††††††††

## இருபத்தைந்தாவது

### சுத்தப்பிரமபாவனையாற் பரமுத்தியுரைக்கும் அத்தியாயம்.

---

உத்தமமா மகண்டபரப் பிரம ஞான
முரமாகும் பொருட்டுநினக் கிந்த வோத்திற்
சுத்தபர பாவனையே மீண்டுஞ் சொல்வேன்
சொன்னவிதம் பாவனையே செய்வா யாகிற்
சித்தமுறுஞ் சங்கற்ப விகற்ப மெல்லாஞ்
சிறிதேனு மிஞ்சாமற் றீருந் தீர்ந்தாற்
புத்திரனே சங்கற்ப விகற்பந் தீர்ந்த
புந்திதனிற் பூரணமா ஞானந் தோன்றும். (1)

சின்மயமாம் பரப்பிரம சொரூப மேநான்
சிதாகாய பரப்பிரம சொரூப மேநா
னின்மலமாம் பரப்பிரம சொரூப மேநா
னிரந்தரமாம் பரப்பிரம சொரூப மேநான்
சன்மயமாம் பரப்பிரம சொரூப மேநான்
சதாநந்த பரப்பிரம சொரூப மேநா
னென்மயமாம் பரப்பிரம சொரூப நானென்
றெப்போதும் பாவித்தே விகற்பந் தீர்வாய். (2)

சுத்தமதாம் பரப்பிரம சொரூப மேநான்
சுககனமாம் பரப்பிரம சொரூப மேநா
னித்தியமாம் பரப்பிரம சொரூப மேநா
னிரஞ்சனமாம் பரப்பிரம சொரூப மேநான்
சத்தியமாம் பரப்பிரம சொரூப மேநான்
சலனமிலாப் பரப்பிரம சொரூப மேநா
னத்துவித பரப்பிரம சொரூப நானென்
றநவரதம் பாவித்தே விகற்பந் தீர்வாய். (3)

ஆதிமுடி வற்றபர சொரூப மேனா
னகண்டபரி பூரணமாஞ் சொரூப மேனான்
சாதிகுல மெவையுமிலாச் சொரூப மேனான்
சங்கமிலா வசங்கபர சொரூப மேனான்
பேதமிலா வபின்னபர சொரூப மேனான்
பீதியிலா வபயபர சொரூப மேனா
னேதுமிலா வேகபர சொரூப நானென்
றெப்போதும் பாவித்தே விகற்பந் தீர்வாய். (4)

ஒழிவற்ற ஞானகன சொரூப மேனா
னுற்பத்தி நாசமிலாச் சொரூப மேனா
னழிவற்ற வானந்த சொரூப மேனா
னகங்கார மணுவுமிலாச் சொரூப மேனான்
பழுதற்ற பரப்பிரம சொரூப மேனான்
பங்கமிலாப் பரமசிவ சொரூப மேனா
னிழிவற்ற வகண்டபர சொரூப நானென்
றிடையறவே பாவித்து விகற்பந் தீர்வாய். (5)

இந்தவித மெப்போது மிதயத் தின்க
ணேகபர பாவனையே யெளிதாச் செய்து
பந்தமுறு மனத்துடைய விகற்ப மெல்லாம்
பற்றறவே யிழந்துபரப் பிரமா னந்த
சித்துவிடைப் பிரிவறவே கலந்தெப் போதுஞ்
சின்னமிலா வானந்த மநுப வித்தே
யந்தமிலாப் பவபந்த மறுத்தெப் போது
மகண்டபர வடிவாக வமர்ந் திருப்பாய். (6)

அன்னியமோ ரணுவேனு மில்லை யென்று
மகிலமுமே யகண்டபரப் பிரம மென்றும்
பின்னமிலா வப்பிரம நானே யென்றும்
பேதமிலாப் பாவனையே திடமாய்ச் செய்வாய்
சொன்னவிதஞ் செய்வாயே னீயெப் போதுஞ்
சுகித்திடுவாய் சுகித்திடுவாய் சுகித்தே நிற்பாய்
பன்னியதி லணுவேனு மைய மில்லை
பரமசிவன் றன்னுணை பரமார்த் தந்தான். (7)

ஒருகாலுங் கற்பனையோ ரணுவு மில்லை
யொருகாலுங் கற்பிக்கு மனது மில்லை
யொருகாலுஞ் சம்சார மணுவு மில்லை
யொருகாலுஞ் சம்சாரி தானு மில்லை
யொருகாலுஞ் சகத்தணுவு மிலவே யில்லை
யொருகாலுஞ் சகதீசன் றானு மில்லை
யொருகாலு மொன்றுமிலை யுள்ள தெல்லா
முணர்வுருவாம் பரமெனவே நிச்ச யிப்பாய். (8)

இகழ்மனதே யொருகாலு மில்லாத தாலே
யிதன்செயலாஞ் சகத்தோற்ற மிருப்ப தெங்கே
சகமணுவு மொருகாலு மிலாத தாலே
சடதேக வார்த்தையுமே யிருப்ப தெங்கே
பகையுடலே யொருகாலு மிலாத தாலே
பாவியிடு மகங்கார மிருப்ப தெங்கே
யகிலமுமே யறிவுருவாம் பரமே யென்று
மதுதானே யகமென்று நிச்ச யிப்பாய். (9)

சித்தமுத லொருபொருளு மிலவே யில்லை
செகசீவர் முதலியவை யிலவே யில்லை
யித்தனையு மெதிராக விருப்ப தேனு
மிருப்பதெலா மிருக்கின்ற பரமே யாகு
நித்தியமா யிவையெல்லா நிகழ்வ தேனு
நிகழ்வதெலா நிகழ்கின்ற பரமே யாகுஞ்
சத்தியசிற் கனவடிவாம் பரமல் லாது
சகத்திற்குச் சத்தையிலை தோற்ற மில்லை. (10)

அகண்டமதா மதிட்டான சத்தை யன்றி
யாரோபந் தனக்கயலாய்ச் சத்தை யில்லை
யகண்டமதா மதிட்டான பான மன்றி
யாரோபந் தனக்கயலாய்ப் பான மில்லை
யகண்டமதா மதிட்டான வின்ப மன்றி
யாரோபந் தனக்கயலா யின்ப மில்லை
யகண்டமதா மதிட்டான சொரூப மன்றி
யாரோப மொருகாலு மிலவே யில்லை. (11)

ஆதலினு லிருப்பதென நிகழ்வ தென்ன
வாமவைதாம் பிரியமெனக் காண்ப தெல்லாம்
பேதமிலாச் சத்தியசிற் சுகமே யான
பிரமமெனும் பாவனையே பெலமாய்ச் செய்வா
யேதமுறுந் தேகாதி யானே யென்று
மிவ்வுலக மெனக்கயலா யுள்ள தென்றும்
பீதிசெயும் பாவனையை யொருகா லேனும்
பிரமித்து மனதினிடைப் பெற்றி டாதே. (12)

ஏதமுறுந் தேகமுதல் யானே யென்று
மிவ்வுலக மெனக்கயலா யுள்ள தென்றும்
பேதமுறு நிச்சயமே பொருந்து மூடன்
பெருமைமிகும் பிராமணனு யிருந்த போதுஞ்
சாதியினுன் மெத்தவுமே தாழ்மை யுற்ற
சண்டாளன் முனிதனி லைய மில்லை
யாதலினு லவ்விதமா நிச்ச யத்தை
யயர்ந்துமொரு காலத்து மடைந் திடாதே. (13)

எப்போது மொருபொருளு மிலவே யில்லை
யிருப்பதெனக் கற்பிதமாய்க் காண்ப தெல்லாஞ்
சற்போத சுககனமாம் பரமே யென்றுஞ்
சந்ததமு மப்பரம நானே யென்றுங்
கற்போல வசைவற்ற நிச்ச யத்தைக்
கலங்காம லெப்போது மப்பா சித்தே
தற்போத சூனியனுய்ப் பரமே யாகித்
தளர்வுதரும் பவபந்தந் தவிர்த்து நிற்பாய். (14)

சித்தமிலை புத்தியிலை சீவ ரில்லை
செகத்துமிலை செகதீசன் றானு மில்லை
யித்துவித மெள்ளளவு மிலவே யில்லை
யிருப்பதென விசைப்பதுவு மிசைத்த லேயாம்
புத்திரனே யாதலினு னீயெப் போதும்
பூரணமாம் பரப்பிரம நிச்ச யத்தோ
டத்துவித பாவனையே யிடைவி டாம
லாதரவாய்ப் புரிந்ததனுன் முத்த னுவாய். (15)

எதிர்தோற்றுந் [illegible] யென்று மில்லை
[illegible] யென்று மில்லை
யிதுவெ[illegible] [illegible]ராய்த் தோற்று
மில்[illegible]
திதமேவு[illegible] சொரூப மென்றுந்
திர்[illegible]ன வச்சொரூப நானே யென்று
மதிமேவும் பாவனையால் விகற்ப மெல்லா
மாற்றியுடன் மகத்தான முத்தி சார்வாய். (16)

யான்றானே நிட்களமாஞ் சொரூப மானேன்
யான்றானே நிருமலமாஞ் சொரூப மானேன்
யான்றானே போதகன சொரூப மானேன்
யான்றானே பூரணமாஞ் சொரூப மானேன்
யான்றானே கேவலமாஞ் சொரூப மானேன்
யான்றானே கெம்பீர சொரூப மானேன்
யான்றானே பரப்பிரம சொரூப னென்னு
மேகபர பாவனையான் முத்த னாவாய். (17)

யான்றானே சுககனமாஞ் சொரூப மானேன்
யான்றானே சுத்தபர சொரூப மானேன்
யான்றானே நிடசத்தா சொரூப மானேன்
யான்றானே திவ்வியமாஞ் சொரூப மானேன்
யான்றானே சருவான்ம சொரூப மானேன்
யான்றானே சாந்தபர சொரூப மானேன்
யான்றானே யகண்டபர சொரூப னென்னு
மேகபர பாவனையான் முத்த னாவாய். (18)

யான்றானே யகந்தையிலாச் சொரூப மானேன்
யான்றானே யான்மாவாஞ் சொரூப மானேன்
யான்றானே யிதந்தையிலாச் சொரூப மானேன்
யான்றானே யேகபர சொரூப மானேன்
யான்றானே மமதையிலாச் சொரூப மானேன்
யான்றானே மகத்தான சொரூப மானேன்
யான்றானே பரப்பிரம சொரூப னென்னு
மேகபர பாவனையான் முத்த னாவாய். (19)

யான்றானே சிந்தையிலாச் சொரூப மானேன்
யான்றானே சின்மாத்ர சொரூப மானேன்
யான்றானே தொந்தமிலாச் சொரூப மானேன்
யான்றானே துரியபர சொரூப மானேன்
யான்றானே பந்தமிலாச் சொரூப மானேன்
யான்றானே பராற்பரமாஞ் சொரூப மானேன்
யான்றானே பரப்பிரம சொரூப னென்னு
மேகபர பாவனையான் முத்த னுவாய். (20)

யான்றானே சற்குருவாஞ் சொரூப மானேன்
யான்றானே சற்சீட சொரூப மானேன்
யான்றானே யாவையுமாஞ் சொரூப மானேன்
யான்றானே யெவையுமிலாச் சொரூப மானேன்
யான்றானே யெங்குமுள சொரூப மானேன்
யான்யானு யிருக்கின்ற சொரூப மானேன்
யான்றானே யகண்டபர சொரூப னென்னு
மேகபர பாவனையான் முத்த னுவாய். (21)

யானென்று மறைவுமலன் றெரிவு மல்லன்
யானென்றுஞ் சடமுமலன் சித்து மல்லன்
யானென்று மொளியுமல னிருளு மல்லன்
யானென்று மொன்றுமல னிரண்டு மல்லன்
யானென்று முண்மையல னின்மை யல்லன்
யானென்று முணர்வுற்ற வெவையு மல்லன்
யானென்று மகண்டபரப் பிரம மென்னு
மேகபர பாவனையான் முத்த னுவாய். (22)

யானென்றுந் தேகமலன் பொறியு மல்லன்
யானென்று முயிருமல னுள்ள மல்லன்
யானென்று மனதுமலன் மதியு மல்லன்
யானென்றுஞ் சித்தமகங் கார மல்லன்
யானென்று மவித்தையலன் மாயை யல்லன்
யானென்றுஞ் சீவபர சகமே யல்லன்
யானென்று மகண்டபரப் பிரம மென்னு
மேகபர பாவனையான் முத்த னுவாய். (23)

எப்போதும் பரப்பிரமந் னக்கு வேறு
யிலங்கியிடு மெப்பொருளுஞ் சுத்தப் பொய்யே
சற்போத சுககனமாம் பிரம மொன்றே
சந்ததமுஞ் சலியாம லிருக்கும் வத்து
விப்பேத மெவையுமிலா தெவ்வி டத்து
மேகபரி பூரணமா யிருப்ப தான
நிர்ப்பேத பரப்பிரம நானே யென்று
நிரந்தரமாய் பாவித்து முத்த னுவாய். (24)

அத்யந்த நிருமலமாம் பிரம மேநா
னத்யந்த நிர்க்குணமாம் பிரம மேநா
னத்யந்த சற்கனமாம் பிரம மேநா
னத்யந்த சிற்கனமாம் பிரம மேநா
னத்யந்த சுககனமாம் பிரம மேநா
னத்யந்த சுத்தபரப் பிரம மேநா
னத்யந்த சாந்தபரப் பிரம நானென்
றநவரதம் பாவித்து முத்த னுவாய். (25)

யானென்று மயலற்ற சொரூப மானேன்
யானென்று மகத்தான சொரூப மானேன்
யானென்று மயலற்ற சொரூப மானேன்
யானென்று மகண்டபர சொரூப மானேன்
யானின்று மெவையுமிலாச் சொரூப மானேன்
யான்முன்னு மெவையுமிலாச் சொரூப மானேன்
யானென்று மெவையுமிலாச் சொரூப னென்றே
யெப்போதும் பாவித்து முத்த னுவாய். (26)

இகழ்வறவே யிருக்கின்ற சொரூப மேநா
னெப்போது மிலங்கியசிற் சொரூப மேநா
னகிலவுபா தியுமற்ற சொரூப மேநா
னனைத்துக்கு மதீதபர சொரூப மேநான்
பகரவொணுப் பரப்பிரம சொரூப மேநான்
பரிபூன்ற மானபர சொரூப மேநா
னகமருவா வகண்டபர சொரூப நானென்
றநவரதம் பாவித்து முத்த னுவாய். (27)

ஆன்மாவுக் கயலாகத் தீர்த்த மில்லை
யான்மாவுக் கயலாகத் தான மில்லை
யான்மாவா மதிசுத்த தீர்த்தத் தின்க
ணான்மாவே யகமென்று தானஞ் செய்தே
யான்மாவா மகண்டபரா நந்தந் தன்னை
யனிசமுநீ யாவலற வநுப வித்தவ்
வான்மாவாம் பரப்பிரம சொரூப மாக
வசஞ்சலமா யநவரத மமர்ந்து நிற்பாய். (28)

ஆன்மாவுக் கயலாகப் புசிப்ப தில்லை
யான்மாவே புசிக்கின்ற வத்து வெல்லா
மான்மாவுக் கயலாக வணுவு மில்லை
யான்மாவே யறிவுற்ற வத்து வெல்லா
மான்மாவே யகமென்று திடமாய்ப் பாவித்
தான்மசுக மடைந்துமிகத் திருத்தி மேவி
யான்மாவா மகண்டபர சொரூப மாகி
யநவரத மசைவறவே யமர்தி மைந்தா. (29)

ஆன்மாவிற் கற்பிதமாஞ் சகசீ வாதி
யகிலமுமவ் வான்மாவுக் கயலே யல்ல
வான்மாவுக் கயலெனவே கண்ட போது
மாய்ந்திடினவ் வகண்டபர மான்மா வேயா
மான்மாநா ணான்மாநா ணன்மா வெல்லா
மான்மாவுக் கபின்னபரப் பிரம நானென்
றான்மாவா மகண்டபரப் பிரமந் தன்னை
யநவரதம் பாவித்தவ் வடிவே யாவாய். (30)

சத்தியமா யிருக்கின்ற வான்மா வேநான்
சகலமுமாய்த் தெரிகின்ற வான்மா வேநா
னித்தியமாய் நிலைபெற்ற வான்மா வேநா
னிர்க்குணமாய் நிறைந்தபர மான்மா வேநா
னித்துவித மெவையுமிலா வான்மா வேநா
னேகபரி பூரணமா மான்மா வேநா
னத்துவித மானபர மான்மா நானென்
றநவரதம் பாவித்து முத்த னாவாய். (31)

இந்தவிதந் திடமான நிச்ச யத்தோ
டேகபர பாவனையே செய்தே யதனாற்
சிந்தையுறு விகற்பமெலாந் தீர்ந்து ஞானஞ்
செறிந்ததனாற் சின்மாத்ர மாகி நிற்பாய்
சந்ததமா நிச்சயமே சொரூப நிட்டை
சார்வதனின் முந்தியதா மேது வாகு
மந்தவுர நிச்சயமும் லயித்த பின்னு
ரயலறவே தான்றானாய்ச் சுகிக்க லாமே (32)

அகிலமுமே பிரமமென்று மதுநா னென்று
மகண்டபர பாவனையே யிங்கு ரைத்த
மகிமைமிகுந் திடமான நிச்ச யங்காண்
மற்றந்த நிச்சயமே பழகா நின்றே
ரிகன்மனதின் விகற்பமெலா மிழந்தெப் போது
மேகபர வடிவாகி யின்பஞ் சார்வர்
பகர்வதிலோ ரணுவேனு மைய மில்லை
பகர்ந்தபடி கேட்டுணர்வோன் பரமே யாவன் (33)

ஏகபரி பூரணமாய்ச் சராச ரங்க
ளெவைக்குமதிட் டானமதாம் பரசி வத்தைச்
சாகைபல பேதத்தாற் பலவாம் வேதஞ்
சம்புவென்றும் விண்டுவென்றும் விரிஞ்ச னென்று
மாகுபுரந் தரனென்று மனல னென்று
மழிக்கின்ற காலனென்று மனில னென்றும்
பாகமுற மற்றுமுள வமர ரென்றும்
பலவிதமா யங்கங்கே பகர லாகும். (34)

பலவிதமாய்ப் பகர்கின்ற வேத வாக்கின்
பரமான தாற்பரியப் பொருளை யெல்லா
மலைவறவே நன்றாக வாயுங் காலை
யநந்தவித வேதமுமே யகண்ட மான
தகைமைமிகு மேகபர சிவத்தைத் தானே
தாற்பரியப் பொருளாகச் சாற்று மென்றே
யிகழ்வறவே ரிபுமுனிவ னிதாக னுக்கங்
கேகபர பாவனையே யிசைத்தா னன்றே. (35)

வேறு.

தற்பதந்தனிற்கற்பிதமாகவே தயங்குகின்றசகமுதல்யாவையு, மற்ப
மின்றியசிற்பரமாகுமவ் வகண்டமானபரம் பொருளுனெனுஞ்,
சொற்பமின்றியபாவனை செய்திடிற்சுத்தமாம் பரமாயிடலாமெனல்,
சிற்பராநந்தத்தாண்டவமாடுநஞ் சிற்சபேசனகண்டசொரூபமே.(36)

இருபத்தைந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.
ஆக அத்தியாயம் 25-க்கு திருவிருத்தம்-1041.

++++++++++++++++++++++++++++++++++++++++++

# இருபத்தாறுவது
## அத்துவிதசோரூபத்தில் அபேதநிட்டையுரைக்கும் அத்தியாயம்.

அன்னியமோ ரணுவுமிலா வகண்டத் தின்க
ணத்யந்தந் தன்மயமா யிருக்கு நிட்டை
தன்னைநினக் கிவ்வோத்தி னிதாக சொல்வேன்
சாற்றியவா தன்மயமாச் சுகித்தி ருப்பாய்
பன்னுமிவை வேதத்துஞ் சாத்தி ரத்தும்
பற்றமிக வரிதாகுங் குய்ய மாகும்
பின்னுமிவை தேவர்க்கும் யோகி கட்கும்
பெறமிகவு மரிதாகும் பிரிய மாமே. (1)

சத்தியசிற் சுககனமாய்ச் சலன மின்றிச்
சகலர்க்கு மான்மாவாய்ச் சாந்த மாகி
யத்துவித பூரணமாம் பிரமத் தின்க
ணலைமனதின் விகற்பங்க ளனைத்துந் தீர்ந்து
சித்தமது வேறறவே கலந்தொன் றாகிச்
சீரசெல நியாயம்போற் சேர்ந் திருக்கை
புத்திரனே தன்மயமா நிட்டை யென்று
பூரணமா மறிஞரினாற் புகல லாகும். (2)

வெகுவிதமாய்த் தோன்றியிடும் பேத மெல்லாம்
விசாரிக்கி லொருகாலு மிலவே யில்லை
யகிலமுமே யான்மாவுக் கபின்ன மான
வகண்டபரப் பிரமமென்று மதுநா னென்றுந்
தகைமைமிகுந் திடமான நிச்ச யத்தைத்
தப்பாம லெப்போது மப்யா சித்தே
சகலமுமே யிகந்துபரப் பிரமத் தொன்றாய்ச்
சந்ததமுந் தன்மயமாய்ச் சுகித் திருப்பாய். (3)

விதம்விதமாய் விளங்கியித் துவித மெல்லாம்
 விசாரிக்கி லெதனிடையி லிலாத தாகுந்
திதமருவாக் காரியகா ரணங்க ளெல்லாந்
 திலமளவு மெதனிடையி லிலாத தாகு
மெதனிடையின் மனதுகலந் திருக்குங் காலை
 யித்துவித பயமணுவு மிலாத தாகு
மதன்மயமாய்த் துவிதபய மணுவு மின்றி
 யசஞ்சலமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (4)

எதனிடையிற் சங்கற்ப விகற்ப மில்லை
 யெதனிடையிற் சாந்தியில்லை தாந்தி யில்லை
யெதனிடையின் மனதுமில்லை மதியு மில்லை
 யெதனிடையின் மயலுமில்லை துணிவு மில்லை
யெதனிடையிற் பாவமில்லை யபாவ மில்லை
 யெதனிடையி லித்துவித வறிவே யில்லை
யதன்மயமாய்த் துவிதபய மணுவு மின்றி
 யசஞ்சலமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (5)

எதனிடையிற் ரோடமில்லை குணமு மில்லை
 யெதனிடையிற் றுக்கசுக மெவையு மில்லை
யெதனிடையின் மோனமில்லை வாக்கு மில்லை
 யெதனிடையிற் றுவந்துவமே தொன்று மில்லை
யெதனிடையிற் றேகமக மெனலே யில்லை
 யெதனிடையிற் றிருசியமோ ரணுவு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
 யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (6)

எதனிடையிற் காயிகமாஞ் செயலு மில்லை
 யெதனிடையில் வாசிகமாஞ் செயலு மில்லை
யெதனிடையின் மானதமாஞ் செயலு மில்லை
 யெதனிடையின் மற்றுமொரு செயலு மில்லை
யெதனிடையிற் பாவமற மெவையு மில்லை
 யெதனிடையிற் பற்றுபல னணுவு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
 யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (7)

எதனிடையிற் கற்பனையே யென்று மில்லை
யெதனிடையிற் கற்பிப்போன் றானு மில்லை
யெதனிடையிற் பிரபஞ்ச முதிக்க வில்லை
யெதனிடையிற் பிரபஞ்ச மிருக்க வில்லை
யெதனிடையிற் பிரபஞ்ச மொடுங்க வில்லை
யெதனிடையி லெவையுமொரு காலு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (8)

எதனிடையின் மாயையுடைத் தோற்ற மில்லை
யெதனிடையின் மாயைசெயுஞ் செயலு மில்லை
யெதனிடையில் வித்தையிலை யவித்தை யில்லை
யெதனிடையி லீசனிலை சீவ ரில்லை
யெதனிடையிற் சத்துமிலை யசத்து மில்லை
யெதனிடையிற் சகத்தோற்ற மிறையு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (9)

எதனிடையி லநேகவித வமர ரில்லை
யெதனிடையி லிவருடைய சேவை யில்லை
யெதனிடையிற் றிரிமூர்த்தி பேத மில்லை
யெதனிடையிற் றிரிமூர்த்தித் தியான மில்லை
யெதனிடையிற் பரமசிவ வடிவு மில்லை
யெதனிடையிற் பரமசிவத் தியான மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (10)

எதனிடையிற் பாகமுறுங் கரும மில்லை
யெதனிடையிற் பத்தியிலை ஞான மில்லை
யெதனிடையிற் பற்றியிடும் பயனு மில்லை
யெதுவலது பரமபதந் தானு மில்லை
யெதனிடையிற் சாதனமே தொன்று மில்லை
யெதனிடையிற் சாத்தியமோ ரணுவு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (11)

எதனிடையி லாக்கைபொறி யுயிர்க ளில்லை
யெதனிடையின் மனதுமதி சித்த மில்லை
யெதனிடையி லகங்கார மவித்தை யில்லை
யெதனிடையி லவையின்றி மானி யில்லை
யெதனிடையிற் சமட்டியிலை வியட்டி யில்லை
யெதனிடையிற் சம்சார லேச மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (12)

எதனிடையிற் காமமொடு கோப மில்லை
யெதனிடையி லுலோபமொடு மோக மில்லை
யெதனிடையின் மச்சரமு மதமு மில்லை
யெதனிடையின் மற்றமனத் துகளு மில்லை
யெதனிடையிற் பந்தமெனு மயலு மில்லை
யெதனிடையின் மோட்சமெனு மயலு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (13)

எதனிடையி லாதியிலை யந்த மில்லை
யெதனிடையி லடிநடுவு முடிவு மில்லை
யெதனிடையிற் றலமுமிலை தெய்வ மில்லை
யெதனிடையிற் றூனமிலை தரும மில்லை
யெதனிடையிற் காலமிலை தேச மில்லை
யெதனிடையிற் காண்கின்ற வத்து வில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித்திருப்பாய். (14)

எதனிடையிற் சாதனமோர் நான்கு மில்லை
யெதனிடையிற் சற்குருநற் சீட னில்லை
யெதனிடையில் வேறுபடா ஞான மில்லை
யெதனிடையில் விளங்கியிடு ஞானி யில்லை
யெதனிடையி லுபயவித முத்தி யில்லை
யெதனிடையி லொருகாலு மொன்று மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (15)

எதனிடையில் வேதமுத னூலு மில்லை
யெதனிடையில் விசாரிக்கும் புருட னில்லை
யெதனிடையிற் சங்கைசமா தான மில்லை
யெதனிடையிற் சாதிக்கும் பட்ச மில்லை
யெதனிடையிற் றள்ளியிடும் பட்ச மில்லை
யெதனிடையிற் றன்னையலா தெவையு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (16)

எதனிடையிற் செய்கின்ற வாத மில்லை
யெதனிடையிற் செயாபசெய மெவையு மில்லை
யெதனிடையில் வாச்சிய வாசகமு மில்லை
யெதனிடையில் வசனிக்கும் வாக்கு மில்லை
யெதனிடையிற் சீவபர பேத மில்லை
யெதனிடையிற் செறியுமுபா திகளு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (17)

எதனிடையிற் சிரவணமே யாதி யில்லை
யெதனிடையிற் செறிகின்ற சமாதி யில்லை
யெதனிடையிற் சசாதீய பேத மில்லை
யெதனிடையில் விசாதீய பேத மில்லை
யெதனிடையிற் சுகதமெனும் பேத மில்லை
யெதனிடையிற் சொற்பொருள்க ளெவையு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (18)

எதனிடையி னரகபய மணுவு மில்லை
யெதனிடையிற் சுவர்க்கசுகந் தானு மில்லை
யெதனிடையி லயன்முதலோ ருலக மில்லை
யெதனிடையி லங்குபெறும் பேறு மில்லை
யெதனிடையிற் பின்னுமுள வுலகு மில்லை
யெதனிடையிற் பிரமாண்ட மெவையு மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (19)

எதனிடையிற் பொருந்தியிடும் பூத மில்லை
யெதனிடையிற் பௌதிகமோ ரணுவு மில்லை
யெதனிடையின் மமதையிலை யகந்தை யில்லை
யெதனின்மனோ ராச்சியமோ ரணுவு மில்லை
யெதனிடையிற் சங்கமெனுந் தோட மில்லை
யெதனிடையிற் சற்றுமொரு விகற்ப மில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (20)

எதனிடையின் மூன்றுவித தேகமில்லை
யெதனிடையின் மூன்றுவித வவத்தை யில்லை
யெதனிடையின் மூன்றுவித சீவ ரில்லை
யெதனிடையின் மூன்றுவித தாப மில்லை
யெதனிடையி லைந்துவித கோச மில்லை
யெதனிடையி லவையினபி மானி யில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (21)

எதனிடையி லறிவுற்ற பொருளே யில்லை
யெதனிடையி லாவரண சத்தி யில்லை
யெதனிடையில் விதம்விதமாம் பேத மில்லை
யெதனிடையில் விட்சேப சத்தி யில்லை
யெதனிடையிற் பின்னுமுள சத்தி யில்லை
யெதனிடையிற் பிரபஞ்ச மயலே யில்லை
யதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (22)

எதனிடையிற் காணமெலா மிலாத தாகு
மெதனிடையிற் கர்த்தாவு மிலாத தாகு
மெதனிடையி னிரதிசயா நந்தந் தோன்று
மெதுதானே நிச்சலமா நிலைமை யாகு
மெதனையறிந் தடைகின்றோ ரென்று மீளா
ரெதுவானோர் பவபந்த மென்று மேவா
ரதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித்திருப்பாய். (23)

எதனையறிந் தனவரதஞ் சுகிப்போ ருக்கிங்
  கெச்சுகமுந் தற்சுகமா யிலங்கா நிற்கு
மெதையகமென் றறிதிடமா யறிந்த பின்ன
  ரெள்ளளவு மன்னியமே யிலாத தாகு
மெதையகமென் றறிதிடமா யறிந்த தாலே
  யெவ்விதமாஞ் சீவருமே முத்த ராவ
ரதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
  யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (24)

எதையகமென் றறிதிடமா யறிந்தான் மற்று
  மெள்ளளவு மிதரத்தை யறிய வேண்டா
மெதையகமென் றறிதிடமா யறிந்த தாலே
  யாவையுமே யெப்போது மறிந்த தாகு
மெதையகமென் றறிதிடமா யறிந்த தாலே
  யெச்செயலுஞ் செய்துமுடிந் ததுவே யாகு
மதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
  யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (25)

எதனையகம் பிரமமெனு நிச்ச யத்தா
  லிடரறவே யெளிதாக வடைய லாகு
மெதனிடையந் நிச்சயமுஞ் சாந்த மாஞ
  லேகபரி பூரணவா நந்தந் தோன்று
மெதனிடையின் மனதுலயித் திருக்குங்காலை
  யிணையற்ற நிரதிசய திருத்தி மேவு
மதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
  யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (26)

எதனிடையின் மனதுலயித் திருக்குங் காலை
  யெத்துயரு மெள்ளளவு மிலாத தாகு
மெதனிடையின் மனதுலயித் திருக்குங் காலை
  யானீயு மற்றுரு மிலாத தாகு
மெதனிடையின் மனதுலயித் திருக்குங் காலை
  யிப்பேதம் யாவையுமே யிலாத தாகு
மதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
  யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (27)

எதனிடையின் மனதுலயித் திருக்குங் காலை
யிருமையறத் தான்றானு யிருக்க லாகு
மெதனிடையின் மனதுலயித் திருக்குங் காலை
யெள்ளளவுந் தனக்கயலே யிலாத தாகு
மெதனிடையின் மனதுலயித் திருக்குங் காலை
யிணையற்ற வாநந்த மொன்றே தோன்று
மதனிடையிற் சங்கற்ப மணுவு மின்றி
யம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (28)

எதுதானே யகண்டசதா கார மாகு
மெதுதானே யகண்டசிதா கார மாகு
மெதுதானே யகண்டசுகா கார மாகு
மெதுதானே யத்துவிதா கார மாகு
மெதுதானே யான்மாவுக் கபின்ன மாகு
மெதுதானே யகண்டபரப் பிரம மாகு
மதுதானே நானென்னு நிச்ச யத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (29)

எதுதானே யானுகு நீயு மாகு
மெதுதானே மற்றுமுளோ ராரு மாகு
மெதுதானே யகிலவடிட் டான மாகு
மெதுதானே யணுவுமிலா தேக மாகு
மெதுதானே யத்யந்த சுத்த மாகு
மெதுதானே யகண்டபரி பூன்ற மாகு
மதுதானே நானென்னு நிச்ச யத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (30)

எதனிடையில் விருத்தியெலா மிலாத தாகு
மெதனிடையில் வேறணுவு மிலாத தாகு
மெதனிடையி லகந்தை யெலா மடங்க லாகு
மெதனிடையி லாசையெலா மழிந்தே போகு
மெதனிடையின் மனதுமுதன் மரிப்ப தாகு
மெதனிடையின் மயக்கமெலா நசிப்ப தாகு
மதுவகமென் றறிதிடமா நிச்ச யத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (31)

எதனிடையிற் றேகமுதற் றெரியா தாகு
மெதனிடையிற் றிருசியமே திகழா தாகு
மெதனிடையிற் சித்தமுமே மரித்துப் போகு
மெதனிடையிற் சீவனுமே கலந்த தாகு
மெதனிடையி னினைவெவையும் லயித்துப் போகு
மெதனிடையி னிச்சயமு நசித்த தாகு
மதுவகமென் றதிதிடமா நிச்சயத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித்தி ருப்பாய். (32)

எதனிடையிற் றியானமெலாம் லயிப்ப தாகு
மெதனிடையில் யோகமெலா மிறப்ப தாகு
மெதனிடையி லஞ்ஞான மரிப்ப தாகு
மெதனிடையில் ஞானமுமே நசிப்ப தாகு
மெதனிடையில் விவகார மிலாத தாகு
மெதுதானே பரமார்த்த நிலைமை யாகு
மதுவகமென் றதிதிடமா நிச்சயத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (33)

எதனிடையிற் கலந்திடுவோன் சுகமே சார்வ
னெதனிடையிற் கலந்திடுவோன் றுயரே மேவா
னெதனிடையிற் கலந்திடுவோ னெவையுங் காணு
னெதனிடையிற் கலந்திடுவோன் பிறப்பே சாரா
னெதனிடையிற் கலந்திடுவோன் பிரிவே மேவா
னெதனிடையிற் கலந்திடுவோன் பரமே யாவ
னதுவகமென் றதிதிடமா நிச்சயத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (34)

எதுசாட்சாத் பரப்பிரம சொரூப மாகு
மெதுசாட்சாத் பரமசிவ சொரூப மாகு
மெதுசாட்சாத் பரிசுத்த சொரூப மாகு
மெதுசாட்சாத் பரமபத சொரூப மாகு
மெதுசாட்சாத் பிரஞ்ஞான சொரூப மாகு
மெதுசாட்சாத் பரதத்வ சொரூப மாகு
மதுதானே யகமென்னு நிச்சயத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (35)

எதுசாட்சாத் சுத்தபர சொரூப மாகு
மெதுசாட்சாத் சுககனமாஞ் சொரூப மாகு
மெதுசாட்சாத் சூக்கபர சொரூப மாகு
மெதுசாட்சாத் சுயஞ்சோதி சொரூப மாகு
மெதுசாட்சா தத்துவித சொரூப மாகு
மெதுசாட்சா தகண்டார்த்த சொரூப மாகு
மதுதானே யகமென்று நிச்ச யத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (36)

எதுசாட்சாத் சத்தியமாஞ் சொரூப மாகு
மெதுசாட்சாத் சாந்தபர சொரூப மாகு
மெதுசாட்சாந் நித்தியமாஞ் சொரூப மாகு
மெதுசாட்சாந் நிர்க்குணமாஞ் சொரூப மாகு
மெதுசாட்சா தான்மாவாஞ் சொரூப மாகு
மெதுசாட்சா தகண்டபர சொரூப மாகு
மதுதானே யகமென்று நிச்ச யத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (37)

எதுதானே விவகாரத் தனைத்து மாகு
மெதுதானே பரமார்த்தத் தனுவு மாகா
தெதுதானே சத்தியசிற் சுகமே யாகு
மெதுதானே சந்ததமுஞ் சாந்த மாகு
மெதுதானே தனக்கனிய மலாத தாகு
மெதுதானே தானுகத் தனித் திருக்கு
மதுதானே யகமென்று நிச்ச யத்தா
லம்மயமா யநவரதஞ் சுகித் திருப்பாய். (38)

இந்தவிதந் தன்மயமா நிட்டை தன்னை
யிருமையற நிதாகநினக் கிசைக்க லானேன்
சந்ததமு மிடையறவே பழகா நின்ற
சலனமிலா வகண்டபர நிச்ச யத்தா
லந்தவித நிட்டைதனை யடைந்த வற்று
லநவரத மாநந்த மநுப விப்பாய்
பிந்தியொரு காலத்தும் பவத்தின் றுன்பம்
பிரமமய மானநினக் கிலவே யில்லை. (39)

சத்தியசிற் சுககனமாம் பரமே யெல்லாஞ்
சந்ததமு மதுநானென் றப்யா சிக்குஞ்
சுத்தபர வாதனையான் மலின மாகச்
சொல்லியிடும் வாதனைக ளனைத்துந் தள்ளிப்
புத்திரனே பின்பதையு மிழந்தெப் போதும்
பூரணமா யிருப்பதுவா நிட்டை மேவி
யத்துவித பரப்பிரம மயமே யாகி
யகண்டமதா யிருப்பதுவா முத்தி சார்வாய். (40)

சொலுமலின வாதனையு மனத்தின் றன்மஞ்
சுத்தபர வாதனையு மனத்தின் றன்ம
மலையுமொரு வாதனையும் பரத்துக் கில்லை
யாதலினு லம்மயமா நிட்டை சார்ந்து
மலினமெனச் சுத்தமென மதிக்கப் பட்ட
மனதுடைய வாதனைக ளொன்று மின்றிச்
சலனமிலாச் சிலைபோலுங் காட்டம் போலுஞ்
சற்றேனுஞ் சலியாமற் சுகித் திருப்பாய். (41)

அகண்டபர பாவனையே செய்த வற்று
லன்னியமா நினைவெவையு மறந்த பின்னர்ப்
புகன்றபர பாவனையு மறந்தெப் போதும்
பூரணமாம் பரப்பிரம மயமே யாவாய்
செகந்தனிலே யெந்தமகா பாவி யேனுஞ்
செப்பியிடு மிப்பொருளைக் கேட்டு ணர்ந்தா
லகந்தனிலே யுள்ளமகா பாவ மெல்லா
மழிந்தன்றே யகண்டபர வடிவே யாவன் (42)

எல்லையிலா வேதமெலாஞ் சித்த சுத்திக்
கேதுவதா முபாசனையை முன்பங் கங்கே
சொல்லியதாற் சித்தத்தின் சுத்தி யுற்றோர்
சுகமாக மோட்சநிலை சார்வ தற்கே
யல்லலிலா வானந்த கனமே யான
வகண்டபரி பூரணமாம் பரசி வத்திற்
கல்லெனவே யசையாமற் கலந்தி ருக்குங்
களங்கமிலா நிட்டையினைக் காட்டிற் றன்றே. (43)

ஆதலினு லறிவதெலாஞ் சிவமே யென்று
மச்சிவமே நானென்றும் பழகப் பட்ட
சாதகமா முபாசனையாற் சித்த சுத்தி
சார்ந்ததனாற் றன்மயமா நிட்டை கூடிப்
பேதமிலா மோட்சநிலை பெறலா மிங்கே
பேசியது சத்தியமே யென்ப தாகப்
போதமுற ரிபுமுனிவ னிதாக னுக்குப்
பூரணமா நிட்டையினைப் புகன்றான் மன்னோ. (44)

வேறு.

சச்சிதாநந்த மாகியவத்துவே சந்ததமக வென்றுபுரிந்திடு
நிச்சயந்தனி னுலகிலேகமாய் நிற்பதாகிய தன்மயநிட்டையாற்
றுச்சமாம்பவ பந்தம்விடுத்துடன் றூயமுத்தி யடைந்திடலாமென
வுச்சவாநந்தத் தாண்டவமாடுநம் முத்தமேச னகண்டசொரூபமே.

இருபத்தாறுவது அத்தியாயம் (45)

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 26-க்கு திருவிருத்தம்-1086.

---

++++++++++++++++++++++++++++++++++++++++

# இருபத்தேழாவது

## சுத்தசொரூபாநு சந்தானத்தாற் சாந்தியுரைக்கும் அத்தியாயம்.

சத்தியசிற் சுககனமாம் பிரம மாத்ரஞ்
சந்ததமுஞ் சலியாம லுள்ள தென்று
மித்துவித மெள்ளளவு மில்லை யென்று
மிவ்விதமாம் பொருளைநினக் கின்னஞ் சொல்வே
னுத்தமமா மிப்பொருளை யொருகா லேனு
முள்ளபடி யுரமாகக் கேட்டு ணர்ந்தோ
னத்துவித பரப்பிரம மாத்ர மாகி
யகண்டபர மோட்சத்தை யடைவ னன்றே. (1)

சத்தியமாய்ச் சமமாகிச் சாந்த மாகிச்
சலனமிலாச் சாசுவத சுபாவ மாகி
நித்தியமாய் நிர்க்குணமாய் நிமல மாகி
நிரஞ்சனமாய் நிராமயமாய் நிருவி கற்ப
சித்துருவாய்ச் செறிந்தபரப் பிரம மொன்றே
சிதையாம லெப்போது மிருக்கும் வத்து
வத்துவித பூரணமாம் பிரமத் துக்கிங்
கன்னியமா யணுவேனு மிலவே யில்லை. (2)

தொந்தமுறுந் துவிதமொரு காலு மில்லை
தோற்றியிடுந் தோற்றமெலாம் பரமே யாகும்
பந்தமுதற் பலவிதமாம் பகுப்பே யில்லை
பார்க்கின்ற பார்வையெலாம் பரமே யாகுஞ்
சந்ததமுஞ் சகலமுமே சற்று மில்லை
சகலமெனக் காண்பதெலாம் பரமே யாகு
மந்தமிலா வகண்டைக ரசமே யான
வப்பிரம மகமெனவே யநுசந் திப்பாய். (3)

தேகமுத லொருபொருளு மென்று மில்லை
திருசியமாய்த் தெரிவதெலாம் பரமே யாகும்
போகமுத லொருபொருளு மென்று மில்லை
புலமுறவே காண்ப தெலாம் பரமே யாகு
மோகமுத லொருபொருளு மென்று மில்லை
முன்னிலையாய்க் காண்பதெலாம் பரமே யாகு
மாகுமய லணுவுமிலா தகண்ட மான
வப்பிரம மகமெனவே யநுசந் திப்பாய். (4)

சத்தியஞா னநந்த சொரூப மேநான்
சலனமிலாச் சுத்தபர சொரூப மேநான்
நித்தியநிட் களமான சொரூப மேநா
னிரஞ்சனமாய் நிறைந்தபர சொரூப மேநா
னித்துவித மெவையுமிலாச் சொரூப மேநா
னேகபரி பூரணமாஞ் சொரூப மேநா
னத்துவித மானபர சொரூப நானென்
றயலறவே யநவரத மநுசந் திப்பாய். (5)

பேதமிலாச் சத்தான சொரூப மேநான்
பிறங்கியிடுஞ் சித்தான சொரூப மேநான்
கேதமிலா வாநந்த சொரூப மேநான்
கேவலமாஞ் சாந்தபர சொரூப மேநான்
சாதிகுல மெவையுமிலாச் சொரூப மேநான்
சம்சார லேசமிலாச் சொரூப மேநா
னாதியிலா வகண்டபர சொரூப நானென்
றயலறவே யனவரத மநுசந் திப்பாய். (6)

சூக்ஷ்மமாய்ச் செறிந்தபர சொரூப மேநான்
சுத்தபர மாநந்த சொரூப மேநான்
றுக்குமொரு பற்றுமிலாச் சொரூப மேநான்
றுன்றுளுய்த் தனித்தபர சொரூப மேநா
னீக்கமற நிறைந்தபர சொரூப மேநா
னிகிலபரி பூரணமாஞ் சொரூப மேநா
ளுக்கைமுத லுபாதியிலாச் சொரூப நானென்
றயலறவே யநவரத மநுசந் திப்பாய். (7)

சருவமுமாய்த் தெரிகின்ற சொரூப மேநான்
சருவமெனுஞ் சொலவுமிலாச் சொரூப மேநா
னிருமலமாய் நிகழ்கின்ற சொரூப மேநா
னித்தியவிஞ் ஞானகன சொரூப மேநான்
சுருதிமுதற் ககோசரமாஞ் சொரூப மேநான்
சுத்தபரப் பிரமமெனுஞ் சொரூப மேநா
னிருமையிலா வேகபர சொரூப நானென்
றிடையறவே யெப்போது மநுசந் திப்பாய். (8)

சனனமுதற் சட்பாவ விகார மின்றிச்
சந்ததமுஞ் சின்மாத்ர சொரூப மாகி
மனதுமுதற் கெட்டாத வத்து வாகி
மாயைமுத லுபாதிகளோ ரணுவு மின்றிப்
பனுவியிடு மீசத்வ சீவத் வங்கள்
பற்றியிடா வகண்டபரப் பிரமந் தானே
யநவரத மகமெனவே யிடைவி டாம
லத்யந்த வாதரவோ டநுசந் திப்பாய். (9)

ஓதியிடு முடன்மூன்று மவத்தை மூன்று
முரைத்தவவற் றபிமானி மூன்று மின்றிச்
சாதிகுல முதலியவா முபாதித் தன்மஞ்
சற்றுமொரு காலத்தும் பற்று தாகி
வேதமுதற் பலவிதமாஞ் சாத்தி ராதி
விளக்கியிடும் விபுவான வறிவாய் நின்ற
வேதமிலா வகண்டபரப் பிரமந் தானே
யெப்போது மியானெனவே யநுசந் திப்பாய். (10)

ககனமுதற் கற்பிதமாய்த் தோன்று நின்ற
காரியகா ரணமான சகத்தே யில்லை
பகருசக சிருட்டிமுதற் செய்யா நின்ற
பதுமசனே முதலியமும் மூர்த்தி யில்லை
வெகுவிதமா யங்கங்கே விளங்கா நின்ற
வேறுபடும் வாச்சியவா சகமே யில்லை
யகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மதுதானே யகமென்று மநுசந் திப்பாய். (11)

தக்கசெய மபசெயமற் றெவையு மில்லை
சாருமிலா பாலாப மெவையு மில்லை
துக்கசுகந் துதிநிந்தை யெவையு மில்லை
துவிதமில்லை யத்துவிதந் தானு மில்லை
முக்குணமு மதன்செயலு மெவையு மில்லை
மூலமதா மஞ்ஞானந் தானு மில்லை
யக்காரமாம் பரப்பிரம மனைத்து மென்று
மதுதானே யகமென்று மநுசந் திப்பாய். (12)

காலமுதற் கற்பனையே யிலாமை யாலே
காண்கின்ற காட்சிமுத லிருப்ப தெங்கே
தூலமுதற் காத்திரமே யிலாமை யாலே
தொடர்கின்ற பவபந்த மிருப்ப தெங்கே
மூலமதா மஞ்ஞான மிலாமை யாலே
முளைக்கின்ற வதன்செய்கை யிருப்ப தெங்கே
யாலயமாம் பரப்பிரம மனைத்து மென்று
மதுதானே யகமென்று மநுசந் திப்பாய். (13)

சஞ்சலமா மானதமே யிலாமை யாலே
சங்கற்ப விகற்பங்க ளிருப்ப தெங்கே
பஞ்சமகா பூதமுமே யிலாமை யாலே
பலவிதமாம் பௌதிகமிங் கிருப்ப தெங்கே
தஞ்சமெனுந் தேவதையே யிலாமை யாலே
தான்செய்யும் பூசைமுத லிருப்ப தெங்கே
யஞ்சனமில் பரப்பிரம மனைத்து மென்று
மதுதானே யகமென்று மநுசந் திப்பாய். (14)

சித்தமுறும் விருத்திகளே யிலாமை யாலே
செகமுதலின் சிந்தனையிங் கிருப்ப தெங்கே
புத்தியெனு நாமமுமே யிலாமை யாலே
பொருள்களுணர் நிச்சயமிங் கிருப்ப தெங்கே
யித்துவித மெள்ளளவு மிலாமை யாலே
யேகமென வியம்புதலு மிருப்ப தெங்கே
யத்துவித பரப்பிரம மனைத்து மென்று
மதுதானே யகமென்று மநுசந் திப்பாய். (15)

இங்கற்ப வகங்கார மிலாமை யாலே
யானெனதென் றெண்ணந்தா னிருப்ப தெங்கே
சங்கற்பம் யாவையுமே யிலாமை யாலே
சரீரமுதற் றோற்றந்தா னிருப்ப தெங்கே
பொங்குற்ற பொறிகளெலா மிலாமை யாலே
புலனென சத்தாதி யிருப்ப தெங்கே
யெங்குற்ற வெப்பொருளும் பிரம மென்று
மிதுதானே யானென்று மநுசந் திப்பாய். (16)

சருவமுமே யகண்டபரப் பிரம மென்னுஞ்
சந்ததமு மப்பிரம நானே யென்னு
மிருமையிலாப் பாவனையே யிடைவி டாம
லெப்போது முயற்சியுடன் செய்த வற்றான்
மருவியவிவ் வுலகமெலா முண்மை யென்னு
மற்றிந்தத் தேகாதி நானே யென்னு
மொருமையிலா விபரீத மொழித்தெப் போது
முணர்வுருவாம் பரப்பிரம மாத்ர மாவாய். (17)

சருவமுமே பரப்பிரமஞ் சத்தி யந்தான்
சந்ததமு மதுவேநீ சத்தி யந்தான்
பாவியவிவ் வர்த்தத்திற் சங்கை யில்லை
பரமசிவன் றன்னுணை பரமார்த் தந்தா
னரியவனே யாதலினு னீயெப் போது
மகிலமுமே பிரமமென்னு மதுநா னென்னு
மொருமைதரும் பாவனையே செய்த வற்று
னுணர்வுருவாம் பரப்பிரம மாத்ர மாவாய். (18)

அகண்டபர மோட்சத்தை யடைவ தற்கிங்
கதிதிடமா மகம்பிரம நிச்ச யந்தான்
செகந்தனிலே முக்கியகா ரணமா மைந்தா
செப்பியது சத்தியமே சங்கை யில்லை
புகன்றருளுஞ் சற்குருவின் வசனத் தாலும்
பூரணமாய்ப் பழகியதன் பழக்கத் தாலு
மகந்தனிலே யகம்பிரம நிச்ச யந்தா
னதிதிடமா மற்றதனான் மோட்சம் பெறும். (19)

ஆதலினா லகம்பிரம நிச்ச யந்தா
னதிதிடமாய் மோட்சநிலை யடையு மட்டு
மேதமிலா வென்னுடைய வாக்கி யத்தா
லெப்போது மெவ்வளவு மிடைவி டாமற்
பேதமிலா வகம்பிரம நிச்ச யத்தைப்
பிரியமுடன் றிடமாக வப்பியா சித்து
வீதலுறும் விகற்பமெலா மிகந்தெப் போதும்
வேறுபடா மோட்சநிலை மேவு வாயே. (20)

யான்றானே யெவைக்குமதிட் டான மானேன்
யான்றானே யாவையுமா யிலங்கா நின்றேன்
யான்றானே யெவையுமிலா தேக மானேன்
யான்றானே யாவர்க்கு மான்மா வானேன்
யான்றானே யகண்டபரப் பிரம மானேன்
யான்றானே யத்துவித சொரூப மானேன்
யான்றானே யானாக விருப்போ னென்னு
மேகபர பாவனையாற் சாந்த னாவாய். (21)

யான்றானே யறிவான சொரூப மானேன்
யான்றானே யானந்த சொரூப மானேன்
யான்றானே யழிவற்ற சொரூப மானேன்
யான்றானே யகண்டபர சொரூப மானேன்
யான்றானே யேகபர சொரூப மானேன்
யான்றானே யிதரமிலாச் சொரூப மானேன்
யான்றானே யானான சொரூப மென்னு
மேகபர பாவனையாற் சாந்த னாவாய். (22)

பரமசிவன் றிருவுருவ மானோ ஞனே
பரமசிவ பூசனையு மானோ ஞனே
யரியுடைய திருவுருவு மானோ ஞனே
யவ்வரியின் பூசனையு மானோ ஞனே
விரவுவிதி திருவுருவு மானோ ஞனே
விதம்விதமா மெப்பொருளு மானோ ஞனே
யிருமையிலாப் பரப்பிரம மானோ ஞனென்
றேகபர பாவனையாற் சாந்த ஞவாய். (23)

சுராசுரர் மானுடரு மானோ ஞனே
சுழல்கின்ற கிரியக்கு மானோ ஞனே
பிரிவுபெறு முலகமெலா மானோ ஞனே
பிரமாண்ட கோடிகளு மானோ ஞனே
சரமசர மெப்பொருளு மானோ ஞனே
சகசீவ பரங்களெலா மானோ ஞனே
யிருமையிலாப் பரப்பிரம மானோ ஞனென்
றேகபர பாவனையாற் சாந்த ஞவாய். (24)

இதுவெனவே தெரிவதுவு மானோ ஞனே
யானீயாய்த் தெரிவதுவு மானோ ஞனே
யதுவெனவே தெரிவதுவு மானோ ஞனே
யன்னியமாய்த் தெரிவதுவு மானோ ஞனே
யெதுவெதுவாய்த் தெரிவதுவு மானோ ஞனே
யெப்போது மெல்லாமு மானோ ஞனே
யதிசயமாம் பரப்பிரம மானோ ஞனென்
றகண்டபர பாவனையாற் சாந்த ஞவாய். (25)

சித்தமுதற் றிருசியமு மானோ ஞனே
சின்மயமாந் திருக்குருவு மானோ ஞனே
புத்தியுறும் விருத்தியெலா மானோ ஞனே
பொருந்துமதன் விடயமெலா மானோ ஞனே
யித்துவித பேதமெலா மானோ ஞனே
யில்லதுள தென்பதெலா மானோ ஞனே
யத்துவித பரப்பிரம மானோ ஞனென்
றகண்டபர பாவனையாற் சாந்த ஞவாய். (26)

ஓருபொருளு மொருகாலுஞ் செனிக்க வில்லை
யொருகாலுஞ் செனியாதிங் கிருப்ப தெங்கே
விரிவுறவே செனியாது மற்றி ராதும்
வீதலடைந் திடுமென்ன விளம்ப லெங்கே
யரியவனே யாதலினு லகண்ட மான
வத்துவிதப் பிரமத்துக் கயலே யில்லை
சருவமுமே பிரமமென்னு மதுநா னென்னுஞ்
சலியாத பாவனையாற் சாந்த னுவாய். (27)

எப்பொருளு மெங்கேனு மிருக்கு மாகி
லிவ்விதமா யிஃதுளதென் றியம்பல் வேண்டுஞ்
சிற்பொருளே யன்றியொரு பொருளு மென்றுஞ்
சிறிதுமிலாத் தன்மையினு லியம்பு தற்கிங்
கற்பமுமே யிடமில்லை யாத லாலே
யகண்டபரப் பிரமவடி வான வென்னிற்
சொற்பொருளோ ரணுவுமிலை யென்றெப் போதுஞ்
சும்மாவே யிருந்துமிகச் சாந்த னுவாய். (28)

சலமனதே யொருகாலு மிலவே யில்லை
சார்மனதின் விகற்பங்க ளிருப்ப தெங்கே
திலமளவு மொன்றுமொரு காலு மில்லை
திகழ்வதெலா மகண்டபர மான நானென்
றலைவில்பர பாவனையால் விகற்ப மெல்லா
மழிந்தவுட னசைவற்றே ரயலு மற்றுச்
சொலன்மருவாச் சுத்தபர சொரூப மாகிச்
சும்மாவே யிருந்துமிகச் சாந்த னுவாய். (29)

அகிலமுமே பிரமமதா மதுவே நானு
மகண்டபரி பூரணமாம் பரநா னிங்ங
னிகழுபல பேதமிலாப் பரநா னென்னு
நிரதிசயா நந்தபர நானே யென்னு
மகிழ்வுதரும் பாவனையு மறந்தெப் போது
மனவாக்குக் கெட்டாத வத்து வான
சுககனமாம் பரப்பிரம சொரூப மாகிச்
சும்மாவே யிருந்துமிகச் சாந்த னுவாய். (30)

படருமகம் விருத்திக்கு விடய மான
பலவிதமாந் துவிதமொரு காலு மில்லை
தொடருமிதம் விருத்திக்கு விடய மான
துவிதமுமே யொருகாலு மிலவே யில்லை
சடமருவாச் சின்மயமாம் பிரம மொன்றே
சந்ததமு முளதென்னு மதுநா னென்னுந்
திடமருவு மநுபூதி யடைந்தெப் போதுந்
தியங்காது மிகவுமுப சாந்த னுவாய். (31)

சிரவணமுஞ் சிந்தனையுஞ் சிறிது மில்லை
செய்கின்ற தியானமிலை சமாதி யில்லை
விரவிலய விட்சேப கஷாய மில்லை
விளங்கிரசா ஸ்வாதமிலை வேறொன் றில்லை
சருவமுமே சன்மயமாம் பிரம மென்னுஞ்
சந்ததமு மப்பிரம நானே யென்னு
மிருமையிலா வநுபூதி யடைந்தெப் போது
மியங்காது மிகவுமுப சாந்த னுவாய். (32)

சகலமுமே பிரமமெனு நிச்ச யத்தாற்
சகமுதலீ துண்மையெனும் பிராந்தி நீங்குந்
திகழ்பிரம நானென்னு நிச்ச யத்தாற்
றேகமுத னென்னும் பிராந்தி நீங்குந்
தருமகனே யாதலினு லெல்லா மென்றுந்
தற்பிரமந் தானென்னு மதுநா னென்னும்
வெருதிடமா மநுபூதி யடைந்தெப் போதும்
வேறறவே மிகவுமுப சாந்த னுவாய். (33)

மருவியிடுஞ் சீவனிலை யீச னில்லை
மாயையிலை யவித்தையிலை மற்றொன் றில்லை
யிருமையெனு மித்துவித மெவையு மில்லை
யாவைக்கு மூலமதாம் பகுதி யில்லை
யொருபொருளு மொருகாலு மிலவே யில்லை
யுள்ளதெலா மேகபரப் பிரம மென்னும்
பிரமமதே நானென்னு மநுப வத்தைப்
பெற்றதனாற் பரமவுப சாந்த னுவாய். (34)

புத்தியிலை சித்தமிலை மனது மில்லை
புகலுமகங் காரமிலை பூத மில்லை
சத்தமிலை பரிசமிலை ரூப மில்லை
சார்கின்ற விரதமிலை கந்த மில்லை
பத்தியிலை ஞானமிலை கரும மில்லை
பந்தமிலை மோட்சமிலை பகுப்பே யில்லை
யத்துவித பரப்பிரம மொன்றே யுண்மை
யதுநானென் றறிவுற்றம் மயமே யாவாய். (35)

முத்தனிலை பெத்தனிலை சுத்த னில்லை
மூடனிலை விவேகியிலை ஞானி யில்லை
யுத்தமனுங் குரவனிலை சீட னில்லை
யோகியவான் மானுன்ம விவேக மில்லை
வித்தாமாந் தியானமிலை யோக மில்லை
விதம்விதமாம் யோகாங்கந் தாமு மில்லை
யத்துவித பரப்பிரம மொன்றே யுண்மை
யதுநானென் யறிவுற்றம் மயமே யாவாய். (36)

பதம்பதமாய்ச் சொல்லியிடு நாம மில்லை
பதார்த்தமெனத் தோற்றியிடு முருவ மில்லை
விதம்விதமாய் விளங்கியவெப் பொருளு மில்லை
விரிந்தசக சீவபர மெவையு மில்லை
சுதந்தரமா யொருகாலு மொன்று மின்றிச்
சுத்தமதா யுளதுபரப் பிரம மொன்றே
நிதந்தவிரா தப்பிரம நானே யென்னு
நிலைபெற்ற ஞானத்தான் முத்த னுவாய். (37)

இல்லையென வியம்பியிடும் பொருளு மின்றி
யிங்குளதென் றியம்பியிடும் பொருளு மின்றிச்
சொல்லியிடுஞ் சொற்பொருளோ ரணுவு மின்றிச்
சும்மாவே யிருந்துமகா மௌனி யாகி
யல்லலிலா வகண்டபரா நந்த மேவி
யநாதிபவ துக்கங்க ளனைத்துந் தீர்த்துக்
கல்லெனவே திடமான பாஞா னத்தாற்
கற்பனையோ ரணுவுமிலா முத்தி சார்வாய். (38)

அறிவுற்ற தனைத்துக்கு மதீத மாகி
யறுபத்து நான்குகலைக் கதீத மாகிச்
செறிவுற்ற கலைக்கெல்லாஞ் சார மாகிச்
சின்மாத்ர வடிவாகிச் செயலொன் றின்றிக்
கறையற்றுக் குணமற்றுக் குற்ற மற்றுக்
காண்கின்ற கற்பனைக ளனைத்து மற்று
நிறைவுற்ற நிச்சலமாம் பரஞா னத்தா
னிர்ப்பயமாய் நிற்கின்ற முத்தி சார்வாய். (39)

சுருக்கமுறச் சொல்லியிடும் பொருளைக் கேளாய்
சொன்னதெலாம் பரப்பிரம சொரூப மேயா
நெருக்கமுறுஞ் சொரூபமதே நீயு நானு
நிகிலருமா நிதாகவிதி லைய மில்லை
யிருக்குமுதன் மறைமுடியின் பொருளு மீதே
யெமதீச னெமக்கருளும் பொருளு மீதே
தருக்கமுட னுறுதியிடும் பொருளு மீதே
தத்துவஞா னிகளுணரும் பொருளு மீதே. (40)

தோற்றியிடுந் தோற்றமெலாம் பரமே யென்றுந்
துவிதமிலா வப்பரம நானே யென்றுஞ்
சாற்றியவிவ் வர்த்தத்திற் சங்கை யில்லை
சம்புபதந் தன்னுணை சத்தி யந்தான்
போற்றியவிவ் வர்த்தத்தைச் சிரத்தை யோடே
புரையறவே நித்தியமுங் கேளா நின்றோர்
வேற்றுமையில் சின்மாத்ர சொரூப மான
விமலபர வடிவாகி முத்த ராவர். (41)

சாதனமோர் நான்குமுள வதிகா ரிக்குச்
சாற்றியவிவ் வர்த்தத்தைக் கருணை யாலே
மாதவநீ புகல்வாயேன் மற்றன் றேனு
மகத்தான பரப்பிரம் ஞான மேவி
யேதமுறும் பவதுக்க மனைத்துந் தீர்ந்திங்
கிணையற்ற பரப்பிரமா நந்த முற்றுப்
பேதமிலாப் பரப்பிரம வடிவே யாவன்
பேசியதிற் சந்தேக மணுவு மில்லை. (42)

இரவிமுதற் சோதியினால் விலக்க வொண்ணு
விதயவிருண் மிகுந்தவெறு மூட னேனு
நிருமலமா மிப்பொருளை நித்த மாக
நியமமுடன் கேட்டபடி படிப்பா னாகிற்
பரமசிவ கருணையினான் மற்றன் னேனும்
பரஞான சோதியினை யடைந்தே யத்தா
லிருதயமா ரஞ்ஞான விருளை நீக்கி
யேகபா சிவவடிவாய் முத்த னாவன். (43)

புத்திரனே வெகுவிதமாய் விளம்பி யென்ன
பூரணமாஞ் சிவகருணை பொருந்தி னோர்க்கே
யுத்தமமா மிப்பொருளைக் கேட்ப தற்கு
மூனமறத் தினந்தோறும் படிப்ப தற்கும்
பத்திவரு மற்றவரே சீவன் முத்திப்
பதமேவித் தேகமிலா முத்தி சார்வர்
சத்தியமே யென்றுரிபு நிதாக னுக்குச்
சலனமிலாப் பரம்பொருளைச் சாற்றி னானே. (44)

வேறு.

பிரமமல்லது வேறிலை யென்பதும்
பிறங்குமெப்பொரு ளும்பர மென்பது
மிருமையில்பர மேயக மென்பது
மேகபாவனை யாகுமி தென்பது
மொருமையேவிய ஞானமி தென்பது
மோங்குமுத்தியி தென்பதும் யாவுமே
பரமவாநந்தத் தாண்டவ மாடுநம்
பரசிவன்ற னகண்ட சொரூபமே. (45)

இருபத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம், 27-க்கு திருவிருத்தம்-1231.

++++++++++++++++++++++++++++++++++++++++++++++

## இருபத்தெட்டாவது

### நான்கு மகாவாக்கியார்த்த முறைக்கும் அத்தியாயம்.

---

*சருவவித வுலகத்துஞ் சார்வ தற்குச்*
*சாலவுமே யரிதாகிக் குய்ய மாகிச்*
*சுருதிமுடி யனைத்திலுநற் சார மாகிச்*
*சுத்தமதாம் பரப்பிரம சொரூபந் தன்னை*
*யிருளறவே நேராக வறிவிக் கின்ற*
*வியல்புள்ள நான்குமகா வாக்கி யத்தின்*
*பொருளினையிங் கெல்லோர்க்கு மிதமே யாகப்*
*பூன்றசிவன் புகன்றபடி புகலு வாமே.* (1)

*பெருமைமிகு மிருக்குமறை முடியி லுள்ள*
*பிரஞ்ஞானம் பிரமமெனும் வாக்ய மொன்று*
*மிருண்மருவா வெசுர்வேத முடியி லுள்ள*
*விலகுமகம் பிரமாஸ்மி வாக்ய மொன்று*
*மருண்மருவாச் சாமமறை முடியி லுள்ள*
*மகத்தான தத்வமசி வாக்ய மொன்று*
*மரியவதர் வணவேத முடியி லுள்ள*
*வயமான்மா பிரமமெனும் வாக்ய மொன்றும்.* (2)

*இந்தவித நான்குமறை முடியின் கண்ணே*
*யிருக்கின்ற நான்குமகா வாக்கி யத்துண்*
*முந்தியதாம் பிரஞ்ஞானம் பிரம மென்றே*
*மொழிந்தமகா வாக்கினுடைப் பொருளைச் சொல்வா*
*மைந்தவிதிற் பிரஞ்ஞானம் பிரம மென்று*
*மருவுபத மிரண்டாகு மற்றி வற்றின்*
*முந்தியதாம் பிரஞ்ஞான பதத்தி னுக்கு*
*முக்கியமா மர்த்தத்தை மொழியக் கேளாய்.* (3)

*ஞானமதே பிரஞ்ஞான மென்ன லாகு*
*ஞானத்தாற் சகலமுமே தெரிவ தாகு*
*ஞானமதிற் றெரிகின்ற சகத்த னைத்து*
*ஞானத்திற் கற்பிதமாய்த் தெரிவ தாலே*
*ஞானமல தன்னியமா யொன்று மில்லை*
*ஞாலமுத லெப்பொருளு ஞான மாத்ர*
*ஞானமதே நமதுநிச வடிவ மாகு*
*ஞானமதே பரப்பிரம வடிவ மாமே.* (4)

சருவசக தகிட்டான சொரூப மான
சத்தியஞா ஞாநந்த வத்து தானே
பிரமமெனும் பதத்தினுடை யர்த்த மாகும்
பிரமமதிற் கற்பிதமாய்த் தோன்று நின்ற
வொருபொருளும் பிரமத்திற் கயலே யாகா
துணர்வுற்ற பொருளெல்லாம் பிரம மாத்ரம்
பிரமமதே நமதுநிச சொரூப மாகும்
பிரமமதே பிரஞ்ஞான சொரூப மாமே. (5)

பிரஞ்ஞானப் பொருடானே பிரம மாகும்
பிரமமெனும் பொருடானே பிரஞ்ஞா னங்கா
ணஞ்ஞான முதலியதா முபாதி யாலே
யகண்டபரம் பொருடானே யிரண்டு போலாம்
பிரஞ்ஞானம் பிரமமெனும் வாக்கி யார்த்தம்
பிறங்கியதா முபாதியெலா நீங்கும் போது
விஞ்ஞான கனமான வத்து வொன்றே
வேறற்ற வகண்டார்த்த மாகி நிற்கும். (6)

பிரிவுற்ற வுபாதியுறுஞ் சீவன் றானே
பிரஞ்ஞான பதத்தினுடை வாச்சி யார்த்தம்
விரிவுற்ற வுபாதியுறு மீசன் றானே
விளம்பியிடும் பிரமபத வாச்சி யார்த்த
மொருமித்த நிருபாதி வத்துத் தானே
யுபயவித பதத்திற்கு மிலட்சி யார்த்தந்
தெரிவித்த வுபயபத லட்சி யைக்யந்
திகழுமகா வாக்கினுடை யகண்டார்த் தங்காண். (7)

அறைந்தபடி மகாவாக்கி னகண்டார்த் தத்தை
யறிந்துமன தம்மயமா யிதர மெல்லா
மறந்துதன தாவரண மனைத்து நீங்கி
மயக்கமற நிற்பதுவே யகண்டா காரஞ்
செறிந்தமனே விருத்தியெனச் செப்ப லாகுஞ்
செப்புமகண் டாகார விருத்தி தானே
யறிந்தவரா லதிசுகமாஞ் சீவன் முத்தி
யாகுமென வங்கங்கே யறைய லாமால். (8)

சத்தியசிற் சுககனமாய்ச் சாந்த மாகிச்
சலனமிலாச் சாசுவத சுபாவ மாகி
நித்தியநிர்க் குணமாகி நிருவி கற்ப
நிரவயவ நிரஞ்சனமாய் நிறைந்து நின்ற
வத்துவித பரப்பிரம மானே னென்
றறிவுற்றம் மயமான விருத்தி தானே
சுத்தவகண் டாகார விருத்தி யென்று
சூக்கமுணர் ஞானிகளாற் சொல்ல லாகும். (9)

சந்ததநான் பரப்பிரம சொரூப மன்றிச்
சற்றேனுஞ் சம்சாரி யல்ல னென்றே
யிந்தவித மறிவுற்றுச் சலத்திற் சேர்ந்தங்
கேகரச மாகின்ற லவண மேபோ
லந்தமிலா வகண்டபரப் பிரமத் தின்க
ணைக்கியமே யடைந்தமனே விருத்தி தானே
மைந்தவகண் டாகார விருத்தி யென்று
மாசற்ற ஞானிகளான் மதிக்க லாகும். (10)

சொன்னவகண் டாகார விருத்தி தானே
சுகமேலா யிருக்கின்ற சீவன் முத்தி
பின்னையகண் டாகார விருத்தி நீங்கிப்
பிராரத்தம் யாவையுமே நீங்குங் காலை
யன்னியமா முபாதிகளோ ரணுவு மின்றி
யகண்டைக ரசமான வத்து வாக
மன்னியிருக் கின்றநிலை விதேக முத்தி
மற்றுமகண் டைகரச நிலைமை கேளாய். (11)

ஓதியிடும் பிரஞ்ஞான பதமுந் தள்ளி
யுரைசெய்த பிரமமெனும் பதமுந் தள்ளிப்
பேதமிலாப் பரப்பிரம நானே யென்று
பிரியமுடன் பழகியபா வனையுந் தள்ளி
யேதையுமே நினையாமல் வெறி திருந்திங்
கிவ்விதமா யிருப்பதெனு நினைவுந் தள்ளி
யீதெனவே யுணரவொணு விருப்புத் தானே
யென்றுமகண் டைகரச நிலைமை யாமே. (12)

மனதுடைய விகற்பங்க ளனைத்து மின்றி
மாயைமுத லுபாதிகளோ ரணுவு மின்றி
யனியமிலா வகண்டைக ரசசொ ரூப
மாகியிருக் கின்றநிலை விதேக முத்தி
சொனநிலைதான் சுபாவமதாய்க் கிட்டு மட்டுஞ்
சுழல்கின்ற விவகார மனைத்துந் தள்ளி
யனகவகண் டாகார விருத்தி தன்னை
யலப்பறவே யநவரத மப்யா சிப்பாய். (13)

புகலுமகண் டாகார விருத்தி தன்னைப்
புரையறவே பழகியிடு மியல்பைக் கேளா
யகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மதுதானே நானென்று நான தென்று
மிகழ்வறவே யெப்போது மிடைவி டாம
லேகபர பாவனையே யிதயத் தின்கண்
விகலமறச் செய்வதுவே யகண்டா கார
விருத்திதனைப் பழகியிடு மியல்பா மைந்தா. (14)

தேகமுத னொனென்ன றுவித விர்த்தி
திகழ்சாட்சி நானென்னல் சாட்சி விர்த்தி
யேகபர நானென்ன லகண்ட விர்த்தி
யிம்மூன்று விருத்திகளி லிரண்டைத் தள்ளி
யாகுமகண் டாகார விருத்தி தன்னை
யநவரத மாதரவா யப்யா சித்துச்
சோகமுறுஞ் சித்தவிகற் பங்க டீர்த்துச்
சொன்னவகண் டைகாச சொரூப மாவாய். (15)

இன்னவிதம் பிரஞ்ஞானம் பிரம மென்னு
மிலகுமகா வாக்கினுடை யருத்தஞ் சொன்னோ
முன்னியதா யிங்குரைசெய் நீதி யெல்லா
மூன்றுமகா வாக்கிலுமே தெரிந்து கொள்வாய்
பின்னையகம் பிரமாஸ்மி யென்ப தாகப்
பேசுமகா வாக்கினுடைப் பொருளைக் கேளா
யன்னவகம் பிரமாஸ்மி வாக்கி யத்தி
லகம்பிரம மஸ்மியெனப் பதமூன் றாமே. (16)

மூந்துமகம் பதத்துக்குச் சீவ னர்த்த
மொழிபிரம பதத்துக்கவ் வீச னர்த்த
மந்தமிலாச் சீவபர வயிக்யந் தானே
யஸ்மியெனும் பதத்தினுடை யருத்த மாகு
மிந்தவித மிந்தமகா வாக்கி யத்தி
னேகரச மாகியுள வகண்டார்த் தத்தைப்
புந்தியினு லாய்ந்திதனை யநுப வித்துப்
புகன்றவகண் டைகரச சொரூப மாவாய். (17)

பேதமுறு முபாதியினாற் கிஞ்சிக் ஞத்வம்
பிறங்கியசர் வஞ்ஞத்வ மாதி யாவு
மோதியசீ வேசருடைத் தன்மம் போலா
முபாதியெலாம் விசாரித்துத் தள்ளுங் காலை
யாதியிலாச் சீவபர வைக்ய மிஞ்சு
மதுதானே யகண்டார்த்த மாம வற்றை
யோதுமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தா
லுணர்ந்தந்த வகண்டார்த்த வடிவே யாவாய். (18)

அனகவகம் பிரமாஸ்மி வாக்கி யார்த்த
மாசிரிய னருளியவா றறிந்த போதும்
பினையுமதை யுத்தியுடன் மனனஞ் செய்து
பிராந்திதரின் சங்கையெலாம் பெயர்க்க வேண்டுஞ்
சொனவிதமாய்ச் சங்கையெலாம் பெயர்ந்த பின்னர்ச்
சுழல்கின்ற விபரீத மனைத்துந் தீர
வனிசமகம் பிரமாஸ்மி யென்ப தாக
வாதரவோ டப்யாசஞ் செய்ய வேண்டும். (19)

சத்தியசிற் சுககனமாம் பிரம நானே
சாலவுப சாந்தபரப் பிரம நானே
நித்தியநிர்க் குணமான பிரம நானே
நிரவயவ நிரஞ்சனமாம் பிரம நானே
யத்துவித மானபரப் பிரம நானே
யகண்டமதாம் பரப்பிரம நானே யென்று
சத்துருவாம் விபரீதந் தீரு மட்டுஞ்
சந்ததமுஞ் சலியாமற் பழக வேண்டும். (20)

அகிலபரி பூரணமாம் பிரம நானே
யான்மாவுக் கபின்னபரப் பிரம நானே
சகலமுமாய்த் தெரிகின்ற பிரம நானே
சட்பாவ விகாரமிலாப் பிரம நானே
துகளணுவு மருவாத பிரம நானே
துவிதமிலாச் சுத்தபரப் பிரம நானென்
றகமருவு விபரீதந் தீரு மட்டு
மநவரத மாதரவாய்ப் பழக வேண்டும். (21)

இந்தவிதம் விசாரித்த விவேகி யெல்லா
மேகபர பாவனையே யிடைவி டாமற்
சந்ததமுஞ் செய்ததனால் விபரீ தத்தைச்
சற்றேனு மிஞ்சாது நாசஞ் செய்தே
யந்தவகம் பிரமாஸ்மி வாக்கி யார்த்த
மானவகண் டார்த்தத்தி னநுப வத்தைப்
புந்திதனிற் பிரதிபந்த மொன்று மின்றிப்
பூரணமா யெப்போதும் பொருந்த வேண்டும். (22)

பலவிதமாம் வாதனையுந் தூரத் தள்ளிப்
பகர்ந்தபடி யகண்டார்த்த மநுப விப்பா
யிலகுமகம் பிரமாஸ்மி வாக்கி யார்த்த
மிவ்விதமா யிசைப்புற்றே மினி யுனக்குத்
திலகமதாந் தத்வமசி வாக்கி யார்த்தந்
திடமாகச் சித்தமிசைத் தெரியச் சொல்வாந்
தலைமையதாய்த் தயங்கியவிவ் வாக்கி யத்திற்
றத்வமசி யெனமூன்று பதங்க ளாமே. (23)

மாயையெனு முபாதியுறு மீசன் றானே
மருவியதற் பதமுரைசெய் வாச்சி யார்த்த
மாயதன தவித்தையுறுஞ் சீவன் றானே
யறைகின்ற துவம்பதமோர் வாச்சி யார்த்த
மேயமதா முபாதியெலா மிழந்த பின்ன
ரேகவிலக் கணமான வத்துத் தானே
தூயபத மிரண்டுக்கு மிலட்சி யார்த்தந்
தொடர்புற்ற வைக்கியமே யசிப தார்த்தம். (24)

சொல்லியவிவ் வைக்கியமா மகண்டார்த் தத்தைச்
சுத்தமதாந் தத்வமசி வாக்கி யத்தாற்
கல்லெனவே திடமாக வறிந்தெப் போதுங்
கலங்காம லகண்டைக ரசமே யாவா
யெல்லையிலா வகண்டவடி வாகு மட்டு
மிதரமுணர் விருத்தியெலாந் தூரத் தள்ளிப்
புல்லுமகண் டாகார விருத்தி தன்னைப்
புரையறவே பழகியதாற் பூன்ற னுவாய். (25)

தற்பதலட் சியமான பிரம ரூபந்
துவம்பதலட் சியமான நீயே யாவா
யற்பமுமே யிதிலைய மைவ தில்லை
யகண்டசிவன் றன்னுணே யறைந்த துண்மை
சொற்பமிலா வகண்டபரி பூன்ற மான
சுத்தமதாம் பரப்பிரம நீயே யென்று
செப்பியிடுங் குருபரனே குருவா கின்றான்
செப்பியவா றறிந்தவனே சீட னுன்றேன். (26)

சத்தியசிற் சுககனமாம் பிரம நீயே
சகலபரி பூரணமாம் பிரம நீயே
நித்தியநிட் களமான பிரம நீயே
நிரந்தரமாய் நிறைந்தபரப் பிரம நீயே
யத்துவித மானபரப் பிரம நீயென்
றையமற வுபதேசஞ் செய்கின் றானே
யுத்தமனுங் குருவாவன் மற்றோ ரெல்லா
மொருகாலு முயர்வுற்ற குரவ ராகார். (27)

அலைவுற்ற வறிவான பிரம நீயே
யகண்டைக ரசமான பிரம நீயே
நிலைபெற்ற நிச்சலமாம் பிரம நீயே
நிராவரண மானபரப் பிரம நீயே
சலமற்ற சாந்தபரப் பிரம நீயே
சதாநந்த கனமான பிரம நீயென்
றலைவற்ற வுபதேசஞ் செய்கின் றானே
யுத்தமனுங் குருவாவன் மற்றோ ராகார். (28)

அகிலபரி பூரணமாம் பிரம நானே
யான்மாவுக் கபின்னபரப் பிரம நானே
சகலமுமாய்த் தெரிகின்ற பிரம நானே
சட்பாவ விகாரமிலாப் பிரம நானே
துகளணுவு மருவாத பிரம நானே
துவிதமிலாச் சுத்தபரப் பிரம நானென்
றகமருவு விபரீதந் தீரு மட்டு
மநவரத மாதரவாய்ப் பழக வேண்டும். (21)

இந்தவிதம் விசாரித்த விவேகி யெல்லா
மேகபர பாவனையே யிடைவி டாமற்
சந்ததமுஞ் செய்ததனால் விபரீ தத்தைச்
சற்றேனு மிஞ்சாது நாசஞ் செய்தே
யந்தவகம் பிரமாஸ்மி வாக்கி யார்த்த
மானவகண் டார்த்தத்தி னநுப வத்தைப்
புந்திதனிற் பிரதிபந்த மொன்று மின்றிப்
பூரணமா யெப்போதும் பொருந்த வேண்டும். (22)

பலவிதமாம் வாதனையுந் தூரத் தள்ளிப்
பகர்ந்தபடி யகண்டார்த்த மநுப விப்பா
யிலகுமகம் பிரமாஸ்மி வாக்கி யார்த்த
மிவ்விதமா யிசைப்புற்றே மினி யுனக்குத்
திலகமதாந் தத்வமசி வாக்கி யார்த்தந்
திடமாகச் சித்தமிசைத் தெரியச் சொல்வாந்
தலைமையதாய்த் தயங்கியவிவ் வாக்கி யத்திற்
றத்வமசி யெனமூன்று பதங்க ளாமே. (23)

மாயையெனு முபாதியுறு மீசன் றானே
மருவியதற் பதமுரைசெய் வாச்சி யார்த்த
மாயதன் தவித்தையுறுஞ் சீவன் றானே
யறைகின்ற துவம்பதமோர் வாச்சி யார்த்த
மேயமதா முபாதியெலா மிழந்த பின்ன
ரேகவிலக் கணமான வத்துத் தானே
தூயபத மிரண்டுக்கு மிலட்சி யார்த்தந்
தொடர்புற்ற வைக்கியமே யசிப தார்த்தம். (24)

சொல்லியவிவ் வைக்கியமா மகண்டார்த் தத்தைச்
சுத்தமதாந் தத்வமசி வாக்கி யத்தாற்
கல்லெனவே திடமாக வறிந்தெப் போதுங்
கலங்காம லகண்டைக ரசமே யாவா
யெல்லையிலா வகண்டவடி வாகு மட்டு
மிதாமுணர் விருத்தியெலாந் தூரத் தள்ளிப்
புல்லுமகண் டாகார விருத்தி தன்னைப்
புரையறவே பழகியதாற் பூன்ற னுவாய். (25)

தற்பதலட் சியமான பிரம ரூபந்
துவம்பதலட் சியமான நீயே யாவா
யற்பமுமே யிதிலைய மைவ தில்லை
யகண்டசிவன் றன்னுணை யறைந்த துண்மை
சொற்பமிலா வகண்டபரி பூன்ற மான
சுத்தமதாம் பரப்பிரம நீயே யென்று
செப்பியிடுங் குருபரனே குருவா கின்றேன்
செப்பியவா றறிந்தவனே சீட னானேன். (26)

சத்தியசிற் சுககனமாம் பிரம நீயே
சகலபரி பூரணமாம் பிரம நீயே
நித்தியநிட் களமான பிரம நீயே
நிரந்தரமாய் நிறைந்தபரப் பிரம நீயே
யத்துவித மானபரப் பிரம நீயென்
றையமற வுபதேசஞ் செய்கின் றோனே
யுத்தமனுங் குருவாவன் மற்றோ ரெல்லா
மொருகாலு முயர்வுற்ற குரவ ராகார். (27)

அலைவுற்ற வறிவான பிரம நீயே
யகண்டைக ரசமான பிரம நீயே
நிலைபெற்ற நிச்சலமாம் பிரம நீயே
நிராவரண மானபரப் பிரம நீயே
சலமற்ற சாந்தபரப் பிரம நீயே
சதாநந்த கனமான பிரம நீயென்
றலைவற்ற வுபதேசஞ் செய்கின் றோனே
யுத்தமனுங் குருவாவன் மற்றோ ராகார். (28)

உச்சமதாங் குருவருளு மகண்டார்த் தத்தை
யுவகையுட னுள்ளபடி கேட்ட பின்னர்
நிச்சலமாம் புத்தியினு னிச்ச யித்து
நிருமலமா யகம்பிரம மானே னென்றே
துச்சமிலா வநுபூதி யடைந்த வன்றான்
றுகளற்ற சற்சீடன் மற்றோ ரெல்லா
மெச்செயலைச் செய்யினுமே சீட ராகா
ரேகபர மறிந்தவனே சீட னவன். (29)

சருவமகா மந்திரமு முபதே சிப்போர்
சாமான்ய குரவரெனச் சாற்ற லாகு
மிருமையிலாப் பரப்பிரம நீயே யென்றிங்
கிணையற்ற வுபதேசஞ் செய்கின் றோனே
பெருமைமிகுஞ் சற்குருவென் றுரைக்க லாகும்
பின்வெகுவாய்ப் பேசுவதாற் பெறும்பே றென்ன
வரியபர நீயென்போ னுசா னுனே
னகம்பிரம மெனவறிவோன் மாணு னுனேன். (30)

ஆதலினுற் பரப்பிரம நீயே யென்றிங்
கருள்பவனே யாசிரிய னெனவே யோர்ந்து
சாதகமாஞ் சற்குருவி னுபதே சத்தைச்
சத்தியமா நம்பியதைச் சாதிப் போனே
பேதமிலா வகண்டபரப் பிரம ஞானம்
பெற்றதனுற் பவபந்த மனைத்துந் தீர்ந்து
போதகன மானபர வடிவே யாவன்
புகன்றதிலோ ரணுவேனு மைய மில்லை. (31)

அகிலமறை முடிவுக்கு மகண்ட மான
வத்துவித பரப்பிரம சொரூபந் தானே
தகைமைமிகுந் தாற்பரியப் பொருளா மென்றுந்
தற்பிரம நீயென்று முபதே சித்த
மகிமைமிகுஞ் சற்குருவின் வாக்கி யத்தான்
மகத்தான பரம்பொருளைக் கேட்டுள் ளத்தில்
விகலமற வறிவதுவே சிரவ ணங்காண்
வேறொன்றுஞ் சிரவணமே யன்று மைந்தா. (32)

அருள்வடிவா மாசிரிய னருளிச் செய்த
வகிலமகா வாக்கினுடை யகண்டார்த் தத்தை
மருளறவே கேட்டுணர்தல் சிரவ ணங்காண்
மற்றவெலாஞ் சிரவணமே யாகா வென்றுஞ்
சிரவணமே செயலுற்ற பொருளை மீண்டுஞ்
சிரத்தையுடன் யுத்தியினாற் சிந்தை செய்தல்
பிரமையெலாந் தீர்க்கின்ற மனன மாகும்
பேசியவிம் மனனத்தின் யுத்தி சொல்வாம். (33)

திருசியமாய்ச் சிதைகின்ற வுடனா னல்ல
தியங்கியிடும் பௌதிகமாம் பொறிநா னல்ல
பிரிவுபெறு நாநாவா முயிர்நா னல்ல
பிறந்துநசிக் கின்றமன முதனா னல்ல
விருள்வடிவா மஞ்ஞான வுருநா னல்ல
விவையாவு மொருமித்த திரனா னல்ல
நிருமலமா யாவையுமே நிகழ்த்தா நின்ற
நீக்கமிலாச் சின்மாத்ர சொரூப மேநான். (34)

தூலவுடல் சூக்குமதே கத்தி லில்லை
தூலவுடல் சூக்கவுட லிவ்வி ரண்டு
மாலயமாங் காரணதே கத்தி லில்லை
யவைமூன்றுந் துரியத்தி லிலவே யில்லை
கோலமுறுந் தேகமெலா மிலாமை யாலுங்
கூறுபடாச் சின்மாத்ர சொரூப மொன்றே
காலமொரு மூன்றிலுமே யிருப்பதாலுங்
களங்கமிலாச் சின்மாத்ர சொரூப மேநான். (35)

கனவினிடை நனவில்லை யிவ்வி ரண்டுங்
காரணமாஞ் சுழுத்திதனி லில்லை யந்த
நனவுகனாச் சுழுத்திகளுந் துரியத் தில்லை
நாலுவித வவத்தைகளுஞ் சுத்தத் தில்லை
சொனவிதமா யவத்தையெலா மிலாமை யாலுஞ்
சுத்தமதாஞ் சின்மாத்ர சொரூப மொன்றே
யநவரத மழியாம லிருப்ப தாலு
மத்துவித சின்மாத்ர சொரூப மேநான். (36)

தேகமுதற் சடமான விவைய னைத்துந்
திருசியமாய்க் கடமெனவே நசிப்ப தாலு
மேகபா சின்மாத்ர வடிவா மான்மா
வெப்போதுந் திருக்குருவா யிருப்ப தாலும்
பாகமுறுந் தேகாதி மித்தை யாகும்
பகுப்பற்ற வான்மாவே யுண்மை யாகு
மாகையினுற் றேகாதித் திரளு னல்ல
வநுகூத வறிவான வான்மா வேநான். (37)

சத்தியஞா னனந்த சுபாவ மான
சகலவதிட் டானபரப் பிரமத் தின்கட்
சித்திரவ நிருதசட துக்க மான
செகத்தெல்லாங் கற்பிதமாய்த் தோற்ற லாலே
யித்துவித செகத்தெல்லா மாயுங் காலை
யிலகுமதிட் டானபரப் பிரம மேயாஞ்
சுத்திகையிற் கற்பிதமாத் தோற்றும் வெள்ளி
சோதிக்கி லதிட்டான சுத்தி தானே. (38)

இருமையெனத் தோற்றியவிச் சகத்த னைத்து
மிருக்கின்ற திலங்குகின்ற தின்ப மென்ன
மருவியவிவ் வநுபூதி யாயுங் காலை
மன்னுமதிட் டானத்தின் சுபாவ மேயாஞ்
சருவவதிட் டானபரப் பிரமத் துக்கே
சத்தியஞா னநந்தத் தன்மை யன்றி
யொருபொழுது மில்லாத வெறும் பொய்யான
வுலகத்துக் கோதியவித் தன்மை யுண்டோ. (39)

காலமொரு மூன்றிலுமே யிருக்கை யாலுங்
கற்பிதமாம் யாவையுமே விளக்க லாலுஞ்
சாலவுமே யாவையினு மினிமை யாலுஞ்
சத்தியஞா னனந்த சொரூப நானே
யாலயமா மென்னிடையிற் கனவே போல
வகிலமுமே கற்பிதமாய்த் தோற்ற லாலே
கோலமுறத் தோற்றியிடுந் தோற்ற மெல்லாங்
குறைவற்ற வதிட்டான வடிவா நானே. (40)

என்னிடையிற் கற்பிதமாய்க் கனவின் கண்ணே
யிலங்கியவை யாவையுமே யாயுங் காலை
மன்னுமதிட் டானமதா நானே யன்றி
மற்றெவையு மெனக்கயலா யிலாமை யேபோற்
பின்னமிலா வென்னிடையி னனவின் கண்ணே
பிறங்கியவை யாவையுமே யாயுங் காலை
யன்னவதிட் டானமதா நானே யன்றி
யற்பமுமே யெனக்கயலா யிலவே யில்லை. (41)

ஓதியவா றுண்மையினை யோருங் காலை
யுபாதியிலா வெனதுநிச சொரூபத் துக்கும்
பேதமிலாப் பரப்பிரம சொரூபத் துக்கும்
பேசுமிலக் கணமொன்று யிருப்ப தாலே
யாதியிலா வகண்டபர வடிவே நானென்
றநவரத மாய்வதுவே மனன யுத்தி
மாதவனே யிவ்விதமா மயக்கந் தீர
மனனத்தின் சாதகமாம் யுத்தி சொன்னோம். (42)

சந்தனமென் றோதியிடும் விருட்ச மீதே
சங்கையறக் காணென்னு மாத்தன் சொல்லைச்
சுந்தரமாக் கேட்கினுமே யதனை நன்றாச்
சோதித்தே சங்கையெலாந் தீர்ப்ப தேபோ
லந்தமிலாப் பரப்பிரம நீயே யென்றிங்
காசிரிய னருளினுமே யதனை நன்றாப்
புந்தியுறும் யுத்தியினால் விசாரஞ் செய்தே
பொருந்தியதன் சங்கையெலாம் போக்க வேண்டும். (43)

சிரவணமு மனனமுமே செய்த பின்னர்ச்
செறிவுற்ற விபரீத மனைத்துந் தீர
விரவுபக லெப்போது மிடைவி டாம
லினிமையொடு நிதித்தியாசஞ் செய்ய வேண்டும்
பரவியிடும் விசாதீய விருத்தி யின்றிப்
பரம்பரையாஞ் சசாதீய விருத்தி தானே
யிருமையிலா நிதித்தியாச மாகு மித்தா
லெய்தியதன் விபரீதம் யாவுந் தீரும். (44)

செகம்பாணு னீதெனவே வேறு வேருய்ச்
செறிகின்ற விசாதீய விருத்தி யின்றி
யகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றநவரத மிடையறவே தொடரா நின்ற
தகும்பிரம பாவனையாம் விருத்தி தானே
தடையற்ற சசாதீய விருத்தி யாகு
மிகும்பிரிய முற்றிதனை யப்யா சிக்கின்
மேவுவிப ரீதமெலா மடைவாய்த் தீரும். (45)

பொருந்திநிதஞ் செய்கின்ற சிரவ ணத்தாற்
புகலுமசம் பாவனைதான் முன்பு நீங்கி
வருந்திநிதஞ் செய்கின்ற மனனந் தன்னுல்
வாளாவாஞ் சம்சயபா வனையு நீங்கி
விரிந்துநிதஞ் செய்கின்ற நிதித்தியா சத்தால்
விபரீத பாவனையு நீங்கும் போது
நிரந்தரமாம் பரப்பிரம சாட்சாத் கார
நிச்சலமாந் தன்மனதி னிகழு மன்றே. (46)

சத்துருவாம் பிரதிபந்த மொன்று மின்றிச்
சலனமிலாப் பரப்பிரம சுகத்தை மேவி
யித்துவித நினைவணுவு மிலாது நீங்கி
யிருளான வாவரண மனைத்து நீங்கிச்
சித்துருவாம் பரப்பிரம சொரூபத் தின்கட்
சிரசல நியாயம்போற் சேர்ந்து நிற்கும்
புத்தியுடை விருத்தியினிற் பதிவிம் பிக்கும்
பூரணசை தன்னியமே சாட்சாத் காரம். (47)

பேசியவிப் புத்தியுடை விருத்தி தானே
பிறங்குமகண் டாகார விருத்தி யாகு
மாசறவிவ் விருத்தியினிற் பதிவிம் பிக்கு
மறிவுருவே யகண்டபர சாட்சாத் கார
நேசமொடிவ் வகண்டபர சாட்சாத் கார
நிட்டையினைப் பெற்றவரே முத்த ராவ
ரீசனுடை யுபயதிருப் பதந்தன் னுணை
யியம்பியதி லெள்ளளவு மைய மில்லை. (48)

இன்னவித மூன்றுமகா வாக்கி யத்தி
னேகரச மாகுமகண் டார்த்தஞ் சொன்னோம்
பின்னையுனக் கயன்மான்மா பிரம மென்னும்
பேசுமகா வாக்கினுடைப் பொருளைச் சொல்வா
மன்னியமி லந்தமகா வாக்கி யத்தி
லயமான்மா பிரமமெனப் பதமூன் றாகும்
பன்னுபத மூன்றுக்கு மடைவே யாகப்
பகர்கின்ற வருத்தத்தைப் பரிந்து கேளாய். (49)

சித்திரமா முபாதியுறுஞ் சீவன் றானே
செப்புமயம் பதத்துக்கு வாச்சி யார்த்தம்
வித்தரமா முபாதியுறு மீசன் றானே
விளம்பியிடு மான்மபத வாச்சி யார்த்தஞ்
சுத்தமதாஞ் சிவபர சொரூபந் தானே
சொல்லியவிவ் வுபயபத லட்சி யார்த்த
மத்திறமா முபயபத லட்சி யத்தி
னைக்கியமே பிரமமெனும் பதத்தி னர்த்தம். (50)

அறைந்தவண மிந்தமகா வாக்கி யத்தா
லைக்கியமா மகண்டார்த்த மறிந்து கொண்டு
செறிந்தபர சீவருடை யுபாதி யெல்லாஞ்
செவ்வியதாம் விசாரத்தா னேதி செய்திங்
கறிந்தபடி யகண்டபர வடிவே நானென்
றநவரத மாதரவா யப்யா சித்து
மறந்தநின துருவான வகண்டார்த் தத்தை
மறவாம லெப்போது மநுப விப்பாய். (51)

மற்றுமொரு விதமாயிவ் வாக்கி யத்தின்
மதிக்கின்ற பொருளினையு முரைப்பக் கேளாய்
சற்றுமிருண் மருவாத சுவப்ர காச
சைதன்ய வடிவான பிரத்யக் கான்மா
வுற்றவய மான்மாவென் றுரைக்கப் பட்ட
வுபயவித பதத்துக்கு மருத்த மாகு
முற்றுமிலா விவ்வுலகின் மூல வத்து
மொழிவுற்ற பிரமபதத் தருத்த மாமே. (52)

பாவனமாம் பதங்களுடை லட்சி யத்தின்
பகுப்பற்ற வைக்கியமே வாக்கி யார்த்தஞ்
சீவபர பேதத்துக் கேது வாகச்
செறிகின்ற வபரோட்ச பரோட் சத்வாதி
யாவையுமே யுபாதியினாற் செற்ந்த தென்றே
யிதனையெலாம் விசாரித்து நேதி செய்திங்
கோவலற மிஞ்சுவதா மகண்டார்த் தத்தை
யுரைத்தபடி யெப்போது மநுப விப்பாய். (53)

இன்னவித மிருக்குமுதல் வேதாந் தத்தி
லிலங்கியவிந் நான்குமகா வாக்கி யத்தின்
பின்னமிலா வைக்கியமா மகண்டார்த் தத்தைப்
பேதமெனும் பிராந்தியெலாந் தீரும் வண்ண
மன்னசிவ னருளியவா றடைவாய்ச் சொன்னோ
மறைந்தபடி யழுத்தமுற வப்யா சித்தே
நின்னுருவாய் நிலைபெற்ற வகண்டார்த் தத்தை
நிருமலமாய் நீயென்று மநுப விப்பாய். (54)

சுயமதுவாந் தத்வமசி யென்னும் வாக்யம்
சொல்லுமுப தேசமகா வாக்ய மாகு
மியலுமகம் பிரமாஸ்மி யென்னும் வாக்ய
மிலகுமநு பூதிமகா வாக்ய மாகு
மயன்மருவாப் பிரஞ்ஞானம் பிரம வாக்ய
மனனத்தி னப்பியாச வாக்ய மாகு
மயமான்மா பிரமமென வறையும் வாக்ய
மவைக்கெல்லாஞ் சம்மதமாம் வாக்ய மாமே. (55)

ஆதலினாற் றத்வமசி வாக்கி யத்தா
லருளியவா றகண்டார்த்த மறிந்து கொண்டு
பேதமறப் பிரஞ்ஞானம் பிரம மென்று
பேசுமகா வாக்கதனுன் மனனஞ் செய்து
வாதகமி லயமான்மா பிரம மென்னும்
வாக்கதனாற் சரியெனவே சம்ம தித்திங்
கோதுமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தா
லுரைத்தவகண் டார்த்தத்தை யநுப விப்பாய். (56)

அனிசமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தா
லகண்டபர பாவனையே யப்யா சித்து
நனிமருவும் பாவனையா னும ரூப
நாட்டமெலா நன்றாக நாசஞ் செய்து
துனிமருவுந் துவிதத்தின் றொடர்பே யின்றித்
துகளற்ற வகண்டார்த்த மநுப வித்தவ்
வனியமிலா வகண்டார்த்த வடிவே யாவா
யவ்வண்ண மாகுவதே யகண்ட மோட்சம். (57)

தனதுநிச வடிவான வகண்டார்த் தத்தைத்
தவிரவொரு பொருளுமொரு காலு மில்லை
பினையுளதாய்க் காண்பவெலாஞ் சுத்தப் பொய்யே
பேசியவப் பொய்வடிவு மாயுங் காலை
யனியமிலா வகண்டபரப் பிரமந் தானு
மறைந்ததிலோ ரணுவேனு மைய மில்லை
சொனவகையே யகண்டார்த்த ஞானம் பெற்றுச்
சுத்தபர வடிவாகி முத்த னுவாய். (58)

சகலமறை முடிவினுமே சார மாகிச்
சாலவுமே சாருவதற் கரிய தான
மிகவுமகா ரகசியமா யிவ்வர்த் தத்தை
மெய்யுணர்வா நந்தவடி வான வீச
னிகழ்வறவே புகன்றவிதம் புகன்றே மியாமு
மிப்பொருளை யிசைத்தபடி கேட்டு ணர்ந்தோர்
பகைமருவும் பவபந்த மனைத்துந் தீர்ந்து
பகுப்பற்ற பரப்பிரம வடிவே யாவர். (59)

அகிலசகந் நாயகனும் பரேசன் றன்னை
யநவரத மாதரவா யாரா தித்து
மிகவுமருள் பெற்றவரே மனதின் சுத்தி
மேவினராய் விளம்புமகா வாக்கி யத்தின்
றருபொருளைத் தடையறவே யநுப வித்துத்
தன்மயமே யாவரென நிதாக னுக்கு
நிகழ்வுறவே ரிபுமுனிவன் கருணை யாலே
நிகிலமகா வாக்குகளின் பொருளுஞ் சொன்னான். (60)

வேறு.

வத்துநிர்ணய சாதகமாமகா வாக்கியங்களி ளுற்பரசீவரின்
சுத்தமாயுள வைக்கியமறிந்தவர் சூழுமிப்பவ லேசமிலாமலே
நித்தியாநந்த வத்துவதாகவே நிற்பரென்றுர மாவிங்குப்பேசுதல்
சத்தியாநந்தத் தாண்டவமாடுநஞ் சாம்பமூர்த்தியின் பூரணரூபமே.

இருபத்தெட்டாவது அத்தியாயம்
முற்றிற்று.
ஆக அத்தியாயம் 28-க்கு திருவிருத்தம் 1292.

++++++++++++++++++‡++++++++++++++++++++++++++

# இருபத்தொன்பதாவது
## சன்மாத்திர சொரூப நிதித்தியாச முரைக்கும் அத்தியாயம்.

ஒருகாலு மொருபொருளு முண்மை யில்லை
யுண்மையெனக் காண்பதெலாஞ் சுத்தப் பொய்யே
தருக்காதி மானமுட னுயுங் காலைத்
தயங்கியவப் பொய்யுமதிட் டான மேயா
மருக்காதி சோதிக்குஞ் சோதி யான
வதிட்டான பரப்பிரம மொன்றே யுண்மை
யிருக்காதி மறைமுடிக ளனைத்துஞ் சொல்லு
மியல்பிதுவே யென்பதனை யிங்குச் சொல்வாம். (1)

இப்பொருளைக் கேட்டுணர்வோ ருடனே முத்தி
யிசைந்திடுவ ரிதிலிறைய மைய மில்லை
சிற்பொருளிற் கற்பிதமாய்த் தோன்று நின்ற
செகத்துக்குச் சுதசத்தை யென்று மில்லை
யற்பமிலா வதிட்டான சத்தை தானே
யாரோப சத்தையெனத் தோற்ற லாகுங்
கற்பிதமார் சத்தையதை யாயுங் காலைக்
களங்கமிலா வதிட்டான சத்தை யேயாம். (2)

அத்துவித பரத்துக்கே சுபாவ சத்தை
யழியாம லிருப்பதனு லதுவே சத்தா
மித்துவித சகத்துக்குச் சுபாவ சத்தை
யிலாமையினு லிவையாவு மித்தை யேயா
மித்தையெனக் காண்பதுவு மாயுங் காலை
மேவுமதிட் டானபரப் பிரமந் தானு
நித்தியமாய் நிகழ்த்தியவப் பிரமந் தானே
நிருமலமா நின்னுடைய நிசசொ ரூபம். (3)

கற்பிதமாஞ் சர்ப்பத்தின் சத்தை தன்னைக்
களங்கமறச் சோதிக்கி லந்தச் சத்தை
சர்ப்பமதி னதிட்டான வடிவாம் ரச்சு
சத்தையலாற் சர்ப்பத்தின் சத்தை யன்றே
யப்படியே யாயுங்காற் சகத்தின் சத்தை
யதிட்டானப் பிரமத்தின் சத்தை யேயா
மெப்பொழுதுஞ் சத்தாமப் பிரமந் தானே
யிருமையிலா நின்னுடைய நிசசொ ரூபம். (4)

நின்னிடையிற் கற்பிதமாய்க் கனவின் கண்ணே
நிகழ்வுற்ற சகத்துக்கு நினது சத்தை
தன்னையலாற் சோதிக்கிற் சுபாவ சத்தை
தானணுவு மிலாதனுபோ னனவின் கண்ணே
யுன்னிடையிற் கற்பிதமா யொளிரா நின்ற
வுலகுக்குஞ் சுதசத்தை யிலாமை யாலே
யன்னியமில் சத்தான பிரமந் தானே
யவ்விதமா நின்னுடைய நிசசொ ரூபம். (5)

தேகமெனப் பொறிகளென வுயிர்க ளென்னத்
தியங்கியிடு மனமென்னப் புத்தி யென்ன
வாகுமகங் காரமெனச் சித்த மென்ன
வதன்மூலாஞ் ஞானமென விவை யனைத்தும்
பாகமுற வுளவென்னும் பலவாஞ் சத்தை
பார்த்திடிலோர் பரப்பிரம சத்தை யேயா
மேகபர சத்தாமப் பிரமந் தானே
யெப்போது நின்னுடைய நிசசொ ரூபம். (6)

பூதமெனப் பௌதிகமாம் பேத மென்னப்
புலன்களெனப் புசிக்கின்ற போத்தா வென்ன
வேதமென மிருதியென நூல்க ளென்ன
விதியென்ன நிடேதமென விதிப்போ னென்னப்
பேதமுறும் போகமென மோட்ச மென்னப்
பிறங்கியவிப் பேதமெலாஞ் சுத்தப் பொய்யே
யாதியிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை
யதுதானே நின்னுடைய நிசசொ ரூபம். (7)

பலவிதமாஞ் சாதியென நீதி யென்னப்
பகுப்புற்ற வாச்சிரம பேத மென்னச்
சலனமுறுங் கருமமெனக் கர்த்தா வென்னச்
சாதிக்கும் பலனென்னச் சதசத் தென்னக்
கலனமுறுங் காட்சியெனக் காண்போ னென்னக்
கருதியவிப் பேதமெலாஞ் சுத்தப் பொய்யே
யலைவுபெறுப் பரப்பிரம மொன்றே யுண்மை
யதுதானே நின்னுடைய நிசசொ ரூபம். (8)

பெருமைமிகுந் தலமென்னத் தீர்த்த மென்னப்
பிறங்கியிடுந் தெய்வமெனச் சேவை யென்ன
மருவியிடுந் தருமமெனப் பாவ மென்ன
மற்றுண்ணுஞ் சுவர்க்கமென நரக மென்ன
விருமையென வொருமையென நாநா வென்ன
விதுமுதலாம் பேதமெலாஞ் சுத்தப் பொய்யே
யருவமதாம் பரப்பிரம மொன்றே யுண்மை
யதுதானே நின்னுடைய நிசசொ ரூபம். (9)

பாகமுற வகத்துணரு மகம் விருத்தி
பலவிதமாய்ப் புறத்துணரு மிதம் விருத்தி
தேகமுத ஞனென்னுந் துவித விர்த்தி
திகழ்சாட்சி நானென்னுஞ் சாட்சி விர்த்தி
யேகபர நானென்னு மகண்ட விர்த்தி
யிவ்விதமாம் விருத்தியெலாஞ் சுத்தப் பொய்யே
யாகுமொரு விருத்தியுமில் பரமே யுண்மை
யதுதானே நின்னுடைய நிசசொ ரூபம். (10)

அமலமிலா வஞ்ஞான மனதின் றன்ம
மான்மாவின் விஞ்ஞான மனதின் றன்ம
மமர்மருவும் பவபந்த மனதின் றன்ம
மாசற்ற மோட்சநிலை மனதின் றன்ம
மமர்மனதே யிலாமையினு லவற்றின் றன்ம
மாகினவஞ் ஞானமுத லிருப்ப தெங்கே
சமமதுவாம் பரப்பிரம மொன்றே யுண்மை
சந்ததமு மதுவேநின் னிசசொ ரூபம். (11)

சாந்திமுதற் சாதனமு மனதின் றன்மஞ்
சாதிக்குஞ் சிரவணமு மனதின் றன்ம
மாந்தரமா மனனமுமே மனதின் றன்ம
மங்குற்ற நியானாதி மனதின் றன்ம
மேந்தியிடு மனதுருவே யிலாமை யாலே
யிதன்றன்ம மெனுமிவைக ளிருப்ப தெங்கே
சாந்தமதாம் பரப்பிரம மொன்றே யுண்மை
சந்ததமு மதுவேநின் னிசசொ ரூபம். (12)

கானலிடைக் கற்பிதமாம் பேய்த்தேர் போலுங்
கனவினிடைக் கற்பிதமா முலகே போலு
ஞானகன மானபரப் பிரமத் தின்கண்
ஞாலமெலாங் கற்பிதமாய்த் தோற்ற லாலே
யானவிவை யதிட்டானப் பிரம மல்லா
லன்னியமாய்த் தோற்றுவது சுத்தப் பொய்யே
யீனமிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை
யெப்போது மதுவேநின் னிசசொ ரூபம். (13)

உலகும்பொய் யுடலும்பொய் யுயிரும் பொய்யே
யுடலினிடை யுற்றபல கரணம் பொய்யே
மலமும்பொய் மயலும்பொய் மனதும் பொய்யே
மனோமயமாய்த் தோற்றியவை யாவும் பொய்யே
நிலமும்பொய் சலமும்பொய் யனலும் பொய்யே
நிலைமருவாக் காற்றும்பொய் விண்ணும் பொய்யே
சலனமுறாப் பரப்பிரம மொன்றே யுண்மை
சந்ததமு மதுவேநின் னிசசொ ரூபம். (14)

மனதுமுத லொருநான்கு கரண மாக
மருவியிடு மத்யான்ம வடிவும் பொய்யே
பினையவையின் விடயமெனுஞ் சங்கற் பாதி
பேதமதா மதிபூத வடிவும் பொய்யே
யினியவையி னதிட்டான தெய்வ மென்னு
மிந்துமுத லதிதெய்வ வடிவும் பொய்யே
யனியமிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை
யநவரத மதுவேநின் னிசசொ ரூபம். (15)

அறிவுபெறுஞ் சோத்திரமே முதலாய்த் தோன்று
  மைம்பொறியா மத்யான்ம வடிவும் பொய்யே
யறியுமதன் விடயமெனுஞ் சத்த மாதி
  யைம்புலனு மதிபூத வடிவும் பொய்யே
செறியுமத னதிட்டான தெய்வ மென்னுந்
  திக்குமுத லதிதெய்வ வடிவும் பொய்யே
சிறிதிலதாம் பரப்பிரம மொன்றே யுண்மை
  சின்மயமா மதுவேநின் னிசசொ ரூபம். (16)

கருமமுறும் வாக்குமுதற் கருவி யைந்தாய்க்
  காண்கின்ற வத்யான்ம வடிவும் பொய்யே
மருவுமதன் விடயமெனும் வசன மாதி
  வகுப்பதுவா மதிபூத வடிவும் பொய்யே
கருதுமத னதிட்டான தெய்வ மென்னுங்
  கனன்முதலா மதிதெய்வ வடிவும் பொய்யே
நிருமலமாம் பரப்பிரம மொன்றே யுண்மை
  நிரந்தரமா மதுவேநின் னிசசொ ரூபம். (17)

பன்னியவா றத்யான்ம மதிபூ தங்கள்
  பகுப்புற்ற வதிதெய்வ மனைத்தும் பொய்யே
மன்னியநித் தாநித்த விவேக மாதி
  மாசற்ற சாதனமுஞ் சுத்தப் பொய்யே
தன்னியனு மாசிரியன் சகவா சாதி
  தகைமைமிகுஞ் சற்சரித மனைத்தும் பொய்யே
யன்னியமில் பரப்பிரம மொன்றே யுண்மை
  யகண்டமதா மதுவேநின் னிசசொ ரூபம். (18)

முத்தியுற வேண்டுமென விச்சை செய்தன்
  மோட்சத்தின் பொருட்டே தன்னுயிர் தரித்தல்
பத்தியுட னன்குக விசாரஞ் செய்தல்
  பாங்காகப் பரப்பிரம ஞான மெய்த
லித்துவித சகத்தையெலா மறம றத்த
  லித்தனையும் பரமார்த்த தசையிற் பொய்யே
யத்துவித பரப்பிரம மொன்றே யுண்மை
  யதுவேநீ யணுவுமிதி லைய மில்லை. (19)

வீதலுறுச் சாதனமோர் நான்கு முற்ருேன்
விசாரத்தி லதிகாரி யாஞே னென்னல்
பேதமுறுச் சீவபர வைக்யந் தானே
பேசியிடு நூலுக்கு விடய மென்னல்
போதமறை முடிவிற்கும் பிரமத் திற்கும்
போதகபோத் தியபாவ பந்த மென்ன
லேதமுறு மஞ்ஞான மனைத்து நீங்கி
யெப்போதுஞ் சுகிப்பதுவே பலமா மென்னல். (20)

ஈதுமுதற் பலவிதமாய்ப் பகுத்தங் கங்கே
யியம்பியதா மெப்பொருளுஞ் சுத்தப் பொய்யே
பேதமுறு மிவற்றையெலாம் பகுத்தங் கங்கே
பேசியிடுஞ் சொலவுகளுஞ் சுத்தப் பொய்யே
மாதவனே யப்பொய்யு மாயுங் காலை
மன்னுமதிட் டானபரப் பிரமந் தாஞ
மாதலிஞ லகண்டபரப் பிரமந் தானே
யநவரத மகமென்று நிதித்யா சிப்பாய். (21)

மிகமிகவுஞ் சத்தத்தை விரும்பிச் சொல்லன்
மிகவாக்கின் றுக்கத்துக் கேது வாகும்
புகல்பலவாஞ் சத்தத்தைப் பரிந்து கேட்டல்
பொருந்துமஞே மயக்கத்துக் கேது வாகும்
வெகுவிதமா மர்த்தத்தை விசாரஞ் செய்தல்
விவிதமஞே துக்கத்துக் கேது வாகுந்
தகுமகனே யாதலிஞ லனைத்துந் தள்ளித்
தற்பிரமந் தானெனவே நிதித்யா சிப்பாய். (22)

உத்தமமாம் புத்தியுறும் புருடர் முன்பிங்
குற்றுணரத் தகுபொருளை யோர்ந்து ணர்ந்து
சத்தியமா மப்பொருளின் சாட்சாத் காரஞ்
சாரநிதித் யாசத்தைச் செய்ய வேண்டு
மெத்தவுமே நிதித்யாச விரோத மாக
மேவியநூல் விசாரணையாற் காலந் தள்ள
லித்தனையும் புத்தியுளோர்க் குரிய தன்றென்
றிவ்விதமாய்ச் சுருதிமுடி வியம்பு தன்றே. (23)

புரையறவே யுணர்பொருளை யுணர்ந்த பின்னர்ப்
பூரணமா மப்பொருளின் சாட்சாத் கார
மருவியிட நிதித்யாசஞ் செய்வ தல்லான்
மற்றிறையு நூல்வழியே செல்ல வொண்ணு
தெரிபொருளை நூல்வழியா லறிந்த பின்னர்த்
தெரிவித்த நூன்மொழியே மீண்டுஞ் சொல்ல
லுரைதருதன் வாக்குக்குத் துக்க மென்றே
யுபநிடத வசனமெலா முரைத்த வன்றே. (24)

ஆதலினுற் றுனியத்தை யடைந்த பின்ன
ரங்குற்ற பலாலத்தை யெறித லேபோ
லேதமற வுணர்பொருளை யுணர்ந்த பின்ன
ரிங்குற்ற நூலையெலா மெறிதல் வேண்டும்
வாதகமா நூலையெலா மெறிந்த பின்னர்
வருந்தியுமே யநவரத மிடைவி டாமற்
போதமுறச் சாதகமா நிதித்யா சத்தைப்
புரியுடனே பூரணமாய்ப் பழகல் வேண்டும். (25)

மெய்யுணர்வா நந்தபரப் பிரமத் தின்கண்
மேவியதன் கனவெனவே சகத்த னைத்தும்
பொய்யுருவாய்த் தோற்றுமென்று மவையு மாயிற்
பூரணமாம் பிரமமென்றுந் தன்து மாணு
ளுய்யவெகு விதமான நூலின் சொல்லை
யுபதேச காலத்தி லுரைப்ப தல்லான்
மையணுவு மின்றியதன் னநுப வத்தின்
மருவியவிந் நூல்வசன மிறையு மில்லை. (26)

புத்திரனே யாதலினு லுபதே சத்திற்
புகல்கின்ற நூன்மொழிக ளனைத்துந் தள்ளிச்
சத்தியசிற் சுககனமாம் பரமே யாகச்
சலியாம லிருப்பதுவே யறவு நன்று
மத்திறமே யநவரத மிருப் பதற்கிங்
கசைவுற்ற தன்மனது வசமு ருதே
னித்தியமாம் பரப்பிரம நானே யென்று
நிரந்தரமாய் நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (27)

நிரந்தரமாய் நிதித்யாசஞ் செய்வ தற்கு
நிலையற்ற தன்மனது வசமு றாதேற்
றிரிந்தலையு மனதுவச மாகு மட்டுந்
திடமாக விசாரணையே செய்ய வேண்டும்
பொருந்தியநூல் விசாரணையாற் சித்த மெள்ளப்
புரையற்றுப் பூரணமாம் பரத்தி லோயு
முரந்தருநூல் விசாரணையே யொழிய வேறோ
ருபாயமுமே சித்தசெயந் தருவ தில்லை. (28)

சித்தசெய மாத்திரமே சீவன் முத்தி
சித்தசெய மாத்திரமே விதேக முத்தி
நித்தியமாய் நிதித்யாசஞ் செய்வோ ருக்கே
நிகழ்த்தியவச் சித்தசெய நேரே பேறுஞ்
சித்தசெய மல்லாம லநந்தோ பாயஞ்
செய்யினுமே முத்தியிலை யாத லாலே
புத்திரவச் சித்தசெயம் பொருந்த வேண்டிப்
பூரணமா யெப்போது நிதித்யா சிப்பாய். (29)

சின்மயமாம் பரப்பிரம சொரூப மேநான்
சீவனென்றும் பிரமமென்றும் பேத மில்லை
சன்மயமாம் பரப்பிரம சொரூப மேநான்
சராசரமாய்த் தோற்றியிடும் பேத மில்லை
தன்மயமாம் பரப்பிரம சொரூப மேநான்
றனக்கயலாய்த் தோற்றியிடும் பேத மில்லை
யென்மயமே யெப்போது மெல்லா மென்றும்
யான்பிரமந் தானென்று நிதித்யா சிப்பாய். (30)

களங்கமிலாப் பரப்பிரம சொரூப மேநான்
காரியகா ரணமென்னும் பேத மில்லை
விளங்கியிடும் பரப்பிரம சொரூப மேநான்
வேத்தியவே தனமென்னும் பேத மில்லை
யுளங்கலவாப் பரப்பிரம சொரூப மேநா
னொருகாலு மோரணுவும் பேத மில்லை
விளங்கியிடும் பேதமெலாம் பரமே யென்றும்
விமலபரம் யானென்று நிதித்யா சிப்பாய். (31)

சகலமுமே யகண்டபரப் பிரம மென்றுஞ்
சந்ததமு மப்பிரம நீயே யென்றும்
விகலமற வேதமுடி விளம்ப லாலும்
விளம்பியவா சற்குருவு மருள்வ தாலு
நிகரிலநு பூதிமிகுஞ் சங்க ராதி
நிச்சயமு மிவ்விதமே நிற்ப தாலு
மகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மப்பிரம மகமென்று நிதித்யா சிப்பாய். (32)

ஞானகன மானபரப் பிரம மல்லா
ஞாலமுத லெப்பொருளு மென்று மில்லை
யானசக சீவபர மனைத்து மென்று
மகண்டைக ரசமான பிரம மென்றே
யீனமற வெமதீச னெமக் குரைத்த
விப்பொருளி விறையளவு மைய மில்லை
யானதனு லகிலமுமே பிரம மென்று
மப்பிரம மகமென்று நிதித்யா சிப்பாய். (33)

விகலமுறு வேதாந்த வாக்கி யத்தால்
விளம்பியதே யுண்மையென விசுவா சித்துச்
சகலமுணர் பரமசிவ னுரைத்த வண்ணஞ்
சாற்றியவென் வாக்கியமும் விசுவா சித்து
மிகவுரமாய்ப் பழகியிடு நின்னு கத்தான்
மேவியநின் சந்தேக மனைத்து நீக்கி
யிகழ்வுதரும் விபரீத மனைத்துந் தீர
விசைத்தவண மெப்போது நிதித்யா சிப்பாய். (34)

நினக்கயல்போற் றோற்றியவிந் நாம ரூப
நிகிலமுமே நீயலது வேறே யன்று
தனக்கயல்போற் கனவிலுணர் நாம ரூபந்
தானலது சோதிக்கில் வேறே யுண்டோ
வெனக்கயல்போற் காண்பதெலாம் யானே யென்றும்
யான்றானே யேகபரப் பிரம மென்று
மனக்கவலை யாவையுமே தீரு மட்டு
மறவாம லெப்போது நிதித்யா சிப்பாய். (35)

அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றநவரத மாதரவாய்ப் பழகப் பட்ட
தகும்பிரம பாவனையா னித்யா சத்தாற்
றங்குமனோ விகற்பமெலாந் தவிர்ந்த பின்ன
ரகம்பிரம வாக்கியத்தி னிலட்சி யார்த்த
வநுபூதி யடைந்தந்த மயமே யாகிச்
சகம்பரநா னென்றனுவு நினையா வண்ணஞ்
சந்ததமுஞ் சலியாமற் சாந்த னுவாய். (36)

சந்ததமுஞ் சலியாமற் சாந்த மாகிச்
சன்மயமாய் நிற்பதுவே சாட்சாத் கார
மைந்தவதே மாசற்ற சீவன் முத்தி
மற்றதுவே மகத்தான விதேக முத்தி
யிந்தநிலை யெமதீச னருளுள் ளோர்க்கே
யிசைத்தவண மிருமையற வெளிதா யெய்துஞ்
சுந்தரமாஞ் சுருதிமுடி வனைத்தி னுலுஞ்
சொல்லிமுடி வுற்றபொருட் சுருக்க மீதே. (37)

சுருக்கமுறப் பரமசிவ னெமக் குரைத்த
சுருதிமுடிப் பொருளிதனைச் சுருங்கச் சொன்னே
மிருக்குமுதன் மறைமுடியின் சுருக்க மான
விப்பொருளை யிருமையறக் கேட்டு ணர்ந்தோ
ரருக்கன்முதற் சோதிக்குஞ் சோதி யான
வகண்டைக ரசவடிவாம் பரமே யாவர்
நெருக்கமுற வெங்குமொரு நிறைவாய் நின்ற
நிமலபர சிவனுனை நிச்ச யந்தான். (38)

நிச்சயமா மிப்பொருளை யொருகா லேனு
நிருமலமா மன்புடனே நின்று கேட்போர்
துச்சமகா பாவங்கள் செய்தோ ரேனுந்
தொடர்புற்ற பாவமெலா முடனே தீர்ப்ப
ருச்சமதாஞ் சாதனசம் பத்தி யுள்ளோ
ருருக்கமுட னிப்பொருளைக் கேட்பா ராகி
லெச்சனன பாதகமு மெரித்தி மைப்பி
லிதயமுடிச் சிறந்தோராய் முத்த ராவர். (39)

இப்பொருளைக் கேட்டுணர்வோ ருடனே முத்தி
யியைந்திடுவ ரெள்ளளவு மின்னன் மேவா
ரற்பமிலா வாநந்த மநுப விப்ப
ரநவரத மங்களமே யடைந்தோ ராவர்
நிர்ப்பயமா நிலைபெறுவர் பவத்தின் மீளார்
நிச்சலமாம் பரப்பிரம வடிவே யாவர்
செப்பியது சத்தியமே சங்கை யில்லை
சிவனாணை சத்தியமே சத்தி யந்தான். (40)

துகளிலதிட் டானபர சிவத்தின் கண்ணே
தோன்றியிருந் தடங்கியவிச் சகத்த னைத்தும்
புகலுமதிட் டானபர சிவமே யென்றும்
பூரணமா மச்சிவமே நாமே யென்றும்
பகராலுறு மறைமுடியா லகண்டைக் யத்தைப்
பாவித்துப் பரோட்சமிலா தநுபவித் தோர்க்
கிகழ்வுதருஞ் சோகமிலை மோக மில்லை
யிப்பேத தரிசனமோ ரிறையு மில்லை. (41)

இவ்விதமா யாவருமே யுய்யும் வண்ண
மேகபரி பூரணமாம் வத்து தானே
திவ்வியமங் களவடிவா யெழுந்தெ மக்குத்
திகழ்வுறவே தெரிவித்த வேதார்த் தத்தைச்
செவ்வியதா யிதயத்தி லநுப வித்துச்
சிறுமையெலாந் தீரும்வண முரைத்தோ மென்றே
யெவ்வமுறு ரிபுமுனிவ னிதாக னுக்கங்
கிருமையிலாப் பரம்பொருளை யிசைத்தா னன்றே. (42)

வேறு.

சகலகற்பித முஞ்சுதசித்தமாஞ் சத்தையின்மையி னால்வெறும்பொய்யெனு, மஃதுமாயி லகண்டபரம்பொரு ளாமெனுமது நாமெனுமேகமாய், நிகழுஞானஞ் செறிந்தவர்முத்தரே நிச்சயம்மெனவிங்கு நிகழ்துத, நிகழுமாநந்தத் தாண்டவமாடுநந் தேவதேவ னகண்டசொரூபமே. (43)

இருபத்தொன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 29-க்கு திருவிருத்தம்-1335.



## முப்பதாவது

### பரப்பிரம நிச்சயத்தாற் பரமாநந்த முறைக்கும் அத்தியாயம்.



சத்தியசிற் சுககனமாம் பிரம மாத்ரஞ்
சந்ததமுஞ் சலியாம லிருப்ப தென்று
மித்துவித சகத்தணுவு மில்லை யென்று
மிவையாவு மேகபரப் பிரம மென்று
நித்தியஞா னாநந்த சுபாவ னான
நிகிலசகன் னுயகன்முன் னுரைத்த வண்ண
மத்துவித நிர்ணயமே மறிக்குஞ் சொல்வா
மகண்டபர போதமுர மாவ தற்கே. (1)

சத்தியஞா னாநந்த சொரூப மல்லாற்
சகத்தெவையு மொருகாலுஞ் சனிக்க வில்லை
நித்தியஞா னாநந்த சொரூப மல்லா
னீக்கவொணுப் பவமென்னு நினைவு மில்லை
யெத்துவிதத் தோற்றமுமே பிரம மென்னு
மிருமையிலா வப்பிரம நானே யென்னு
மத்துவித நிச்சயமே யடைந்த வற்று
லகண்டபர மாநந்த மநுப விப்பாய். (2)

சதாநந்த மாத்ரபர சொரூப மேநான்
சந்ததமுஞ் சாந்தபர சொரூப மேநான்
சிதாநந்த மாத்ரபர சொரூப மேநான்
சிற்கனமாய் நிறைந்தபர சொரூப மேநா
னுதாரபரி பூரணமாஞ் சொரூப நானென்
றுரமாக வத்துவித நிச்ச யத்தை
நிதாகவரை நிமிடமுநீ விடாது செய்து
நிரதிசய வாநந்த மநுப விப்பாய். (3)

ஞானகன மானபரப் பிரமத் தின்கண்
ஞாலமுதற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மீனமிலவ் வதிட்டானப் பிரம மென்னு
மெப்போது மப்பிரம நானே யென்னு
மூனமிலா வத்துவித நிச்ச யத்தை
யுரமாக வநவரத மப்யா சித்தே
யானமனே விகற்பமெலா மழித்தெப் போது
மகண்டபர மாநந்த மநுப விப்பாய். (4)

நாசமிலா திருப்பதனு ஞானே சத்து
நாடியெலா மறிவதனு ஞானே சித்து
நேசமதாய் நிற்பதனு ஞானே யின்ப
நிகழ்த்தியவா சத்தியசிற் சுகபா நானே
பேசியவிவ் விலக்கணமாம் பிரம மென்றே
பேதமிலா வகண்டபர நிச்ச யத்தை
யாசறவே யதிதிடமா யடைந்த வற்று
லகண்டபர மாநந்த மநுப விப்பாய். (5)

இருக்கின்ற திலங்குகின்ற தின்ப மென்று
மியம்பியிடு நாமமொடு ரூப மென்றுந்
தருக்கமிடு மிவ்வமுச பஞ்ச கத்திற்
றயங்கியமுன் மூன்றமுசம் பரத்தின் ரூபஞ்
சுருக்கமுறு மிரண்டமுசஞ் சகத்தின் ரூபஞ்
சொற்பொருளா மிவ்வமுச மிரண்டுந் தள்ளி
நெருக்கமுறுஞ் சத்தியசிற் சுகமாய் மீந்து
நின்றபர நானெனவே நிச்ச யிப்பாய். (6)

அதிட்டான சத்தியசிற் சுகமா மம்ச
மகிலபரி பூரணமா யொன்ருய் நிற்கு
மிதிற்ருனே கற்பிதமா நாம ரூப
மிரண்டெனவே பரிச்சின்ன மாகி நிற்கு
மதித்தாயும் விவேகத்தாற் கற்பி தத்தை
மன்னுமதிட் டானமென வுணர்ந்தெப் போது
நிதித்யாசஞ் செய்துமனே விகற்பந் தீர்ந்து
நிரதிசய வாநந்த மநுப விப்பாய். (7)

சிதாகாய மானபரப் பிரமத் தின்கட்
செகசீவ பரங்களெலாம் பொய்யாய்த் தோன்று
நிதாகவிதை விவேகத்தா னேதி செய்து
நிருமலமாய் நின்றபரப் பிரமந் தானே
சதாவுமக மகமெனவே நிதித்யா சித்துச்
சலமனதின் விகற்பமெலாந் தவிர்த் தெப்போது
மதாகியிருக் கின்றநிலை யடைந்த வற்று
லகண்டபர மாநந்த மநுப விப்பாய். (8)

தூலமுதன் மூன்றுவித சரீர மில்லை
தொடர்நனவு முதலியமுன் றவத்தை யில்லை
மூலமெனு முக்குணமாம் பகுதி யில்லை
மொழியுமத னபிமானி யாரு மில்லை
காலமொடு தேசமிலை வத்து வில்லை
கற்பிதமே யில்லையென நேதி பண்ணி
யாலயமாய் நின்றபரப் பிரம நீயா
யகண்டபர மாநந்த மநுப விப்பாய். (9)

தேகமுதற் றிரளெவையும் பிரம ரூபந்
திருசியமாய்த் தெரிவதெலாம் பிரம ரூபம்
யாகமுறும் பதார்த்தமெலாம் பிரம ரூபம்
பரசீவ சகங்களெல்லாம் பிரம ரூப
மாருபொரு ளகிலமுமே பிரம ரூப
மன்னியமா யறிவதெலாம் பிரம மென்னு
மேகபர நிச்சயமே யிசைந் திவற்று
லிணையற்ற வாநந்த மநுப விப்பாய். (10)

சந்ததமுஞ் சிவமான பிரம நானே
சகலபரி பூரணமாம் பிரம நானே
சிந்தைமுதற் கதீதபரப் பிரம நானே
சின்மாத்ர வடிவான பிரம நானே
தொந்தமுறுத் துரியபரப் பிரம நானே
துகளற்ற தூயபரப் பிரம நானென்
றந்தமிலா வகண்டபர நிச்ச யத்தை
யடைந்ததனு லநவரதஞ் சுகித் திருப்பாய். (11)

கூறுபடா வகண்டபரப் பிரம நானே
கூடத்த வான்மாவாம் பிரம நானே
மாறுபடா மகத்தான பிரம நானே
மங்களமங் களமான பிரம நானே
வேறுபடா விமலபரப் பிரம நானே
வேதாந்த வேத்தியமாம் பிரம நானென்
றீறுபடா வேகபர நிச்ச யத்தை
யிசைந்ததனு லெப்போதுஞ் சுகித் திருப்பாய். (12)

சத்தியசிற் சுககனமாம் பிரம நானே
சாலவுப சாந்தபரப் பிரம நானே
நித்தியநிட் களமான பிரம நானே
நிரதிசயா நந்தபரப் பிரம நானே
யித்துவித மிறையுமிலாப் பிரம நானே
யேகபரி பூரணமாம் பிரம நானென்
றத்துவித மானபர நிச்சயத்தை
யடைந்ததனு லனவரதஞ் சுகித் திருப்பாய். (13)

பரமசிவ மானபரப் பிரம நானே
பரிச்சேத ரகிதபரப் பிரம நானே
நிரவயவ மானபரப் பிரம நானே
நிட்கிரிய சுபாவபரப் பிரம நானே
சருவமுமாய்த் திகழுபரப் பிரம நானே
சகலவிலட் சணமான பிரம நானென்
றிருமையிலா வத்துவித நிச்ச யத்தை
யிலைசந்ததனு லெப்போதுஞ் சுகித் திருப்பாய். (14)

பராபரமாம் பரப்பிரம சொரூப நானே
பரஞ்சோதி யானபர சொரூப நானே
நிராமயமாம் பரப்பிரம சொரூப நானே
நிருமலமாய் நிறைந்தபர சொரூப நானே
புராதனமாம் பரப்பிரம சொரூப நானே
பூரணமாம் பரப்பிரம சொரூப நானென்
றிராப்பகலு மேகபர நிச்ச யத்தை
யிடையறவே யிசைந்ததனுற் சுகித் திருப்பாய். (15)

சருவபரி பூரணமாம் பிரம நானே
சருவான்மா வானபரப் பிரம நானே
பரவுசிதா காயபரப் பிரம நானே
பரமான்மா வானபரப் பிரம நானே
சுருதிமுதற் கதீதபரப் பிரம நானே
சுயஞ்சோதி யானபரப் பிரம நானென்
றிருமையிலா வத்துவித நிச்ச யத்தை
யெப்போது மிசைந்ததனுற் சுகித் திருப்பாய். (16)

சத்தியமாம் பரப்பிரமந் தானே யெல்லாஞ்
 சதாசிவமாம் பரப்பிரமந் தானே யெல்லா
நித்தியமாம் பரப்பிரமந் தானே யெல்லா
 நிரஞ்சனமாம் பரப்பிரமந் தானே யெல்லாஞ்
சுத்தமதாம் பரப்பிரமந் தானே யெல்லாஞ்
 சுககனமாம் பரப்பிரமந் தானே யெல்லா
மத்துவித பரப்பிரம மதுநா னென்றே
 யதிதிடமா முறுதியினு லாநந் திப்பாய். (17)

சலனமிலாப் பரப்பிரமந் தானே யெல்லாஞ்
 சாசுவத பரப்பிரமந் தானே யெல்லா
மலமருவாப் பரப்பிரமந் தானே யெல்லா
 மாயையிலாப் பரப்பிரமந் தானே யெல்லாங்
கலனமுறாப் பரப்பிரமந் தானே யெல்லாங்
 களங்கமிலாப் பரப்பிரமந் தானே யெல்லா
மலைவுபெறாப் பரப்பிரம மதுநா னென்றே
 யதிதிடமா முறுதியினு லாநந் திப்பாய். (18)

சொற்பொருளாய்த் தோற்றுவதும் பிரம ரூபஞ்
 சுபாசுபமாய்த் தோற்றுவதும் பிரம ரூப
மெய்ப்பொருளா யிலங்குவதும் பிரம ரூப
 மில்லையுள தென்பதெல்லாம் பிரம ரூபங்
கற்பிதமாய்க் காண்பதெலாம் பிரம ரூபங்
 காரியகா ரணமெவையும் பிரம ரூப
மற்பமிலாப் பரப்பிரம மதுநா னென்றே
 யதிதிடமா முறுதியினு லாநந் திப்பாய். (19)

ஏதமுறு மவித்தையுமே பிரம ரூப
 மிலங்கியிடும் வித்தையுமே பிரம ரூபம்
பேதமுறுஞ் சீவனுமே பிரம ரூபம்
 பிறங்கியிடு மீசனுமே பிரம ரூபம்
பூதலமே முதலுலகும் பிரம ரூபம்
 புலமுறவே காண்பதெலாம் பிரம ரூப
மாதியிலாப் பரப்பிரம மதுநா னென்றே
 யதிதிடமா முறுதியினு லாநந் திப்பாய். (20)

துவிதமென்றுந் துவிதமொடத் துவித மென்றுந்
தூயபர மாத்துவித மதமீ தென்று
மிவிதமென்று மவிதமென்று மிலதுண் டென்று
மிவைமுதலா யங்கங்கே யியம்ப லுற்ற
விவிதமத மிவையுரைசெய் வாதம் யாவும்
விசாரிக்கில் விமலபரப் பிரமந் தானுங்
குவிதலுருப் பரப்பிரம மதுநா னென்று
கோதறவே பாவித்துக் குறைவு தீர்வாய். (21)

சித்துளதேற் சகமுளதாஞ் சித்தில் லாதேற்
செகமுமிலை யாதலினாற் சித்தின் கண்ணே
யித்துவித சகத்தெவையுங் கற்பி தந்தா
னிதனையெலா மன்னுவய வெதிரே கத்தாற்
புத்தியுற வாய்ந்துடனே ப்ரவிலா பித்துப்
பூரணமாய் நின்றபர சித்துத் தானே
நித்தமக மகமெனவே நிதித்யா சித்து
நிச்சலமாய் நீயென்று நிலைத்து நிற்பாய். (22)

நிதாகவெகு விதமாக நிகழ்த்தி யென்ன
நிகிலமுமே நிமலசிதா காயந் தானுஞ்
சிதாகாய மதுபிரம வடிவ மாகுஞ்
சிதாகாய மதுவேநின் வடிவ மாகு
முதாரமுறு புத்தியினா லுரைத்த வண்ண
முணர்வதெலாஞ் சிதாகாய சொரூப மென்றுஞ்
சதாவுமதே யகமென்று நிதித்யா சித்துச்
சற்றேனுஞ் சலியாது சாந்த னாவாய். (23)

நிகிலவதிட் டானபர சித்துத் தானே
நிருமலமாய் நிறைவுற்ற வாகா யம்போ
லகிலபரி பூரணமா யமல மாகி
யத்யந்த சூட்சுமமா யசங்க மாகுந்
தகமைசெறிந் திருக்கின்ற தன்மை யாலே
தயங்குசிதா காயமெனச் சாற்ற லாகு
மகிமைமிகுஞ் சிதாகாய மதுநா னென்றே
மறவாமற் பாவித்து மயக்கந் தீர்வாய். (24)

சன்மாத்ர மானபரப் பிரம மல்லாற்
சராசரமாய்ச் சனிக்கின்ற சகமே யில்லை
சின்மாத்ர மானபரப் பிரம மல்லாற்
சித்தமுதற் றிருசியமாஞ் சகமே யில்லை
நன்மாத்ர மானபரப் பிரம மல்லா
ஞநாவாய் நாடியிடுஞ் சகமே யில்லை
தன்மாத்ர மானபரப் பிரமந் தானே
தானெனவே பாவித்துத் தளர்வு தீர்வாய். (25)

சின்மாத்ர மானபரப் பிரமந் தானே
செகசீவ பரங்களெனத் தெரிவ தாலே
யெண்மாத்ர மாகினுமிச் சகசீ வாதி
யிதரமல விவையாவுஞ் சின்மாத் ரந்தான்
பொன்மாத்ர வடிவான கடக மாதி
பொன்னையலாற் சற்றுமய லாவ துண்டோ
மண்மாத்ர மானகட சராவ மாதி
மண்ணையலான் மற்றனுவு மனிய மாமோ. (26)

அகண்டபரி பூரணமாம் பிரமந் தானே
யறிவற்றோர்க் குலகெனவே தோற்றினாலும்
புகன்றபல விதமான வுலகந் தானே
பூரணமா மறிஞருக்குப் பரமாய்த் தோற்றுந்
திகழ்ந்தெதிரே யிருக்கின்ற விரச்சுத் தானே
தெரிவற்றோர்க் கரவெனவே தோற்றி னாலு
நிகழ்ந்தாலே தெரிவுற்றோர்க் கிரச்சு வாக
நிகழ்கின்ற நீதியினைக் கண்டோ மன்றே. (27)

படருற்ற நூலுனே படம்போ லாகப்
பாவியநிற் குறுக்குநெடுக் காவதே போற்
றொடர்புற்ற பரந்தானே சகம்போ லாகத்
தோன்றியநிற் குறுக்குநெடுக் காகநிற்கு
மடருற்ற விவேகத்தா லறைந்த வண்ண
மாய்ந்தெவைபு மகண்டபரப் பிரம மென்றுந்
தடமுற்ற பரப்பிரம மதுநா னென்றுந்
தடையறவே பாவித்துத் தளர்வு தீர்வாய். (28)

சத்தியஞா னாநந்தப் பிரமந் தானே
சலனமிலாச் சாசுவத வத்து வாகுஞ்
சத்தியஞா னாநந்தப் பிரமந் தானே
சட்பாவ விகாரமிலா வத்து வாகுஞ்
சத்தியஞா னாநந்தப் பிரமந் தானே
சகசீவ பரங்களிலா வத்து வாகுஞ்
சத்தியஞா னாநந்தப் பிரமந் தானே
சகலபரி பூரணமாம் வத்து வாமே. (29)

சத்தியஞா னாநந்தப் பிரம மல்லாற்
சகசீவ பரங்களெனச் சிறிது மில்லை
புத்திரவிச் சகசீவர் முதலா மியாவும்
பூரணமாய்ப் பொருந்தியவப் பிரமந் தானு
மத்துவித பரப்பிரம மதுவே நீயா
மறைந்தபொருள் சத்தியமே யாதலாலே
நித்தமெலாம் பிரமமென்னு மதுநா னென்னு
நிச்சலமா முணர்வுற்று நிறைந்து நிற்பாய். (30)

நிச்சலமா முணர்வுற்று நிறைந்து நிற்கு
நிலையதுவே நிகரற்ற மோட்ச மாகுந்
துச்சமிலா வந்தநிலை தொடர்ந்தோர் மீண்டுந்
துன்பமுறார் துகண்மருவார் சுகமே சார்வ
ரெச்செயலுஞ் செய்துமுடிந் தவரே யாவ
ரெப்போது மேகபர வடிவாய் நிற்ப
ருச்சபர வடிவான வன்னோ ருக்கிவ்
வூனபவ விவகார மென்று மில்லை. (31)

ஆதலினு லநவரத மறைந்த வண்ண
மகண்டபர நிச்சயமே யப்பா சித்துப்
பேதமனோ விகற்பமெலாம் பெயர்த்தெப் போதும்
பிரிவற்ற வகண்டபர போதம் பெற்றவ்
வேதமிலா வேகபர வடிவே யாக
விருப்பதுவா மோட்சநிலை யடைதி மைந்தா
வேதமுடிப் பொருளைநினக் கிந்த வண்ணம்
விமலசிவன் விளம்பியவா விளங்கச் சொன்னோம். (32)

பரமான பரமசிவ பத்தி யோடே
 பரவியவிப் பரம்பொருளைப் பரிந்து கேட்போன்
றிரமான வகண்டபர ஞானஞ் சேர்வன்
 றினையளவுந் துக்கமுறுன் சுகமே லாவ
னுரமான வகண்டபர வடிவாய் நிற்ப
 னுரைத்தநிலோ வையமிலை யுண்மை யென்றே
வரமான ரிபுமுனிவ னிதாக னுக்கு
 வரையற்ற வத்துவினை வகுத்துச் சொன்னான். (33)

வேறு.

சச்சிதாநந்த வத்துவையன்றியே சற்றுமொன்றுஞ் சனித்திடவே யிலை, யிச்சகம்முதல் யாவையுமென்றுமே யேகபூரண வத்துவதாமிக, வுச்சமாமது நாமெனு ஞானமிங் குற்றவர் பவமுத்தரெனச் சொல, னிச்சலாநந்தத் தாண்டவமாடுநந் நிகரிலீச னகண்ட சொரூபமே. (34)

முப்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.
ஆக அத்தியாயம் 30-க்கு திருவிருத்தம் 1369.

---

# முப்பத்தொன்றாவது

## அறுபத்துநான்கு திட்டாந்தத்தோ டத்துவிதவுண்மை யுரைக்கும் அத்தியாயம்.

பாவனமாம் பரப்பிரம சாட்சாத் காரம்
 பழுதறவே பற்றுவதற் கேது வாகி
யாவலுடன் கேட்பமிக வினிய தான
 வத்யந்த வற்புதமாந் திட்டாந் தத்தோ
டோவலிலா வகண்டபர நிச்ச யத்தை
 யூனமற விவ்வோத்தி னுனக் குரைப்பா
மேவரிய விதனுடைய சிரவ ணத்தால்
 மிகவிரைவின் மெய்ம்முத்தி மேவ லாமே. (1)

சத்தியமே சத்தியமே சகமே யில்லை
 சங்கற்ப விகற்பங்கள் சிறிது மில்லை
நித்தியவா நந்தமயப் பிரம மொன்றே
 நிச்சலமா யெப்போது நிலைத்த வுண்மை
யத்துவிதப் பிரமமதே யசங்க மாகு
 மனுமயமா மட்சரமா மகண்ட மாகு
மித்துவித விவகார மிறையு மில்லை
 யிங்குற்ற காரியமோ ரணுவு மில்லை. (2)

பிரிவுபெறும் பரப்பிரம சொரூப மல்லாற்
பிரபஞ்ச பாவனையே யென்று மில்லை
தெரிவுருவாம் பரப்பிரம சொரூப மல்லாற்
றிருசியமாஞ் சகத்தோற்றஞ் சிறிது மில்லை
சருவபரி பூரணமாம் பிரம மல்லாற்
சகமுதலோர் பொருளுமொரு காலு மில்லை
பரவியவிவ் வர்த்தமுனக் குரமாம் வண்ணம்
பலவிதமாந் திட்டாந்தம் பகரு வாமால். (3)

மலடிமகன் வசனத்தா லியார்க்கும் பீதி
மன்னிடுமேன் மாயைமுதற் சகத்துஞ் சத்தாஞ்
சலனமிகும் பரியின்கோ டுண்மை யாகிச்
சமர்தருமேற் சராசரமாஞ் சகத்துஞ் சத்தா
மலைமனுடன் கோடதுவா மம்பு கொண்டிங்
காரேனு மழிவுற்றுற் சகத்துஞ் சத்தாங்
கலனமற விசாரிக்கிற் சகத்தே யில்லை
களங்கமிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை. (4)

கானலினீ ரருந்தியதாற் றிருத்தி யார்க்குங்
கலந்திடுமேற் ககனமுதற் சகத்துஞ் சத்தாம்
வானிலுறுங் கந்தருவ நகர முண்மை
வடிவாமேல் வசனிக்குஞ் சகத்துஞ் சத்தா
மீனமுறுக் ககனத்தி னீல ரூப
மிறவாம லிருந்திடுமேற் சகத்துஞ் சத்தா
மூனமற விசாரிக்கிற் சகத்தே யில்லை
யுணர்வுருவாம் பரப்பிரம மொன்றே யுண்மை. (5)

நிகழ்சுத்தி ரசதத்தாற் பணிக ளார்க்கு
நிசமாகச் சித்தித்தாற் சகத்துஞ் சத்தாந்
திகழிரச்சு சர்ப்பத்தாற் சனங்க ளாருந்
தீண்டினராய் மரிப்புற்றுற் சகத்துஞ் சத்தாங்
ககனத்தின் குசுமத்தா லெங்கு மாருங்
கந்தசுகம் புசிப்புற்றுற் சகத்துஞ் சத்தா
மகமுற்று விசாரிக்கிற் சகத்தே யில்லை
யறிவுருவாய் நிறைந்தபர மொன்றே யுண்மை. (6)

சுடர்விட்டுச் சொலிக்குமன லாச்சி யத்தாற்
சொலியாம லடங்கிடுமேற் சகத்துஞ் சத்தாந்
தடமுற்ற விருட்டிரடாஞ் சித்ர தீபந்
தன்னொளியாற் றவிர்ந்திடுமேற் சகத்துஞ் சத்தா
மிடமுற்ற தருத்திரடாம் வித்தே யன்றி
யிங்குண்டாய் வளர்ந்திடுமேற் சகத்துஞ் சத்தாந்
திடமுற்று விசாரிக்கிற் சகத்தே யில்லை
தெரியுருவாய் நிறைந்தபர மொன்றே யுண்மை. (7)

அரம்பையதன் கட்டையினாற் பாக சித்தி
யார்க்கேனு மமைந்திடுமேற் சகத்துஞ் சத்தாங்
குரம்பையபி மானமிகு மூட ருக்குக்
குறைவில்சுகங் கூடிடுமேற் சகத்துஞ் சத்தா
நிரம்பியுள வறிவுடையோர் மனத்தி னேர்மை
நீசர்க்குத் தெரிந்திடுமேற் சகத்துஞ் சத்தா
முரம்பெறவே விசாரிக்கிற் சகத்தே யில்லை
யோருருவாய் நிறைந்தபர மொன்றே யுண்மை. (8)

இன்றுபெறுங் கன்னிகையாற் பாக சித்தி
யிசைந்திடுமே லித்துவித சகத்துஞ் சத்தா
மன்றியுமக் கன்னிகையோ டமளி யுற்றிங்
காரேனுஞ் சுகமுற்றாற் சகத்துஞ் சத்தா
நின்றபுவிப் புழுதியினா னிறைந்த சிந்து
நீர்முழுதுஞ் சோஷித்தாற் சகத்துஞ் சத்தா
நன்றுறவே விசாரிக்கிற் சகத்தே யில்லை
நமதுருவாம் பரப்பிரம மொன்றே யுண்மை. (9)

ஆதித்தன் சந்நிதியி லந்த கார
மழியாம லிருந்திடுமேற் சகத்துஞ் சத்தாஞ்
சோதித்த விரதத்தா லிரும்பின் ரூபஞ்
சொன்னத்வ மருவாதேற் சகத்துஞ் சத்தா
மாதத்தின் பூருவமே மரித்தோன் மீண்டு
மகிழ்வுடனே வருவானேற் சகத்துஞ் சத்தாங்
கோதற்று விசாரிக்கிற் சகத்தே யில்லை
குணாதீத பரப்பிரம மொன்றே யுண்மை. (10)

விந்தியவெற் படவியினற் பாய சான்னம்
வேண்டியவா கிடைத்திடுமேற் சகத்துஞ் சத்தா
முந்திமிகக் கறந்துறுபான் மீண்டு மாவின்
முலையின்மிசை யேறிடுமேற் சகத்துஞ் சத்தாந்
தந்திரமாய்க் கடைந்துறுமோர் மீண்டும் பாலாந்
தன்மையினைச் சார்ந்திடுமேற் சகத்துஞ் சத்தாம்
புந்தியுற விசாரிக்கிற் சகத்தே யில்லை
பூரணமாம் பரப்பிரம மொன்றே யுண்மை. (11)

மேருவினைத் தாமரையி னூலா லாரு
மிகவெளிதா யசைப்பாரேற் சகத்துஞ் சத்தாம்
பூரணமாம் வாரிதியைத் தரங்கத் தாலே
புணர்ந்தெவனும் பிணிப்பானேற் சகத்துஞ் சத்தாங்
கூர்மவுரோ மங்களினுன் மத்த மாவைக்
கொணர்ந்தெவனும் பிணிப்பானேற் சகத்துஞ் சத்தாந்
தீரமுற விசாரிக்கிற் சகத்தே யில்லை
திரிகுணமுங் கடந்தபர மொன்றே யுண்மை. (12)

உசுவாச வாயுவினு லோங்குஞ் சைல
மூலந்துசலித் திடுமாகிற் சகத்துஞ் சத்தாம்
விசையாக மேருவந்தோர் பதுமந் தன்னின்
விதையிலிருந் திடுமாகிற் சகத்துஞ் சத்தா
நசியாது சொலிக்கின்ற வன்னி யின்க
ணற்பதுமம் வளர்ந்திடுமேற் சகத்துஞ் சத்தா
மசையாது விசாரிக்கிற் சகத்தே யில்லை
யகண்டவடி வானபர மொன்றே யுண்மை. (13)

சிறுமசகஞ் சிங்கத்தைச் சங்க ரித்துச்
சிக்கெனவே செயித்திடுமேற் சகத்துஞ் சத்தா
முறுவண்டு மேருவினைக் கனியே போல
வுண்டுடனே யுமிழ்ந்திடுமேற் சகத்துஞ் சத்தாம்
பெறுமணுவி னுதரத்தி லநந்த கோடி
பிரமாண்ட மிருந்திடுமேற் சகத்துஞ் சத்தா
மறுவறவே விசாரிக்கிற் சகத்தே யில்லை
மகத்தான பரப்பிரம மொன்றே யுண்மை. (14)

கனவினிடைக் கண்டபொரு ளனவின் கண்ணே
கலங்காம லிருந்திடுமேற் சகத்துஞ் சத்தா
நனிவிரைவி லோடியிடு நதியின் வேக
நலியாது நின்றிடுமேற் சகத்துஞ் சத்தாஞ்
செனனமுதற் குருடர்க்கு மணியி னேர்மை
செவ்வியதாத் தெரிந்திடுமேற் சகத்துஞ் சத்தா
மனியமற விசாரிக்கிற் சகத்தே யில்லை
யகண்டவடி வானபர மொன்றே யுண்மை. (15)

பொரித்தவிதை விருட்சத்தி னுற்பத் திக்குப்
புகலேது வாயிடுமேற் சகத்துஞ் சத்தா
முருத்தரியா முயற்கோடான் மதமா தங்க
முயிர்நீங்கி மரித்திடுமேற் சகத்துஞ் சத்தாந்
தரித்திரர்கள் செல்வத்தோர் செல்வ வின்பந்
தனைத்தெரிந்து புசிப்பாரேற் சகத்துஞ் சத்தாந்
திருத்தமுற விசாரிக்கிற் சகத்தே யில்லை
தியக்கமிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை. (16)

சுந்தரமா மன்னத்தி னடைபோற் காகஞ்
சுத்தநடை யுறுமாகிற் சகத்துஞ் சத்தாம்
விந்தியமா வெற்பிலுறுஞ் சிங்கத் தோடு
வேசரிதான் சமர்செயுமேற் சகத்துஞ் சத்தா
மிந்துவினன் சம்பந்த மன்றி ராகு
வெங்கேனுந் தெரிவுற்றாற் சகத்துஞ் சத்தாஞ்
சிந்தையுற விசாரிக்கிற் சகத்தே யில்லை
சின்மயமாம் பரப்பிரம மொன்றே யுண்மை. (17)

மலடிக்குக் கருவுண்டா யதற்கு நாமம்
வடிவமெலா மருவிடுமேற் சகத்துஞ் சத்தாம்
பெலமற்ற நபுஞ்சகனுக் குரிய மைந்தன்
பிறந்துவளர்ந் திடுவானேற் சகத்துஞ் சத்தாஞ்
சலமுற்ற வன்னேனுக் குரிய மாதர்
சம்போக சுகமுளதேற் சகத்துஞ் சத்தா
நிலைபெற்று விசாரிக்கிற் சகத்தே யில்லை
நிருமலமாம் பரப்பிரம மொன்றே யுண்மை. (18)

சுனகத்தின் விந்துவினாற் சிங்க முண்டாய்ச்
சூரத்வஞ் செறிந்திடுமேற் சகத்துஞ் சத்தாம்
பினுமத்தாற் சாகரநீர் பருகப் பட்டுப்
பெருக்கறவே சோஷித்தாற் சகத்துஞ் சத்தா
நனியுற்ற தாருசிலை மயமாம் பாவை
நல்லன்னந் துய்த்திடுமேற் சகத்துஞ் சத்தா
மனமுற்று விசாரிக்கிற் சகத்தே யில்லை
மாசற்ற பரப்பிரம மொன்றே யுண்மை. (19)

விருத்தாவா யாகாயஞ் சனங்க ளின்பால்
வீழ்ந்திடுமேல் வெறிதான சகத்துஞ் சத்தாம்
பெரிதான வாகாயம் புவியில் வீழ்ந்து
பினுமுயரக் கிளம்பிடுமேற் சகத்துஞ் சத்தாம்
விரிவான விண்மலரைச் சூட்டி யாரும்
வேசிவசஞ் செய்வாரேற் சகத்துஞ் சத்தாம்
பரிவாக விசாரிக்கிற் சகத்தே யில்லை
பங்கமிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை. (20)

சூனியமாங் ககனத்தைக் கயிற்று லாருஞ்
சுருக்கமுறப் பிணிப்பாரேற் சகத்துஞ் சத்தா
மேனியுறுக் ககனத்தின் பதிவிம் பந்தான்
மெய்யாக விருந்திடுமேற் சகத்துஞ் சத்தா
மீனமுறு மேடத்தின் வயிற்றி லானை
யிருந்துபிறந் திடுமாகிற் சகத்துஞ் சத்தா
ஞானமுற விசாரிக்கிற் சகத்தே யில்லை
ஞானகன மானபா மொன்றே யுண்மை. (21)

மிகவுமகா சேறுற்ற புவியி லாரு
மேவிநடந் திடுவாரேற் சகத்துஞ் சத்தா
நிகழ்வுமிகு முகுரத்திற் பதிவிம் பந்தா
னிலைபெற்று நின்றிடுமேற் சகத்துஞ் சத்தாந்
திகழ்கனலி விடும்பஞ்சு சாம்ப ராகாத்
திறமையினைச் செறிந்திடுமேற் சகத்துஞ் சத்தா
மிகழ்வறவே விசாரிக்கிற் சகத்தே யில்லை
யிருமையிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை. (22)

மடமைமிகு மூடர்க்கு மகத்தாம் வத்து
மகிமைதெரிந் திடுமாகிற் சகத்துஞ் சத்தாம்
படருமகண் டாகார விருத்தி யல்லாற்
பரப்பிரமந் திகழ்ந்திடுமேற் சகத்துஞ் சத்தாந்
தடமருவு மகண்டபர ஞான மல்லாற்
றருமோட்சந் தானுளதேற் சகத்துஞ் சத்தாந்
தொடர்புறவே விசாரிக்கிற் சகத்தே யில்லை
துவிதமிலாப் பரப்பிரம மொன்றே யுண்மை. (23)

அத்துவிதப் பிரமமலாற் சுருதிக் கெல்லா
மயலெவையும் பொருளாமேற் சகத்துஞ் சத்தாம்
வத்துவுணர் ஞானமலான் மற்றொன் றாலே
வன்பவநோய் மாய்ந்திடுமேற் சகத்துஞ் சத்தா
முத்தமமா மியோகமுணர் வொன்று மின்றி
யுளமலையா திருந்திடுமேற் சகத்துஞ் சத்தாஞ்
சத்தியமாய் விசாக்கிற் சகத்தே யில்லை
சன்மயமாம் பரப்பிரம மொன்றே யுண்மை. (24)

பரமசிவன் கருணையலாற் போக மோட்சம்
பற்றினவ ருளராகிற் சகத்துஞ் சத்தா
நிருமலமாய் விசாரிக்கிற் சகத்தே யில்லை
நித்தியமா யுளதுபரப் பிரம மொன்றே
யருள்வடிவாம் பரமசிவ னறைந்த வண்ண
மறுபத்து நான்குவித திட்டாந் தத்தா
லிருமையிலாப் பரமொன்றே யுண்மை யென்னு
மிவ்விதமாம் பொருளினைக் கிசைத்தோ மன்றே. (25)

இன்னவிதம் பரமார்த்த விசாரஞ் செய்யி
னிலகுசக சீவபர மெவையு மில்லை
பின்னமெனக் காண்பதெலாஞ் சோதிக் குங்காற்
பிரமமலா தோராணுவும் பிறிதே யாகா
துன்னுபட ரூபத்தைச் சோதிக் குங்காற்
றொடர்புற்ற தந்துவலால் வேறங் குண்டோ
மன்னுகட ரூபத்தைச் சோதிக் குங்கான்
மண்ணையலான் மற்றெவையு மதித்தோ ருண்டோ.(26)

ஆதலினு லணுவேனுந் துவித மில்லை
யத்துவிதந் தானுமிலை யயலே யில்லை
போதகன மானபரப் பிரமமென்றே
பூரணமா யெப்போதும் பொருந்தும் வத்து
பேதமிலா வப்பிரம நானே யென்று
பிரிவற்ற வகண்டபர ஞானம் பெற்று
வாதகமாம் பவபந்த மனைத்துந் தீர்ந்து
வரமான வகண்டபர வடிவே யாவாய். (27)

சங்கற்ப காரியமாஞ் சகத்தின் றேற்றஞ்
சற்றேனுஞ் சார்ந்திடுமே லுடனே யித்தைப்
பங்கற்ற பரப்பிரம மெல்லா மென்றும்
பரமதுவே நானென்றும் பாவித் துத்தீர்
மங்குற்ற மனதென்னு மகத்தாம் வ்யாதி
மாறாது தொடர்ந்திடுமே லுடனே யித்தை
யங்குற்ற வகண்டபரத் தியான மென்னு
மதிசயமா மவுடதமுண் டதஞ்செய் மைந்தா. (28)

மாயையினாற் கற்பிதமாம் பேத மேது
மனதினிடைத் தோன்றியிடி லுடனே யத்தைத்
தூயபரப் பிரமத்தின் றியானத் தாலே
துகளறவே துடைத்துநிச சொரூப மாவா
யாயதன தவித்தையினாற் றேக மாதி
யகமெனவே தோன்றியிடி லுடனே யத்தை
நேயபர சின்மயமா மான்மத் யான
நிட்டையினா னீக்கிநிச சொரூப மாவாய். (29)

கொடியவகங் காரமெனுஞ் சத்து ருத்தான்
குறைவுதரக் கூடியிடி லுடனே யத்தைச்
சடிதியகம் பிரமமெனுந் தியான வாளாற்
சங்காரஞ் செய்துநிச சுபாவ மாவாய்
கடியமனக் கிரந்திதொடர்ந் திடுமே யாகிற்
கலங்காது தைரியமா யுடனே யித்தை
நெடியபர பாவனையாஞ் சக்க ரத்தா
னிமிடத்தி லறுத்துநிச நிலையி னிற்பாய். (30)

தேகமுத னென்னு மத்யா சந்தான்
 றீராது தொடர்ந்திடுமே யுடனே யித்தை
யேகபரி பூரணமாம் பரநா னென்னு
 மிவ்விதமா முறுதியினு லிறக்கச் செய்வா
யாகுமனுன் மாவென்னும் பிசாசந் தோன்றி
 லமலான்மத் தியானமெனு மந்தி ரத்தால்
வேகமுடன் பிசாசமதை யணுகா தோட்டி
 விமலான்ம வடிவாக விளங்கி நிற்பாய். (31)

பலவிதமாஞ் சந்தேக மெனும் பிசாசு
 பயமுறவே தோன்றினுநீ பயப் படாம
லலைவில்பர பாவனையா மந்தி ரத்தா
 லையமெனும் பிசாசதனை யதஞ்செய் வாயா
னிலைமருவாத் துவிதமெனும் பிசாசு மீண்டு
 நிகழினுமே நீயணுவும் வெருளா வண்ணம்
விலையிலா வத்துவிதத் தியான மாகும்
 விபூதியினல் வென்றதனை விபுவாய் நிற்பாய். (32)

இந்தவித மநந்தவித யுத்தி யோடிங்
 கியம்பிய விவ்வேகபர நிச்ச யத்தைப்
புந்தியுறத் தினந்தோறும் பொருந்திக் கேட்போர்
 பூரணமா மப்பிரம ஞானம் பெற்றப்
பந்தமெலாந் தீர்ந்தோராய்ப் பரமே யாவர்
 பகர்ந்ததிலோ ரையமிலை பரமார்த் தந்தான்
சந்ததமுஞ் சகலமுணர் சாம்ப மூர்த்தி
 சாற்றியதிற் சற்றேனுஞ் சங்கை யுண்டோ. (33)

அகிலமுமே யாக்கியளித் தழித்துந் தானே
 ரணுவேனு மாறுபடா தசங்க மாகிச்
சகலபரி பூரணமாய்ச் சாந்த மான
 சத்தியஞா னநந்த பரசி வத்தை
யகமெனவிங் கறிந்தவரே யகண்டா நந்த
 மடைந்தந்தப் பரமசிவ மாவ ரென்றே
நிகழ்வுறவே ரிபுமுனிவ னிதாக னுக்கு
 நிகரற்ற பரம்பொருளை நிகழ்த்தி னனே. (34)

வேறு.

சச்சிதாநந்த மான பரம் பொருள் சந்ததஞ்சலி யாதுள தாமெனு, மிச்
சகம்முத லியாவையு மென்றுமே யில்லையேயெனு மேகபரபொரு
ணிச்சயந்தனை நீள்பலயுத்தியா னிகிலரும்பெற விங்குநிகழ்த்துத
லுச்சவாநந்தத் தாண்டவமாடுநம் மும்பர்கோன்ற னகண்டசொரு
பமே. (35)

முப்பத்தொன்றுவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 25-க்கு திருவிருத்தம் 1404.

---

## முப்பத்திரண்டாவது

### பரவத்து பாவனையாற் பரசொருபத்திதியுரைக்கும் அத்தியாயம்.

ஒருபொருளும் பிரமத்துக் கயலின் றென்று
முள்ளதெலா மகண்டபரப் பிரம மென்று
மிருமையிலா வப்பிரம நாமே யென்று
மிவ்விதமா மகண்டார்த்த நிர்ண யத்தை
நிருமலமா நிதாகநினக் கின்னஞ் சொல்வா
நிகழ்த்தியிடு நிர்ணயமீ துடனே மோட்சந்
தருவதுவாஞ் சுகநல்குந் தளர்வைத் தீர்க்குந்
தற்பிரமந் தானுகத் தனிக்க வைக்கும். (1)

அன்னியமா யிதுவெனவோ ரணுவு மில்லை
யான்மாவே யநவரத மழியா வுண்மை
பின்னமிலா வான்மாவே பிரம ரூபம்
பிரமமதே பிறங்கியவிவ் வான்ம ரூபம்
பன்னியவா ருன்மாவுக் கபின்ன மான
பரப்பிரம நானெனவே நிச்ச யித்திவ்
வின்னன்மிகும் பவபாசம் யாவு நீக்கி
யெப்போது மேகபரப் பிரம மாவாய். (2)

சருவமெனக் காண்பதெலாம் விசாரிக் குங்காற்
சத்தியஞா னாநந்தப் பிரம மல்லா
லொருசிறிதும் வேறில்லை யுளதெப் போது
மோங்குசிதா காயபரப் பிரம மொன்றே
யிருமையிலாப் பிரமமதே நின்சொ ரூப
மிதிலிறையு மையமிலை யாத லாலே
சருவமுமே பிரமமென்று மதுநா னென்றுஞ்
சங்கையறப் பாவித்துச் சாந்த னுவாய். (3)

சத்தியஞா ஞானந்தப் பிரம நானே
சகலபரி பூரணமாம் பிரம நானே
நித்தியமங் களமான பிரம நானே
நிருமலமாய் நிறைந்தபரப் பிரம நானே
யத்தமுரு வகண்டபரப் பிரம நானே
யத்துவித மானபரப் பிரம நானே
சுத்தமதாம் பரப்பிரம நானே யென்று
சுகமுறவே பாவித்துச் சோர்வு தீர்வாய். (4)

ஆநந்த கனமான பிரம நானே
யஞ்ஞான லேசமிலாப் பிரம நானே
தானந்த முருதபரப் பிரம நானே
தத்துவமாய்த் தனித்தபரப் பிரம நானே
வானந்தன் னிகரான பிரம நானே
வரம்பற்ற வத்துவதாம் பிரம நானே
மோனந்தன் னிலையான பரநா னென்றே
மோகமறப் பாவித்து முத்த னாவாய். (5)

சந்தமுஞ் சாந்தபரப் பிரம நானே
சகலவிலட் சணமான பிரம நானே
சிந்தைமுதற் செறியாத பிரம நானே
சின்மாத்ர வடிவான பிரம நானே
தொந்தமுறுத் துரியபரப் பிரம நானே
துரியத்து மதீதபரப் பிரம நானே
பந்தமுறுப் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (6)

சங்கற்பஞ் சற்றுமிலாப் பிரம நானே
சந்தோட விதனமிலாப் பிரம நானே
மங்குற்ற மாயையிலாப் பிரம நானே
மகதத்வ மாதியிலாப் பிரம நானே
யிங்குற்ற தெவையுமிலாப் பிரம நானே
யேகபரி பூரணமாம் பிரம நானே
பங்கற்ற பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (7)

சருவமுமாய் நிறைந்தபரப் பிரம நானே
சமமாகச் செறிந்தபரப் பிரம நானே
கருமமுதற் கலவாத பிரம நானே
காலமுதற் கெட்டாத பிரம நானே
திரிபுடியே தோன்றுமிலாப் பிரம நானே
திடசத்தா மாத்திரமாம் பிரம நானே
பரசிவமாம் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (8)

சாசுவத மானபரப் பிரம நானே
சமுசார லேசமிலாப் பிரம நானே
மாசணுவு மருவாத பிரம நானே
மகத்துக்கு மகத்தான பிரம நானே
யாசிலகண் டாகாரப் பிரம நானே
யாதிமுடி வற்றபரப் பிரம நானே
பாசமுறுப் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (9)

புராதனமாய்ப் பொருந்துபரப் பிரம நானே
பூரணமாய்ச் செறிந்தபரப் பிரம நானே
நிராமயமாய் நிறைந்தபரப் பிரம நானே
நிர்க்குணமாய் நின்றபரப் பிரம நானே
யிராப்பகலே தோன்றுமிலாப் பிரம நானே
யிருளொளிமற் றெவையுமிலாப் பிரம நானே
பாரற்பரமாம் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (10)

கற்பிதமா முபாதியிலாப் பிரம நானே
களங்கமிலா வுணர்வான பிரம நானே
தற்பதலட் சியமான பிரம நானே
துவம்பதலட் சியமான பிரம நானே
யற்பமிலா வைக்கியமாம் பிரம நானே
யகண்டார்த்த மானபரப் பிரம நானே
பற்பலவாம் பேதமிலாப் பரநா னென்றே
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (11)

சன்மயமாய் நின்றபரப் பிரம நானே
சதாநந்த மானபரப் பிரம நானே
சின்மயமாய் நின்றபரப் பிரம நானே
சிதாகாய மானபரப் பிரம நானே
தன்மயமாய் நின்றபரப் பிரம நானே
தனக்கயலோ ரணுவுமிலாப் பிரம நானே
பன்மையுறும் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (12)

சங்கமிலா வசங்கபரப் பிரம நானே
சலனமிலா வசலபரப் பிரம நானே
மங்கலுறு நிமலபரப் பிரம நானே
மாறுபடா நித்தபரப் பிரம நானே
யெங்குமுள வேகபரப் பிரம நானே
யெவையுமிலா துள்ளபரப் பிரம நானே
பங்கமுறும் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (13)

சத்தமுதற் கெட்டாத பிரம நானே
சகமெவையுங் கிட்டாத பிரம நானே
மத்தமன மருவாத பிரம நானே
மாசற்ற தெளிவான பிரம நானே
சுத்தமனத் தெளிவான பிரம நானே
சுயஞ்சோதி யொளியான பிரம நானே
பத்தமலாப் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (14)

நிராவரண மானபரப் பிரம நானே
நித்தபரி சுத்தபரப் பிரம நானே
சராசரமோ ரணுவுமிலாப் பிரம நானே
சகசீவ பரங்களிலாப் பிரம நானே
தாரதரமில் சமமான பிரம நானே
தான்றானய்த் தனித்தபரப் பிரம நானே
பராபரமாம் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (15)

நிரந்தரமாய் பாவனையே செய்யா விட்டா
னிலையற்ற மனத்தினுடை விகற்பந் தீரா
திரிந்தலையு மனத்தினுடை விகற்பந் தானே
தீராத பவமெனவே தோன்று தன்றே
பரிந்துநிதம் பாவித்து மனோவி கற்பம்
பற்றறவே தீராதோர்க் கெவ்வி தத்தாற்
பொருந்தியதன் சொரூபநிலை புரையொன் றின்றிப்
பூரணமாய்ப் புந்தியினிற் பொருந்துஞ் சொல்லாய். (16)

தன்சொரூப நிலைமருவா தவேவோ ருக்குத்
தளர்வுதரும் பவபந்தந் தவிர்வ தெங்ஙன்
னென்செயினுஞ் சொரூபநிலை யிசையா தோருக்
கீனமுறு பவபந்த மிறவா தென்றுஞ்
சஞ்சலமில் பாவனையே செய்வோ ருக்குச்
சலமனதின் விகற்பமெலாந் தவிர்வ தாலே
யஞ்சனமா மாவரண விட்சே பங்க
ளனைத்துமிலாச் சொரூபநிலை யணுகு மன்றே. (17)

ஆதலினு லநவாத மப்யா சிக்கு
மகண்டபர பாவனையான் மனோவி கற்ப
பேதமெலா மடைவாகப் பெயர்த்தெப் போதும்
பிரிவற்ற சொரூபநிலை பொருந்த வேண்டு
மோதியவிப் பாவனையும் விசா மற்றோர்க்
கொருகாலு முள்ளத்தி லுதிக்க மாட்டா
பாதகமா மவிசாரப் பகையா லன்றே
பவக்கடலில் வீழ்ந்தெவரும் பதைக்கின் றால். (18)

அறிவற்ற வவிசார மஞ்ஞா னத்துக்
காலயமா யநந்தவித வரந்தை நல்குங்
கறையற்ற ஞானத்தைக் கண்ணிற் காட்டா
கடக்கவொணுக் கற்பனையே காட்டு விக்கு
நிறைவுற்ற சொரூபத்தி னிலைக்க வொட்டா
நிகிலமகா பீதிக்கு நிகரில் வித்தாஞ்
செறிவுற்ற சங்கற்ப விகற்ப மாதி
சித்தவிகா ரங்களெலாங் கணத்திற் சேர்க்கும். (19)

பலவிதமாய்ப் பகர்ந்தென்ன வவிசா ரந்தான்
பவக்கடலில் யாவரையு மூழ்கு விக்கும்
புலமருவா வவிசார நிகரா யெங்கும்
பொருந்தியிடும் பகையில்லை யாத லாலே
நிலைமருவு மகண்டபர விசாரங் கொண்டே
நிகழ்த்தியவிவ் வவிசாரப் பகையை வென்று
சலனமிலாப் பாவனையா லகண்ட போதஞ்
சார்ந்தவனுய்ச் சன்மாத்ர சொரூப மாயாய். (20)

அகண்டபர விசாரந்தா னேதா மென்னி
லகமாரிவ் வுலகாரிங் குள்ள தேது
புகன்றபர மார்த்தமெதா மென்றிவ் வண்ணம்
பூரணமாஞ் சற்குருவைக் குறித்து சாவி
யகம்பிரமஞ் சகம்பிரம மெங்கு முள்ள
தகண்டபரப் பிரமமதே யுண்மை யென்று
தரும்பிரம நிர்ணயமே வேதாந் தத்தாற்
றவிராது செய்வதுதான் விசார மாமே. (21)

சற்குருவின் சந்நிதியி லோர்ந்த வண்ணஞ்
சாதுக்கள் சகவாசஞ் செய்தங் கங்கே
நிர்க்குணமாம் பரப்பிரம சொரூபந் தானே
நிகிலமுமா மதுவேநா மதுவே யுண்மை
யக்கரமாம் பிரமமதே வேதாந் தங்க
ளனைத்துக்கும் பொருளாகு மென்றிவ் வண்ணந்
தக்கபர நிர்ணயமே திடமாய்ச் செய்த
றளர்வையெலாந் தவிர்க்கின்ற விசார மாமே. (22)

பன்னியவா றோர்ந்தபரம் பொருளைத் தானே
பரவியதன் சங்கையெலாந் தீரும் வண்ண
மன்னியர்க ளாருமிலா வேதாந் தத்தி
லசையாம விருந்துமன தொருமை யோடே
மன்னுபரப் பிரமமிதா நாமி தாகு
மயக்கமுறு முலகிதுவா முண்மை யீதென்
றுன்னுபல யூகத்தாற் சிந்தை பண்ணி
யுரமாக வுறுதிசெயல் விசார மாமே. (23)

அறிவுற்ற விசாரந்தா னஞ்ஞா னத்தை
யதஞ்செய்யு மாந்தையெலா மடைவாய்த் தீர்க்கு
மறுவற்ற ஞானத்தை மதியிற் சேர்க்கு
மயக்கமுறு கற்பனைக ளனைத்து மாய்க்கு
நிறைவுற்ற சொரூபத்தி னிலைக்க வைக்கு
நீக்கவொணுப் பவபீதி யனைத்து நீக்குஞ்
செறிவுற்ற வாபத்தைச் சம்பத் தாக்குஞ்
சித்தவிகா ரங்களெலாஞ் சிதைக்கு மன்றே. (24)

சோதித்த பரப்பிரம மெல்லா மென்றுஞ்
சுத்தமதாம் பரப்பிரம மதுநா மென்றுஞ்
சாதித்த விசாரமிகுஞ் சாதுக் கட்கே
சாற்றுபர பாவனைதான் சார்வ தல்லாற்
றீதுற்ற தேகாதி நாமே யென்றுந்
திருசியமாஞ் சகமுதலீ துண்மை யென்றுங்
கோதுற்ற வவிசார மேலிட் டோர்க்குக்
குறைவற்ற பாவனையெவ் விதமாய்க் கூடும். (25)

ஆதலினுல் விசாரித்த தீர ருக்கே
யலைமனது பாவனையில் வசமாய் நிற்குந்
தீதணுகாப் பாவனையான் மனேவி கற்பந்
தினத்துக்குத் தினமடைவாய்த் தீருந் தீர்ந்த
போதுபரப் பிரமத்தின் சாட்சாத் காரம்
பூரணமாய்ப் பொருந்தியிடும் பின்ன வற்ருற்
கோதுமிகும் பவபந்த மனைத்து நீங்கிக்
குறைவற்ற மோட்சசுகங் கூடு மன்றே. (26)

பரமார்த்த மானபரப் பிரமத் தின்கட்
பலவிதமாய்த் தோற்றியவிச் சகசீ வாதி
விரிவான பேதமெலாம் விசாரிக் குங்கால்
விமலபரப் பிரமமலால் வேறே யன்று
சருவான்மா வானபரப் பிரம மொன்றே
சந்ததமுஞ் சலியாம லிருப்ப தாலே
திரமான பரப்பிரம மதுநா னென்றே
திடமாகப் பாவித்துத் தியக்கந் தீர்வாய். (27)

ஆவதென்று மமர்வதென்று மழிவ தென்று
மயனரியோ டரனென்று மவித்தை யென்றுஞ்
சீவனென்றுஞ் சித்தமென்றும் பந்த மென்றுஞ்
சித்திரமாஞ் சகத்தென்று மீச னென்று
மோவலுறு மாயையென்று மொன்று மில்லை
யுள்ளதெலா மகண்டபரப் பிரமந் தானும்
பாவனமாம் பரப்பிரம மதுநா னென்றே
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (28)

சுருதியென்று மிருதியென்று நூற்க ளென்றுஞ்
சூட்சுமமாம் வேதாந்த நூற்க ளென்றுங்
கருதுமிதி காசமென்றும் புராண மென்றுங்
காமிகமே முதலியவா கமங்க ளென்று
மொருமையென்று மிருமையென்று மொன்று மில்லை
யுள்ளதெலா மகண்டபரப் பிரமந் தானும்
பாவியவப் பரப்பிரம நானே யென்று
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (29)

தேகமுதற் றிருசியமே யனுன்மா வென்றுந்
திருக்குருவே நின்னுடைய வான்மா வென்று
மேகமதாம் பரப்பிரம நீயே யென்று
மெப்போது மதுதானே நானே யென்றுஞ்
சோகமுறுக் குரவனென்றுஞ் சீட னென்றுஞ்
சுத்தபர ஞானமென்றுந் தோற்ற மெல்லாம்
பாகமுறுப் பரமேயா மதுநா னென்றே
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (30)

வகுப்புற்ற பஞ்சவித மூர்த்தி யென்றும்
வகுத்தவவர் பஞ்சவித கிருத்ய மென்று
மிகப்பற்று நாகநர கங்க ளென்று
மேவியிடுங் கைலைமுத லுலக மென்றுந்
தொகுப்புற்ற சீவபர சகங்க ளென்றுந்
தோற்றியவிப் பலவிதமாந் தோற்ற மெல்லாம்
பகுப்பற்ற பரமேயா மதுநா னென்றே
பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (31)

கந்தமுதற் பலவிதமாம் புலன்க ளென்றுங்
 ககனமுதற் பஞ்சமகா பூத மென்றுந்
தொந்தமுறுங் காரியகா ரணங்க ளென்றுந்
 தொடர்புற்ற போகமென்று மோட்ச மென்று
மிந்தவிதஞ் சித்தத்தின் விகற்ப மாக
 விலங்கியவிவ் வநந்தவித பேத மெல்லாம்
பந்தமுறுப் பரமேயா மதுநா னென்றே
 பாவித்துப் பாவித்துப் பரமே யாவாய். (32)

சித்தமலாற் பிரபஞ்ச மென்று மில்லை
 சித்தந்தான் பிரபஞ்ச மெனவே தோன்றுஞ்
சித்தமலாற் சமுசார மென்று மில்லை
 சித்தந்தான் சமுசார மெனவே தோன்றுஞ்
சித்தமதைச் சோதிக்கிற் சித்தே யாகுஞ்
 சித்தான சித்தமதே சிவமாய் நிற்குஞ்
சித்தமிலச் சின்மயமாஞ் சிவநா னென்றே
 சிந்தித்துச் சிந்தித்துச் சிவமே யாவாய். (33)

மனதையலாற் சகமுதலோ ரணுவு மில்லை
 மனததுவே சகமுதலாய்த் தோன்று நிற்குஞ்
சொனமனது சங்கற்ப வடிவே யாகுஞ்
 சோதிக்கிற் சங்கற்பஞ் சித்தாய்த் தீரு
மனதினுடைச் சங்கற்பஞ் சித்தாய்த் தீரின்
 மனததுதான் சின்மயமாஞ் சிவமே யாகுஞ்
செனனமிலாச் சின்மயமாஞ் சிவநா னென்றே
 சிந்தித்துச் சிந்தித்துச் சிவமே யாவாய். (34)

சின்மயமா மென்னிடையே மனது தித்துச்
 சின்மயமா மென்னிடையே மற்றி ருந்து
சின்மயமா மென்னிடையே யடங்க லாலே
 சின்மயமா மென்னையலான் மனதே யில்லை
சின்மயமா மென்னையலான் மனதில் லாதாற்
 சின்மயமா மென்னையலா தெவையு மில்லை
சின்மயமா நானென்றுஞ் சிவமே யென்றுஞ்
 சிந்தித்துச் சிந்தித்துச் சிவமே யாவாய். (35)

சின்மயமா மென்னையலாற் சங்கற் பத்தின்
செயலான சகத்தோற்ற மெவையு மில்லை
சின்மயமா மென்னையலாற் சங்கற் பத்தின்
செயலான சீவேச ராரு மில்லை
சின்மயமா மென்னையலாற் சங்கற் பத்தின்
செயலொன்று மொருகாலு மிலவே யில்லை
சின்மயமா நானென்றுஞ் சிவமே யென்று
சிந்தித்துச் சிந்தித்துச் சிவமே யாவாய். (36)

சின்மயமா மென்னிடையே கனவிற் கண்ட
செகத்துமுத லெனக்கயலா யிலாத தேபோற்
சின்மயமா மென்னிடையே நனவிற் கண்ட
செகத்துமுத லெனக்கயலா யென்று மில்லை
சின்மயமா நான்றானே யென்று மொன்றாய்ச்
செறிந்தகில பூரணமாய்ச் சிவமாய் நின்றேன்
சின்மயமா நானாய் நின்றே னென்றே
சிந்தித்துச் சிந்தித்துச் சிவமே யாவாய். (37)

பின்னமிலாப் பரப்பிரம மெல்லா மென்றும்
பிரிவற்ற பரப்பிரம மதுநா னென்றும்
பன்னியவா றநவரத மிடைவி டாமற்
பாவித்துப் பாவித்து விகற்பந் தள்ளி
யன்னியமி லகண்டபர ஞானம் பெற்றவ்
வகண்டபர மாநந்த மநுப வித்துத்
துன்னியவிப் பவதுக்க மனைத்துந் தீர்த்துத்
துகளற்ற பரப்பிரம சொரூப மாவாய். (38)

ஓரணுவு மொருகாலு மொருவி டத்து
முணர்வுருவாம் பிரமமலா தயலே யில்லை
பூரணமாம் பரப்பிரமந் தானே யெல்லாம்
பூரணமாம் பரப்பிரமந் தானே நீயுஞ்
சாரமதாச் சாற்றியவிவ் வருத்தம் யாவுஞ்
சத்தியமே சற்றுமிதிற் சங்கை யில்லை
தீரமுறும் புத்தியினு லுரைத்த வண்ணந்
திடமாகத் தெளிவுற்றுத் தியக்கந் தீர்வாய். (39)

ஏகபரி பூரணமாம் பிரமம் யாவு
மேகபரி பூரணமாம் பிரம நானென்
றாகமொடு நித்தியமாய்ப் பாஸிக் கின்றோ
ருணர்வுருவாம் பரப்பிரம வடிவே யாவர்
பாகமுறுப் பரமசிவன் பகர்ந்த வண்ணம்
பகுப்பற்ற வகண்டார்த்த நிர்ண யத்தைச்
சோகமற நிதாகனினக் குரைத்தோ மித்தைச்
சொல்வகையே கேட்டுணர்வோர் சுகமே சார்வர். (40)

நிகழுமகா லிங்கவடி வாக வெங்கு
நிரந்தரமாய் நிறைவுற்ற பாசி வத்தை
யகமகமென் றநவரதம் பாஸிப் போரே
யகமனதின் விகற்பமெலா மடைவாய்த் தீர்ந்து
விகலமிலா வகண்டபர ஞானம் பெற்று
வேறுபடா மோட்சநிலை பெறுவ ரென்றே
யகமருவா ரிபுமுனிவ னிதாக னுக்கங்
ககண்டார்த்த நிர்ணயமே யருளிச் செய்தான். (41)

வேறு.

அகிலபூரண மானபரம்பொரு ளன்றியில்லணு வும்மயலன்றெனு,
நிகிலமுஞ்சச்சி தாநந்தமாகிய நிட்களங்கப் பரம்பொருளாமெனும்,
புகலுமப்பொரு ளுமெனும்பூரண போதமுற்றவர் முத்தரெனச்சொல
நிகழுமாநந்தத் தாண்டவமாடுநந் தேவதேவ னகண்டசொரூபமே. ()

முப்பத்திரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 32-க்கு திருவிருத்தம் 1446.

++++++++++++++++++++++++++++++++++++++

## முப்பத்துமூன்றுவது

## அகண்டான்மஞானமகிமையுரைக்கும் அத்தியாயம்.

இங்கிதுவென் றொருபொருளு மென்று மில்லை
யாவையுமே யான்மாவுக் கபின்ன மான
பங்கமுறுப் பரப்பிரம சொரூப மென்றும்
பரவியவப் பரப்பிரம நாமே யென்றுந்
துங்கமுறு மகண்டான்ம ஞானந் தன்னைத்
துகளறவே நிதாகனினக் கின்னஞ் சொல்வா
மங்களமாம் பொருளிதனை மகிழ்ந்து கேட்போர்
மறித்திந்தப் பவக்கடலின் மூழ்கா ரென்றும். (1)

அகமெனுமிப் பதத்தினுடை யிலட்சி யார்த்த
மாகுநம தருவான வான்மாத் தானே
புகலலுறும் பிரமபத விலட்சி யார்த்தப்
பொருளான பரப்பிரம சொரூப மாகும்
விகலமுறு வான்மபர வைக்யந் தானே
விளம்புமகம் பிரமாஸ்மி யாதி யான
வகிலமகா வாக்குந்தாற் பரியத் தோடே
யறிவிக்கு மகண்டார்த்த மாகு மைந்தா. (2)

ஆதலினு லதிதிடமா யைய மின்றி
யகம்பிரமம் பிரமமக மென்றிவ் வண்ணம்
பேதமுறு வுறுதியினைப் பெறுத றனே
பின்னமிலா வகண்டான்ம ஞான மாகு
மேதமிலிவ் வகண்டான்ம ஞானத் தாக்கிங்
கிணையான ஞானந்தா னெங்கு மில்லை
மாதவவிவ் வகண்டான்ம ஞானம் பெற்றோர்
மறித்தென்றும் பிறவியுறார் மகேச னுணை. (3)

அகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மாக்கைமுத லகமென்னு மயக்கந் தீர்க்கு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மகண்டபரி பூரணமாம் பிரம மாக்கு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மநந்தவித வரந்தையெலா மதஞ்செய் விக்கு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மகண்டபர மாநந்த மளிக்கு மன்றே. (4)

அகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மலைவுற்ற சித்தத்தின் றியாக மாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மலைவற்ற மனோநாச வடிவ மாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மனுதிபவ பந்தமெலாந் தொலைப்ப தாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மகண்டபர மோட்சத்தை யளிப்ப தாமே. (5)

அகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மத்யந்த வுத்தமமாம் யோக மாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மழுக்கற்ற சுயஞ்சோதி சுபாவ மாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மஞ்ஞான விருளையெலா மழிப்ப தாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மநேகவித பீதியெலா மொழிப்ப தாமே. (6)

அகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மநேகமகா பாவமெலா மழிப்ப தாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மநந்தவித வறத்துக்கு மதீத மாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மதிசயமா மங்களமே யளிப்ப தாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
மநேகவித வமங்களமுந் தொலைப்ப தாமே. (7)

அகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மதிதிடமாம் விவேகத்தாற் செனிப்ப தாகு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மாசிரியன் கருணையினாற் கிடைப்ப தாகு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மநவரதம் பழக்கத்தா லுரப்ப தாகு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மகண்டசிவன் கருணையினு னிலைப்ப தாமே. (8)

அகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மப்யாசஞ் செயச்செயவே யழுத்த மாகு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மப்யாசஞ் செயச்செயவே சுகஞ்செய் விக்கு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மப்யாசஞ் செயச்செயவே துன்பந் தீர்க்கு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
மப்யாசஞ் செயச்செயவே சகச மாமே. (9)

அகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
  மப்யாசஞ் செயச்செயவே விகற்ப நீக்கு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
  மப்யாசஞ் செயச்செயவே களங்கந் தீர்க்கு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
  மப்யாசஞ் செயச்செயவே யசல மாகு
மகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
  மப்யாசஞ் செயசெயவே சமாதி யாமே. (10)

அகம்பிரம மென்றுணரு மான்ம ஞான
  மநவரதா ப்யாசிக்கே யுரமாய் நிற்கு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
  மத்யாச மனைத்தையுமே நாசஞ் செய்யு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
  மசஞ்சலமாஞ் சித்தசெயந் தருவ தாகு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
  மயலிலகண் டாகார சுபாவ மாமே. (11)

அகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
  மகங்களெலாந் தவிர்ந்தோர்க்கே யெளிதா யெய்து
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
  மறங்களெலாங் குவிந்தோர்க்கே யினிதாய்த் தோன்று
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
  மதிசயமாம் பொருளையெலா மதிச யிக்கு
மகம்பிரம மென்றுரமா மான்ம ஞான
  மகண்டசிவ ஞானிய நு பூதி யாமே. (12)

கற்பிதமா யான்மாவிற் காண்ப தெல்லாங்
  களங்கமிலா வதிட்டான வான்மா வன்றி
யற்பமுமவ் வான்மாவுக் கயலே யில்லை
  யகண்டபரி பூரணவவ் வான்மா வாநான்
றற்பதலட் சியமான பிரம மென்றே
  தானுணரு மகண்டான்ம ஞானத் துக்கிங்
கொப்பதுவா யொன்றுமிலை மற்ற தற்கிங்
  கொப்பான தவ்வான்ம ஞானந் தானே. (13)

அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றறிதிடமா மகண்டான்ம ஞானத் துக்குத்
தரும்பயனவ் வகண்டான்ம சொரூப மான
தானன்றித் தரும்பயன்மற் றொன்று மாகா
புகழ்ந்திடுமிவ் வகண்டான்ம ஞானந் தன்னின்
பூரணமா மகிமைதனைப் புகல்வ தற்குச்
சகந்தனினும் மகேசனலால் யாவர் வல்லோர்
சருவஞ்ஞ னவனையலா தாரு முண்டோ. (14)

அகப்பிரம மென்றுரமாய் விசுவா சத்தோ
டறிவுற்ற வகண்டான்ம ஞானத் துக்குச்
சகந்தனிலே சனித்ததிலு மொப்பொன் றில்லை
சனித்தினிமேல் வருவதிலு மொப்பொன் றில்லை
யகம்பிரம மென்றுரமாய் நிச்சயித் தோர்க்
கவ்வுரமா நிச்சயமே யநந்த கோடி
மகந்தவநற் றீர்த்தமொடு தானஞ் சேவை
மற்றெவையு மிதிலணுவு மயக்க மில்லை. (15)

அகம்பிரம நிச்சயமே தேவ பூசை
யகம்பிரம நிச்சயமே தெய்வ த்யான
மகம்பிரம நிச்சயமே செப தபங்க
ளகம்பிரம நிச்சயமே யறங்கள் யாவு
மகம்பிரம நிச்சயமே யகண்ட த்யான
மகம்பிரம நிச்சயமே யகண்ட யோக
மகம்பிரம நிச்சயமே யகண்ட ஞான
மகம்பிரம நிச்சயமே யகண்ட மோட்சம். (16)

அலைமனதின் சலனத்தாற் சாட்சாத் தாக
வகண்டான்ம வநுபூதி யணுகா தாகிற்
சலமனதின் விகற்பமெலாந் தீரு மட்டுஞ்
சருவான்ம பாவனையே செய்ய வேண்டு
முலைமனது பாவனையே செய்வ தற்கு
முதவாமற் பலவிதமாய்ச் சலிக்கு மாகிற்
சலனமுறு வகண்டான்ம விடய மான
சத்தத்தை வசனத்தா லுரைக்க லாமே. (17)

வசனத்தாற் சத்தத்தை யுரைப்ப தற்கோர்
வருத்தமிலை யாதலினு லசத்த ரெல்லா
நிசவடிவின் பாவனையின் மனது நின்று
நிச்சலமா யநுபூதி நிலைக்கு மட்டும்
பிசகறவே சருவமுமே பிரம மென்றும்
பிரமமதே நானென்று நான தென்று
மசலமதா மகண்டான்ம சொரூபந் தன்னை
யறிவிக்குஞ் சத்தத்தை யுரைக்க வேண்டும். (18)

சாசுவத வநுபூதி யன்றி வாக்காற்
சருவமுமே பிரமமெனச் சாற்றி னலு
மாசறவே யயமேதங் கோடி செய்த
வறமொவ்வோர் நிமிடத்தி லடைய லாமே
மாசறவே யகம்பிரம மென்று ரைத்தான்
மகாமேரு தானபல மருவ லாமே
நேசமுடன் பிரமமக மென்று ரைத்தா
னிறைந்தபுவி தானபல நேர லாமே. (19)

பிரமமக மகம்பிரம மென்றிவ் வண்ணம்
பிரியாத நிச்சயமோ டிருப்ப தற்குச்
சருவவித வுலகத்துஞ் சாரப் பட்ட
சகலபொருட் டானமுமோ ரீடே யன்று
பிரமமக மகம்பிரம மென்றிவ் வண்ணம்
பிரியாத பாவனையோ டிருப்ப தற்கிங்
கொருசுகமு மொருகாலு மீடே யன்றங்
கொன்றியவச் சுகத்துக்கச் சுகமே யீடாம். (20)

சருவமுமே பிரமமென்று மதுநா னென்றுஞ்
சந்ததநா னதுவென்று நிச்ச யித்தவ்
வுரமருவி யிருப்பவருக் கோடி யாடு
முத்தமமாந் தீர்த்தமிலை தான மில்லை
தருமமிலை கருமமிலை பத்தி யில்லை
தனக்கயலாய்ச் செயுஞ்செயலோ ரணுவு மில்லை
பிரமமெலா மென்றுரமா மதித் திருக்கும்
பெருமையினும் பின்னைவையு மதிக முண்டோ. (21)

ஆதலினாற் கனவிலுமே பிரமத் துக்கிங்
கன்னியமா யணுவேனு முள்ள தென்னும்
பேதமுறும் புத்தியினைத் தூரத் தள்ளிப்
பிரமமெலா மதுவேநா னென்றே
சாதகமா முறுதியினைத் திடப் படுத்திச்
சந்ததமும் பாவித்துச் சலன மின்றி
யாதிமுடி வொன்றுமிலா வகண்டா கார
வநுபூதி யடைந்தந்த மயமே யாவாய். (22)

அகமென்று நித்தபரப் பிரம மானே
னகமென்றுஞ் சுத்தபரப் பிரம மானே
னகமென்றும் புத்தபரப் பிரம மானே
னகமென்று முத்தபரப் பிரம மானே
னகமென்று மசலபரப் பிரம மானே
னகமென்று மசங்கபரப் பிரம மானே
னகமென்று மகண்டபர மானே னென்றே
யநவரதம் பாவித்தம் மயமே யாவாய். (23)

அகமென்றுஞ் சன்மயமாம் பிரம மானே
னகமென்றுஞ் சாசுவதப் பிரம மானே
னகமென்றுஞ் சின்மயமாம் பிரம மானே
னகமென்றுஞ் சிதாகாரப் பிரம மானே
னகமென்று நின்மலமாம் பிரம மானே
னகமென்று நிராகாரப் பிரம மானே
னகமென்று மகண்டபர மானே னென்றே
யநவரதம் பாவித்தம் மயமே யாவாய். (24)

சகலபரி பூரணமாம் பிரம நானே
சங்கற்ப விகற்பமுறாப் பிரம நானே
துகளணுவுந் தொடராத பிரம நானே
துவிதமிலாத் தூயபரப் பிரம நானே
திகரில்சிதா காயபரப் பிரம நானே
நிரந்தரமாய் நிறைந்தபரப் பிரம நானென்
றகமருவா வகண்டபரப் பிரம நானென்
றநவரதம் பாவித்தம் மயமே யாவாய். (25)

சத்தியசிற் சுககனமாம் பிரம நானே
சலனமுறாச் சாந்தபரப் பிரம நானே
நித்தியநிர்க் குணமான பிரம நானே
நிரதிசயா நந்தபரப் பிரம நானே
சுத்தபர தத்துவமாம் பிரம நானே
சுதசித்த மானபரப் பிரம நானே
யத்துவிதா கண்டபரப் பிரம நானென்
றநவரதம் பாவித்தம் மயமே யாவாய். (26)

சமமதுவாம் பரப்பிரம மானே னானே
சங்கமிலாப் பரப்பிரம மானே னானே
மமதையுறாப் பரப்பிரம மானே னானே
மகத்தான பரப்பிரம மானே னானே
விமலமதாம் பரப்பிரம மானே னானே
விகாரமுறாப் பரப்பிரம மானே னானே
யமலமதாம் பரப்பிரம மானே னானென்
றநவரதம் பாவித்தம் மயமே யாவாய். (27)

வினாசமுறாப் பரப்பிரம மானே னானே
விபுவான பரப்பிரம மானே னானே
சனாதனமாம் பரப்பிரம மானே னானே
சத்தான பரப்பிரம மானே னானே
மனாதியிலாப் பரப்பிரம மானே னானே
மாயையிலாப் பரப்பிரம மானே னானே
யனாமயமாம் பரப்பிரம மானே னானென்
றநவரதம் பாவித்தம் மயமே யாவாய். (28)

சின்மாத்ர மானபரப் பிரமமல்லாற்
சீவனிலை யீசனிலை செகத்து மில்லை
சன்மாத்ர மானபரப் பிரமந் தானே
சந்ததமுந் தான்றானாய்த் தனித்த வத்து
நன்மாத்ர மானபரப் பிரம மீதே
நானெனவே நன்றாக நிச்ச யித்துத்
தன்மாத்ர மானபரப் பிரமந் தானாய்த்
தனித்தணுவுந் தளர்வின்றிச் சுகித் திருப்பாய். (29)

சருவமுமே யான்மாவுக் கபின்ன மான
சத்தியசிற் சுககனமாம் பிரம மென்று
மிருமையிலாப் பரப்பிரம நானே யென்றும்
யானந்தப் பரப்பிரமந் தானே யென்று
மொருமைதரும் பாவனையே செய்த தாலே
யுள்ளத்தின் விகற்பமெலா மொருங்கே தள்ளி
நிருமல்மா மகண்டான்ம போதம் பெற்று
நீநீயாய் நின்றென்றுஞ் சுகித் திருப்பாய். (30)

அகிலபரி பூரணமா மென்னி டத்தி
லயலெனவே கற்பிதமா முபாதி யெல்லாந்
திகழ்வுறவே விசாரிக்கி லெனக்கு வேருய்த்
திலமளவு மில்லையெனவே நேதி பண்ணி
யிகழ்வறவே மிஞ்சியநான் பிரம மென்றே
யிருமையிலா வகண்டான்ம போதம் பெற்றோர்
சுககனமாம் பரப்பிரம வடிவே யாவர்
சொல்லியது சத்தியமே சங்கை யில்லை. (31)

இந்தவிதம் யாவருமே யுய்யும் வண்ணம்
மிணையற்ற வகண்டான்ம ஞானந் தன்னி
னந்தமிலா மகிமைதனை யகண்ட வீச
னருளியவா நிதாகனினக் கருளிச் செய்தோந்
தொந்தமெலாந் தொலைப்பதுவா மிவ்வர்த் தத்தை
துகளற்ற மனதுடனே தொடர்ந்து கேட்போர்
பந்தமற வகண்டான்ம போதம் பெற்றுப்
பங்கமிலாப் பரப்பிரம வடிவாய் நிற்பர். (32)

தூகமதன் கோடெணவே வெறும் பொய்யான
துறக்கமுதற் றுச்சசுகத் திச்சை மேவிக்
கருமமுதற் செய்வதனுல் வீணாய்க் காலங்
கழியாமன் மறைமுடியின் கருத்தை யோர்ந்து
சிரவணமே முதலியதா லகண்ட மான
சிவவடிவை யுணர்பவரே முத்த ரென்று
நிருமலமாய் ரிபுமுனிவ னிதாக னுக்கு
நிமலான்ம ஞானத்தை நிகழ்த்தி னுல். (33)

வேறு.

இயல்பிலாத வுபாதிகள்யாவையு மில்லையில்லையென் றிவ்விதநேதி செய், தயவிலான்மப ரைக்யமறிந்திடு மான்மஞான மடைந்தவரொன்றுமே, பயமிலாப்பர மான்மசொரூபமாய்ப் பங்கமின்றி யிருப்பரெனச்சொலன், மயவிலாநந்தத் தாண்டவமாடிநம் மாசிலீச னகண்டசொரூபமே. (34)

முப்பத்துமூன்ருவது அத்தியாயம்
முற்றிற்று.
ஆக அத்தியாயம் 33-க்கு திருவிருத்தம் 1480.

---

## முப்பத்திநான்காவது

### சகலமும் பிரமமென்றும் ஆன்மாவே சகலமுமென்றுங்கூறி அகம்பிரம நிச்சயத்தின் மகிமை யுரைக்கும் அத்தியாயம்.

நிதாகநினக் கின்னமுமவ் வகண்டார்த் தத்தி
  னிர்ணயமே நிலைத்திடவிவ் வோத்திற் சொல்வா
மதாநெனவையி னத்யந்தங் குய்ய மாகு
  மதிசயமா மனைத்தினுமே யதிக மாகுஞ்
சதாநந்த கனமான வகண்டார்த் தத்தின்
  சாரத்தைச் சாற்றியவிவ் வோத்தி னுள்ள
தெதாகினுமோர் கவியேனுங் கேட்டு ணர்ந்தோ
  ரின்னலெலா மிகந்துடனே முத்த ராவர். (1)

இதுவெனவே திருசியமாய்க் காண்ப தெல்லா
  மெங்குமுள திருக்கான பிரமந் தானுந்
திகமருவாச் சித்தத்தாற் றிருசி யம்போற்
  றிகழினுமே விசாரிக்கிற் றிருக்கே யன்றி
யதுவிதுவென் றன்னியமா யணுவு மில்லை
  யறிவினிடைக் காண்பதெலா மறிவு தானே
விதம்விதமாய் விளங்கியிடுந் தரங்க மாதி
  விசாரிக்கில் வாரியலால் வேறே யுண்டோ. (2)

ஆதலினு லறிவையலா லணுவொன் றேனு
மதுவிதுவென் றன்னியமா யெங்கு மில்லை
யோதியவவ் வறிவுருவாம் பிரம மல்லா
லுலகிலுள விவகார மொன்று மில்லை
போதகன மானபரப் பிரம மல்லாற்
பொருந்தியிடுஞ் சீவபர சகத்தே யில்லை
யாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
வறிவுருவாம் பரப்பிரமந் தானே யெல்லாம். (3)

சன்மாத்ர காரியமாஞ் சகசீ வாதி
சகலமுமே சன்மாத்ரப் பிரம மல்லாற்
றன்மாத்ரப் பிரமத்துக் கயலே யன்று
தத்துவமாய் நவில்கின்றேஞ் சங்கை யில்லை
சன்மாத்ர மானபரப் பிரமந் தானே
சந்ததமு நமதுநிச சொரூப மாகுந்
தன்மாத்ர மானபரப் பிரம மீதே
தயங்குசக முதலவற்றி னிசசொ ரூபம். (4)

நிகழுமறி வானபரப் பிரம மல்லா
னீயுமில்லை நானுமில்லை யாரு மில்லை
திகழுமறி வானபரப் பிரம மல்லாற்
றேகமுதற் றிருசியமாந் திரளே யில்லை
சகசவறி வானபரப் பிரம மல்லாற்
சத்துமில்லை யசத்துமில்லை சதசத் தில்லை
பகருமறி வானபரப் பிரம மல்லாற்
பரசீவ சகங்களெனும் பகுப்பே யில்லை. (5)

துலங்கியிடு மறிவான பிரம மல்லாற்
றுவிதமில்லை யத்துவிதந் தானு மில்லை
யிலங்கியிடு மறிவான பிரம மல்லா
லிருளுமில்லை யொளியுமில்லை வெளியு மில்லை
மலங்கலவா வறிவான பிரம மல்லான்
மகத்துமில்லை யணுவுமில்லை மற்றொன் றில்லை
கலங்கலுறு வறிவான பிரம மல்லாற்
கற்பிதமாய்க் காண்கின்ற தெவையு மில்லை. (6)

உளங்கலவா வுணர்வான பிரம மல்லா
லுடலுமில்லை யுயிருமில்லை யுலகு மில்லை
களங்கமுறு வுணர்வான பிரம மல்லாற்
காரியகா ரணமாக வெவையு மில்லை
விளங்கியிடு முணர்வான பிரம மல்லால்
வேத்தியவே தனமாக வெவையு மில்லை
துளங்கியிடு முணர்வான பிரம மல்லாற்
றுவிதமெனுந் தோற்றமொரு காலு மில்லை. (7)

மாரணமி லறிவான பிரம மல்லான்
மாயையில்லை யவித்தையில்லை மற்றொன் றில்லை
சீரணமி லறிவான பிரம மல்லாற்
சீவனில்லை யீசனில்லை செகத்து மில்லை
பூரணமா மறிவான பிரம மல்லாற்
பொய்யுமில்லை மெய்யுமில்லை பிறிதொன் றில்லை
காரணமா மறிவான பிரம மல்லாற்
காரியமாய்க் காண்கின்ற தெவையு மில்லை. (8)

பேதமுறு வறிவான பிரம மல்லாற்
பேதிக்கும் பந்தமில்லை மோட்ச மில்லை
சோதிமிகு மறிவான பிரம மல்லாற்
சுகதுக்க முதலியதோ ரணுவு மில்லை
யேதமுறு வறிவான பிரம மல்லா
லில்லையென வியம்பியவிச் சொல்லு மில்லை
யாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
வறிவுருவாம் பரப்பிரமந் தானே யெல்லாம். (9)

இதுவெனவே யிலங்குவதும் பிரம ரூபம்
யானெனவே யிலங்குவதும் பிரம ரூப
மதுவெனவே யறிவதுவும் பிரம ரூப
மயலெனவே யறிவதுவும் பிரம ரூபந்
திதமெனவே தெரிவதுவும் பிரம ரூபந்
திதமலதாய்த் தெரிவதுவும் பிரம ரூப
மெதுவெனவே தெரிவதும் பிரம ரூப
மெப்போது மெல்லாமும் பிரம ரூபம் (10)

ஏகமெனத் தோற்றுவதும் பிரம ரூப
மிருமையெனத் தோற்றுவதும் பிரம ரூப
மாகமெனத் தோற்றுவதும் பிரம ரூப
மறிபவனுய்த் தோற்றுவதும் பிரம ரூபஞ்
சோகமெனத் தோற்றுவதும் பிரம ரூபஞ்
சுகமெனவே தோற்றுவதும் பிரம ரூபம்
பாகமறத் தோற்றுவதும் பிரம ரூபம்
பலவிதமாய்த் தோற்றுவதும் பிரம ரூபம். (11)

சரமசர மியாவையுமே பிரம ரூபஞ்
சங்கற்ப விகற்பமெலாம் பிரம ரூபம்
பரமபர மியாவையுமே பிரம ரூபம்
பகுதிமுதற் பகுப்பெவையும் பிரம ரூபந்
தரணிமுதற் றத்துவமும் பிரம ரூபந்
தாம்பிறரென் றெண்ணுவதும் பிரம ரூப
மிரவுபக லிருளொளியும் பிரம ரூப
மில்லையுள தென்பதெலாம் பிரம ரூபம். (12)

வேதமொடு மிருதிகளும் பிரம ரூபம்
விளம்புமிதி காசமெலாம் பிரம ரூப
மேதமுறுப் புராணமெலாம் பிரம ரூப
மியம்புபல வாகமமும் பிரம ரூப
மீதையெலா மாய்வதும் பிரம ரூப
மிசைத்தவிதன் பொருளெவையும் பிரம ரூபஞ்
சாதனமாய்ச் செய்வதும் பிரம ரூபஞ்
சாத்தியமாய்ப் பெறும்பயனும் பிரம ரூபம். (13)

சாதனசம் பத்தியுமே பிரம ரூபஞ்
சற்குருவைச் சார்வதுவும் பிரம ரூபம்
வேதமுடிச் சிரவணமும் பிரம ரூபம்
வித்தரமா மனனமுமே பிரம ரூபஞ்
சாதகமாம் பாவனையும் பிரம ரூபஞ்
சமாதியுட னநுபவமும் பிரம ரூப
மேதமிலா துறுவீடும் பிரம ரூப
மெப்போது மெல்லாமும் பிரம ரூபம். (14)

பிரமமே மாயையெனத் தோற்ற லாகும்
  பிரமமே மகேசனெனத் தோற்ற லாகும்
பிரமமே சித்தமெனத் தோற்ற லாகும்
  பிரமமே சீவனெனத் தோற்ற லாகும்
பிரமமே சகத்தெனவுந் தோற்ற லாகும்
  பிரமமே சகலமுமாய்த் தோற்ற லாகும்
பிரமலா தொருபொருளு மென்று மில்லை
  பிறங்கியிடும் பொருளெல்லாம் பிரமந் தானே. (15)

பிரமமே மும்மூர்த்தி யெனவுந் தோன்றும்
  பிரமமே மூலசிவ னெனவுந் தோன்றும்
பிரமமே யைம்பூத மெனவுந் தோன்றும்
  பிரமமே யநந்தவுல கெனவுந் தோன்றும்
பிரமமே சராசரமாய்த் தோன்ற லாகும்
  பிரமமே சகமுமாய்த் தோன்ற லாகும்
பிரமலா தொருபொருளு மென்று மில்லை
  பிறங்கியிடும் பொருளெல்லாம் பிரமந் தானே. (16)

அஞ்ஞான நிலையிலொரு பிரமந் தானே
  யநந்தவித சீவேச சகத்தாய்த் தோன்றும்
விஞ்ஞான நிலைமருவிற் சகசீ வாதி
  விரிவதுவே விமலபர வடிவாய்த் தோன்று
மஞ்ஞான நிலையிலொரு ரச்சுத் தானே
  யரவுமுதற் பலவடிவாய்த் தோன்றி னாலும்
விஞ்ஞான நிலைமருவி லவைய னைத்தும்
  விரவுமொரு ரச்சுவலால் வேறே யுண்டோ. (17)

ஆதலினால் விசாரமிலா வெறுமூ டர்க்கிங்
  ககண்டபரி பூரணமாம் பிரமந் தானே
பூதமுதற் பலபொருளாய்த் தோற்றி னாலும்
  பூரணமாய் விசாரித்த தீர ருக்குப்
பேதமெனத் தோற்றியவித் தோற்ற மெல்லாம்
  பிரிவற்ற வகண்டபரப் பிரமந் தானு
மாதவனே யிதிலிறையு மைய மில்லை
  மகேசனெமக் குரைத்ததிலு மைய முண்டோ. (18)

எப்போது மொருபொருளுஞ் சனிக்க வில்லை
யெப்போது மொருபொருளு மிருக்க வில்லை
யெப்போது மொருபொருளு மிறக்க வில்லை
யெப்போது மொருபொருளு மிலவே யில்லை
யெப்போது மெள்ளளவு மிருமை யின்றி
யேகபரி பூரணமாம் பிரமந் தானே
யெப்போது மெவ்விடத்து மிருக்கும் வத்து
வியம்பியது சத்தியமே யீச னாணை. (19)

அகண்டபரி பூரணமாம் பிரம மல்லா
லஞ்ஞான விஞ்ஞான மெவையு மில்லை
யகண்டபரி பூரணமாம் பிரம மல்லா
லத்யாச மதனீக்க மெவையு மில்லை
யகண்டபரி பூரணமாம் பிரம மல்லா
லமருசக சீவபர மெவையு மில்லை
யகண்டபரி பூரணமாம் பிரம மொன்றே
யநவரத மகண்டைக ரசமாய் நிற்கும். (20)

அகண்டபரி பூரணமாம் பிரம மல்லா
லணுவுமிலை யணுவுமிலை யணுவு மில்லை
யகண்டபரி பூரணமாம் பிரமந் தானே
யநந்தவித சீவேச சகத்த னைத்து
மகண்டபரி பூரணமாம் பிரமந் தானே
யநவரத நமதுநிச சொரூப மாகு
மகண்டபரி பூரணமாம் பிரமந் தானே
யநவரத நினதுநிச சொரூப மாமே. (21)

ஆதியிலாப் பரப்பிரம சொரூபந் தானே
யான்மாவா மவ்வான்ம சொரூபந் தானே
பேதமிலாப் பரப்பிரம சொரூப மாகும்
பிரிவறவே பேசியவிவ் வைக்யந் தானே
யோதியவே தாந்தமகா வாக்கி யங்க
ளொருமித்துத் தெரிவிக்கு மகண்டார்த் தங்கா
ணாதலினா லநவரத முமுட்சு வெல்லா
மகம்பிரம நிச்சயமே யடைய வேண்டும். (22)

அகிலமுமே பரப்பிரம மையமில்லை
யதுவேநா னனுவுமிதி லையமில்லை
நிகிலமறைப் பொருளுமிதே யையமில்லை
நிகிலாது பவமுமிதே யையமில்லை
யிகழ்வில்சிவன் சொனதுமிதே யையமில்லை
யெனதநுபூ தியுமிதுவே யையமில்லை
யகமுறவே யாதலினான் முமுட்சு வெல்லா
மகம்பிரம நிச்சயமே யடைய வேண்டும். (23)

பற்பலவாய்ப் பகர்ந்தென்ன சுருங்கச் சொல்லும்
பரமார்த்த வசனத்தைப் பரிந்து கேளாய்
கற்பிதமாய்த் தோற்றியிடுந் தோற்ற மெல்லாங்
களக்கமுறா வதிட்டானப் பிரம மன்றிச்
சொற்பமுமே யயலாக வில்லை யென்றே
சுருதியுட னாகத்தா னேதி பண்ணி
நிர்ப்பயமாய் நிலைத்தபரப் பிரமந் தானே
நிதமுமக மகமதுவென் றறிய வேண்டும். (24)

சகலமுமா மிவைவேறு நான்றான் வேறு
சற்பிரமம் வேறென்னும் பேத புத்தி
யகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மதுதானே நானென்று நான தென்றும்
வெகுதிடமா மகண்டபர நிச்ச யத்தால்
வேறறவே யெளிதாக நீங்கு மன்றி
யிகழ்வுதருங் கருமமுபா சனையொன் றாலு
மியம்பியவிப் பேதமதி யெளிதாய் நீங்கா. (25)

ஆதலினான் முமுட்சுவெலா மெளிதே யாக
வகண்டபர நிச்சயமே யடைந்த வற்று
லோதவொணா வநந்தவித பயத்துக் கங்கட்
குற்பத்தித் தானமதாம் பேத புத்தி
யீதினையெவ் விதத்திலுமே நீக்க வேண்டு
மியம்பியவிப் பேதமதி நீக்கந் தானே
பீதியிலா வபயபத நிட்டை யாகும்
பெந்தமறப் பெறுகின்ற வீடு மாமே. (26)

அகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றகம்பிரம நிச்சயமே யடைந்தோர்க் கல்லாற்
செகம்பரநா னீதெனவே வேறு வேறாய்ச்
சிறுமைதரும் பேதமதி செறிந்தோர்க் கெல்லா
மகண்டபரப் பிரமமதா யிருப்ப தான
வத்துவித மோட்சநிலை யணுகா தென்றும்
புகன்றபடி யகம்பிரம நிச்ச யத்தைப்
பொருந்தினரே பூரணமா முத்தி சார்வர். (27)

ஆன்மாவிற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மதிட்டான வான்மாவுக் கயலே யாகா
தான்மாவே யகண்டபரப் பிரம மாகு
மகண்டபரப் பிரமமதே யான்மா வாகு
மான்மாவுக் கபின்னபரப் பிரமந் தன்னை
யகம்பிரம விருத்தியினா லறிந்தப் போது
மான்மாவுக் கபின்னபரப் பிரம மாகி
யசஞ்சலமா யிருப்பதுவே யகண்ட மோட்சம். (28)

ஆன்மாவுக் கயலாக வணுவு மில்லை
யணுவுமில்லை யணுவுமில்லை யணுவு மில்லை
யான்மாவிற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மான்மாவா யான்மாவா மான்மா வேயா
மான்மாவே யகண்டசிதா காய மான
வத்துவித பரப்பிரம சொரூப மாகு
மான்மாவே யத்யந்த சாந்தமான
வகண்டபரி பூரணமாம் பிரம மாமே. (29)

ஆன்மாவே யகண்டசிவ வடிவ மாகு
மான்மாவே யருளுமுமா தேவி யாகு
மான்மாவே யயன்முதலாம் மூர்த்தி யாகு
மான்மாவே யவர்சத்தி யனைத்து மாகு
மான்மாவே யமரர்நரர் திரியக் காகு
மான்மாவே யநந்தசரா சரங்க ளாகு
மான்மாவே யணுவுமிலாத் தேக மாகு
மான்மாவே யகண்டபரப் பிரம மாமே. (30)

ஆன்மாமே சகலபரி பூன்ற மாகு
மான்மாவே சத்தியசிற் சுகமு மாகு
மான்மாவே நித்தியநிர்க் குணமு மாகு
மான்மாவே நிரந்தரநிட் களமு மாகு
மான்மாவே யத்யந்த சுத்த மாகு
மான்மாவே யமலபரா காய மாகு
மான்மாவே யத்துவித சொரூப மாகு
மான்மாவே யகண்டபரப் பிரம மாமே. (31)

ஆன்மாவே சன்மயமாம் பிரம மாகு
மான்மாவே சதாநந்தப் பிரம மாகு
மான்மாவே சின்மயமாம் பிரம மாகு
மான்மாவே சிதாநந்தப் பிரம மாகு
மான்மாவே தன்மயமாம் பிரம மாகு
மான்மாவே தனித்தபரப் பிரம மாகு
மான்மாவே நின்மலமாம் பிரம மாகு
மான்மாவே நிறைந்தபரப் பிரம மாமே. (32)

ஆன்மாவே நித்தபரப் பிரம மாகு
மான்மாவே சுத்தபரப் பிரம மாகு
மான்மாவே புத்தபரப் பிரம மாகு
மான்மாவே முத்தபரப் பிரம மாகு
மான்மாவே யசலபரப் பிரம மாகு
மான்மாவே யசங்கபரப் பிரம மாகு
மான்மாவே யமலபரப் பிரம மாகு
மான்வே யகண்டபரப் பிரம மாமே. (33)

அகண்டபரி பூரணமா மான்மா வான
வகம்பிரம மென்றுணரு ஞானத் துக்குச்
சகந்தனிலே சமமான தெதுவு மில்லை
சாற்றியவிஞ் ஞானத்துக் கதிக மேது
வகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றறிகின்ற வகண்டான்ம ஞானம் பெற்றோர்
தகும்பிரம மாத்திரமாய்த் தளர்வு தீர்ந்து
தான்றானாய்த் தனிக்கின்ற முத்தி சார்வர். (34)

அகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மதுதானே யகமென்று மகம தென்றும்
வெகுதிடமா மகம்பிரம நிச்ச யந்தான்
விமலான்ம ஞானமென விளம்ப லாகுந்
தகுமகனே யாதலினு னீயெப் போதுந்
தடையறவே யகம்பிரம நிச்ச யத்தை
மிகவுரமாய்ப் பெற்றதனுற் பந்த நீக்கி
மெய்யுணர்வா நந்தபரப் பிரம மாவாய். (35)

அகம்பிரம நிச்சயமே யான்ம ஞான
மகம்பிரம நிச்சயமே பிரம ஞான
மகம்பிரம நிச்சயமே யகண்ட ஞான
மகம்பிரம நிச்சயமே யமல ஞான
மகம்பிரம நிச்சயமே துன்பந் தீர்க்கு
மகம்பிரம நிச்சயமே யின்பஞ் சேர்க்கு
மகம்பிரம நிச்சயமே பந்தம் போக்கு
மகம்பிரம நிச்சயமே பிரம மாக்கும். (36)

அகம்பிரம நிச்சயமே யகத்தி லுள்ள
வநேகமகா பாவமெலா மடைவாய்த் தீர்க்கு
மகம்பிரம நிச்சயமே யகத்தி லுள்ள
வலகில்விகற் பங்களேயு மடைவாய்ப் போக்கு
மகம்பிரம நிச்சயமே யகத்தி லுள்ள
வநந்தவித வாதனேயு மடைவாய் நீக்கு
மகம்பிரம நிச்சயமே யகத்தி லுள்ள
வத்யாச மனைத்தையுமே யடைவாய்த் தீர்க்கும். (37)

அகம்பிரம நிச்சயமே யகத்தி லுள்ள
வஞ்ஞான சந்தேக மனைத்தும் போக்கு
மகம்பிரம நிச்சயமே யகத்தி லுள்ள
வநேகவித விபரீத தோட நீக்கு
மகம்பிரம நிச்சயமே யான்மா வின்க
ணசஞ்சலமா யமர்கின்ற சமாதி நல்கு
மகம்பிரம நிச்சயமே பதியந் தங்க
ளணுவுமிலா வபரோட்ச ஞான நல்கும். (38)

அகம்பிரம நிச்சயமே சுபாவ மான
 வகண்டபா ரூபத்தி னிலைக்க வைக்கு
மகம்பிரம நிச்சயமே யனிய மற்ற
 வபயபத நிட்டையினிற் சேர்த்து வைக்கு
மகம்பிரம நிச்சயமே சீவன் முத்தி
 யாகுமகண் டாநந்த நிலைமை நல்கு
மகம்பிரம நிச்சயமே யகண்ட மான
 வசரீர மோட்சநிலை யளிக்கு மன்றே. (39)

அகம்பிரம நிச்சயமே வேதாந் தங்க
 ளனைத்தினுமே முடிவாகப் புகல்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே சாட்சாத் தாக
 வலகில்மகா வாக்குகளு மறைசித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யாயுங் காலை
 யநேகவித வாகமமும் பகர்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யாயுங் காலை
 யநந்தவித நூற்களுமே புகல்சித் தாந்தம். (40)

அகம்பிரம நிச்சயமே யுபநி டங்க
 ளாகுமவை யறிவித்த பரசித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யாயுங் காலை
 யநேகவித மிருதிகளும் பகர்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யாயுங் காலை
 யநந்தவிதி காசமுமே புகல்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யாயுங் காலை
 யகிலபுரா ணங்களுமே பகர்சித் தாந்தம். (41)

அகம்பிரம நிச்சயமே யனைத்துங் கண்ட
 வகிலசகன் குருகளுஞ் சிவன்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யகண்ட போத
 மருளியிடு மம்பிகையின் றிடசித் தாந்த
மகம்பிரம நிச்சயமே விநாய காதி
 யானசிவன் றனயருடை நிகழ்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யகண்ட ஞான
 மடைந்தசிவ பத்தர்களின் றிகழ்சித் தாந்தம். (42)

அகம்பிரம நிச்சயமே யரன்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யரிசித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யயன்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யினன்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே சுரர்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே முனிசித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யென்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே பரர்சித் தாந்தம். (43)

அகம்பிரம நிச்சயமே யாசா ஞானே
ரகிலருமே யறிவிக்குத் திடசித் தாந்த
மகம்பிரம நிச்சயமே சீட ராஞே
ரகிலருமே யறிகின்ற பரசித் தாந்த
மகம்பிரம நிச்சயமே யகண்ட போத
மடைந்தவர்க ளெல்லோர்க்குந் திகழ்சித் தாந்த
மகம்பிரம நிச்சயமே சித்தாந் தங்க
ளனைத்திற்கு மேலாக நிகழ்சித் தாந்தம். (44)

அகம்பிரம நிச்சயமே மகத்தாங் கங்கை
யகம்பிரம நிச்சயமே மகத்தாந் தீர்த்த
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தான
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் தன்ம
மகம்பிரம நிச்சயமே மகத்தாம் பூசை
யகம்பிரம நிச்சயமே மகத்தா மந்த்ர
மகம்பிரம நிச்சயமே மகத்தாந் த்யான
மகம்பிரம நிச்சயமே மகத்தா நிட்டை. (45)

அகம்பிரம நிச்சயமே மகத்தாம் யோக
மகம்பிரம நிச்சயமே மனத்தி ஞச
மகம்பிரம நிச்சயமே சித்தத் த்யாக
மகம்பிரம நிச்சயமே சகலத் த்யாக
மகம்பிரம நிச்சயமே சுவாநு பூதி
யகம்பிரம நிச்சயமே சுத்த ஞான
மகம்பிரம நிச்சயமே சீவன் முத்தி
யகம்பிரம நிச்சயமே விதேக முத்தி. (46

அகம்பிரம நிச்சயமே யடைந்தோர்க் கல்லா
லன்னியருக் கான்மநிலை யமைவ தில்லை
யகம்பிரம நிச்சயமே யடைந்தோர்க் கல்லா
லன்னியருக் கனுபவந் தொலைவ தில்லை
யகம்பிரம நிச்சயமே யடைந்தோர்க் கல்லா
லன்னியருக் கரந்தையெலா நசிப்ப தில்லை
யகம்பிரம நிச்சயமே யடைந்தோர்க் கல்லா
லன்னியருக் ககண்டசுகங் கிடைப்ப தில்லை. (47)

அகம்பிரம நிச்சயமே திடமாய்ப் பெற்றோர்க்
ககண்டபர வான்மநிலை யமைவ தாகு
மகம்பிரம நிச்சயமே திடமாய்ப் பெற்றோர்க்
கனுபவ பந்தமெலாந் தொலைவ தாகு
மகம்பிரம நிச்சயமே திடமாய்ப் பெற்றோர்க்
கநந்தவித வரந்தையெலா நசிப்ப தாகு
மகம்பிரம நிச்சயமே திடமாய்ப் பெற்றோர்க்
ககண்டபர மாநந்தங் கிடைப்ப தாமே. (48)

ஆதலினு லகம்பிரம நிச்ச யத்துக்
கன்னியமா முபாயமெலாந் தூரத் தள்ளி
பேதமறே விகற்பமெலாந் தீரு மட்டும்
பிரியமுட னநவரத மிடைவி டாமற்
சாதகமா மகம்பிரம நிச்ச யத்தைச்
சலியாது முமுட்சுவெலாம் பழக வேண்டு
மீதையலான் மோட்சநிலை பெறுவ தற்கிங்
கெளிதான வுபாயந்தா னெவையு மில்லை. (49)

பரமான வன்புடனே பாசி வத்தைப்
பாங்காக வாராதித் தருள்பெற் றோர்க்கே
யுரமான வகம்பிரம நிச்ச யந்தா
னூனமற வுள்ளத்தி லுதியா நிற்குந்
திரமான வகம்பிரம நிச்ச யத்தைத்
தியக்கமறச் செறிந்தவரே முத்த ராவர்
வரமான பரமசிவ பதந்தன் னூணை
வகுத்ததிலோ ரையமிலை வாய்மை தானே. (50)

அருள்வடிவாம் பரமசிவன் கருணை யாலே
யகிலர்க்கு மிதமாக வருளிச் செய்த
நிருமலமா மகண்டபர நிச்சயத்தை
நிதாகநினக் கிவ்வண்ணம் நிகழ்த்தி னானே
மருவமிக வரிதான விவ்வர்த் தத்தை
மாசற்ற மனதுடனே கேட்டு ணர்ந்தோ
ரொருவடிவாம் பரப்பிரம சொரூப மாவ
ரோதியதி லையமில்லை யுண்மை தானே. (51)

பரமசிவன் கருணையினு லருளிச் செய்த
பரிசாக ரிபுமுனிவ னிதாக னுக்கிங்
கிருமையிலா வகண்டார்த்த நிர்ண யத்தை
யிதமாகத் தெரிவித்தா னெனவே கந்த
னுரியகுண மேலான சைகீ ஷவ்யற்
குத்தமமா மிப்பொருளை யுரைத்தா னென்றே
சருவமுமே சங்கையற வறிந்த சூதன்
சகலமகா முனிவர்க்குஞ் சாற்றி னானல். (52)

வேறு.

சிற்பரந்தனிற் கற்பிதமியாவுமே சிறிதுமில்லையி லையெனநேதிசெய் தற்பத தற்பமற்றற மிஞ்சியசிற்பர மகமதாமக மப்பரமேயெனுந், தற்பத த்தொ டகம்பதவைக்கியந் தன்னினிண்ணய மிங்குரைசெய்திட னிர்ப்பயாநந்தத்தாண்டவமாடுநந் நிகரிலீச னகண்டசொரூபமே. (53)

முப்பத்தினுன்காவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் 30-க்கு திருவிருத்தம் 1533.

---

# முப்பத்தைந்தாவது

## அத்துவிதநிச்சயஞானத்தி லான்மாவிலமர்கின்ற சமாதி யுரைக்கும் அத்தியாயம்.

---

சகலவதிட் டானபரப் பிரம மன்றிச்
சகத்தோற்றஞ் சற்றேனு மில்லை யென்று
மகிலமுமே சத்தியசிற் சுகமாய் நின்ற
வான்மாவுக் கபின்னபரப் பிரம மென்றும்
வெகுதிடமா முறுதியுட னகண்டான் மாவில்
வேறறவே நிற்பதுவா நிட்டை தன்னை
நிகிலசக ளுயகனும் பரேசன் முன்ன
நிகழ்த்தியவா நிதாகனுக் கிங்குச் சொல்வாம். (1)

அருவுருமா மான்மாவுக் கபின்ன மான
வகண்டைக ரசவடிவாம் பிரமத் தின்கட்
பிரிவெனவே தோற்றியிடு நாம ரூப
பேதமெலாம் விசாரிக்கிற் பிறிதே யில்லை
சருவமுமே சாந்தபரப் பிரம மென்றுஞ்
சலனமிலா வப்பிரம நானே யென்று
நிருமலமா முறுதியினா லனைத்துந் தள்ளி
நின்னுடைய நிசவடிவி னிலைத்து நிற்பாய். (2)

சித்தமுதற் றோற்றியிடுந் தோற்ற மெல்லாஞ்
சின்மயமாம் பிரமமலா திலவே யில்லை
புத்திமுதற் றோற்றியிடுந் தோற்ற மெல்லாம்
பூரணமாம் பிரமமலா திலவே யில்லை
யெத்துவிதத் தோற்றமுமே பிரம மென்று
மேகபரி பூரணமா மதுநா னென்று
மத்துவித வுறுதியினா லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மா லமர்ந்து நிற்பாய். (3)

இருளென்று மொளியென்று மிதர மென்று
மிதுவென்று மதுவென்று நீநா னென்று
மருளென்றுந் தெருளென்று மாயை யென்று
மனதென்று மனோமயமாம் விகார மென்று
முருவென்று மருவென்று மொன்று மில்லை
யுள்ளதெலாம் பரமென்று மதுநா னென்று
மருளொன்று முறுதியினா லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (4)

ஈசனென்று மிவன்செயலாஞ் சகத்தி தென்றும்
யானிங்கோர் சீவனென்றுஞ் சனிப்போ னென்றும்
பாசமதாற் பெத்தனென்றும் பதைப்போ னென்றும்
பாலனென்றும் விருத்தனென்று நசிப்போ னென்றும்
பேசுமனோ மயக்கங்க ளிலவே யில்லை
பின்னமிலாப் பிரமமொடா மதுநா னென்றே
யாசணுகா வுறுதியினா லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (5)

சிவனென்று மரியென்றும் விரிஞ்ச னென்றுஞ்
சிருட்டியென்றுந் திதியென்று நாச மென்றுந்
தவமென்றுஞ் செபமென்றுந் தீர்த்த மென்றுந்
தானமென்றுந் தெய்வமென்றுஞ் சேவை யென்றுங்
கவருற்ற மயக்கங்க ளொன்று மில்லை
களங்கமிலாப் பிரமமெலா மதுநா னென்றே
யவமற்ற வுறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (6)

விதம்விதமாய் வேதத்தால் விதித்த தென்றும்
விரிவுறவே நூற்களினால் விதித்த தென்றும்
மதமதமாய் மதிக்கின்ற பொருளீ தென்று
மாயைமுத லுளதென்று மில்லை யென்று
மிதுமுதலா மயக்கங்க ளெவையு மில்லை
யேகபரப் பிரமமெலா மதுநா னென்றே
யதிதிடமா முறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (7)

இல்லையென்று முள்ளதென்று மிருமை யென்று
மேகமென்று மநேகமென்று மெல்லா மென்றுந்
தொல்லையென்றும் புதுமையென்று மண்மை யென்றுந்
தூரமென்றுந் துக்கசுக முதலீ தென்றுஞ்
சொல்லியவிம் மயக்கமெலாஞ் சுத்தப் பொய்யே
சுகனமாம் பிரமமெலா மதுநா னென்றே
யல்லலிலா வுறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (8)

நனவுகனுச் சுழுத்தியென்றுந் துரிய மென்று
நாடியிடுந் தூலமுதற் றேக மென்றும்
பனுவியிடு மவையினபி மானி யென்றும்
பலவிதமாம் வியட்டியென்றுஞ் சமட்டி யென்று
மனதினுடை மயக்கமெலாஞ் சுத்தப் பொய்யே
மகத்தான பிரமமெலா மதுநா னென்றே
யனகதிட வுறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (9)

வெகுவிதமாம் பாவமென்று மறங்க ளென்றும்
விசித்திரமாம் விதியென்று நிடேத மென்றுஞ்
சகுணவுபா சனையென்றும் பத்தி யென்றுஞ்
சகுணத்தின் ஞானமென்றுஞ் சதசத் தென்றும்
பகருமஞ்ஞ மயக்கங்க ளொன்று மில்லை
பங்கமிலாப் பிரமமெலா மதுநா னென்றே
யகமருவு முறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (10)

நிருமலமாஞ் சொரூபத்தின் றியான மென்று
நிர்க்குணமாஞ் சொரூபத்தின் ஞான மென்று
மிருமையினு லுறுகின்ற பந்த மென்று
மேகமதா யிருக்கின்ற மோட்ச மென்றுஞ்
சருவவித விகற்பமுமே சற்று மில்லை
சலனமிலாப் பிரமமெலா மதுநா னென்றே
யரியதிட வுறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (11)

சத்துடனே யசத்தினுடை விசார மென்றுஞ்
சாமுடனே யசாத்தின் விசார மென்றுஞ்
சித்துடனே யசித்தினுடை விசார மென்றுஞ்
சிறுமையுடன் பெருமையதன் விசார மென்று
மித்துவித விகற்பமெலா மென்று மில்லை
யேகபரப் பிரமமெலா மதுநா னென்றே
யத்துவித வுறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (12)

குணமுடனே யகுணத்தின் விசார மென்றுங்
கூடியவான் மானுன்ம விசார மென்றுந்
துணையுடனே யத்துவித விசார மென்றுந்
துக்கசுக முதலியதின் விசார மென்று
மெணுமனதின் விகற்பமெலா மிலவே யில்லை
யிருமையுறுப் பிரமமெலா மதுநா னென்றே
யணுகியிடு முறுதியினு லனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (13)

சகமெவையு மத்யந்த மசத்தே யென்றுஞ்
சலனமிலாப் பரமொன்றே சத்தா மென்று
மகில்முமே யத்யந்த மசத்தே யென்று
மான்மாவே யநவரதஞ் சத்தா மென்று
மிகழ்வுபெறு வான்மாவே பிரம மென்று
மிருமையுறுப் பிரமமதே யான்மா வென்று
மகமருவிவ் வுறுதியுமே தூரத் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (14)

பலவிதமா மந்திரமுந் தூரத் தள்ளிப்
பஞ்சமகா வக்கரமுந் தூரத் தள்ளி
யிலகியவட் டாக்கரமுந் தூரத் தள்ளி
யிவையோதுங் குரவரையுந் தூரத் தள்ளி
திலைமருவா வசனமெலாந் தூரத் தள்ளி
நிகழ்த்தியிடா மவுனமுமே தூரத் தள்ளி
யலைமனதின் விகற்பங்க ளனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (15)

சாரமுட னசாரமுமே தூரத் தள்ளிச்
சத்துடனே யசத்தையுமே தூரத் தள்ளித்
தீரமுட னதீரமுமே தூரத் தள்ளித்
திரிகுணமோ டறுகுணமுந் தூரத் தள்ளிக்
காரணகா ரியமெவையுந் தூரத் தள்ளிக்
கற்பிதமாய்க் காண்பதெலாந் தூரத் தள்ளி
யாரணமே முதலியதா மனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (16)

கூடியிடும் பொருணினைவுந் தூரத் தள்ளிக்
கூடாத பொருணினைவுந் தூரத் தள்ளி
நாடியிடும் பொருணினைவுந் தூரத் தள்ளி
நாடாத பொருணினைவுந் தூரத் தள்ளிப்
பாடியிடும் பாநினைவுந் தூரத் தள்ளிப்
பகுப்புற்ற விகநினைவுந் தூரத் தள்ளி
யாடியிடு முளத்தினினை வனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (17)

காமமொடு கோபமுத லனைத்துந் தள்ளிக்
கருவமுட னிடம்பமுத லனைத்துந் தள்ளித்
தோமருவு மோகமுத லனைத்துந் தள்ளித்
துவிதமொடத் துவிதமுத லனைத்துந் தள்ளி
நாமமொடு வுருவமுத லனைத்துந் தள்ளி
நாம்பரமென் றிவைமுதலா மனைத்துந் தள்ளி
யாமலவென் றறிவுற்ற தனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (18)

மோகமனம் புந்தியகங் காரஞ் சித்த
முயலுமுயி ருடல்கருவி புலன்கண் மாயை
பாகமுறுஞ் சீவபர சகங்க ளென்னும்
பலவிதமா முபாதியுமே நேதி பண்ணி
யேகமதாந் தற்பதமோ டகம்ப தத்தி
னியல்பான வைக்கியநன் கறிந்தே யத்தா
லாகுமஞ்ஞெ விகற்பங்க ளனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (19)

ஆன்மாவிற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மான்மாவுக் கயலாக வில்லை யென்று
மான்மாவே யகண்டபரப் பிரம மென்று
மகண்டபரப் பிரமமதே யான்மா வென்று
மான்மாவுக் கபின்னபரப் பிரமந் தானே
யகமென்று மதிதிடமா யறிந்தே யத்தா
லான்மாவுக் கயலான தனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (20)

நிரந்தரமா மறிவான வென்னி டத்தி
னிகிலமுமே கற்பிதமாய்த் தோற்ற லாலே
பொருந்தியவக் கற்பிதமாந் தோற்ற மெல்லா
பூரணமா மறிவான வகமே யென்றும்
விரிந்தவறி வானவகம் பிரம மென்றும்
வேறற்ற வபேதபர ஞானத் தாலே
யருந்தவனே பேதமதி யனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (21)

மருபுவியிற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மருபுவியே யாகின்ற நீதியே போற்
கருதுமதிட் டானமதா மென்னி டத்திற்
கற்பிதமாய்க் காண்பதெலா மகமே யென்றும்
பிரிவுபெறா வவ்வகமே பிரம மென்றும்
பின்னமிலா வபேதபர ஞானத் தாலே
யரியவனே பேதமதி யனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (22)

என்னிடமாய்க் கனவினிடைக் காண்ப தெல்லா
மெனக்கயலே யில்லாத நீதி யேபோ
லென்னிடமாய் நனவினிடைக் காண்ப தெல்லா
மெனக்கயலா யெப்போது மிலவே யில்லை
யன்னியமே யிலாதவகம் பிரம மென்றே
யயலற்ற வபேதபர ஞானத் தாலே
யன்னியமாம் பேதமதி யனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (23)

சத்தியமாய்ச் சகத்துமுத லிருக்கு மாகிற்
சலனமறச் சுழுத்தியிலு மிருக்க வேண்டு
மித்தனையுஞ் சுழுத்தியினி லிலாமை யாலே
யிவையாவுங் கனவெனவே மித்தை யென்னு
நித்தியமாய் நின்றவகம் பிரம மென்னு
நிருமலமா மபேதபர ஞானத் தாலே
யத்திரமாம் பேதமதி யனைத்துந் தள்ளி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (24)

மனதினுடை விருத்தியுதிப் பதற்கு முன்னு
மற்றந்த விருத்திநசித் திட்ட பின்னுந்
தினையளவு மில்லாத சகசீ வாதி
தியங்குமனோ விருத்தியினுன் மத்தி யத்திற்
கனமதுவா யிருப்பதெனத் தோற்றி னாலுங்
களங்கமறச் சோதிக்கி லில்லை யென்றே
யனியமெலா மத்யந்த நேதி பண்ணி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (25)

நித்திரையின் மனதுமில்லை சகசீ வாதி
நினைவுமில்லை நிகழ்கனவின் மனது முண்டு
வித்தாமாஞ் சகத்துமுத னினைவு முண்டு
விளம்பியவிவ் வன்னுவய வெதிரே கத்தாற்
சித்தமய மாகினவிச் சகசீ வாதி
சிறிதேனுஞ் சோதிக்கி லில்லை யென்றே
யத்திரமா நினைவையெலா நேதி பண்ணி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (26)

மனதுமில்லை மனோமயமாம் விகார மில்லை
மனதுமுதற் கேதுவெனு மாயை யில்லை
நனவுமில்லை கனவுமில்லை துயிலு மில்லை
நாமமில்லை ரூபமில்லை நானீ யில்லை
பினுமெவையு மெப்போது மில்லை யென்றே
பேதமெலாம் விசாரத்தா னேதி பண்ணி
யனியமிலா வகண்டபர வடிவே யாகி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (27)

சர்ப்பமுதற் கற்பிதமிங் காயுங் காலை
சகசவதிட் டானமதா மிரச்சு வன்றிச்
சொற்பமுமே வேறிலதா நீதியே போற்
சுத்தமதிட் டானமதா மென்னை யன்றிக்
கற்பிதமா மெப்பொருளு மில்லை யென்றே
களங்கமுறு வூகத்தா னேதி பண்ணி
யற்பமிலா வகண்டபர வடிவே யாகி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (28)

கடமடமென் றுணர்வுற்ற வுபாதி நீக்கிற்
கடவிண்ணு மடவிண்ணு மொன்றே போல
மடமைமுதற் சீவபர வுபாதி நீக்கின்
மாசற்ற சீவபர மிரண்டு மொன்றென்
றிடமருவு மூகத்தாற் பாசீ வைக்ய
வியல்புதனை யிருமையற வறிந்தே யத்தா
லடருமகண் டாகார சொரூப மாகி
யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (29)

சோயமெனச் சொல்லியிடும் வாக்கி யத்திற்
சோதித்து விருத்தாம்ச நீக்கும் போதங்
காயசக சைக்கியமே யறியு மர்த்த
மவ்விதமே தத்வமசி வாக்கி யத்து
மேயமதாம் விருத்தாம்ச மனைத்து நீக்கி
யியல்பான வைக்கியமே யறிந்தே யத்தா
லாயமனோ பேதமெலா மிழந்தெப் போது
மசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற்பாய். (30)

கற்பிதமாஞ் சீவபர வுபாதி யெல்லாங்
களங்கமற விசாரித்து நேதி செய்து
தற்பத லட்சியமான பிரம ரூபந்
துவம்பத லட்சியமான நானே யென்னு
நிர்ப்பயமா யகண்டார்த்த போதம் பெற்று
நீக்கவொணுப் பவபந்த மனைத்து நீக்கி
யற்பமிலா வகண்டார்த்த வடிவே யாகி
யத்வைத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (31)

செகம்பரனா னீயெனவே வேறு வேருய்ச்
செப்பியிடும் பேதங்கள் சிறிது மில்லை
தகும்பிரமந் தனக்கயலாய் நானு மில்லை
தற்பிரமந் தானுமெனக் கயலா யில்லை
புகன்றதெலா மகண்டபரப் பிரம மென்னும்
பூரணமா மப்பிரம நானே யென்னு
மகண்டபர ஞானத்தா லனைத்துந் தள்ளி
யநவாத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (32)

சத்தியசிற் சுககனமாம் பிரம நானே
சதசத்துக் கப்பாலாம் பிரம நானே
நித்தியநிட் களமான பிரம நானே
நிரந்தரமாய் நிறைந்தபரப் பிரம நானே
சுத்தவறி வானபரப் பிரம நானே
சுயஞ்சோதி யானபரப் பிரம நானென்
றத்துவித ஞானத்தா லனைத்துந் தள்ளி
யத்வைத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (33)

நசுவரமாந் தேகமிலாப் பிரம நானே
  நாநாவா மவத்தை யிலாப் பிரம நானே
விசுவன்முதல் வியட்டியிலாப் பிரம நானே
  விராட்டுமுதற் சமட்டியிலாப் பிரம நானே
பசுபதிபா சங்களிலாப் பிரம நானே
  பரமபர மெவையுமிலாப் பிரம நானென்
றசுகமிலா ஞானத்தா லனைத்துந் தள்ளி
  யநவரத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (34)

தொந்தமுறுந் துரியபரப் பிரம நானே
  துரியத்து மதீதபரப் பிரம நானே
சந்தமுஞ் சலனமிலாப் பிரம நானே
  சாந்தத்துஞ் சாந்தபரப் பிரம நானே
பந்தமுடன் மோட்சமிலாப் பிரம நானே
  பரவுசிதா காயபரப் பிரம நானென்
றந்தமிலா ஞானத்தா லனைத்துந் தள்ளி
  யநவரத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (35)

நாசமிலா நித்தபரப் பிரம நானே
  நழுவாத சித்தபரப் பிரம நானே
மாசணுகாச் சுத்தபரப் பிரம நானே
  மகத்தான புத்தபரப் பிரம நானே
பாசமிலா முத்தபரப் பிரம நானே
  பரிச்சேத ரகிதபரப் பிரம நானென்
றாசணுகா ஞானத்தா லனைத்துந் தள்ளி
  யநவரத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (36)

தேகமுத லானென்னுந் துவித விர்த்தி
  திகழ்சாட்சி நானென்னுஞ் சாட்சி விர்த்தி
யேகபர நானென்னு மகண்ட விர்த்தி
  யிம்மூன்று விருத்திகளி லிரண்டைத் தள்ளிப்
பாகமுறு வகண்டபர விருத்தி யொன்றாற்
  பகுப்பற்ற பரப்பிரம ஞானம் பெற்றிவ்
வாகமுதற் பவபந்த மனைத்து நீக்கி
  யநவரத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (37)

பூரகரே சகமுதலா மியோகந் தள்ளிப்
புரிகின்ற கருமமுபா சனையுந் தள்ளிச்
சாரமிலாச் சகலவித மதமுந் தள்ளிச்
சற்பிரம பாவனையைச் செய்தே யத்தாற்
பூரணமாம் பரப்பிரம போதம் பெற்றுப்
பொய்யான பவபாச மனைத்து நீக்கி
யாரியவவ் வகண்டபர வடிவே யாகி
யநவரத மான்மாவி லமர்ந்து நிற்பாய். (38)

தூலமுதற் றேகமெலாம் பிரம ரூபந்
துவிதமெனத் தெரிவதெலாம் பிரம ரூபங்
காலமொடு தேசமெலாம் பிரம ரூபங்
காண்கின்ற வத்துவெலாம் பிரம ரூப
மூலமதாம் பரப்பிரம மதுநா னென்றே
முடிவான ஞானத்தா லனைத்துந் தள்ளி
யாலயமாம் பரப்பிரமா பின்ன மான
வகண்டான்ம மாத்திரமா யமர்ந்து நிற்பாய். (39)

சீவபர சகமுதலாந் தோற்ற மெல்லாஞ்
சின்மாத்ர மானபரப் பிரம மென்றும்
பாவனமா மப்பிரம நானே யென்றும்
பகுப்பற்ற நானந்தப் பிரம மென்றும்
மோவலுருப் பாவனையா லகண்ட போத
முற்றதனாற் பேதமதி யனைத்துந் தள்ளி
யாவலறப் பரப்பிரமா பின்ன மான
வகண்டான்ம மாத்திரமா யமர்ந்து நிற்பாய். (40)

அகிலமுமே பரப்பிரம மைய மில்லை
யதுவேநா மணுவுமிதி லைய மில்லை
சகலசகன் னுயகனும் பரேச னுணை
சாற்றியது சத்தியமே சங்கை யில்லை
தகுமகனே யாதலினு லென்று மெல்லாந்
தற்பிரமந் தானென்று மதுநா னென்றும்
வெகுதிடமா யறிந்ததனு லனைத்துந் தள்ளி
விமலான்ம மாத்திரமாய் வெறிதி ருப்பாய். (41)

சேத்தியமாய்ச் செறிவுற்ற தோற்றம் யாவுஞ்
சின்மாத்ர மானபர சிவமே யென்றும்
வேத்தியமோ ரணுவுமிலாச் சிவநா னென்றும்
வேறற்ற நானந்தச் சிவமே யென்றுஞ்
சாத்தியமாம் பாவனையா லகண்ட போதஞ்
சார்ந்ததனாற் சமுசார பாச நீக்கி
நேத்திரமாம் பரமசிவா பின்ன மான
நினதான்ம மாத்திரமாய் நிலைத்து நிற்பாய். (42)

இந்தவித மகண்டான்ம நிட்டை தன்னை
யெமதீச னியம்பியவா றிசைக்க லானே
னைந்தவிதை யிசைத்தவண மொருகா லேனு
மாசறவே கேட்டாலும் படிப்புற் றாலு
மந்தமிலா மோட்சநிலை கிடைப்ப தாகு
மநவரதங் கேட்போரும் படிப்போர் தாமும்
பந்தமிலாப் பரமான மோட்சந் தன்னைப்
பற்றுவதிற் சற்றேனு மைய முண்டோ. (43)

அறிவுற்ற வநந்தவித நாம ரூப
மனைத்துக்கு மதிட்டான வடிவே யாக
நிறைவுற்ற வகண்டபர சிவரூ பத்தை
நிகழ்வுறவே விசாரித்துத் தியானிப் போரே
கறையற்ற வகண்டான்ம நிட்டை பெற்றுக்
கடக்கவொணும் பவக்கடலைக் கடப்ப ரன்றி
மறுவுற்ற மற்றவொரு செய்கை யாலு
மற்றெவரு மிக்கடலைக் கடவா ரென்றும். (44)

ஆதலினு லான்மாவுக் கபின்ன மான
வகண்டைக ரசவடிவாம் பரசி வத்தைப்
பேதமற நன்ருக விசாரஞ் செய்து
பின்னமிலாப் பரமசிவ நாமே யென்று
சாதகமாம் பாவனையைச் செய்தே யத்தாற்
சலனமிலா வகண்டான்ம நிட்டை பெற்றே
யேதமிகு பவக்கடலை முமுட்சு வெல்லா
மெமதீசன் திருவருளாற் கடக்க வேண்டும். (45)

சகலசகன் ஞயகனும் பரேசன் முன்னஞ்
சாற்றியவா ரிபுமுனிவ னிதாக னுக்கங்
ககமுறவே யகண்டான்ம நிட்டை தன்னை
யருள்செய்தா னென்றெவையு மறிந்த கந்த
னிகழ்வனுவு மிசையாத சைகீ ஷவ்யற்
கீனமிலா விப்பொருளை யிசைத்தா னென்றே
யகிலமுமே யடைவாக வறிந்த சூத
னநந்தமகா முனிவர்க்கு மருள்செய் தானால். (46)

வேறு.

அகிலபூரண மாகினவத்துவே யன்றியெப்பொரு ளும்மிலையென்னவு, மிகழ்வில்வத்துவ தேயகமென்னவு மெய்துமைக்கிய ஞானபலத்தினு, லகமிலங்கும் விகற்பமனைத்தும்விட் டான்மநிட்டையை யிங்குப்பகர்ந்திடல், புகழுமாநந்தத் தாண்டவமாடுநம் பூரணேச னகண்டசொரூபமே. (47)

முப்பத்தைந்தாவது அத்தியாயம் முற்றிற்று
ஆக அத்தியாயம் 25-க்கு திருவிருத்தம் 1580.

++++++++++++++++++++++++++++++++++++++++

## முப்பத்தாறுவது

### அகண்ட பரபாவனையான் மனோநாசஞ்செய்யென்றும் அகம்பிரமபாவனையால் அஞ்ஞானநிசிக்குமென்றும் உரைக்கும் அத்தியாயம்

எல்லாமு மேகபரப் பிரம மென்று
மிருமையிலா வப்பிரம நானே யென்று
நில்லாத மனதுநிலை நிற்கும் வண்ண
நிமலபர பாவனையே மீண்டுஞ் சொல்வாங்
கல்லாத கல்வியெலாங் கற்ற போதுங்
கலக்கமற மனதுநிலை நில்லா தாகிற்
பொல்லாத பவதுக்க மொருகா லத்தும்
போகாது புகன்றதிலோ ரைய மில்லை. (1)

சத்தியசிற் சுககனமாய்ச் சாந்த மாகிச்
சகலபரி பூரணமாய்ச் சலன மின்றி
நித்தநிரா மயமாகி நிருவி கற்ப
நிராவரண நிட்கிரிய சுபாவ மான
சுத்தபரப் பிரமமலா தணுவு மில்லை
சொற்பொருளாய்க் காண்பதெலாம் பரமே யென்று
மத்துவித பரப்பிரம மதுநா னென்று
மதிதிடமாம் பாவனையான் மனதை வெல்வாய். (2)

நீக்கமிலாச் சத்தாகி நிகழுஞ் சித்தாய்
நிரதிசயா னந்தகன வடிவ மாகித்
தாக்குமொரு பற்றுமிலா வசங்க மாகித்
தான்றானாய்த் தனித்தபரப் பிரம மல்லா
தாக்கைமுத லொருபொருளு மென்று மில்லை
யகிலமுமே யகண்டபரப் [illegible] மென்று
ருக்குமமா [illegible] நானே யென்று [illegible]
சுத்தபர பாவ[illegible] மன[illegible] வெல்வாய். (3)



நிருமலமாய் நிட்க[illegible]ருவி[illegible] சேப
நிரஞ்சனமாய் நிராகார சொரூப மாகி
நிருபமமாய் நிர்க்குணமாய் நிமலான் மாவாய்
நிரந்தரமாய் நிறைந்தபரப் பிரம மல்லா
தொருபொருளு மொருகாலு மில்லை யென்று
முள்ளதெலா மகண்டபரப் பிரம மென்று
மிருமையுறு வப்பிரம நானே யென்று
மேகபர பாவனையான் மனதை வெல்வாய். (4)

மனதுமுத லனைத்துக்கு மதீத மாகி
மாயைமக தாதிக்கு மதீத மாகி
நனவுமுத லவத்தைக்கு மதீத மாகி
நாமமுரு வெவைகட்கு மதீத மான
வனகபரப் பிரமமலா தணுவு மில்லை
யகிலமுமே யகண்டபரப் பிரம மென்றுங்
கனவறிவா மப்பிரம நானே யென்றுங்
கலங்காத பாவனையான் மனதை வெல்வாய். (5)

பாவனமாய்ப் பரசிவமாய்ப் பரமான் மாவாய்
பராற்பரமாய்ப் பரிபூன்ற சொரூப மாகிக்
கேவலமாய்க் கிலேசமிலாச் சுபாவ மாகிக்
கெம்பீர மானபரப் பிரம மல்லான்
மேவுபொரு ளணுவுமிலை யென்று மெல்லா
மெய்யுணர்வா னந்தபரப் பிரம மென்று
மோவலுறு வப்பிரம நானே யென்று
மொழியாத பாவனையான் மனதை வெல்வாய். (6)

சகலத்தின் சான்ருன பிரம நானே
சகலவிலட் சணமான பிரம நானே
நிகிலத்தும் வியாபகமாம் பிரம நானே
நித்தபரி சுத்தபரப் பிரம நானே
மிகமுத்த மானபரப் பிரம நானே
மெய்யுணர்வா நந்தகனப் பிரம நானே
யகிலத்து மதீதபரப் பிரம நானென்
றகண்டபர பாவனையான் மனதை வெல்வாய். (7)

சித்தமுதற் சிறிதுமிலாப் பிரம நானே
சின்மயமாய்ச் செறிந்தபரப் பிரம நானே
புத்திமுத லெவையுமிலாப் பிரம நானே
பூரணமாய்ப் பொருந்துபரப் பிரம நானே
யித்துவித மிறையுமிலாப் பிரம நானே
யேகபரி பூரணமாம் பிரம நானே
யத்துவித மானபரப் பிரம நானென்
றகண்டபர பாவனையான் மனதை வெல்வாய். (8)

வித்தமுதற் கெட்டாத பிரம நானே
வேறணுவுங் கிட்டாத பிரம நானே
சத்தமுதற் ககோசரமாம் பிரம நானே
சதசத்துக் கப்பாலாம் பிரம நானே
சுத்தசித்ா காயபரப் பிரம நானே
சுயஞ்சோதி சுபாவபரப் பிரம நானே
யத்தமுரு வமலபரப் பிரம நானென்
றகண்டபர பாவனையான் மனதை வெல்வாய். (9)

தூலமுத லொட்டாத பிரம நானே
துகளணுவும் பற்ருத பிரம நானே
காலமுதற் கெட்டாத பிரம நானே
கருத்துமுதற் சுட்டாத பிரம நானே
சாலவுப சாந்தபரப் பிரம நானே
சமுசார லேசமிலாப் பிரம நானே
யாலயமி லமலபரப் பிரம நானென்
றகண்டபர பாவனையான் மனதை வெல்வாய். (10)

ஆதிமுடி வற்றபரப் பிரம நானே
யசரீர மானபரப் பிரம நானே
சாதிகுல மற்றபரப் பிரம நானே
சட்பாவ விகாரமிலாப் பிரம நானே
போதகன மானபரப் பிரம நானே
பூரணபூ ரணமான பிரம நானே
யேதமுறு வகண்டபரப் பிரம நானென்
றேகபர பாவனையான் மனதை வெல்வாய். (11)

பழுதற்ற பரசிவமாம் பிரம நானே
பவபாச லேசமிலாப் பிரம நானே
யழிவற்ற வறிவுருவாம் பிரம நானே
யான்மாவுக் கபின்னபரப் பிரம நானே
மொழியற்ற மோனபரப் பிரம நானே
மோகமுறு மூலபரப் பிரம நானே
யிழிவற்ற வகண்டபரப் பிரம நானென்
றேகபர பாவனையான் மனதை வெல்வாய். (12)

பூதமொடு பௌதிகமும் பிரம ரூபம்
புவனமொடு பொருள்களெலாம் பிரம ரூபஞ்
சாதமுறுஞ் சகமெவையும் பிரம ரூபஞ்
சனியாத சகமெவையும் பிரம ரூபம்
பேதமெனத் தெரிவதெலாம் பிரம ரூபம்
பிரமாண்ட கோடியெலாம் பிரம ரூபம்
மாதவவப் பரப்பிரம நானே யென்று
மயக்கமறப் பாவித்தே மனதை வெல்வாய். (13)

சங்கரனு மம்பிகையும் பிரம ரூபஞ்
சண்முகனும் விநாயகனும் பிரம ரூபந்
துங்கமுறு சிவகணமும் பிரம ரூபந்
தூயசிவ பத்தர்களும் பிரம ரூபம்
பங்கமுறுச் சத்தியெலாம் பிரம ரூபம்
பதிபாச பசுக்களெலாம் பிரம ரூப
மங்கனுரு வப்பிரம நானே யென்று
மயக்கமறப் பாவித்தே மனதை வெல்வாய். (14)

அரனரியு மயன்வடிவும் பிரம ரூப
மவர்மருவுஞ் சத்திகளும் பிரம ரூபஞ்
சுராசுரர் நரர்களுமே பிரம ரூபஞ்
சுழல்கின்ற திரியக்கும் பிரம ரூபஞ்
சருவசரா சரசகமும் பிரம ரூபஞ்
சகலசகத் தீசனுமே பிரம ரூப
மருண்மருவா வப்பிரம நானே யென்று
மயக்கமறப் பாவித்தே மனதை வெல்வாய். (15)

தொகுத்தாருந் தூலமுதற் பிரம ரூபந்
துவிதமொடத் துவிதமெலாம் பிரம ரூப
மிகத்தானு மன்னியரும் பிரம ரூப
மெய்யுடனே பொய்யெவையும் பிரம ரூபஞ்
சகத்தாதி தோற்றமெலாம் பிரம ரூபஞ்
சடாசடமாய்த் தெரிவதெலாம் பிரம ரூப
மகத்தான வப்பிரம நானே யென்று
மயக்கமறப் பாவித்தே மனதை வெல்வாய். (16)

ஞானகன வடிவாகும் பிரம ரூப
ஞாலமிலாப் பொருளாகும் பிரம ரூபம்
வானமென வடிவிலதாம் பிரம ரூபம்
வரையற்ற வத்துவதாம் பிரம ரூப
மீனமிலா வின்புருவாம் பிரம ரூப
மேகபரி பூரணமாம் பிரம ரூப
மானமுறு வப்பிரம நானே யென்று
மகிழ்வுடனே பாவித்து மனது வெல்வாய். (17)

நிறைவுக்கு நிறைவாகும் பிரம ரூப
நிகிலபரி பூரணமாம் பிரம ரூப
மறிவுக்கு மறிவாகும் பிரம ரூப
மகண்டைக ரசமாகும் பிரம ரூபங்
குறைவற்ற பொருளாகும் பிரம ரூபங்
குணாதீத வடிவாகும் பிரம ரூப
மறுவற்ற வப்பிரம நானே யென்று
மகிழ்வுடனே பாவித்து மனதை வெல்வாய். (18)

சத்தியசிற் சுககனமாம் பிரம ரூபஞ்
சாசுவதப் பொருளாகும் பிரம ரூப
நித்தியநிர்க் குணமாகும் பிரம ரூப
நிரஞ்சனநிட் களமாகும் பிரம ரூபஞ்
சுத்தசிதா காயபரப் பிரம ரூபஞ்
சுருதிமுடிப் பொருளாகும் பிரம ரூபம்
புத்திரவப் பரப்பிரம நானே யென்று
பூரணமாம் பாவனையான் மனதை வெல்வாய். (19)

காரணகா ரணமாகும் பிரம ரூபங்
களங்கமிலாப் பொருளாகும் பிரம ரூபம்
பூரணபூ ரணமாகும் பிரம ரூபம்
புரையற்ற பொருளாகும் பிரம ரூபஞ்
சீரணமில் சின்மயமாம் பிரம ரூபஞ்
சின்னமிலாப் பொருளாகும் பிரம ரூப
மாரணமி லப்பிரம நானே யென்று
மாறாத பாவனையான் மனதை வெல்வாய். (20)

கேவலகே வலமாகும் பிரம ரூபங்
கெம்பீர வடிவாகும் பிரம ரூபம்
பாவனபா வனமாகும் பிரம ரூபம்
பராற்பரமாம் பொருளாகும் பிரம ரூபஞ்
சீவபர சகமிலதாம் பிரம ரூபஞ்
சின்மாத்ர வடிவாகும் பிரம ரூப
மோவவுரு வப்பிரம நானே யென்றிங்
கொழியாத பாவனையான் மனதை வெல்வாய். (21)

ஏகபர சத்தாகும் பிரம ரூப
மெங்குமுள பொருளாகும் பிரம ரூப
மாகமிலா வறிவாகும் பிரம ரூப
மான்மாவுக் கபின்னமதாம் பிரம ரூபஞ்
சோகமிலாச் சுகமாகும் பிரம ரூபம்
சுயஞ்சோதி வடிவாகும் பிரம ரூபம்
பாகமுரு வப்பிரம நானே யென்றும்
பரப்பிரம பாவனையான் மனதை வெல்வாய். (22)

சுத்தசிதா காயமதா நிட்ப்ர பஞ்ச
சொரூபத்திற் பிரபஞ்ச மென்று மில்லை
யித்துவிதப் பிரபஞ்சம் பரமார்த் தத்தி
லிறையளவு மிலதேனும் விவகா ரத்திற்
சித்தினுடை விவர்த்தமதாஞ் சித்தந் தானே
செறிகின்ற பிரபஞ்ச மெனவே தோன்றும்
புத்திரவச் சித்தத்தைப் புகன்ற வண்ணம்
பூரணமாம் பாவனையா னைசஞ் செய்வாய். (23)

பங்கற்ற பரப்பிரம சொரூப மொன்றே
பரமார்த்த தசையிலுள வத்து வேறு
மங்குற்ற வநந்தவித சத்திக் கெல்லா
மாதார மாகவொரு மாயா சத்தி
தங்குற்ற ததனுலச் சொரூபந் தானே
தயங்கியவிச் சித்தமென விவர்த்த மாகும்
பொங்குற்ற சித்தமதே யநந்த கோடி
புவனமுதற் பொய்வடிவாய்த் தோன்று மன்றே. (24)

இருமையிலாச் சுழுத்தியினி லேக மாக
விருக்கின்ற வான்மாவே தன்னி டத்தின்
மருவியிடுஞ் சத்தியினாற் கனவின் கண்ணே
மனமுதலாய்த் தோற்றியிடு நீதி யேபோ
லொருவடிவா யுள்ளபரப் பிரமந் தானே
யொன்றியதன் சத்தியினாற் சித்தம் போலாய்ச்
சருவசக சீவபா வடிவ மாகச்
சஞ்சலமாம் விவகார தசையிற் றோன்றும். (25)

தன்னுடைய சத்தியினா லிரச்சு வொன்றே
தயங்காவு முதலிபதாய்க் காண்ப தேபோற்
றுன்னியதன் சத்தியினாற் பிரம மொன்றே
துவிதமென விவர்த்தித்துத் தோன்றி னாலு
மன்னுமதிட் டானபரப் பிரமந் தன்னை
மாசறவே விசாரித்துக் காணும் போது
பின்னமென தோற்றியவித் தோற்ற மெல்லாம்
பேதமிலாப் பரப்பிரம வடிவே யாகும். (26)

அரவுமுதற் பலவிதமாய்த் தோற்றி னாலு
மதிட்டான விரச்சுவினை யாய்த் தறிந்தான்
மருள்வடிவா மரவுமுத லனைத்து மந்த
மாசற்ற விரச்சுவடி வாவதே போல்
விரவுசக முதலியவாய்த் தோற்றி னாலும்
விமலவதிட் டானபரப் பிரமந் தன்னை
யருமையுட னன்றாக வாய்ந் தறிந்தா
லவையாவு மகண்டபரப் பிரம மாமே. (27)

அநவரத மடைவாக வாய்ந்த போது
மஞ்ஞிபவ வாதனையா லகண்ட போத
மனதினிடைப் பேதமற மருவா தாகின்
மயக்கமுறும் பேதமதி மாயு மட்டு
மனிசமெலாம் பிரமமதா மதுவே நானு
மகமந்தப் பிரமமெனு மகண்டா காரந்
தனையறியும் பாவனையைச் செய்தே யத்தாற்
றடையான பேதமதி தவிர்க்க வேண்டும். (28)

பேதமதி பொருந்தியிடுஞ் சித்தந் தானே
பிறவிமுதற் றுயர்செய்யும் பந்த நல்கு
மேதமுறும் பேதமதி யிறந்த சித்த
மின்னலெலாந் தீர்த்துடனே மோட்ச நல்கு
மாதலினு லகம்பிரம மகமெல் லாமென்
றகம்பிரம பாவனையே யனிசஞ் செய்யிற்
வாதகமாம் பேதமதி யனைத்து நீக்கி
வழுவற்ற சித்தத்தான் முத்தி சார்வாய். (29)

அகப்பிரமம் பிரமமாக மகமெல் லாமென்
றகம்பிரம பாவனையே யனிசஞ் செய்யிற்
செகம்பரனு னீதெனவே வேறு வேறாய்ச்
செறிகின்ற பேதமதி யனைத்துந் தீரும்
புகன்றவிதம் பேதமதி யனைத்துந் தீரிற்
பூரணமாம் பரப்பிரம போதந் தோன்றி
யகண்டபர வடிவாக வமர்வ தான
வத்துவித மோட்சநிலை யடைய லாமே. (30)

அகம்பிரம பாவனையாற் காமங் கோப
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா லுலோப மோக
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மதமா ணங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா லிடம்பங் கர்வ
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை. (31)

அகம்பிரம பாவனையான் மனோதோ டங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மகா பாவங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மனோ துக்கங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மகா பயங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை. (32)

அகம்பிரம பாவனையாற் றீர்த்தந் தான
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் றெய்வஞ் சேவை
யகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் றியானம் பூசை
யகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் செப தபங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை (33)

அகம்பிரம பாவனையான் மந்த்ர தந்த்ர
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மருவுங் கன்ம
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மறைக ளூற்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மனோ மயக்க
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை. (34)

அகம்பிரம பாவனையாற் புண்ணி யங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் பொருந்து லோக
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் றுவந்து வங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் றுவிதத் தோற்ற
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை. (35)

அகம்பிரம பாவனையா விதர சத்தை
யகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா விதர பான
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா விதர வின்ப
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா விதர சங்க
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை. (36)

அகம்பிரம பாவனையான் மாயா மோக
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையான் மனக் கிரந்தி
யகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா லாதி வ்யாதி
யகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா லத்தி யாச
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை. (37)

அகம்பிரம பாவனையாற் சாக்கி ராதி
யவத்தையெலா நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையா லனாதி யான
வஞ்ஞான நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் பவபா சங்க
ளகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை
யகம்பிரம பாவனையாற் பாவா பாவ
மகிலமுமே நசிக்குமிதி லைய மில்லை. (38)

அகம்பிரம பாவனையா லகண்ட ஞான
மசஞ்சலமா யடைந்திடலா மைய மில்லை
யகம்பிரம பாவனையா லனாதி துக்க
மனைத்தையுமே யழித்திடலா மைய மில்லை
யகம்பிரம பாவனையா லகண்டா நந்த
மநவரத மடைந்திடலா மைய மில்லை
யகம்பிரம பாவனையா லகண்ட மோட்ச
மடைவதனி லனுவேனு மைய மில்லை. (39)

ஆதலினா லநவரத மிடைவி டாம
லகம்பிரம பாவனையைச் செய்தே யத்தாற்
பேதமதி யனைத்தையுமே யிழந்தெப் போதும்
பிரிவற்ற பரப்பிரம சொரூப மாவா
யோதியதி லனுவேனு மைய மில்லை
யுத்தமமாஞ் சிவனாணை யுண்மை சொன்னே
மீதகில சாத்திரமு மிசைக்கு மர்த்த
மெமதீச னியம்பியது மிவ்வர்த் தந்தான். (40)

ஆன்மாவுக் கயலான வனான்மா வென்று
மணுவுமிலை யணுவுமிலை யணுவு மில்லை
யான்மாவுக் கயலாகப் பிரம மில்லை
யப்பிரமந் தனக்கயலா யான்மா வில்லை
யான்மாவே யகண்டபரப் பிரம மாகு
மகண்டபரப் பிரமமதே யான்மா வாகு
மான்மாவா மகம்பிரம மெனனு ஞான
மடைந்ததனா லகண்டபரப் பிரம மாவாய். (41)

சகலபரி பூரணமாம் பிரம மல்லாற்
சகமுதலோ ரணுவேனு மில்லை யென்று
மகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மதுதானே யகமென்று மகம தென்று
நிகழ்வுறவே நித்தியமாய்ப் பழகப் பட்ட
நிமலபர பாவனையான் மனதை வென்று
மிகவுரமா மகண்டபர போதம் பெற்று
மெய்யுணர்வா நந்தபரப் பிரம மாவாய். (42)

இந்தவித மியாவர்க்கு மிதமே யாக
வேகபரி பூரணமாம் வத்துத் தானே
சுந்தரமாஞ் சிவவடிவா யெழுந்தெ மக்குச்
சொல்லியவிவ் வகண்டபர நிர்ண யத்தை
மைந்தனினக் குரைசெய்தோ முரைத்த வண்ண
மாசற்ற விப்பொருளை யொருகா லேனும்
புந்தியுறத் திடமாகக் கேட்டு ணர்ந்தோர்
பூரணமாம் பரப்பிரம வடிவே யாவர். (43)

சருவமுமே பிரமமெனப் போதித் தாலுஞ்
சந்ததமுஞ் சுருதிமுடிப் படிப்புற் றாலும்
பரமசிவன் கருணையிலா வெறுமூ டர்க்குப்
பலகால வாதனையான் மீண்டு மீண்டு
மிருமையென விதயத்திற் றெரிவ தன்றி
யாவையுமே பிரமமெனத் தெரிவ தில்லை
யரியவனே யாதலினுன் முமுட்சு வெல்லா
மகண்டபர சிவகருணை யடைய வேண்டும். (44)

அமலமதாம் பூதியுட னுருத்தி ராக்க
வாரமுதற் சிவசின்ன மணித லானு
நிமலமகா விங்கத்தி னியம மோடு
நிறைவேற்று நித்தசிவார்ச் சனையி னாலும்
விமலமதாம் வேறறவே பழகப் பட்ட
வியாபகமாம் பரமசிவத் தியானத் தாலுஞ்
சமமதுவாம் பரமசிவ கருணை யுண்டாய்ச்
சருவமுமே பிரமமெனத் தெரிவ தாமே. (45)

திவ்வியமங் களவடிவா யெழுந்த வீசன்
றிகழ்த்தியவா ரிபுமுனிவ னிதாக னுக்குச்
செவ்வியதாய்ச் செப்பியவிந் நிர்ண யத்தைச்
சிரத்தையுடன் வினவியிடுஞ் சைகீ ஷவ்யற்
கவ்விதமே சர்வஞ்ஞ ஞன கந்த
னத்யந்த கருணையினு லறைந்தா னென்றே
தவ்வியிடா மனதுடைய முனிவர்க் கெல்லாந்
தகைமைமிகுஞ் சூதமுனி சாற்றி னுனல். (46)

வேறு.

என்றுமெங்குள வெப்பொருள்யாவையு மேகமாம்பர மப்பரநா னென்னுந், துன்றுமைக்கிய பாவனைசெய்ததாற் றுகண்மனத்தின் விகற்பமனைத்துமே, வென்றுபூரண போதம்பொருந்திஞல் விமல முத்தி யடைந்திடலாமெனன், மன்றுளாநந்தத் தாண்டவமாடுநம் மாசிலீசனகண்டசொரூபமே. (47)

முப்பத்தாறுவது அத்தியாயம்
முற்றிற்று.
ஆக அத்தியாயம் 36-க்கு திருவிருத்தம் 1627.

—∞—

††††††††††††††††††‡††††††††††††††††††††††††††

## முப்பத்தேழாவது

அகண்டபரநிச்சயத்தினு லத்துவிதப்பிரம மாவாயென் றுரைக்கும் அத்தியாயம்.

சகலமறை முடிவுக்கு முடிவே யாகிச்
சாரங்க ளனைத்திற்குஞ் சார மான
மிகவுமகா ரகசியமா மிண்ண யத்தை
மெய்யுணர்வா நந்தவடி வான வீச
னகிலவித சீவர்க்கு மிதமே யாக
வத்யந்த கருணையினு லறைந்த வண்ண
நிகழ்வுறவே நிதாகநினக் கிங்குச் சொல்வா
நிச்சலமா மனதுடனே நின்று கேளாய். (1)

சருவமுமே பரப்பிரம சொரூப மன்றிச்
சருவமெனப் பிறிதாகச் சிறிது மில்லை
யிருமையுருப் பிரமமதே நஞ்சொ ரூப
மிதிலிறையு மையமிலை யீச ளுணை
யரியவனே யாதலினு லனைத்து மென்று
மகண்டபரப் பிரமமென்று மதுநா னென்றும்
பிரிவுபெறுப் பூரணமா நிச்ச யத்தைப்
பெற்றதனு லெப்போதுஞ் சுகித் திருப்பாய். (2)

அகம்பிரம மென்றுரமா நிச்ச யித்தே
யாக்கைமுத லகமென்னு நினைவைத் தள்ளு
சகம்பிரம மென்றுரமா நிச்ச யித்தே
சகத்தெல்லா முண்மையெனு நினைவைத் தள்ளு
வகம்பிரமஞ் சகம்பிரம மென்றிவ் வண்ண
மநவரதந் தொடர்பாக நிச்ச யிக்கிற்
செகம்பரநா னென்னுமய றுயில்வோன் கையிற்
செறிகின்ற மலரெனவே சுயமாய் நீங்கும். (3)

வானமுதற் பூதமில்லை புவன மில்லை
வருக்கின்ற வீசனில்லை சீவ னில்லை
நானுமில்லை நீயுமில்லை யாரு மில்லை
நாமமில்லை ரூபமில்லை யென்று மெல்லா
ஞானகன மானபரப் பிரம மென்றே
ஞானநிலை பெறுமளவு நிச்ச யித்தாற்
பானமுறும் பேதமயல் பாத வத்தின்
பக்குவத்தின் பலமெனவே சுயமாய் நீங்கும். (4)

தேகமில்லை பொறிகளில்லை யுயிர்க ளில்லை
தியங்கியிடு மதியுமில்லை மனது மில்லை
யாகுமகங் காரமில்லை சித்த மில்லை
யதன்மூலாஞ் ஞானமில்லை யனைத்து மென்று
மேகபரப் பிரமமெனு நிச்ச யத்தை
யெப்போதுந் தப்பாம லப்யா சிக்கிற்
பாகமுறும் பலவிதமாய் பேத புந்தி
பானுவின்முன் னிருளெனவே சுயமாய் நீங்கும். (5)

நனவுமில்லை கனவுமில்லை துயிலு மில்லை
நாடியிடுந் துரியமில்லை நாநா வில்லை
பினமருவும் வியட்டியில்லை சமட்டி யில்லை
பிரிவுற்ற பிரபஞ்ச மெவையு மில்லை
யநவரத மகிலமுமே பிரம மென்று
மகண்டபர நிச்சயமிங் கடைந்தே யத்தான்
மனதினுடை விகற்பமெலா மாற்றி யென்று
மகத்தான பரப்பிரம மாத்ர மாவாய். (6)

அகிலவதிட் டானபரப் பிரமத் தின்க
ணயலெனவே கற்பிதமாய்க் காண்ப தெல்லாந்
திகழுமதிட் டானபரப் பிரம மன்றித்
தினையளவு மன்னியமா யில்லை யென்றே
தகைமைமிகும் விசாரணையா னேதி பண்ணித்
தற்பிரம நிச்சயமிங் கடைந்தே யத்தா
லிகழுமனோ விகற்பங்க ளனைத்து நீக்கி
யெப்போதும் பரப்பிரம மாத்ர மாவாய். (7)

அயலெனவே யறிவுற்ற துவித மென்று
மவைநீக்கு மகண்டபர விசார மென்று
மயல்வடிவாஞ் சருவமுமே மித்தை யென்று
மற்றவையு மத்யந்த மசத்தே யென்றும்
பயிலலுறு மிவ்விதமாந் தோற்ற மெல்லாம்
பகுப்பற்ற பரப்பிரம சொரூப மென்றே
யயலணுகா வகண்டபர நிச்ச யத்தா
லத்துவித பரப்பிரம மாத்ர மாவாய். (8)

நித்தமுட னனித்தத்தின் விவேக மென்று
நிகழ்கின்ற குணதோட விவேக மென்றும்
பத்தனொடு முத்தனுடை விவேக மென்றும்
பாவமுட னபாவத்தின் விவேக மென்றும்
வித்தாரமாய் விளங்கியவித் தோற்ற மெல்லாம்
விபுவான விமலபர சொரூப மென்றே
யத்தமுறு வகண்டபர நிச்ச யத்தா
லத்துவித பரப்பிரம மாத்ர மாவாய். (9)

சுருதிமுதற் பலவிதமா நூற்க ளென்றுஞ்
சொல்லியிடு மாசிரியர் சீட ரென்றுந்
திருசியமாந் தேகமுத ஞானே யென்றுந்
திருக்குருவாம் ப ப்பிரம நானே யென்றும்
பிரிவுறவே பிறங்கியவித் தோற்ற மெல்லாம்
பின்னமிலாப் பரப்பிரம சொரூப மென்றே
மருவியவிவ் வகண்டபர நிச்ச யத்தான்
மகத்தான பரப்பிரம மாத்ர மாவாய். (10)

அகமனிசம் பாசமுறுஞ் சீவ னென்று
மகமனிசம் பந்தமிலாப் பிரம மென்றும்
விகலமுறுஞ் சகமுதலீ துண்மை யென்றும்
விசித்திரமாஞ் சகமுதலீ தில்லை யென்றும்
வெகுவிதமாய் விளங்கியவித் தோற்ற மெல்லாம்
வியாபகமாம் பரப்பிரம சொரூப மென்றே
மகிமைமிகு மகண்டபர நிச்ச யத்தான்
மகத்தான பரப்பிரம மாத்ர மாவாய் (11)

தினந்தவிரா தியற்றிடுங் கரும மென்றுந்
திடமாகச் செய்கின்ற பத்தி யென்று
மனந்தவித தெய்வவுபா சனைக ளென்று
மத்தெய்வ மூர்த்திகளின் பூசை யென்று
மனந்தனிலே மருவியவித் தோற்ற மெல்லா
மகத்தான பரப்பிரம சொரூப மென்றே
கனந்தவிரா வகண்டபர நிச்சயத்தாற்
களங்கமிலாப் பரப்பிரம மாத்ர மாவாய். (12)

எனதெனதென் றெண்ணியிடு மமதை யென்று
மியானியானென் றெண்ணியிடு மகந்தை யென்றும்
பினமருவும் வாகியமாம் விடய மென்றும்
பிரிவுற்ற வாந்தரமாம் விடய மென்று
மினமருவு மிவ்விதமாந் தோற்ற மெல்லா
மிருமையிலாப் பரப்பிரம சொரூப மென்றே
கனமருவு மகண்டபர நிச்சயத்தாற்
களங்கமிலாப் பரப்பிரம மாத்ர மாவாய். (13)

வானமுதற் பஞ்சமகா பூத மென்றும்
வசனமுதற் பஞ்சவித விடய மென்று
மானியுறு மநந்தவித வுலக மென்று
மளவற்ற பிரமாண்ட கோடி யென்று
மூனமுறு மிவ்விதமாந் தோற்ற மெல்லா
முணர்வுருவாம் பரப்பிரம சொரூப மென்றே
யீனமுறு வகண்டபர நிச்சயத்தா
லிருமையிலாப் பரப்பிரம மாத்ர மாவாய். (14)

செறிகின்ற விதிமுதலோம் மூர்த்தி யென்றுஞ்
சிருட்டிமுத லைந்துவித கிருத்யமென்று
மறிகின்ற சுரர்முனிவர் நரர்க ளென்று
மலைவுற்ற வநேகவித கிரியைக் கென்று
நெறிகொண்ட விவ்விதமாந் தோற்ற மெல்லா
நிருமலமாம் பரப்பிரம சொரூப மென்றே
யிறுகின்ற வகண்டபர நிச்சயத்தா
லிருமையிலாப் பரப்பிரம மாத்ர மாவாய். (15)

தடமருவுந் தீர்த்தங்க டலங்க ளென்றுந்
தயங்கியிடுந் தேவதைகள் சேவை யென்று
மடவிகிரி வாரிதிக ணதிக ளென்று
மங்குற்ற வநேகவித வுயிர்க ளென்றுந்
தொடர்புறுமித் துவிதத்தின் தோற்ற மெல்லாந்
துகளற்ற பரப்பிரம சொரூப மென்றே
யிடமருவு மகண்டபா நிச்ச யத்தா
லிருமையிலாப் பரப்பிரம மாத்ர மாவாய். (16)

புத்தியுடை நிச்சயமாம் விருத்தி யென்றும்
புகன்மனதின் சந்தேக விருத்தி யென்றும்
வித்தரமாய்ச் சிந்தைசெயும் விருத்தி யென்றும்
விதம்விதமா மபிமான விருத்தி யென்றுஞ்
சித்திரமாய்த் தோற்றியவிவ் விருத்தி யெல்லாஞ்
சின்மயமாம் பரப்பிரம சொரூப மென்றே
சுத்தமுறு மகண்டபா நிச்ச யத்தாற்
சுககனமாம் பரப்பிரம மாத்ர மாவாய். (17)

தேகமென்றும் பொறிகளென்று முயிர்க ளென்றுந்
தியங்கியிடு மனமென்றும் புத்தியென்று
மாகுமகங் காரமென்றுஞ் சித்த மென்று
மனத்திற்குங் காரணமா மவித்தை யென்றும்
பாகமுறத் தோற்றியவித் தோற்ற மெல்லாம்
பகுப்பற்ற பரப்பிரம சொரூப மென்றே
சோகமுறு வகண்டபா நிச்ச யத்தாற்
சுககனமாம் பரப்பிரம மாத்ர மாவாய். (18)

மாயையென்று மவித்தை யென்றுஞ் சீவனென்று
மகேசனென்றுஞ் சீவபர வகுப்பீ தென்று
மாயபல வியட்டியென்றுஞ் சமட்டி யென்று
மதிகமென்றுந் தாழ்வீதென்றுஞ் சமமீ தென்று
மேயமுறு மிவ்விதமாந் தோற்ற மெல்லா
மிலங்கியசிற் பரப்பிரம சொரூப மென்றே
நேயமுறு மகண்டபா நிச்ச யத்தா
னிருமலமாம் பரப்பிரம மாத்ர மாவாய். (19)

தூலமதாம் வியட்டியென்றுஞ் சமட்டி யென்றுஞ்
சூக்குமமாம் வியட்டியென்றுஞ் சமட்டி யென்று
மூலமதாம் வியட்டியென்றுஞ் சமட்டி யென்று
முழுவதென்றுங் கிஞ்சிலென்று மிசிர மென்றுங்
கோலமுறு மிவ்விதமாந் தோற்ற மெல்லாங்
குலவியசிற் பரப்பிரம சொரூப மென்றே
சாலவுறு மகண்டபர நிச்சயத்தாற்
சன்மயமாம் பரப்பிரம மாத்ர மாவாய். (20)

விசுவன்முதல் வியட்டியபி மானி யென்றும்
விராட்டுமுதற் சமட்டியபி மானி யென்றும்
பசுபதிகள் பலவிதமாம் பாச மென்றும்
பகுப்புற்ற சீவபர சகங்க ளென்று
நசுவரமாய்த் தோற்றியவித் தோற்ற மெல்லா
நாசமுறுப் பரப்பிரம சொரூப மென்றே
யசுபமுறு வகண்டபர நிச்சயத்தா
லசஞ்சலமாம் பரப்பிரம மாத்ர மாவாய். (21)

வகுப்புற்ற வாச்சியமாம் பொருளீ தென்றும்
வழுவற்ற விலட்சியமாம் பொருளீ தென்றும்
பகுப்பற்ற வைக்கியமாம் பொருளீ தென்றும்
பகரவொணாச் சுபாவமாம் பொருளீ தென்றுந்
தொகுப்புற்ற விவ்விதமாந் தோற்ற மெல்லாந்
துகளற்ற பரப்பிரம சொரூப மென்றே
மிகப்பற்று மகண்டபர நிச்சயத்தான்
மெய்யுணர்வாம் பரப்பிரம மாத்ர மாவாய். (22)

பதத்தினுடை சுபாவார்த்தம் வாச்ய மென்றும்
பதமதனின் விசேடார்த்த மிலட்சிய மென்றும்
விதித்தபடி விளம்பலது சத்தி யென்றும்
விசேடமுற விளம்பலிலக் கணையா மென்றுங்
கதித்திடுமிவ் விதமான தோற்ற மெல்லாங்
களங்கமுறுப் பரப்பிரம சொரூப மென்றே
யுதித்திடுமிவ் வகண்டபர நிச்சயத்தா
லுணர்வுருவாம் பரப்பிரம மாத்ர மாவாய். (23)

விட்டவிலக் கணையாலு மைக்யந் தோன்று
  விடாதவிலக் கணையாலு மைக்யந் தோன்று
திட்டமதா முபயவிலக் கணையொன் றாலே
  யிலங்குபா சீவைக்ய மிலங்கு மென்றே
திட்டமுறத் தோற்றியவித் தோற்ற மெல்லாந்
  திகழ்வுருவாம் பரப்பிரம சொரூப மென்றே
சிட்டமுறு மகண்டபா நிச்ச யத்தாற்
  சின்மயமாம் பரப்பிரம மாத்ர மாவாய். (24)

புரையற்ற நிருபாதி சொரூபந் தானே
  புகலுமகா வாக்குகளின் பொருளா மன்றிப்
பிரிவுற்ற சோபாதி சொரூப மென்றும்
  பேசுமகா வாக்குகளின் பொருளன் றென்றே
விரிவுற்ற வினைமுதலாந் தோற்ற மெல்லாம்
  விமலமதாம் பரப்பிரம சொரூப மென்றே
தெரிவுற்ற வகண்டபா நிச்ச யத்தாற்
  றியக்கமிலாப் பரப்பிரம மாத்ர மாவாய். (25)

சருவமுமே பரப்பிரம சொரூப மென்றே
  சகலமறை முடிகளுமே சாற்ற லாலும்
பிரிவறவே பரப்பிரம ஞானம் பெற்ற
  பெரியோரு மிவ்விதமே பேச லாலு
மிருளறவே பரசிவனு மெமக்கு முன்ன
  மிவ்விதமே யருள்செய்த வியல்பி னாலு
முறைதருமிவ் வகண்டபா நிச்ச யத்தி
  லோரணுவு மையமில்லை யுறுதி யீதே. (26)

அதிட்டான மானபரப் பிரமத் தின்க
  ணாரோப வடிவெனவே காண்ப தெல்லாம்
மதித்தாயின் மன்னுமதிட் டான மின்றி
  மற்றணுவு மாரோப வடிவே யில்லை
நிதித்யாச நிரந்தரமாய்ச் செய்வோ ருக்கே
  நிகழ்த்தியவிவ் வநுபூதி நிகழு மன்றிக்
குதித்தாடு மனதின்வச மானோ ருக்குக்
  கூறியவிவ் வநுபூதி கூடா தென்றும். (27)

ஆதலினாற் கற்பிதமாய்க் காண்ப தெல்லா
மதிட்டான மானபரப் பிரம மென்று
மேதமிலா வப்பிரம மியானே யென்று
மியானந்தப் பரப்பிரமந் தானே யென்றுஞ்
சாதகமா யெப்போது நிதித்யா சித்தச்
சலமனநின் விகற்பங்க ளனைத்துந் தள்ளிப்
பேதமிலா வகண்டபர போதம் பெற்றுப்
பின்னமிலாப் பரப்பிரம மாத்ர மாவாய். (28)

ஓதியவா றகண்டபர போதந் தன்னை
யுற்றதனாற் பரப்பிரம மானோ ருக்கே
மாதவவிவ் வநுபவ மாய்வ தன்றி
மற்றவருக் கிவையென்று மாய்வ தில்லை
யாதலினா லறைந்தவண மகண்ட போத
மடைந்ததனா லகண்டபரப் பிரம மாகிப்
பீதிதரும் பவதுக்க மனைத்து நீக்கிப்
பிரிவற்ற மோட்சசுகம் பெற்று வாழ்வாய். (29)

அகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மயலற்ற வப்பிரம நாமே யென்றும்
வெகுதிடமா யகண்டபர நிர்ண யத்தை
விமலசிவ னருளியவா விளம்பி னேமான்
மிகவுமகா ரகசியமா மிவ்வர்த் தத்தை
மேவுமனச் சுத்தியுட னொருகா லேனு
மகமுறவே யையமறக் கேட்டு ணர்ந்தோ
ரழிவற்ற மோட்சசுக மடைவ ரன்றே. (30)

நிருமலமாய் நிகழுமகா லிங்கத் தின்க
ணிறைவேற்று நித்தசிவார்ச் சனையே யாதி
பரமசிவ பத்திசெயு மன்ப ருக்கே
பகுப்பற்ற பரப்பிரம ஞானந் தோன்றும்
நிரமுறவே பரப்பிரம ஞானம் பெற்ற
தீரர்களே பவபாச முத்த ராவ
ரரியவனே யணுவுமிதி லைய மில்லை
யகண்டபர சிவனுனை யறைந்த தன்மை. (31)

நிகிலசகன் ஞயகனும் பரேசன் முன்ன
நிகழ்த்தியவா ரிபுமுனிவ னிதாக னுக்கங்
ககிலமுமே பிரமமென்று மதுநா மென்று
மகண்டபர நிர்ணயமே யருளி ஞனென்
றிகழ்வனுவு மெய்தியிடாச் சைகீ ஷவ்யற்
கெவையுமுணர் கந்தனுரை கந்தா னென்றே
சகலமுணர் சூதமுனி முனிவர்க் கெல்லாஞ்
சலனமிலாப் பரம்பொருளைச் சாற்றி ஞனல். (32)

வேறு.

பேதமின்றி யகண்டசொரூபமாம்பிரமமல்லது வேறிலையேயெனு
மேதமொன்றிய தோற்றமனைத்துமே யேகபூரணமாம்பரமேயெனு
மாதியின்றிய வப்பரனாமெனு மறிவினலது வாயிடலாமென
நீதிலாநந்தத் தாண்டவமாடுநந் தேவதேவ னகண்டசொரூபமே. (33)

முப்பத்தேழாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 37-க்கு திருவிருத்தம் 1660.

---

## முப்பத்தெட்டாவது
## இந்நூன் மகிமை யுரைக்கும் அத்தியாயம்.

---

சகலவித நூற்களினுஞ் சார மாகிச்
சாரங்க ளனைத்துக்குஞ் சார மாகி
மிகவுமகா ரகசியமாய் மேவு தற்கு
மெத்தவுமே யரிதான விந்த நூலின்
மகிமைதனை முடிவான வுறுதி யோடு
மயக்கமற மதிக்கும்வண மிங்குச் சொல்வாந்
தகைமிகு மிந்நூலைத் தவிர்ந்தி டாமற்
றற்பரனு மெப்போது மப்யா சிப்பாய். (1)

அகமென்றும் சன்மாத்ர மைய மில்லை
யகமென்றுஞ் சின்மாத்ர மைய மில்லை
யகமென்றுஞ் சுகமாத்ர மைய மில்லை
யகமென்றுஞ் சுத்தபர மைய மில்லை
யகமென்றும் பரிபூன்ற மைய மில்லை
யகமென்றும் பராற்பரமே மைய மில்லை
யகமென்றும் பரமசிவ மைய மில்லை
யகமென்றும் பரப்பிரம மைய மில்லை. (2)

நிகழ்வதுவும் பரப்பிரம மைய மில்லை
நிகழாதும் பரப்பிரம மைய மில்லை
நிகிலமுமே பரப்பிரம மைய மில்லை
நீநானும் பரப்பிரம மைய மில்லை
சகலமுமே பரப்பிரம மைய மில்லை
சதசத்தும் பரப்பிரம மைய மில்லை
யகிலமுமே பரப்பிரம மைய மில்லை
யகமந்தப் பரப்பிரம மைய மில்லை. (3)

சருவமுமே யான்மாவுக் கபின்ன மான
சன்மாத்ர பரப்பிரம சொரூப மேயாம்
பிரமமதே யான்மாவா மான்மாத் தானே
பேதமிலாப் பரப்பிரம சொரூப மாகு
நிருமலமாய் நிறைவுற்ற வான்மா வுக்கு
நிகிலபரி பூரணமாம் பிரமத் துக்கு
மொருசிறிதும் பேதமிலை யிரண்டு மொன்றே
யுணர்வுருவாஞ் சிவனுணை யுரைத்த துண்மை. (4)

நாமமுரு யாவையுமே பிரம மென்று
நாமந்தப் பரப்பிரமந் தாமே யென்றுஞ்
சேமமுறச் செப்பியவிவ் வருத்தந் தன்னிற்
சிறிதேனுஞ் சங்கையிலை சத்தி யந்தான்
முமமெலாங் கடந்தெங்கு நிறைந்து நின்ற
தத்துவமாஞ் சிவனுணை யுண்மை சொன்னே
மாமலவென் றணுவுமிதிற் சங்கி யாம
லறைந்தவண மதிதிடமாய் நிச்ச யிப்பாய். (5)

சராசரமாய்த் தோற்றியிடுந் தோற்ற மெல்லாஞ்
சன்மயமாம் பரப்பிரம சொரூப மென்றும்
புராதனமா மச்சொரூப நானே யென்றும்
பூரணமா நிச்சயமிங் கடைந்தே யத்தால்
விராமமுறு விகற்பங்க ளனைத்து நீக்கி
விகற்பமிலா விமலபர போகம் பெற்று
நிராமயமாம் பரப்பிரம சொரூப மாகி
நிச்சலமாய் நின்னிடைநீ நிலைத்து நிற்பாய். (6)

நின்னிடையே நிச்சலமாய் நிலைத்து நிற்கு
 நிலைமையிதே நிமலபர மோட்ச மாகுந்
தன்னிடையே தானாகத் தனித்தி டாமற்
 றாங்கமெனச் சலிப்பதுவே பந்த மாகு
முன்னியிடி லோருருவா முன்னை யன்றி
 யுலைவுதருங் காரணமோ ரணுவு மில்லை
தன்னியனே யாதலினா னீயெப் போதுந்
 தன்னிடையே தானாகத் தனித்து நிற்பாய். (7)

தன்னிடையே தானாகத் தனிப்ப தற்குத்
 தனக்கயல்போற் றோற்றியிடுந் தோற்ற மெல்லா
மன்னியமா யொருகாலு மில்லை யென்று
 மகிலமுமே யான்மாவா மகமே யென்றும்
பின்னமிலா வகண்டபர நிச்ச யத்தைப்
 பெறுவதுவே காரணமா மாத லாலே
பன்னியவா றகண்டபர நிச்ச யத்தைப்
 பற்றியதாற் பகுப்பற்ற பரமே யாவாய். (8)

நின்னுருவா மான்மாவுக் கயலே யில்லை
 நிகிலமுநின் னான்மாவே நிச்ச யந்தான்
பன்னுபல சாத்திரமு மாலோ சித்துப்
 பகர்கின்றோம் பரமார்த்த வுறுதி யீதே
யன்னசிவ னுபயதிருப் பதங்க டொட்டே
 யறைகின்றோ மையமிலா வுறுதி யீதே
சொன்னகுரு வுபயதிருப் பாதந் தொட்டே
 சொல்கின்றேஞ் சுருதிமுடி யுறுதி யீதே. (9)

நாவினிடைக் காய்ந்தபர சதனை யேந்தி
 நவில்கின்றோ நவின்றதிலோ ரையு மில்லை
மேவியவிவ் வகண்டபர நிச்ச யந்தான்
 மெய்ஞ்ஞானி யாவருமே பெறும்பே றாகும்
பாவனனே யாதலினா னீயெப் போதும்
 பகுப்பற்ற வகண்டபர நிச்ச யத்தை
யோவலற வுற்றதனாற் பரமே யாகி
 யுவமையிலா வானந்தம் பொருந்தி வாழ்வாய். (10

நிச்சலமா நிச்சயமே யகண்டா நந்த
நிலைமைபெற நிகரற்ற வேது வாகு
முச்சமதா நிச்சயமே செய்யச் செய்ய
வுலகுமுதற் றுவிதத்தின் றோற்ற நீங்குந்
அச்சமதாந் துவிதத்தின் றோற்ற நீங்கிற்
றுகளற்ற வாநந்தஞ் சுயமாய்த் தோன்று
மச்சமிலா நிச்சயமே செய்நிங் கத்தா
லகண்டபர மாநந்த மடைந்து வாழ்வாய். (11)

சன்மயமாம் பரப்பிரம சொரூப நீயே
சலனமிலாப் பரப்பிரம சொரூப நீயே
சின்மயமாம் பரப்பிரம சொரூப நீயே
சிதாநந்த பரப்பிரம சொரூப நீயே
புன்மையுறுப் பரப்பிரம சொரூப நீயே
பூரணமாம் பரப்பிரம சொரூப நீயே
தன்மயமாம் பரப்பிரம சொரூப நீயே
தடையற்ற பரப்பிரம சொரூப நீயே. (12)

கனியுமகா ரகசியமா மிவ்வர்த் தத்தை
நமக்கீச னவின்றபடி நவில லுற்றே
முனிவரனே மொழிந்ததிலோ ரைய மில்லை
மூன்றுதாஞ் சத்தியமா மொழிகின் றேமியா
மனியமிலா வகண்டபர நிச்ச யத்தை
யநவரத மாதரவா யப்யா சித்தே
புனிதமதாம் பரப்பிரம சொரூப மாகிப்
பூரணமா மாநந்தம் பொருந்தி வாழ்வாய். (13)

தேவதைகண் முனிவரர்கள் யோகி கட்குந்
தெரியமிக வரிதான நிர்ண யத்தைப்
பாவனமாம் பரமசிவ னெமக்கு ரைத்த
பரிசாக நிதாகநினக் குரைத்தோ மன்றே
யாவதனு லகண்டபர நிச்ச யத்தை
யநவரத மாதரவா யப்யா சித்தே
கேவலமாம் பரப்பிரம சொரூப மாகிக்
கிலேசமிலா வாநந்தம் பொருந்தி வாழ்வாய். (14)

சருவசகன் றுயகனாய் நிறைந்த வீசன்
சகலவித சீவர்க்கு மிதமே யாக
நிருமலமாங் கைலாச கிரியின் முன்ன
நிகரற்ற கருணையினா லுபதே சித்த
பரிசதுவாய்ப் பரப்பிரம ஞானந் தன்னைப்
பயமறவே நிதாகனினக் குபதே சித்தோர்
திரிவிதமா முலகத்து மிந்த ஞானந்
தெரியமிக வரிதெனவே தெரிந்து கொள்வாய். (15)

தெரிவுறவே முன்னொருகாற் றேவ ருக்குத்
தென்றிசையி னெதிர்முகமாய்த் திகழு மீச
னொருபதினா யிரவருட மட்டு மிந்த
வுத்தமமா ஞானத்தை யுபதே சித்தா
னருள்வடிவா யெழுந்தருளு மம்பி கைக்கு
மகிலசகன் றுயகனுஞ் சாட்சாத் தீச
னூரமுறவே யொருவருட பரியந் தத்துக்
குத்தமமா ஞானமிதை யுபதே சித்தான். (16)

விரிவுறவே விநாயகனுந் தன்சீ டர்க்கு
வெகுவருட மிதனையுப தேசஞ் செய்தான்
பரிவுடனே யரியுமிதை விரிஞ்ச னுக்குப்
பலகாலம் பாற்கடலி லுபதே சித்தா
னொருபொழுதென் றந்தைக்குப் பிரம லோகத்
தூனமிலா ஞானமிதை யுரைத்தேன் யானு
மிருளறவே முன்பொருகா னாரா தாதி
யிருடிகளுக் கிதைவிரிவா யிசைத்தே னானே. (17)

இத்திறமாம் பரப்பிரம ஞானந் தன்னை
யெளிதாகத் தெளிவிக்கு மிந்த நூலை
மெத்தவுமே குறைவன்றி விரிவு மன்றி
மிகவெளிதா யீசனெனக் குரைத்த வண்ண
முத்தமனே கருணையினா லுன்னை முன்னிட்
டுலகிலுளோர் யாவர்க்கு மிதமே யாகச்
சத்தியமா யருள்செய்தே னிந்நூ லுக்குச்
சரியான நூலெவையு மெங்கு மில்லை. (18)

தன்னியவிந் நூலெனமற் றெந்த நூலுந்
தடையற்ற ஞானத்தை விரைவிற் றூரா
தன்னியமா நூற்களெலா மடைவே யாக
வகண்டபர ஞானத்தை யளிப்ப தாகும்
பன்னியவிந் நூலொன்றே சீக்கி ரத்திற்
பகுப்பற்ற பரப்பிரம ஞான நல்கு
மின்னவித வேதுவினு லிந்நூ லுக்கிங்
கிணையான நூலெவையு மெங்கு மில்லை. (19)

ஓதியவிந் நூலிலுள கவிதை யின்க
ணுற்றவொரு பாதத்துக் கிணையொன் றில்லை
மீதியுள பாதங்கட் கிணையே யாக
மேவுபொரு ளெவையேனு மெங்கு முண்டோ
வீதலுறு வகண்டபர ஞானந் தன்னை
விளக்கியிடும் வாக்குக்கிங் கிணையே தாகு
மாதலினு லதிசயமா மிந்த நூலை
யத்யந்த மாதரவோ டப்யா சிப்பாய். (20)

பலகோடி யாகத்தைப் பாங்காய்ச் செய்தும்
பலகோடி தீர்த்தத்திற் றனஞ் செய்து
மூலைவோடு பெற்றபல மிதனி னுள்ள
வொருபாதம் படித்தபலத் திணையே யாக
நிலைமேவு மிந்நூலின் கவியின் கண்ணே
நிருமலமாய் நிகழ்கின்ற விரண்டு பாதஞ்
சலியாது படித்தபலன் றனக்கீ டாகச்
சகலபுவி தானபலஞ் சாற்ற லாமோ. (21)

அரிதான விந்நூலின் கவியின் கண்ணே
யதிசயமா யமைவுற்ற மூன்று பாதஞ்
சரியாகப் படித்துவரும் பலந்த னக்குச்
சகலவித தானமுமே சமான மாகா
பரிவாக விதனிலுள கவிதை யொன்றைப்
படித்தபலன் றனக்கிணையா மெவையு மில்லை
யொருகால மேனுமித னநுப வத்தை
யுற்றதனுற் பெறும்பேறுக் குவமை யுண்டோ. (22)

இத்திறமா மிந்நூற்றுற் பரியந் தன்னை
யியல்பாகக் கேட்டுணர வசத்த னேனு
நித்தமுமே சிரத்தையுட னியம மாக
நிருமலமா மிந்நூலைப் படித்த போது
மத்திறமாய்ப் படிப்போனு மகண்ட ஞான
மடைவாக வடைந்தகனுன் முத்த னுவன்
சத்தியமே யாதலினு லனைத்துந் தள்ளிச்
சந்ததமு மிந்நூலை யப்யா சிப்பாய். (23)

சகலவித தானமொடு தருமந் தள்ளிச்
சகலவித தீர்த்தமொடு தலமுந் தள்ளி
நிகிலவித செபமுடனே தவமுந் தள்ளி
நிகிலமகா மந்திரந் திரமுந் தள்ளித்
திகழ்வுமிகுந் தேவதைக ளனைத்துந் தள்ளித்
தேவதையின் பூசனைக ளனைத்துந் தள்ளி
யகிலவித நூற்களையுந் தூரத் தள்ளி
யநவரத மிந்நூலே யப்யா சிப்பாய். (24)

சகலவித சரிதைகளுந் தூரத் தள்ளிச்
சகலவித கிரியைகளுந் தூரத் தள்ளி
நிகிலவித யோகமுமே தூரத் தள்ளி
நிகிலவித சாங்கியமுந் தூரத் தள்ளி
வெகுவிதமாம் பத்திகளுந் தூரத் தள்ளி
விசித்திரமாம் பாவனையுந் தூரத் தள்ளி
யகிலவித நூற்களையுந் தூரத் தள்ளி
யநவரத மிந்நூலே யப்யா சிப்பாய். (25)

வெகுவிதமா மதங்களையுந் தூரத் தள்ளி
விதம்விதமா மறிகளையுந் தூரத் தள்ளிச்
சகலவித ரகசியமுந் தூரத் தள்ளிச்
சகலருடை சேவையுமே தூரத் தள்ளி
நிகிலவித புண்ணியமுந் தூரத் தள்ளி
நிகிலமகா பாக்கியமுந் தூரந் தள்ளி
யகிலவித சமுசயமுந் தூரத் தள்ளி
யநவரத மிந்நூலே யப்யா சிப்பாய். (26)

சகலவித பாடமுமே தூரத் தள்ளிச்
சகலவித பழக்கமுமே தூரத் தள்ளி
நிகிலவித வுலகமுமே தூரத் தள்ளி
நிகரற்ற குருவையுமே தூரத் தள்ளி
யிகபரமென் றிருப்பதெலாந் தூரத் தள்ளி
யிதரமென நினைப்பதெலாந் தூரத் தள்ளி
யகிலவித சமுசயமுந் தூரத் தள்ளி
யநவரத மிந்நூலே யப்யா சிப்பாய். (27)

இந்நூலே பரப்பிரம மிதனைத் தானே
யினிமையுட னெப்போது மப்யா சிப்பாய்
பன்னூலைப் படித்ததனாற் பெறும்பே றென்ன
பானுவின்முன் பலவொளியாற் பலனு முண்டோ
செந்நூலி தொன்றினையே செம்மை யாகச்
சிரத்தையுடன் சந்ததமு மப்யா சிக்கி
லெந்நூலின் பலன்களுமீ தொன்றி னாலே
யெய்தியிடு மிதிலிறையு மைய மில்லை. (28)

இந்நூலா லத்யாச மனைத்து நீங்கு
மிந்நூலா லாவரண மனைத்து நீங்கு
மிந்நூலாற் சின்மாத்ர நிட்டை கூடு
மிந்நூலாற் சித்தவிசி ராந்தி யெய்து
மிந்நூலா லகண்டபர ஞான முண்டா
மிந்நூலா லஞ்ஞான மனைத்து நீங்கு
மிந்நூலா லனுபவ பந்தந் தீரு
மிந்நூலா லகண்டபர மோட்ச மெய்தும். (29)

இந்நூலா லித்துவித மனைத்து நீங்கு
மிந்நூலா லத்துவித மொன்றே தோன்று
மிந்நூலா லிதயமுடிச் சிறப்ப தாகு
மிந்நூலாற் சீவத்வ நசிப்ப தாகு
மிந்நூலாற் பவதுக்க மனைத்துந் தீரு
மிந்நூலாற் பரமான சுகமே சாரு
மிந்நூலாற் பாசமெலா நசிப்ப தாகு
மிந்நூலாற் பரமபதங் கிடைப்ப தாமே. (30)

மனந்தனிலே யிந்நூலின் பொருளை யோர்ந்து
மதித்திடநல் விற்பத்தி மருவா தோனுந்
தினந்தவிரா திதனையொரு காலமேனுந்
திடமான நியமமுடன் படிப்பா னுகி
லனந்தவித சென்மத்தி லநுச ரித்த
வகங்களெலா மச்சென்மந் தனிலே நீங்கிக்
கனந்தவிரா வகண்டபர போதம் பெற்றுக்
களங்கமிலாப் பரவடிவே யாவ னன்றோன். (31)

மருவியதன் சென்மத்தி லொருகா லேனு
மற்றிதனைக் கேட்போனு முத்த னுவன்
சரிவரவே நிதமிதனைப் படிப்போ னுக்குச்
சமமாகச் சகந்தனிலே யாரு மில்லை
யரியவனே யாதலினு லநந்த நூலி
லாதரவே செய்யாம லனைத்துந் தள்ளி
நிருமலமா மிந்நூலே முமுட்சு வெல்லா
நிதந்தவிரா தப்யாசஞ் செய்ய வேண்டும். (32)

சாற்றியிடு மிந்நூலே சாத்தி ரங்கள்
சகலத்துஞ் சாரமதாஞ் சித்தாந் தங்காண்
வேற்றுமையி லிந்நூலே வேதாந் தங்கள்
வேதங்க ளனைத்துக்குஞ் சித்தாந் தங்காண்
போற்றியிடு மிந்நூலே பூன்ற போதம்
பொருந்தியுள பெரியோரின் சித்தாந் தங்கா
ணேற்றியிடு மிந்நூலே யிணையொன் றற்ற
வெமதீச னெமக்கருளுஞ் சித்தாந் தங்காண். (33)

சகலவித குய்யத்துங் குய்ய மீதே
சாரங்க ளனைத்திற்குஞ் சார மீதே
யகிலவித வுலகத்து மரிய தீதே
யத்யந்த வதிசயமாம் பொருளு மீதே
நிகிலவித சமுச்சயமுந் தவிர்ப்ப தீதே
நிச்சலமா நிச்சயமு மளிப்ப தீதே
யிகழ்வுதருந் துவிதமெலாந் தொலைப்ப தீதே
யிருமையிலாச் சகசநிலை யிசைப்ப தீதே. (34)

மாதவனே வெகுவிதமாய் விளம்பி யென்ன
மண்ணுலகில் விண்ணுலகி லெவ்வி டத்துஞ்
சாதகமா நூலிதுதான் சார்வ தற்குச்
சாலவுமே யரிதாகுஞ் சத்தி யந்தான்
வேதமொடு மிருதியிதி காச மாதி
வெகுவிதமா நூலுக்குஞ் சார மீதே
யோதியவிந் நூலுக்குச் சமான மாக
வொருநூலு முலகத்தி லெங்கு மில்லை. (35)

முன்னொருகா லென்றந்தை யுலகில் யாரு
முத்தரா யிந்நூலான் முடியா நிற்ப
ரென்னமனந் தனிலைய மிசைந்தோ னாகி
யிதைத்திருடிப் பாற்கடலி லெறிந்தான் பின்ன
ரன்னசெய லறிந்துடனே யானச் சிந்தி
னலைகளினாற் றீரத்தி லொதுக்கப் பட்ட
வின்னதனைக் கொணர்தலுமே யென்னை நோக்கி
யெனதுபிதா மற்றுமிக முனிவு செய்தான். (36)

அன்றுமுத லியானந்த வுலகம் விட்டிவ்
வதிசயமாங் கேதாரத் தலமடைந்தே
னின்றுனது பத்தியினு லிந்த நூலை
யாவர்க்கு மிதமாக விசைக்க லானே
னன்றியுமிந் நூற்பொருளை யறிவ தற்கு
மறிந்தபடி யதிகாரிக் குறைவ தற்குந்
துன்றியவிவ் வுலகத்தி லாரு மில்லை
தூயபர போதமிக வரிய தன்றோ. (37)

அத்யந்த வதிசயமா மகண்ட ஞான
மப்படியே யிந்நூலு மதிச யந்தா
னத்யந்த வதிசயமா மிந்த நூலை
யையமற வறிபவனு மதிச யந்தா
னத்யந்த வதிசயமா மிந்த நூலை
யருளுடனே யுறைபவனு மதிச யந்தா
னத்யந்த வதிசயமா மிந்த நூலை
யாதரவாக் கேட்பவனு மதிச யந்தான். (38)

மாதவனே யிந்நூலைக் கேட்கத் தக்க
மாசற்ற மாணுக்க னரிய னுவன்
சாதகமா மிந்நூலை யுபதே சிக்குஞ்
சற்குருவுஞ் சாலவுமே யரிய னுவன்
பேதமுறு மிந்நூலின் புத்த கத்தைப்
பெற்றவரு மெத்தவுமே யரிய ராவ
ரோதியவிவ் வேதுவினு லிந்நூ லெங்கு
முரமாகப் பிரசித்தி மேவ வில்லை. (39)

பலசென்னத் தநுட்டித்த வறங்க ளெல்லாம்
பக்குவமாய்ப் பாவங்க ளனைத்து நீங்கி
யிலகியதன் சொரூபநிலை யிசையத் தக்க
வினிப்பிறவா முடிவான சென்மத் திற்றன்
சலனமெலா மறநீக்கி யகண்ட மாக்குஞ்
சத்தியுள விந்நூலைச் சார லாகு
மலினமுறு விந்நூலைச் சார்ந்தோ ருக்கு
மறுபிறவி யென்றுமிலை மகேச னுணை. (40)

இவ்விதமா மகிமையுள விந்த நூலை
யாவர்க்கு மிதமாக வருளி னுலே
திவ்வியமங் களவடிவா யெழுந்த வீசன்
றிகழ்வுறவே முன்னமெனக் கருளிச் செய்தா
னவ்விதமே யானுமிதைக் கருணை யாலே
யழுத்தமுற நிதாகநினக் குபதே சித்தேன்
செவ்வியதா மிந்நூலைச் சேர்வோ ரெல்லாஞ்
சின்மயமாம் பரப்பிரம சொரூப மாவர். (41)

புகல்வதெலாம் புகன்றனனியா னினியெங் கேனும்
போதுமென ரிபுமுனிவன் புகல லோடு
மகிமைமிகும் வசனமிதை நிதாகன் கேட்டு
மகிழ்வுமிகுந் தாநந்த பாஷ்பங் கூர்ந்து
மிகவுமுறும் பத்தியினன் மெய்வி திர்த்து
மெத்தவுமே விநயமுடன் வணங்கி யேத்திப்
பகாலுறக் கண்டமுமே தழுத ழுத்துப்
பரவசனு யிவ்வசனம் பகர்கின் றுனல். (42)

அறியவொணாப் பெருமையுறும் போதம் பெற்ற
வாசிரிய நினதுதிட கருணை யாலே
சிறியமதி பொருந்தியயான் சிறுமை நீங்கிச்
சின்னமிலா வகண்டபரி பூர்ண மானேன்
பெறவரிதா நின்னுடைய தரிச னத்தாற்
பிறவியிதிற் பெறுவதெலாம் பெற்றே னானே
இறவரிதா முனதருளாற் செய்வ தெல்லா
மூனமறச் செய்துமுடிந் தோனா மானேன். (43)

தேசிகநீ யருளியதாம் வசனங் கட்குட்
டிடமான வொருவசன மனனங் கொண்டே
பாசமெலா மறநீக்கிப் பரமா நந்தம்
பற்றினனாய்ப் பரப்பிரம சொரூப மானேன்
ஞசினிலென் பவதுன்ப மனைத்து நீக்கி
யகண்டசுக மருளியநின் கருணை யென்னே
பேசியதி லணுவேனு மைய மில்லை
பெரியோய்நின் பெருமையிதை யென்சொல் வேன்யான்.

கருணையினா லருளியநின் னுபகா ரத்தின்
கைம்மாறிவ் வுலகத்தி லெங்கு மில்லை
குருபரனே யுனதுபய பாதப் போதைக்
குறித்தடியே னநந்தவித வணங்கல் செய்வேன்
பரிவுடனே வணங்குதலு முபசா ரந்தான்
பரமார்த்த தசையிலொரு வணங்க லுண்டோ
சருவமுமே பிரமமலாற் பரமார்த் தத்திற்
சாருமொரு பேதமுமே யில்லை யன்றே. (45)

தேசிகநின் கருணையினால் யான டைந்த
திவ்வியமாஞ் சுவாநுபவ திட்டி தன்னிற்
பேசியிடு நானுமிலை நீயு மில்லை
பெருமையுடன் பேசியவிந் நூலு மில்லை
பாசமுறுஞ் சீவனிலை யீச னில்லை
பகுப்புற்ற பார்முதலாஞ் சகத்து மில்லை
யாசிரிய வகிலமுமே யகண்டா கார
மானபரப் பிரமமலா தயலே யில்லை. (46)

குருவாநின் கருணையினால் யானடைந்த
 கூறுபடா வகண்டபர நிட்டி தன்னிற்
சருவமுமே பரப்பிரம சொரூப மல்லாற்
 சருவமெனப் பிறிதாகச் சிறிது மில்லை
பிரமமெனச் சருவமென வேறு வேறாய்ப்
 பேசியவிப் பலவிதமாஞ் சொலவு மில்லை
யொருபொருளு மொருகாலு மெங்கு மில்லை
 யுள்ளதெலா முணர்வுருவாம் பிரம மொன்றே. (47)

வேகமுறத் தோற்றியிடு மகம் விருத்தி
 வெகிர்முகமாய்த் தோற்றியிடு மிதம் விருத்தி
தேகமுத லகமென்னுந் துவித விர்த்தி
 திகழ்சாட்சி யகமென்னுஞ் சாட்சி விர்த்தி
யேகபர மகமென்னு மகண்ட விர்த்தி
 யிவ்விதமாம் விருத்திகளே தோன்று மின்றிச்
சோகமுறாச் சுத்தபர சொரூப மொன்றே
 சுயஞ்சோதி வடிவாகச் சொலிக்கு தந்தோ. (48)

நின்னருளா லென்மனதி னிகழா நின்ற
 நிகிலவித பேதமுமோர் கணத்தி னீங்கி
யின்னதெனு வியம்பவொணு வகண்ட மான
 வென்சொரூப நிட்டையினை யானடைந்தேன்
பன்னியதி லணுவேனு மைய மில்லை
 பரகுருவே யெனவன்போ டிறைஞ்சி யேத்தித்
தன்னுடைய சகசநிலை தன்னி லன்னோ
 னடையறவே சுகமாகத் தனித்தி ருந்தான். (49)

அரியசிவன் கருணையுமவ் வடிவே யான
 வாசிரியன் கருணையுமிங் கடைந்தோ ருக்கே
திருசியமாஞ் சீவபர சகத்தின் றோற்றந்
 தினையளவுந் திகழாம லுடனே நீங்கிப்
பிரிவுபெறு வகண்டபர நிட்டை கூடும்
 பேசியது சத்தியமே யென்று கந்த
னுரியபர மார்த்தத்தைச் சைகீ ஷவ்யற்
 கோதியவா றகிலர்க்கு முரைத்தான் சூதன். (50)

அகிலபூரண மானபரம்பொரு ளன்றியன்னிய மில்லையனைத்துமே
நிகிலபூரண மானபரம்பொரு ளீயதேயெனநிர்ணயமோதலுஞ், சகல
நூலினு நூலிதுமெத்தவுஞ் சாரமென்றிதன் மேன்மையுரைத்தலும்
புகழுமாநந்தத்தாண்டவமாடுநம் பூரணேசனகண்ட சொரூபமே. (51)

முப்பத்தெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாம் 38-க்கு திருவிருத்தம் 1711.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

# முப்பத்தொன்பதாவது

## ரிபு-நிதாகனை அநுபவம் வினவ அன்னோன்-றன தகண்டாநு பூதியினாற் குருவருளை அன்பின் வியந்து துதிக்கும் அத்தியாயம்.

---

நிருமலமாம் ரிபுமுனிவன் மீண்டு மந்த
  நிதாகமுனி தனைநோக்கி யினிதாச் சொல்வான்
மருவமிக வரிதான வகண்ட ஞான
  மகிமைதனை யுரைத்தவண மறிந்தாய் கொல்லோ
பிரிவுபெறு மனதினிடைப் பிரமந் தன்னைப்
  பேதமறத் திடமாகப் பெற்றாய் கொல்லோ
தாளமனோ விகற்பமெலாந் தவிர்ந்து நன்றாய்த்
  தன்மயமா நிட்டைதனைச் சார்ந்தாய் கொல்லோ. (1)

அகமருவு மஞ்ஞான மனைத்து நீங்கி
  யகண்டபர விஞ்ஞான மடைந்தாய் கொல்லோ
தகைமையுறுக் கருமத்தில் வெகுகா லத்தாற்
  றங்கியநின் விசுவாசந் தவிர்ந்தாய் கொல்லோ
நிகிலமுமே யுண்மையெனு நினைவு நீங்கி
  நிசமான நின்வடிவி னிலைத்தாய் கொல்லோ
சகலவித துவிதத்தின் பயமு நீங்கிச்
  சலனமிலா வபயபதஞ் சார்ந்தாய் கொல்லோ. (2)

ஒருபொருளும் பிரமமலா தொருகா லத்து
  முண்மையுறா தென்றுரமா யுணர்ந்தாய் கொல்லோ
சருவமுமே யகண்டபரப் பிரம மென்னுஞ்
  சலனமிலா வுறுதியினைச் சார்ந்தாய் கொல்லோ
வுரைதருமிவ் வுறுதியினா லுலைவொன் றின்றி
  யுணர்வுருவா முன்வடிவி லோய்ந்தாய் கொல்லோ
வரியவனே யநாதிபவ துக்க நீங்கி
  யகண்டபர மாநந்த மடைந்தாய் கொல்லோ (3)

இதனையெலாம் விரிவுறநீ யிசைப்பா யென்றே
யிவ்விதமாய் ரிபுமுனிவ னிசைத்த லோடு
மதிசயமா மாசிரியன் கருணை யாலே
யகண்டபர விஞ்ஞானந் திடமாய்ப் பெற்ற
மதியுடனே மகத்தான மகிழ்வு கூர்ந்து
மதிக்கவொணா வன்புடனே குருவை நோக்கித்
துதமருவா வநுபூதி யனைத்துஞ் சொல்லத்
துகளற்ற நிதாகமுனி தொடங்கி னால் (4)

மாசணுகாப் பரகுருவே யகண்ட ஞான
மகிமையெலா முரைத்தவண மதித்தோ னானேன்
றேசிகநின் கருணையினாற் றிடபோ தத்தைத்
தியக்கமிலா மனத்தினிடைத் தரித்தோ னானேன்
பேசவொணா வகண்டபரப் பிரமந் தன்னைப்
பிரிவற்ற மனத்தினிடைப் பெற்றோ னானேன்
பாசமுறு வெனதுநிச சொரூபத் தின்கட்
பகுப்பற்ற நிட்டையினைப் பெற்றோ னானேன். (5)

சற்குருவே நினதருளா லகண்ட ஞான
சத்துருவா மஞ்ஞான மனைத்து நீங்கி
நிர்க்குணமாம் பரப்பிரம ஞானம் பெற்று
நிகிலவித கருமத்துஞ் சிரத்தை யற்றுத்
துர்க்குணமாம் பிரபஞ்சத் துண்மை நீங்கித்
துவிதத்தாற் றொடருபய மனைத்து நீங்கி
யக்கரமாம் பரப்பிரம சொரூப மாகி
யயலற்ற வபயபத மடைந்தே னந்தோ. (6)

குருவரநின் கருணையினாற் கணநே ரத்திற்
குறைவுதரும் பேதமதி யனைத்து நீங்கிச்
சருவமுமே பிரமமெனு நிச்ச யத்தைச்
சாலவுமே திடமாகச் சார்ந்தே னந்தோ
பரவியவிவ் வுரமான நிச்ச யத்தாற்
பரமான வென்னிடையான் சாந்த னாகி
விரவுபவ துக்கங்க ளனைத்து நீங்கி
விமலபர மானந்த மடைந்தே னந்தோ. (7)

இதுவரையி லஞ்ஞானப் பகையாற் கெட்டே
னின்றுனது கருணையினு லபயம் பேற்றே
னிதுவரையின் மனமென்னும் பகையாற் கெட்டே
னின்றுனது கருணையினுன் மகத்தே யானே
னிதுவரையிற் கருமியெனு மதியாற் கெட்டே
னின்றுனது கருணையினுற் கலக்க மற்றே
னிதுவரையிற் சீவனெனு மதியாற் கெட்டே
னின்றுனது கருணையினுற் சிவமே யானேன். (8)

நான்முன்ன மறிவிலனு யலைந்து நின்றே
ஞனின்றிங் கான்மாவென் றறிந்தோ ஞனே
ஞன்முன்னந் தேகமெனத் தியங்கி நின்றே
ஞனின்று நிருக்குருவென் றறிந்தோ ஞனே
ஞன்முன்னஞ் சித்தமெனச் சலித்து நின்றே
ஞனின்று சின்மயனென் றறிந்தோ ஞனே
ஞன்முன்னஞ் சிதாபாச னெனவே நின்றே
ஞனின்று சிற்பரமென் றறிந்தோ ஞனேன். (9)

அகமெனவே தோற்றியதும் பிரம மாயிற்
றன்னியமாய்த் தோற்றியதும் பிரம மாயிற்
றுகமுதலாய்த் தோற்றியதும் பிரம மாயிற்
றுயிர்களெனத் தோற்றியது பிரம மாயிற்
றிகபரமாய்த் தோற்றியதும் பிரம மாயிற்
றிதுவதுவாய்த் தோற்றியதும் பிரம மாயிற்
றகிலவிதத் தோற்றமுமே பிரம மாயிற்
றற்புதமா நினதருளீ தென்னே யென்னே. (10)

இடமருவு மாயைமுதற் பிரம மாயிற்
றீசனவன் செய்கையெலாம் பிரம மாயிற்
றுடன்முதலா முபாதியெலாம் பிரம மாயிற்
றுபாதியுறுஞ் சீவனெலாம் பிரம மாயிற்
றிடர்முதலாந் தொந்தமெலாம் பிரம மாயிற்
றித்துவித சகத்தெவையும் பிரம மாயிற்
றடர்பலவாந் தோற்றமுமே பிரம மாயிற்
றற்புதமா நினதருளீ தென்னே யென்னே. (11)

முன்மலமாய்த் தோற்றியதே யின்றெ னக்கு
மோகமிலாப் பரப்பிரம மாயிற் றந்தோ
தன்மனதாய்த் தோற்றியதே யின்றெ னக்குத்
தத்துவமாம் பரப்பிரம மாயிற் றந்தோ
கன்மமெனத் தோற்றியதே யின்றெ னக்குக்
களங்கமுறுப் பரப்பிரம மாயிற் றந்தோ
புன்மையெனத் தோற்றியதே யின்றெ னக்குப்
பூரணமாம் பரப்பிரம மாயிற் றந்தோ. (12)

நினதருளான் மனதிலுள சந்தே கங்க
ணிகிலமுமே நிமிடத்தி னீங்கிற் றந்தோ
நினதருளான் மனதிலுள பவபா சங்க
ணிகிலமுமோர் நிமிடத்தி னீங்கிற் றந்தோ
நினதருளாற் சீவசக பாங்க ளென்ன
நிகழுமய னிகிலமுமே நீங்கிற் றந்தோ
நினதருளா னிகிலமுமே பிரம மென்னு
நிச்சலமா நிச்சயமே நிலைத்த தந்தோ. (13)

நிகிலமெனத் தோற்றுவதுஞ் சித்தந் தானே
நினதருளாற் சித்தமதே பிரம மாயிற்
றகிலமுமே பிரமமதா மதுநா னென்னு
மகண்டபர பாவனையே செய்திங் கத்தாற்
சகலமென்று நானென்றும் பேத நீங்கிச்
சலனமிலா வகண்டபர நிட்டை கூடிப்
பகரவொணுப் பவபாச மனைத்துந் தள்ளிப்
பங்கமிலாப் பரப்பிரம மானே னந்தோ. (14)

நான்றானே சன்மயமாம் பிரம மானே
ஞன்றானே சன்மயமாம் பிரம மானே
ஞன்றானே நின்மலமாம் பிரம மானே
ஞன்றானே நிச்சலமாம் பிரம மானே
ஞன்றானே பூரணமாம் பிரம மானே
ஞன்றானே புரையற்ற பிரம மானே
ஞன்றானே யகண்டபரப் பிரம மானே
ஞதநின தருண்மகிமை யென்னே யென்னே. (15)

நான்றானே நித்தபரப் பிரம மானே
னான்றானே நிகரில்பரப் பிரம மானே
னான்றானே சுத்தபரப் பிரம மானே
னான்றானே ரூக்கபரப் பிரம மானே
னான்றானே யமலபரப் பிரம மானே
னான்றானே யசங்கபரப் பிரம மானே
னான்றானே யகண்டபரப் பிரம மானே
னாதநின தருண்மகிமை யென்னே யென்னே. (16)

சதாகார பரப்பிரம மானே னானே
சலனமிலாப் பரப்பிரம மானே னானே
சிதாகார பரப்பிரம மானே னானே
சின்னமிலாப் பரப்பிரம மானே னானே
சதாநந்த பரப்பிரம மானே னானே
சாந்தமதாம் பரப்பிரம மானே னானே
யுதாரமதாம் பரப்பிரம மானே னானே
யுத்தமநின் னருண்மகிமை யென்னே யென்னே. (17)

பாசமிலாப் பரப்பிரம மானே னானே
பகுப்பற்ற பரப்பிரம மானே னானே
நேசமதாம் பரப்பிரம மானே னானே
நிகாற்ற பரப்பிரம மானே னானே
மாசணுகாப் பரப்பிரம மானே னானே
மகத்தான பரப்பிரம மானே னானே
சாசுவத பரப்பிரம மானே னானே
சாந்தநின தருண்மகிமை யென்னே யென்னே. (18)

சத்தியசிற் சுககனமாம் பிரம மானேன்
சாலவுப சாந்தமதாம் பிரம மானே
னித்தியநிர்க் குணமான பிரம மானே
னிரஞ்சனநிட் களமான பிரம மானே
னித்துவித லேசமிலாப் பிரம மானே
னேகபரி பூரணமாம் பிரம மானே
னத்துவிதா கண்டபரப் பிரம மானே
னனகநின தருண்மகிமை யென்னே யென்னே. (19)

அகிலவதிட் டானபரப் பிரம மானே
னகிலமுமாய்த் திகழ்கின்ற பிரம மானே
னிகிலவிலட் சணமான பிரம மானே
னித்தபரி சுத்தபரப் பிரம மானேன்
சுககனமாய் நிறைந்தபரப் பிரம மானேன்
சுயஞ்சோதி சுபாவபரப் பிரம மானே
னகமருவா வகண்டபரப் பிரம மானே
னனகநின தருண்மகிமை யென்னே யென்னே. (20)

தன்மாத்ர மானபரப் பிரம மானேன்
றன்மயமாய் நின்றபரப் பிரம மானேன்
சன்மாத்ர மானபரப் பிரம மானேன்
சஞ்தனமாய் நின்றபரப் பிரம மானேன்
சின்மாத்ர மானபரப் பிரம மானேன்
சிதாகாய சொரூபபரப் பிரம மானே
னன்மாத்ர மானபரப் பிரம மானே
ஞதநின தருண்மகிமை யென்சொல் வேன்யான். (21)

நினதருளா னித்தபரப் பிரம மானே
னினதருளாற் சுத்தபரப் பிரம மானே
னினதருளாற் புத்தபரப் பிரம மானே
னினதருளான் முத்தபரப் பிரம மானே
னினதருளா லமலபரப் பிரம மானே
னினதருளா லசலபரப் பிரம மானே
னினதருளா லகண்டபரப் பிரம மானே
னினதருளின் மகிமையினை யென்சொல்வேன்யான். (22)

நினதருளால் வியாபகமாம் பிரம மானே
னினதருளால் விசேடமிலாப் பிரம மானே
னினதருளாற் றத்துவமாம் பிரம மானே
னினதருளாற் றடையற்ற பிரம மானே
னினதருளா லெங்குமுள பிரம மானே
னினதருளா லெவையுமிலாப் பிரம மானே
னினதருளா லேகபரப் பிரம மானே
னினதருளின் மகிமையினை யென்சொல் வேன்யான். (23)

நினதருளா லயன்முதலும் மூர்த்தி யானே
னினதருளா லசுரர்சுரர் நரரு மானே
னினதருளா லநந்தவித சகத்து மானே
னினதருளா லனைத்திற்கு மதீத மானே
னினதருளா லெவையுமிலா தகண்ட மான
நித்தபரி சுத்தபர சிவமே யானே
னினதருளா லகண்டசிதா காய மாக
நிகழ்கின்ற நிமலபர சிவமே யானேன். (24)

நினதருளால் வன்னங்க ளெவையு மில்லை
நினதருளா லாச்சிரம மெவையு மில்லை
நினதருளாற் லவையினபி மானி யில்லை
நினதருளா லங்குசெயுங் கரும மில்லை
நினதருளாற் றுக்கசுக மெவையு மில்லை
நினதருளாற் றுவந்துவமே தொன்று மில்லை
நினதருளா லெப்பொருளு மெங்கு மில்லை
நினதருளால் யாவையுமே பிரமந் தானே. (25)

நினதருளா லாதியிலை வியாதி யில்லை
நினதருளா லாபத்து சம்பத் தில்லை
நினதருளாற் றிகழுமொரு பேத மில்லை
நினதருளாற் றினையளவும் பயமு மில்லை
நினதருளா னீயுமிலை நானு மில்லை
நினதருளாற் சீவபர சகத்தே யில்லை
நினதருளா லெப்பொருளு மொன்று மில்லை
நிகில முமே யகண்டபரப் பிரமந் தானே. (26)

நினதருளா லஞ்ஞான மனைத்து நீங்கி
நிருமலமாம் விஞ்ஞான நிலைமை பெற்றே
னினதருளா லித்துவித மனைத்து நீங்கி
நிலைபெற்ற வத்துவித நிட்டை யுற்றே
னினதருளாற் பவதுக்க மனைத்து நீங்கி
நிச்சலமா மோட்சசுக மடைந்தே னானே
னினதருளா னித்தியசிற் சுகமாய் நின்ற
நிகரற்ற பரப்பிரம மானே னையா. (27)

சற்குருவே வெகுவிதமாய் விளம்பி யென்ன
சலனமிலா தினைந்திட கருணை யாலே
துர்க்குணமா மனுதிபவ வாரி தன்னைத்
துடியளவி லெளிதாகக் கடந்தோ னாகி
முக்குணமாம் விகாரங்கண் முழுது மின்றி
மூலமதா மஞ்ஞான லேச மின்றி
நிர்க்குணமாய் நித்தியசிற் சுகமாய் நின்ற
நிகரற்ற பரப்பிரம மானே னையா. (28)

இன்னவித மகண்டபரப் பிரமத் தின்க
ணிருமையறத் தான்பெற்ற வநுபவத்தை
யன்னரிபு மாமுனிவன் றனக்கு முன்பா
யத்யந்த விநயமுட னிதாக னோதிப்
பின்னனுவும் விகற்பமிலா வகண்ட மாகப்
பிறங்கியதன் வடிவான பிரமத் தின்கட்
டன்னுடைய விருத்தியினை நிலைக்க வைத்துத்
தடையற்ற வாநந்த மநுப வித்தான். (29)

பொருவில்சிவ பூசனையே முதலாம் பத்தி
புரிந்ததனாற் சிவகருணை பொருந்தி னோர்க்கே
சருவமுமே பிரமமொன்று மதுநா னென்றுஞ்
சாற்றியவிவ் வகண்டபர ஞானந் தோன்றி
மருவமிக வரிதான முத்திப் பேறு
மற்றவருக் கிலையென்வே முன்பு கந்த
னரியசிவ பத்திமிகுஞ் சைகீ சவ்யற்
கருளியவா றகிலர்க்கு மறைந்தான் சூதன். (30)

வேறு

பிரிவுபோலப் பிறங்கியயாவையும் பிரமமேயென மற்றதுநீயெனக்
குரவனோதிய வண்ணமிதாகனுங் குறைவிலாவநு பூதியடைந்ததைப்
பரிவினோடவன் முன்புரமாகவே பகரலுற்றன னென்றுபகர்ந்திட
லரியவாநந்தத் தாண்டவமாடுநம் மகிலநாதனகண்டசொரூபமே (31)

முப்பத்தொன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 39க்கு திருவிருத்தம் 1742.

++++++++++++++++++++++++++++++++++++++++++

## நாற்பதாவது

நிதாகன்ற நுபவத்தினூற் றிருசியமே யில்லையென்றுந்
திருக்கான பிரமமே நானென்றுங் குரவனுக்கு
நமஸ்காராதி செய்ய விடமில்லை யென்று முரைக்கும்
அத்தியாயம்.

பேசவொணு வகண்டபர மாநந் தத்தைப்
பெற்றவனு நிதாகமுனி மற்றுஞ் சொல்வா
னுசிரிய நினதுநிட கருணை யாலே
யகண்டபர மாநந்தக் கடலின் மூழ்கிப்
பாசமுறும் பவதுன்ப மனைத்து நீக்கிப்
பரப்பிரம வடிவான வென்ற னக்கிங்
கீசசக சீவரெனு மிருமைத் தோற்ற
மெள்ளளவு மில்லையிஃ தென்னே யென்னே. (1)

தூலமெனத் தோன்றியதா முடலுங் காணேன்
சூக்கமெனத் தோற்றியதா முடலுங் காணேன்
மூலமெனத் தோன்றியதா முடலுங் காணேன்
மோகமன முதலியதா மொன்றுங் காணேன்
காலமொடு தேசமுத லெவையுங் காணேன்
கற்பிதமாய்த் தோன்றியதோ ரணுவுங் காணேன்
சாலவுப சாந்தமதாய்ச் சலன மின்றிச்
சன்மயமாம் பரப்பிரம மானே னையா. (2)

சடமசட முதலியதா மெவையுங் காணேன்
சத்துடனே யசத்துமுத லெவையுங் காணேன்
கடபடமே முதலியவெப் பொருளுங் காணேன்
காரியகா ரணமான தெவையுங் காணே
னுடன்முதலா முபாதிகளோ ரணுவுங் காணே
னுபாதியுறுஞ் சீவபா ராருங் காணே
னிடர்மருவா வின்புருவா யிலங்குஞ் சித்தா
யென்றுமுள பரப்பிரம மானே னையா. (3)

அரனயன்மான் முதலியவோ ருருவுங் காணே
னவர்புரியு மைவகையாஞ் செயலுங் காணேன்
சுராசுரர் நரர்திரியக் கெவையுங் காணேன்
சூரியசந் திரருடுமி னெவையுங் காணேன்
பரமிகமாய்ப் பரவியதோ ரணுவுங் காணேன்
பரசீவ சகங்களெனும் பகுப்புங் காணேன்
வரமதுவாய் வானெனவோர் வடிவுமில்லா
வத்துவதாம் பரப்பிரம மானே னையா (4)

துவிதமொடத் துவிதமுத லெவையுங் காணேன்
றுக்கசுகந் துதிநிந்தை யெவையுங் காணேன்
விவிதமத பேதங்க ளனைத்துங் காணேன்
வேறெனவே விளங்கியவெப் பொருளுங் காணேன்
சுவமருவுங் குருசீட ராருங் காணேன்
சொல்லியிடு முபதேச வாக்குங் காணே
னவமருவா வகண்டபா சித்தே யாகி
யசஞ்சலமாம் பரப்பிரம மானே னையா. (5)

சலனமுறு மஞ்ஞான மணுவுங் காணேன்
சந்தேக விபரீத மனைத்துங் காணே
னிலைமருவுஞ் சிரவணமே முதலுங் காணே
னிதித்யாச முதலியவோர் நிலையுங் காணேன்
கலனமுறுந் துவிதத்தின் பயமுங் காணேன்
கடக்கவொணுப் பவபாச மனைத்துங் காணே
னலைவுபெறு வகண்டபா சித்தே யான
வத்துவித பரப்பிரம மானே னையா. (6)

சனனமுதல் விகாரங்க ளெவையுங் காணேன்
சரீரமுதல் விகாரிகளு மெவையுங் காணே
னனவுமுத லவத்தைகளு மெவையுங் காணே
ணமருகு குணங்களுமற் றெவையுங் காணேன்
கனவுயர்வு தாழ்வுமுத லெவையுங் காணேன்
கற்பிதமாந் துவந்துவமே தொன்றுங் காணே
னநவாத மாநந்த கனமே யான
வத்துவித பரப்பிரம மானே னையா. (7)

பூதமொடு புவனமுத லெவையுங் காணேன்
பொறிகளொடு புலன்களுமற் றெவையுங் காணேன்
வேதமொடு மிருதிமுத லெவையுங் காணேன்
விதியுடனே நிடேதமுமற் றெவையுங் காணேன்
சாதியொடு நீதிகுல மெவையுங் காணேன்
சாதிக்குங் கருமமுத லெவையுங் காணே
னாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
வத்துவித பரப்பிரம மானே னையா. (8)

இருமையெனப் பிரமமலா தெவையுங் காணே
னிருப்பதெலாம் பரப்பிரம வடிவாக் கண்டே
னொருபொருளும் பிரமமலா தயலாக் காணே
னுள்ளதெலாம் பரப்பிரம வடிவாக் கண்டேன்
சருவமெனப் பிறிதாகச் சிறிதுங் காணேன்
சகலமுமே பரப்பிரம வடிவாக் கண்டேன்
குருவாவப் பரப்பிரம நானே யானேன்
குறைவற்ற நினதருளின் மகிமை யென்னே. (9)

சற்போத சுககனமாம் பிரம நானே
சலனமிலாச் சாந்தபரப் பிரம நானே
தற்போத சூனியமாம் பிரம நானே
தன்மயமாய் நின்றபரப் பிரம நானே
கற்போல வசைவற்ற பிரம நானே
களங்கமிலா வகண்டபரப் பிரம நானென்
றெப்போதும் பழகியவிந் நிச்ச யத்தா
லிருமையிலாப் பரப்பிரம மானே னையா. (10)

தொந்தமிலாத் துரியபரப் பிரம நானே
துகளற்ற தூயபரப் பிரம நானே
யந்தமிலா நித்தபரப் பிரம நானே
யத்யந்த சுத்தபரப் பிரம நானே
பந்தமிலா முத்தபரப் பிரம நானே
பகுப்பற்ற புத்தபரப் பிரம நானென்
றிந்தவிதம் பழகியவிந் நிச்ச யத்தா
லிருமையிலாப் பரப்பிரம மானே னையா. (11)

நிகிலவதிட் டானபரப் பிரம நானே
நிகிலமுமாய் நிகழ்கின்ற பிரம நானே
யகிலவிலட் சணமான பிரம நானே
யனைத்துமிலா வத்துவிதப் பிரம நானே
சகலபரி பூரணமாம் பிரம நானே
சட்பாவ விகாரமிலாப் பிரம நானென்
றிகழ்வறவே பழகியவிந் நிச்ச யத்தா
லிருமையிலாப் பரப்பிரம மானே னையா. (12)

சத்தியசிற் சுககனமாம் பிரம நானே
சதாநந்த கனமான பிரம நானே
நித்தியநிட் களமான பிரம நானே
நிராவரண மானபரப் பிரம நானே,
யத்துவித மானபரப் பிரம நானே
யகண்டபரி பூரணமாம் பிரம நானென்
றித்திறமாய்ப் பழகியவிந் நிச்ச யத்தா
லிருமையிலாப் பரப்பிரம மானே னையா. (13)

கற்பிதமோ ரணுவுமிலாப் பிரம நானே
களங்கமற நின்றபரப் பிரம நானே
சிற்பதமாய்ச் செறிந்தபரப் பிரம நானே
சிதாகாய மானபரப் பிரம நானே
நிர்ப்பயமாய் நிலைத்தபரப் பிரம நானே
நீக்கமற நிறைந்தபரப் பிரம நானென்
றற்புதமாய்ப் பழகியவிந் நிச்ச யத்தா
லகண்டமதாம் பரப்பிரம மானே னையா. (14)

பாசமிலாப் பரப்பிரம சொரூப நானே
பழுதற்ற பரப்பிரம சொரூப நானே
நாசமிலாப் பரப்பிரம சொரூப நானே
நவையற்ற பரப்பிரம சொரூப நானே
பேசவொணுப் பரப்பிரம சொரூப நானே
பிரிவற்ற பரப்பிரம சொரூப நானென்
ருசறவே பழகியவிந் நிச்ச யத்தா
லகண்டமதாம் பரப்பிரம மானே னையா. (15)

புராதனமாம் பரப்பிரம சொரூப நானே
பூரணமாம் பரப்பிரம சொரூப நானே
நிராமயமாம் பரப்பிரம சொரூப நானே
நிச்சலமாம் பரப்பிரம சொரூப நானே
பராபரமாம் பரப்பிரம சொரூப நானே
பாவனமாம் பரப்பிரம சொரூப நானென்
றிராப்பகலும் பழகியவிந் நிச்ச யத்தா
லிணையற்ற பரப்பிரம மானே னையா. (16)

நிருமலமாம் பரப்பிரம சொரூப நானே
நிர்க்குணமாம் பரப்பிரம சொரூப நானே
யொருவடிவாம் பரப்பிரம சொரூப நானே
யுவமையிலாப் பரப்பிரம சொரூப நானே
பெருமைமிகும் பரப்பிரம சொரூப நானே
பேதமிலாப் பரப்பிரம சொரூப நானென்
றிருமையறப் பழகியவிந் நிச்ச யத்தா
லிணையற்ற பரப்பிரம மானே னையா. (17)

நித்தமதாம் பரப்பிரம சொரூப நானே
நிரஞ்சனமாம் பரப்பிரம சொரூப நானே
சுத்தமதாம் பரப்பிரம சொரூப நானே
சூட்சுமமாம் பரப்பிரம சொரூப நானே
புத்தமமாம் பரப்பிரம சொரூப நானே
யுணர்வுருவாம் பரப்பிரம சொரூப நானென்
றத்தமறப் பழகியவிந் நிச்ச யத்தா
லழிவற்ற பரப்பிரம மானே னையா. (18)

நினதருளா லியான்பெற்ற வநுப வத்தை
நிகழ்வுறவே யிவ்வண்ண நிகழ்த்த லானேன்
கனகருணை வாரிதியே யானு னக்குக்
கைம்மாறு செய்திடவிங் கொன்றுமில்லை
மனதுடனே யெனதுடலை நினக்க ளித்தேன்
மற்றதனை நிமிடத்தி னீறு செய்தா
யனகவென தான்மாவை நினக்க ளித்தே
னதனையுநின் றன்மாவே யாக்கிக் கொண்டாய். (19)

இனியெதனைக் கைம்மாறு செய்வே னெல்லா
மிருமையிலா நினதுநிச சொரூபந் தானே
யனியமிலா நீநானாய் நானே நீயா
யமர்கின்ற வைக்கியமா மாழி யின்க
ணனியுமகம் பிரமாஸ்மி ஞானத் தாலே
நான்மூழ்கி யொன்றாகக் கலந்தே னன்றோ
தனியுருவாய்த் தான்றானாய்த் தனித்த வித்தத்
தகமையினிற் றனக்கயலோ ரணுவு முண்டோ. (20)

ஆதலினால் யான்கைம்மா றளிப்ப தற்கு
மதனையடைந் தெங்கணுநீ போவ தற்கு
மேதுமிலை யெப்போது மெவ்வி டத்து
மிருப்பதெலா மேகசிதா காயந் தானே
யோதியவா றோரணுவு மயலில் லாதா
லொன்றினைநீ யுபதேசஞ் செய்வ தற்கு
மீதினையா னினிமையுடன் கேட்ப தற்கு
மிடமதிலை யிவ்விசித்ர மென்னை யையா. (21)

சற்குருவா யருளியிடு நீயு மில்லை
சற்சீட னாகியுள நானு மில்லை
முக்குணமாய்த் தோற்றியவோர் பிரிவு மில்லை
மூலமதா மவித்தையிலை மாயை யில்லை
துர்க்குணமாய்த் தோற்றியவோர் சகத்து மில்லை
தொடர்வுற்ற சீவேச ராரு மில்லை
நிர்க்குணமாம் பரப்பிரம சொரூப மொன்றே
நீக்கமற நிலைபெற்று நிகழ்ந்த தன்றோ. (22)

ஏகமதாம் பரப்பிரம சொரூப மென்னு
மிணையற்ற வானந்த சாக ரத்திற்
றாகமற மூழ்கிவிளை யாடி நன்றாய்த்
தாபமெலாந் தவிர்ந்தந்த மயமே யாகிப்
பாகமற நிலைநின்ற வென்ற னக்குப்
பார்க்கவொரு பொருளேனு மயலே யில்லை
சோகமெலாந் தவிர்த்தென்னை யாளா நின்ற
சுககுருவே நினதருளின் பெருமை யென்னே. (23)

இன்றடியே னுனைநோக்கி வணங்கு வேனே
 லிரண்டுபடு மதனாலவ் வணக்கங் கூடா
தன்றியெனை யானோக்கி வணங்கு வேனே
 லனுகுபல னிலாமையினு லதுவுங் கூடா
தென்றுமொரு வடிவான வுன்னை நோக்கி
 யிருமையுற யானின்று வணங்கு வேனோ
னின்றவெனை யஞ்ஞானி யெனநீ சொல்வாய்
 நிருமலமாந் தன்னிலையி லிருமை யுண்டோ. (24)

நிருமலமாஞ் சற்குருவே நானிப் போது
 நீயென்று நானென்றும் பேத மெண்ணிப்
பரிவுடனே யுனைநோக்கி வணங்கு வேனேற்
 பரிச்சேதப் படுவதனால் யானெ னக்கே
பிரபலமா முபசாரஞ் செய்தோ னாவேன்
 பேதமுறு மதியன்றோ பயத்துக் கேது
பரகுருவே யாதலினு லாயுங் காலைப்
 பண்ணியிடு முபசார மொன்றுங் காணேன். (25)

எப்போது மெல்லாமு மேக சித்தா
 யிருப்பதனு லத்யந்த மௌனி யாகிக்
கற்போல வசைவற்றுக் களங்க மற்றுக்
 கற்பிதமாஞ் சங்கற்ப விகற்ப மற்றுத்
தற்போத சூனியனாய்த் தானே தானாய்த்
 தனித்துரமாய் நிற்பதுவே யறநன் றன்றி
யெப்பேத மதியினையு முன்போன் மற்று
 மெய்தியிட லெனக்கிதமாய்த் தோற்ற வில்லை. (26)

சோகமெலா மறநீக்கி யென்னை யாண்ட
 சுகுருவே நீயருளு முபதே சத்தாற்
பாகமுறத் தோற்றியிடுந் தோற்ற மெல்லாம்
 பரப்பிரம வடிவான நானே யாகு
மேகபரி பூரணமா மென்னை யல்லா
 லெப்போது மெள்ளளவு மெவையு மில்லை
யாகையினு லன்னியமா முபசா ரத்தை
 யன்புடன்யான் செய்திடவோ ரிடமு மில்லை. (27)

குறைவுதரு மஞ்ஞான தசையின் முன்பு
குருசீடர் முதலியதாம் பேதங் கண்டே
னிறைவுதரு விஞ்ஞான தசையி லின்று
நினதருளா லெப்பேத மயலுங் காணேன்
சிறுமைதரும் பேதமல மனைத்து நீங்கிச்
சின்மயமாம் பரப்பிரம சொரூப மாகி
மறைவறவே தான்ருனாய்த் தனித்த வென்றன்
மகத்தான மகிமைதனை யென்சொல் வேன்யான். (28)

உற்பவமா ருலகங்க ளெவையு மின்றி
யோதியிடுங் குருசீட ராரு மின்றிக்
கற்பிதமா மாயைமுத லுபாதி யின்றிக்
கருதியிடுஞ் சீவேச ராரு மின்றி
நிர்ப்பயமாய் நிலைபெற்று நிகரொன் றின்றி
நிகிலமகா வாக்குகளின் பொருளாய் நின்ற
வற்பமிலாப் பரப்பிரம மான வென்ற
னதிசயமா மகிமைதனை யென்சொல் வேன்யான். (29)

குறைவின்றி நிறைவின்றிக் குற்ற மின்றிக்
குணங்குறிகண் முதலியவை யெவையு மின்றி
மறைவின்றித் தெரிவின்றி யனது மின்றி
மனோமயமா மயக்கங்க ளனைத்து மின்றிப்
பிறிதின்றித் தனதின்றிப் பிரிவொன் றின்றிப்
பேதமுறு மெய்பொருளு மென்று மின்றி
யறிவொன்றே வடிவான பிரம மாக
வமைவுற்ற வென்மகிமை யென்சொல் வேன்யான். (30)

சன்மாத்ர மானபரப் பிரம மாகிச்
சலனமற நிலைநின்ற வென்ற னக்குச்
சின்மாத்ர மாகியுள வென்னை யல்லாற்
சிறிதுமொரு விகற்பமுமே பிறிதா யில்லை
யென்மாத்ர மாகியுள வென்னை யல்லா
லெவையேனு மிருந்திடுமே விலகு மன்றே
தன்மாத்ர மலமெவையுந் தோற்ற தத்தாற்
ருன்ருனாய்த் தனித்தென்று நிற்கின் றேன்யான். (31)

விரிவுறவே வெகுவிதமாய் விளம்பி யென்ன
வேறறவே நீயருளு முபதேச சக்கரற்
சருவமுமே பிரமமென்று மநுநா னென்றுஞ்
சலனமிலா வகண்டபர போதம் பெற்றுத்
திருசியமாம் பேதமய லனைத்துந் தீர்த்துத்
திகழ்வுருவாம் பரப்பிரம வடிவே யானே
னருளுருவா யெழுந்தருளி யென்னை யாண்ட
வாசிரிய நினதருளீ தென்னே யென்னே. (32)

அகோபேத மபலனுவு மெங்கு மில்லை
யகோமாயை மகதாதி யெவையு மில்லை
யகோசித்த முதலியதோ ரணுவு மில்லை
யகோசீவர் முதலியவ ராரு மில்லை
யகோமோக மணுவேனு மெங்கு மில்லை
யகோபாச மணுவேனு மெங்கு மில்லை
யகோவென்று மெப்பொருளு மெங்கு மில்லை
யகோவெவையு மகண்டபரப் பிரமந் தானே. (33)

அகோகுருவின் மகிமையினை யென்சொல் வேன்யா
னகோநூலின் மகிமையினை யென்சொல் வேன்யா
னகோஞான மகிமையினை யென்சொல் வேன்யா
னகோஞானி மகிமையினை யென்சொல் வேன்யா
னகோசாது மகிமையினை யென்சொல் வேன்யா
னகோசாந்தி மகிமையினை யென்சொல் வேன்யா
னகோபிரம சுகமகிமை யென்சொல் வேன்யா
னகோவெனது சுகமகிமை யென்சொல் வேன்யான். ()

அகோநித்த பரப்பிரம நானே யானே
னகோசுத்த பரப்பிரம நானே யானே
னகோபுத்த பரப்பிரம நானே யானே
னகோமுத்த பரப்பிரம நானே யானே
னகோவமல பரப்பிரம நானே யானே
னகோவசல பரப்பிரம நானே யானே
னகோகுறைவில் பரப்பிரம நானே யானே
னகோகுரவ நினதருளீ தென்னே யென்னே. (35)

கற்பிதமாந் தோற்றமெலாம் பிரம மென்றே
காண்பதலான் மற்றணுவு மயலாக் காணேன்
செப்பியவிவ் வதிதிடமா நிச்ச யத்தாற்
சின்மயமாம் பரப்பிரம மாகி நின்றே
னிப்படியென் மனதிலுள நிர்ணா யத்தை
யிசைப்புற்றே னிதிலிறையு மைய மில்லை
நிர்ப்பயமா வெனைமுழுது மாளுந் தன்மை
நிகரற்ற சற்குருவே நினது பாரம். (36)

இன்னவித நிதாகமுனி யிசைத்த பின்ன
ரிணையற்ற தன்சொருப சுகத் திருந்தான்
மன்னுசிவ பத்தியுடன் குருவின் பத்தி
மருவினவ ரேமகத்தா மோட்சஞ் சார்வ
ரன்னியர்க ளொருகாலு மதனைச் சாரா
ரணுவுமிதி லையமிலை யெனவே கந்த
னுன்னவொணுக் கருணையுடன் சைகீ ஷவ்யற்
கோதியவா றகிலர்க்கு முரைத்தான் சூதன். (37)

வேறு.

அரியதான வகண்டபரம்பொரு ளநுபவத்தை யடைந்தநிதாகனிங்
குரியதன்னநு பூதியுரைப்பது மொன்றுமேபரமன்றி யிலாமையாற்
குரவனுக்குபசாரங்கள் செய்திடக் கூடுமாறிலையென்று குறிப்பதும்
பரமவாநந்தத் தாண்டவமாடுநம் பரசிவன்ற னகண்டசொரூபமே.

நாற்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 40-க்கு திருவிருத்தம் 1780.

++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

## நாற்பத்தொன்றாவது

நிதாகன் றன்னநுபவத்தினால் நானேசராசரப்
பிரபஞ்சமெல்லா மானேனென்றும்நானே
சத்தியக்ஞாந வனந்தாநந்தப்பிரம
மானேனென்றும் உரைக்கும்
அத்தியாயம்.

—◦◦◇◦◦—

ஆசிரிய நினதுநிட கருணை யாலே
யகண்டமதாம் பரப்பிரம வநுப வத்தை
மாசறவே நானுரமாய் மதித்த வண்ண
மகிழ்வுடனே மயக்கமற மற்றுஞ் சொல்வேன்
பாசமுறுஞ் சித்தமுத லுபாதி யின்றிப்
பகுப்புற்ற மாயைமுத லுபாதி யின்றி
யீசசக சீவனெனு மிருமை யின்றி
யேகமதாம் பரப்பிரம நானே யானேன். (1)

நான்றானே சன்மயமாம் பிரம மானே
னன்றானே சின்மயமாம் பிரம மானே
னன்றானே நன்மயமாம் பிரம மானே
னன்றானே தன்மயமாம் பிரம மானே
னன்றானே நின்மலமாம் பிரம மானே
னன்றானே நிர்க்குணமாம் பிரம மானே
னன்றானே யத்துவிதப் பிரம மானே
னன்றானே யகண்டபரப் பிரம மானேன். (2)

நான்றானே கேவலமாம் பிரம மானே
னன்றானே கெம்பீரப் பிரம மானே
னன்றானே பாவனமாம் பிரம மானே
னன்றானே பரிசுத்தப் பிரம மானே
னன்றானே யோவிலாப் பிரம மானே
னன்றானே யுத்தமமாம் பிரம மானே
னன்றானே யாவிலாப் பிரம மானே
னன்றானே யகண்டபரப் பிரம மானேன். (3)

நான்றானே சத்தியமாம் பிரம மானே
ஞான்றானே சலனமிலாப் பிரம மானே
ஞான்றானே நித்தியமாம் பிரம மானே
ஞான்றானே நிட்களமாம் பிரம மானே
ஞான்றானே சுத்தமதாம் பிரம மானே
ஞான்றானே சுககனமாம் பிரம மானே
ஞான்றானே யத்தமிலாப் பிரம மானே
ஞான்றானே யகண்டபரப் பிரம மானேன். (4)

நான்றானே விகாரமிலாப் பிரம மானே
ஞான்றானே விமலமதாம் பிரம மானே
ஞான்றானே விசேடமிலாப் பிரம மானே
ஞான்றானே வியாபகமாம் பிரம மானே
ஞான்றானே விநாசமிலாப் பிரம மானே
ஞான்றானே விபுவதுவாம் பிரம மானே
ஞான்றானே விவர்த்தமிலாப் பிரம மானே
ஞான்றானே விசுத்தபரப் பிரம மானேன். (5)

நான்றானே நிராமயமாம் பிரம மானே
ஞான்றானே நிரவயவப் பிரம மானே
ஞான்றானே நிராவரணப் பிரம மானே
ஞான்றானே நிட்கிரியப் பிரம மானே
ஞான்றானே நிருமலமாம் பிரம மானே
ஞான்றானே நிச்சலமாம் பிரம மானே
ஞான்றானே நிருபமமாம் பிரம மானே
ஞான்றானே நிகரில்பரப் பிரம மானேன். (6)

நான்றானே சிந்தையிலாப் பிரம மானே
ஞான்றானே சிற்கனமாம் பிரம மானே
ஞான்றானே தொந்தமிலாப் பிரம மானே
ஞான்றானே துகளற்ற பிரம மானே
ஞான்றானே பந்தமிலாப் பிரம மானே
ஞான்றானே பழுதற்ற பிரம மானே
ஞான்றானே யந்தமிலாப் பிரம மானே
ஞான்றானே யகண்டபரப் பிரம மானேன். (7)

நான்றானே புராதனமாம் பிரம மானே
 னன்றானே பூரணமாம் பிரம மானே
னன்றானே சாதியிலாப் பிரம மானே
 னன்றானே சற்கனமாம் பிரம மானே
னன்றானே யனாமயமாம் பிரம மானே
 னன்றானே யசங்கபரப் பிரம மானே
னன்றானே சனாதனமாம் பிரம மானே
 னன்றானே சாந்தபரப் பிரம மானேன். (8)

நான்றானே லட்சியமாம் பிரம மானே
 னன்றானே லயமற்ற பிரம மானே
னன்றானே யட்சரமாம் பிரம மானே
 னன்றானே யழிவற்ற பிரம மானே
னன்றானே சித்துருவாம் பிரம மானே
 னன்றானே சிதம்பரமாம் பிரம மானே
னன்றானே வித்தரமாம் பிரம மானே
 னன்றானே விதேகபரப் பிரம மானேன். (9)

நான்றானே சங்கமிலாப் பிரம மானே
 னன்றானே சதோதிதமாம் பிரம மானே
னன்றானே பங்கமிலாப் பிரம மானே
 னன்றானே பரசிவமாம் பிரம மானே
னன்றானே துங்கமதாம் பிரம மானே
 னன்றானே துவிதமிலாப் பிரம மானே
னன்றானே யெங்குமுள பிரம மானே
 னன்றானே யேகபரப் பிரம மானேன். (10)

நான்றானே மூலமிலாப் பிரம மானே
 னன்றானே மொழிவற்ற பிரம மானே
னன்றானே காலமிலாப் பிரம மானே
 னன்றானே கரையற்ற பிரம மானே
னன்றானே கோலமிலாப் பிரம மானே
 னன்றானே குறைவற்ற பிரம மானே
னன்றானே ஞானமிலாப் பிரம மானே
 னன்றானே நவையில்பரப் பிரம மானேன். (11)

நான்ருனே தேகமிலாப் பிரம மானே
ஞன்ருனே தெரிவுருவாம் பிரம மானே
ஞன்ருனே போகமிலாப் பிரம மானே
ஞன்ருனே புரைமருவாப் பிரம மானே
ஞன்ருனே தாகமிலாப் பிரம மானே
ஞன்ருனே தணிந்தபரப் பிரம மானே
ஞன்ருனே சோகமிலாப் பிரம மானே
ஞன்ருனே சுத்தபரப் பிரம மானோன். (12)

நான்ருனே யகிலவதிட் டான மானே
ஞன்ருனே யாரோப மனைத்து மானே
ஞன்ருனே யயன்முதலெம் மூர்த்தி யானே
ஞன்ருனே யவர்செய்கை யனைத்து மானே
ஞன்ருனே யமரர்நரர் திரியக் கானே
ஞன்ருனே யசலமுத லனைத்து மானே
ஞன்ருனே யகிலசரா சரமு மானே
ஞன்ருனே யகண்டபர மானே னையா. (13)

நான்ருனே மாயைமக தாதி யானே
ஞன்ருனே மன்னியிடு மீச ஞனே
ஞன்ருனே யவித்தையக மாதி யானே
ஞன்ருனே யநேகவித சீவ ரானே
ஞன்ருனே தாமதமாம் பகுதி யானே
ஞன்ருனே தயங்குசக மெவையு மானே
ஞன்ருனே யறிவுற்ற தனைத்து மானே
ஞன்ருனே யகண்டபர மானே னையா. (14)

நான்ருனே யயனுனே னரியு மானே
ஞன்ருனே யரனுனேன் மகேச ஞனே
ஞன்ருனே சதாசிவமா மூர்த்தி யானே
ஞன்ருனே சாட்சாத்தாஞ் சிவனு மானே
ஞன்ருனே கருதுமுமா தேவி யானே
ஞன்ருனே கந்தவிநா யகரு மானே
ஞன்ருனே பரமசிவ கணங்க ளானே
ஞன்ருனே பத்தர்குழு வனைத்து மானேன். (15)

நான்ருனே சுராசுர ராரு மானே
ஞன்ருனே சுரபதியா மகவா ஞனே
ஞன்ருனே திக்கனைத்தின் பதிக ளானே
ஞன்ருனே திகழ்முனிவர் குழுவு மானே
ஞன்ருனே யரக்கருட னியக்க ரானே
ஞன்ருனே யநேகசுர பேத மானே
ஞன்ருனே விண்ணிலுளோ ராரு மானே
ஞன்ருனே மண்ணிலுளோ ரெவரு மானேன். (16)

நான்ருனே பூதங்க ளனைத்து மானே
ஞன்ருனே புவனங்க ளனைத்து மானே
ஞன்ருனே சாதங்க ளனைத்து மானே
ஞன்ருனே சரிதைமுத லனைத்து மானே
ஞன்ருனே வேதங்க ளனைத்து மானே
ஞன்ருனே விதிமுதலா மனைத்து மானே
ஞன்ருனே பேதங்க ளனைத்து மானே
ஞன்ருனே பிரிவற்ற தனைத்து மானேன். (17)

நான்ருனே வாரிதிக ளனைத்து மானே
ஞன்ருனே வருநதிக ளனைத்து மானே
ஞன்ருனே யடவிகிரி யனைத்து மானே
ஞன்ருனே யங்குள்ள தனைத்து மானே
ஞன்ருனே யவனிபுன லனைத்து மானே
ஞன்ருனே யங்கிமருத் தனைத்து மானே
ஞன்ருனே யாகாய மனைத்து மானே
ஞன்ருனே யத்தன்முத லாரு மானேன். (18)

நான்ருனே யுடல்பொறிக ளனைத்து மானே
ஞன்ருனே யுயிர்களுள யனைத்து மானே
ஞன்ருனே மனதுமதி யனைத்து மானே
ஞன்ருனே மயல்சித்த மனைத்து மானே
ஞன்ருனே யகங்கார மனைத்து மானே
ஞன்ருனே யாவரண மனைத்து மானே
ஞன்ருனே விட்சேப மனைத்து மானே
ஞன்ருனே விளங்குபொரு ளனைத்து மானேன். (19)

நான்ருனே நான்குவித தேக மானே
ஞான்ருனே நனவுமுத லவத்தை யானே
ஞான்ருனே யைந்துவித கோச மானே
ஞான்ருனே யவையினபி மானி யானே
ஞான்ருனே விசுவன்முதல் வியட்டி யானே
ஞான்ருனே விராட்டுமுதற் சமட்டி யானே
ஞான்ருனே யறிவுற்ற தனைத்து மானே
ஞான்ருனே யறியாத தனைத்து மானேன். (20)

பூதமொடு பௌதிகமு மானே ஞானே
புவனமுறும் பொருளெவையு மானே ஞானே
பேதமுறு முலகமெலா மானே ஞானே
பிரமாண்ட கோடிகளு மானே ஞானே
சாதமுறு மெய்பொருளு மானே ஞானே
சகசீவ பரங்களெலா மானே ஞானே
யோதுபல வுபாதிகளு மானே ஞானே
யுபாதியிலா வுண்மையுமின் ருனே ஞானே. (21)

வெகுவிதமாய் விளம்பியென்ன விவகா ரத்தில்
வேறெனவே காண்பதெலா மானே ஞானே
சகமைமிகும் பரமார்த்தத் தெவையு மின்றித்
தன்மயமாய் நின்றபர மானே ஞானே
யகமருவுந் தோடமெலா மறவு நீங்கி
யகண்டபரப் பிரமமதாய் நின்ற வென்ற
னிகழ்வுபெரு மகிமைதனை யென்சொல் வேன்யா
னீசவெலா நின்கருணைத் திறமை யன்றோ. (22)

சத்தியஞா ஞநந்தப் பிரம மானேன்
சகலபரி பூரணமாம் பிரம மானே
னித்தியஞா ஞநந்தப் பிரம மானே
னிச்சலமாய் நிலைபெற்ற பிரம மானேன்
சுத்தசிதா காயபரப் பிரம மானேன்
சொற்பொருளோ ரிறையுமிலாப் பிரம மானே
னத்துவிதா கண்டபரப் பிரம மானே
னையநின் தருண்மகிமை யென்னே யென்னே (23)

சகலமிலாச் சாந்தபரப் பிரம மானேன்
சருவான்மா வானபரப் பிரம மானேன்
விகலமிலா விமலபரப் பிரம மானேன்
வியாபகமாய் நின்றபரப் பிரம மானேன்
றுகளணுகாத் துரியபரப் பிரம மானேன்
றுரியத்து மதீதபரப் பிரம மானே
னகமருவா வகண்டபரப் பிரம மானே
னீயநின தருண்மகிமை யென்னே யென்னே. (24)

உருவமெலா மொழிந்தபரப் பிரம மானே
ேனாருருவாய் நின்றபரப் பிரம மானே
னருவமதா யமர்ந்தபரப் பிரம மானே
னசஞ்சலமாய் நின்றபரப் பிரம மானே
னிருமலமாய் நிறைந்தபரப் பிரம மானே
னிரஞ்சனமாய் நின்றபரப் பிரம மானே
னிருமையிலா வேகபரப் பிரம மானே
னீசநின தருண்மகிமை யென்னே யென்னே. (25)

நித்தியமும் புத்தபரப் பிரம மானே
னித்தியமுஞ் சுத்தபரப் பிரம மானே
னித்தியமு முத்தபரப் பிரம மானே
னித்தியமுந் திருத்தபரப் பிரம மானே
னத்துவித முற்றபரப் பிரம மானே
ஞகார மற்றபரப் பிரம மானே
னித்துவித மிற்றபரப் பிரம மானே
னீசநின தருண்மகிமை யென்னே யென்னே. (26)

ஒருமூன்று வடிவுமிலாச் சொரூப மானே
னுணர்வுருவாய் நின்றபர சொரூப மானேன்
வருமூன்றெ னவத்தையிலாச் சொரூப மானேன்
வானெனவே நின்றபர சொரூப மானே
னிருமூன்று விகாரமிலாச் சொரூப மானே
னேகமதாய் நின்றபர சொரூப மானேன்
பரிபூன்ற மானபர சொரூப மானேன்
பரமநின தருண்மகிமை யென்னே யென்னே. (27)

ஆசரிய நீயருளிச் செய்த வண்ண
மகம்பிரமம் பிரமமக மகமெல் லாமென்
றேசனுகா வகண்டபர நிச்ச யத்தை
யெப்போது மிடையறவே யப்யா சித்துப்
பாசமதாம் விகற்பங்க ளனைத்துந் தீர்த்துப்
பழுதற்ற பரப்பிரமா நந்தம் பெற்று
மாசனுகாச் சொரூபநிலை மன்னி நின்றேன்
மகத்தான நின்மகிமை யென்சொல் வேன்யான். (28)

இன்னவித மகண்டபர நிச்ச யத்தை
யான்பெற்ற விதமாக வியம்ப லுற்றேன்
பன்னியவித் திடமான நிச்ச யத்தைப்
பற்றினவ ராரேனுஞ் சுகமே சார்வர்
பின்னுமிதைப் பரிவுடனே நிதமுங் கேட்போர்
பெந்தமெலாந் தீர்ந்துபர வடிவே யாவர்
சொன்னதெலா முண்மையென நிதாக ஞேநிச்
சுத்தபர சொரூபத்திற் சுகித் திருந்தான். (29)

தேசிகனற் கருணையினு லுபதே சித்த
திகழுமகா வாக்குகளின் பொருளைக் கேட்டு
மாசறவே மற்றுமதை மனனஞ் செய்து
மயக்கமறச் சந்ததமு நிதித்யா சித்திங்
காசனுகா வகண்டபர சிவமே நாமென்
றறிந்தவரே பவமுத்த ராவ ரென்றே
யேசனுகா வறுமுகவன் சைகீ ஷவ்யற்
கியம்பிவா றகிலர்க்கு மிசைத்தான் சூதன். (30)

வேறு

அகிலமான சராசரத்தோற்றமு மகமலாதனு வுப்பிறிதன்றெனு
நிகிலபூரண மாகிநிறைந்தயா னித்தநிட்கள மாம்பரமேயெனு
மிகழ்விறேசிகன் முன்புநிதாகனிங் கிணையிலா வநுபூதியிசைத்திட
திகழுமாநந்தத் தாண்டவமாடுநந் தேவதேவ னகண்டசொரூபமே. ()

நாற்பத்தொன்றுவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 41-க்கு திருவிருத்தம் 1811.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

## நாற்பத்திரண்டாவது

### நிதாகன் றன்னநுபவத்தினால் இந்நூன்மகிமையையும் இந்நூலநுக்கிரகிக்குங் குருமகிமையும் இந்நூலிற் சொன்னஞானஞ் சிவகிருபையால் வர வேண்டுமென்றும் உரைக்கும் அத்தியாயம்.

மகிழ்வுடனே நிதாகமுனி மற்றுஞ் சொல்வான்
மாசற்ற சற்குருவே மகேசன் முன்ன
மிகவுமகா ரகசியமா மிந்த நூலை
மெத்தவுமே கருணையினா லினக்கு ரைத்தான்
பகரவொணுக் கருணையினு லிதனை மற்றும்
பரமதயா நிதியான நீயெ னக்கிங்
ககழ்வறவே யுரைசெய்தா யுரைத்த வண்ண
மியானுமிதை யிதயத்தி லிசைந்தோ னானேன். (1)

தேசிகவிந் நூலிலொரு வத்தி யாயந்
திடமாக மனதினுறக் கேட்ட தாலே
மாசுமிகு மனதினிடை மருவா நின்ற
மாமாயை யெனுமிருளின் றிரளை யெல்லா
மாசதனில் விலக்கியிடு மருக்க னான
வகண்டபர சிவஞான மடைந்தோ னானே
னீசவிதி லொருகவிதை கேட்ட போது
மிருமையிலா மோட்சசுக மிசைய லாமே. (2)

இதனிலொரு கவியேனுங் கேட்டு ணர்ந்தோ
ரிருமையிலா வீடுறுவர் சத்தி யந்தா
னிதமுமெலாம் பிரமமென்று மஃநா மென்று
நிகழ்த்தியவோர் கவியிலுள பொருளு ணர்ந்தால்
விதம்விதமா நூலினைமற் றென்பொ ருட்டால்
வீணாக விசாரித்து வருந்த வேண்டு
மதிசயமா யிதனிலுள கவியொன் றாலே
யகண்டபர ஞானத்தை யடைய லாமே. (3)

இத்திறமா மிந்நூலை யுபதேசிக்கு
  மியல்புள்ள குருவரனே குரவ ஞனேன்
வித்தாமாய்ப் பன்னூலை யுபதேசிக்கும்
  விசித்திரமாங் குரவர்களாற் பெறும்பே றென்ன
வுத்தமமா மிந்நூலை யுபதேசிப்போ
  னுணர்வுருவாய் நின்றபரப் பிரமந் தானுஞ்
சத்தியமே யணுவுமிதிற் சங்கை யில்லை
  சம்புபதந் தன்னுணை சங்கை யில்லை. (4)

இந்நூலைக் கருணையினு லுபதேசிப்போ
  னிணையற்ற பரசிவனே யைய மில்லை
யிந்நூலைக் கருணையினு லுபதேசிப்போ
  னிணையற்ற வம்பிகையே யைய மில்லை
யிந்நூலைக் கருணையினு லுபதேசிப்போ
  னிருமைமிகும் விநாயகனே யைய மில்லை
யிந்நூலைக் கருணையினு லுபதேசிப்போ
  னிலங்கியிடுஞ் சண்முகனே யைய மில்லை. (5)

அருளுடனே யெவனிதனை யுபதேசிப்ப
  னவநந்தி கேசனிதி லைய மில்லை
யருளுடனே யெவனிதனை யுபதேசிப்ப
  னவன்றத்தாத் திரேயனிதி லைய மில்லை
யருளுடனே யெவனிதனை யுபதேசிப்ப
  னவன்றட்ச ணுமூர்த்தி யைய மில்லை
யருளுடனே யெவனிதனை யுபதேசிப்ப
  னகண்டபர சிவனவனே யைய மில்லை. (6)

வித்தாமாய் விளம்பியென விந்த நூலை
  வெருளறவே யருள்செய்வோன் பரசி வன்று
னித்திறமா மிந்நூலை யியம்புதற்கு
  மிதன்பொருளை யெளிதாகத் தெரிவித் தற்கு
முத்தமனே நின்னையலா துலகத் தின்க
  ணும்பரினு முனிவரினு மொருவ ரேனுஞ்
சத்தால்ல சந்தேக மணுவு மில்லை
  சத்தியமே சம்புபதந் தொட்டுச் சொல்வேன். (7)

அருளுடனே யிந்நூலை யுபதே சிக்கு
மாசிரியன் பரசிவமே யாத லாலக்
குருவரனுக் கொருகாலு மபகா ரத்தைக்
குறைவறவே யுபதேசம் பெற்ற மாணன்
றிரிவிதமாங் கருவிகளாற் செய்யக் கூடா
திரவியமே முதலியதாற் சத்தி யுள்ள
வரையிலவன் பூசனையே செய்ய வேண்டும்
வழுவற்ற குருவையலாற் பந்து வுண்டோ. (8)

தந்தைமுதற் பந்துவெலா மநந்த தேகந்
தருவதலா லனுபவ பந்தந் தீர்க்கார்
சிந்தையினு லாய்ந்திடிலப் பந்து வெல்லாஞ்
சிறுமைதருஞ் சத்துருவே யாகா நிற்ப
ரந்தமிலா வருள்வடிவாங் குருவோ வென்று
லகண்டபர ஞானத்தை யருளா னல்கித்
தொந்தமதா மனுபவ பந்த மெல்லாந்
துப்பறவே நன்றாகத் துடைத்துக் காப்பன். (9)

குருபரனே பரமசிவன் பரேசன் றானே
குருபரனு மாகினுமே யொருகா லத்தி
னிருமலமாம் பரமசிவன் முனிவுற் றாலு
நிகரில்தயா நிதியான குரவன் காப்ப
னருள்வடிவே திருவுருவா யெழுந்து நின்ற
வாசிரிய னென்றேனு முனிவுற் றானேற்
றிரிவிதமா முலகத்து மம்மா ணனைத்
தியக்கமெலாந் தீர்த்தெவருங் காப்ப தில்லை. (10)

ஆதலினாற் குருவின்பா லிந்நூ லின்பா
லகிலசகன் னயகனும் பரேசன் றன்பா
லேதமிலாச் சிரத்தைமிகுந் திருப்போர் தாமே
யிந்நூலைப் பழகுவதற் குரிய ராவ
ரோதியவா சிரத்தையுறு மூர்க்க ரெல்லா
மொருகாலு மிந்நூலிற் கவியொன் றேனுஞ்
சாதகமாய்ச் சாருவதற் குரிய ராகார்
சத்தியமே யதிலணுவுஞ் சங்கை யில்லை. (11)

சிவபர வைக்யமுணர் ஞானஞ் சேரச்
சிரத்தையலான் மற்றெவையு மேது வாகா
தாவலுடன் பெறுகின்ற சிரத்தை யொன்று
லனைத்துமிலை யகண்டபரப் பிரம மொன்றே
கேவலமா யுளதென்று மதுநா மென்றுங்
கிலேசமிலாப் பரஞானங் கிடைப்ப தன்றி
மேவியமற் றொன்றாலு மகண்ட ஞான
மேவவொணா தென்றுமறை விளம்பிற் றன்றோ. (12)

பரமசிவன் கருணையினைப் பற்றி னோரே
பரவியவிந் நூற்பொருளை யறிவ ரன்றி
யரியசிவன் கருணையுறு மூர்க்க ரென்று
மரிதான விதன்பொருளை யறிய மாட்டார்
சருவமுமே யிழந்துபர சிவனைத் தானே
சந்ததமுஞ் சிரத்தையுடன் றியானித் தன்னோன்
கருணையினைப் பெற்றவரே யகண்ட ஞானங்
கலப்பரெனச் சுருதிமுடி விதித்த தன்றோ. (13)

ஆதலினாற் சிரத்தையுட னனைத்துந் தள்ளி
யகண்டபர வடிவான சிவத்தைத் தானே
தீதறவே யிந்நூலி லுரைத்த வண்ணந்
தியானித்துச் சிவகருணை பற்றினோரே
யேதமுறு விந்நூலின் பொருளா கின்ற
விருமையிலா வகண்டபர ஞானஞ் சார்வ
ரோதியவிந் நூற்பொருளா ஞானத் துக்கிங்
கொப்பான ஞானமொரு விடத்து மில்லை. (14)

வெகுவிதமாம் யோகங்கள் சாங்கி யங்கள்
வேறுபடு முபாசனைக ளெவையு மின்றிச்
சகலமறை முடிவிலுநற் சார மாகச்
சருவஞ்ஞ சிகாமணியாம் பரேசன் றானே
நிகழ்வுறவே நோாக நிகழ்த்தா நின்ற
நிருமலமா மிந்நூலின் ஞானம் போல
வகிலவித புராணங்க ளிதிகா சங்க
ளனைத்திலுமே யெளிதான ஞான மில்லை. (15)

சுத்தமதா யிந்நூலிற் சொல்லப் பட்ட
சூட்சுமமா மகண்டபர சிவஞா னந்தான்
பத்தியுடன் பழுதறவே பழகப் பட்ட
பாவனையீ தொன்றாலிங் கெளிதா யெய்துஞ்
சித்தினிடைத் தோற்றியிடுந் தோற்ற மெல்லாஞ்
சின்மயமாஞ் சிவமென்று மதுநா மென்று
மத்துவித பாவனையும் வருத்த மல்ல
வாதலினு லிஞ்ஞான மெளிது தானே. (16)

இவ்விதமா மிந்நூலா லெய்து ஞான
மித்துவிதம் யாவையுமே நாசஞ் செய்யுந்
திவ்வியமா மிந்நூலாற் றிகழு ஞானந்
திட்டமதிட் டங்களெலா நாசஞ் செய்யுஞ்
செவ்வியதா மிந்நூலாற் செறியு ஞானஞ்
செகசீவ பரங்களெலா நாசஞ் செய்யு
மவ்விதமா மிந்நூலா லறியு ஞான
மகண்டபர மாநந்த மளிக்கு மன்றே. (17)

கனந்தவிராப் பரமசிவ பத்தியே போற்
களங்கமறச் சற்குருவின் பத்தி தன்னைத்
தினந்தவிரா தெவன்செய்வ னன்னோ னுக்கே
திகழ்த்தியவா றிந்நூலின் ஞானந் தோன்று
மனந்தனிலே மருவியவிந் நூலின் ஞான
மகத்தான துன்பமெலா முடனே தீர்க்கு
மனந்தவிதம் பகர்ந்தென்ன விஞ்ஞா னந்தா
னகண்டபர மோட்சநிலை யளிப்ப தாமே. (18)

நிருமலமா மிந்நூலைக் குருவின் முன்பாய்
நேசமுடன் கேட்கின்ற மாணு னந்தக்
குருவானைத் தனக்குள்ள சத்தி கொண்டு
கோதறவே பூசைசெயா திருப்பா னாகிற்
புரைமருவு மம்மாணு னாறு சன்மம்
புன்மைமிகுஞ் சுனகத்தின் யோனி சார்வன்
சருவவித சாதிக்கு மிகக் கீழான
சண்டாள சன்மமுமோர் கோடி சார்வன். (19)

மொழிவுற்ற விந்நூலைக் குருவின் முன்பாய்
மோதமுடன் கேட்கின்ற மானு டைந்தப்
பழுதற்ற குருவரனைப் பழிப்பா னாகிற்
பலசென்மம் வேசரியாய் நரகஞ் சார்வ
னழிவற்ற விந்நூலைக் கேட்ட பின்ன
ராசானைப் பரசிவமாய்ப் பாவி யாதோ
னிழிவுற்ற பாவத்தா லநேக சன்ம
மீனமுறுஞ் சூகரமாய் நரகஞ் சார்வன். (20)

அரிதான விந்நூலை யருளிச் செய்யு
மற்புதமா மாசானை மகிழ்ந்தி டாமல்
விருதாவாய் மச்சரமே செய்வன் யாவன்
வெகுகற்ப மவன்மலத்திற் கிருமி யாவ
னரிதான விந்நூலை யுபதே சிக்கு
மாசிரிய னகண்டபரப் பிரமந் தானே
விருதாவா யன்னோன்பான் மச்சரிப் போன்
விசித்திரமாம் பாவத்தை யென்சொல் வேன்யான். (21)

அநந்தவித மறைந்தென்ன வாசான் பானு
மகிலசகன் னுயகனும் பரேசன் பானுங்
கினந்தவிராப் பத்தியுட னிருப்போ ருக்கே
திகழ்த்தியவிந் நூன்ஞானந் திடமாய்த் தோன்று
மனந்தனிலே தோன்றியவிஞ் ஞானங் கொண்டே
மகத்தான மோட்சசுக மருவ லாகுங்
கனந்தவிராச் சிரத்தையுட னிதைகேட் போருங்
களங்கமெலாந் தவிர்ந்துபரப் பிரம மாவர். (22)

எவையுமுணர் பரசிவனு லியம்ப லுற்ற
விந்நூலை யொருமையுட னிருந்து கேட்போ
ரவனியின்மற் றெந்நூலும் விரும்ப வேண்டா
மநேகவித நூற்களினுற் பெறும்பே றென்ன
புவியிலுள பதமையெலாங் குத்தி னலும்
புசிக்கவொரு தண்டுலமுங் கிடைப்ப துண்டோ
வவிதமெலா நூற்களையுங் கேட்ட போது
மகண்டபர சிவஞான மமைவ தில்லை. (23)

ஆதலினா லெந்நாளுந் தூரத் தள்ளி
யதிசயமா மிந்நூலைப் பழகு வோர்க்கே
பேதமிலா வகண்டபர போத முண்டாய்ப்
பிரிவற்ற மோட்சநிலை விரைவிற் பேறு
மீதிலிறை யளவுமிலை யைய நேரே
யான்பெற்ற வநுபூதி யிவிதமன்றோ
வேதமிலா விந்நூலின் பெருமை யென்னே
யிவையருளுந் தேசிகரின் பெருமை யென்னே. (24)

இவ்விதமாய் நிதாகமுனி தான டைந்த
விணையற்ற வநுபூதிப் பலத்தி னாலே
திவ்வியமாஞ் சற்குருவின் பெருமை யோடு
திகழ்த்தியிடு மிந்நூலின் பெருமை யெல்லாஞ்
செவ்வியதா யாசிரியன் முன்பா யோதிச்
சின்னமிலாச் சொரூபசுகஞ் செறிந்தா னென்றே
யவ்விதமா மறுமுகவன் சைகீ ஷவ்யற்
கருளியவா றகிலர்க்கு மறைந்தான் சூதன். (25)

வேறு.

அகமுறுத நிதாகனகண்டமா மநுபவத்தை யடைந்தபலத்தினன் மிகவுமேன்மை பொருந்தியவிந்தநூன் மெய்மைதன்னை விளம்பிய தேசிகன், மகிமை யோடிந்த நூலின்மகத்துவ மற்றநூல்களுக் கில்லையெனச்சொல, னிகரிலாநந்தத் தாண்டவமாடுநந் தின்மலேச னகண்டசொரூபமே. (26)

நாற்பத்திரண்டாவது

அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 42-க்கு திருவிருத்தம் 1837.

++++++++++++++++++++++++++++++++++++++++

## நாற்பத்துமூன்றாவது

நிதாகன், ஆசாரியர் கிருபையால் அவித்தை முதலான
வுபாதிநீங்கி நித்த சுத்த புத்த முத்த சிதாகாய
சொரூபமாய்ச் சீவன்முத்தித் தன்மை
யடைந்ததை உரைக்கும்
அத்தியாயம்



அகமுறவே யகண்டபரப் பிரம ஞான
மடைந்ததனு லாநந்த நிருத்த னான
மகிமைமிகு நிதாகமுனி குருவை நோக்கி
மகிழ்வுடனே மீளவுமிவ் வசனஞ் சொல்வான்
தகைமைமிகுந் தேசிகவோர் நிமித்த மன்றித்
தையொன்று னீயருளு முபதே சத்தாற்
சகமுதலா மயக்கங்க ளனைத்து நீங்கிச்
சத்தியஞா நாநந்தப் பிரம மானேன். (1)

குருவரனே நீயருளு முபதே சத்தாற்
குறைவுதரு மவித்தைமுத லுபாதி நீங்கி
நிருமலமாய் நிட்களமாய் நீங்காச் சத்தாய்
நிகழுணர்வாய் நிரதிசயா நந்த மாகிச்
சருவபரி பூரணமாய்ச் சாந்த மாகிச்
சனாதனமாய்ச் சலனமிலாச் சுபாவ மாகி
யருவமதா யயலிலதா யமர்ந்து நின்ற
வகண்டசிதா காயபரப் பிரம மானேன். (2)

உத்தமனே நீயருளு முபதே சத்தா
லுண்மையுறு மாயைமுத லுபாதி நீங்கிச்
சுத்தமதாய்ச் சுககனமாய்ச் சோர்வில் லாதாய்ச்
சுதந்தரமாய்ச் சுயஞ்சோதி சுபாவ மாகி
நித்தியமாய் நிர்க்குணமாய் நிகரில் லாதாய்
நிரஞ்சனமாய் நிராமயமாய் நிமல மாகி
யத்துவித பூரணமா யமர்ந்து நின்ற
வகண்டசிதா காயபரப் பிரம மானேன். (3)

தேசிகனே நீயருளு முபதே சத்தாற்
　　றிருசியமாய்த் திகழுமய லனைத்து நீங்கி
மாசிலதாய் மனமிலதாய் மலமில் லாதாய்
　　மகத்துக்கு மகத்தாகி மதிக்கெட் டாதாய்ப்
பாசமிலாப் பரசிவமாய்ப் பரமான் மாவாய்ப்
　　பாற்பரமாய்ப் பரவிண்ணாய்ப் பகுப்பில் லாதா
யாசனுகா வறிவுருவா யமர்ந்து நின்ற
　　வகண்டசிதா காயபரப் பிரம மானேன். (4)

ஆசிரிய நீயருளு முபதே சத்தா
　　லாவரணம் விட்சேப மனைத்து நீங்கிச்
சாசுவத சுபாவமதாய்ச் சலியாச் சித்தாய்ச்
　　சதாநந்த கனமாகிச் சகசான் மாவாய்ப்
பேசவொணாப் பேரொளியாய்ப் பிரிவில் லாதாய்ப்
　　பெரிதுக்கும் பெரிதாகிப் பிரமான் மாவா
யீசன்முத லெவையுமிலா தகண்ட மான
　　வேகசிதா காயபரப் பிரம மானேன். (5)

பரகுருவே நீயருளு முபதே சத்தாற்
　　பரசீவ சகங்களெனும் பகுப்பு நீங்கி
யொருவடிவா யுத்தமமா யொழிவில் லாதா
　　யுரைமனதுக் கெட்டாத வுண்மை யாகிப்
புரையிலதாய்ப் பூரணமாய்ப் பூமான் மாவாய்ப்
　　புராதனமாய்ப் புனிதமதாய்ப் பொருவில் லாதா
யிருளொளிமற் றெவையுமிலா வகண்ட மான
　　வேகசிதா காயபரப் பிரம மானேன். (6)

அற்புதனே நீயருளு முபதே சத்தா
　　லகத்திலுள பேதமய லனைத்து நீங்கிச்
சிற்பதமாய்ச் சின்மயமாய்ச் சிறிதில் லாதாய்ச்
　　சிதம்பரமாய்ச் சிதாநந்த கனமே யாகித்
தற்பதமாய்த் தடையிலதாய்த் தளர்வில் லாதாய்த்
　　தத்துவமாய்த் தானாய்த் தனித்த தாகி
நிர்ப்பயமாய் நிரந்தரமாய் நிறைந்து நின்ற
　　நிகரில்சிதா காயபரப் பிரம மானேன். (7)

மெய்த்தவனே நீயருளு முபதே சத்தான்
மேவுமஞ்ஞே வாதனைக ளனைத்து நீங்கிச்
சத்தியசிற் சுககனமாய்ச் சலன மின்றிச்
சமமாகிச் சாலவுப சாந்த மாகி
நித்தியநின் மலமாகி நிருவிட் சேப
நிராவரண நிட்கிரிய சுவாப மாகி
யத்துவிதா கண்டபரி பூன்ற மான
வமலசிதா காயபரப் பிரம மானேன். (8)

மாதவனே நீயருளு முபதே சத்தான்
மனதிலுள மயக்கமெலாங் கணத்தி னீங்கிக்
கோதிலதாய்க் குணமிலதாய்க் குறியில் லாதாய்க்
குறைவிலதாய்க் குணாதீத சுபாவ மாகி
யேதுமொரு விகற்பமுமே யென்று மின்றி
யேகபரி பூரணமா யிகழ்வில் லாதா
யாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
வமலசிதா காயபரப் பிரம மானேன். (9)

வெகுவிதமாய் விளம்பியென்ன சுருங்கச் சொல்வேன்
வேறறவே தேசிகநீ யுபதே சித்த
தகைமிகுந் தத்வமசி யாதி வாக்ய
தாற்பரியப் பொருளையெலா நன்று யாய்ந்திங்
கசுமறவே யகம்பிரம மென்னு ஞான
மடைந்ததனு லகண்டபர மாநந் தத்தை
மிகமிகவும் புசித்தவனாய்த் திருத்த னாகி
மெய்யுணர்வா நந்தபரம் பொருளாய் நின்றேன். (10)

சற்குருவின் முன்பாக விந்த நூலின்
சாரமதாம் பரம்பொருளைக் கேட்ட பின்னர்த்
துர்க்குணமா முலோபமெலாந் தூரத் தள்ளித்
தொடர்புற்ற திரவியமே முதலா லந்தச்
சற்குருவைத் தன்றேக முள்ள மட்டுஞ்
சலியாத பத்தியுடன் பூசிப் போர்க்கே
விக்கினமே யின்றியகம் பிரம மென்னும்
வேறுபடா வகண்டபர ஞானந் தோன்றும். (11)

அன்றியுமே விதியுடனே நியம மாக
வமலமதாம் விபூதியினா லங்க மெல்லா
நன்றுறவே யணிந்துதிரி புண்ட ரத்தை
நலமாகச் சந்ததமுந் தரிப்போ ருக்கே
துன்றியநற் பரமசிவ கருணை யுண்டாந்
தோன்றியவக் கருணையினாற் சித்தந் தூய்தா
யென்றுமொரு விக்கினமு மின்றி நன்று
யிருமையிலா வகம்பிரம ஞானந் தோன்றும். (12)

பத்தியுடன் விபூதியுடைத் தார ணந்தான்
பாசுபத விரதமெனப் பகர லாகுஞ்
சத்தியமாம் விபூதியுடைத் தார ணத்தாற்
சடிதியினி லகண்டபர ஞான முண்டா
முத்தமவிப் பாசுபத விரதந் தன்னை
யொருவருட மநுட்டித்துன் பாதம் பெற்றே
னத்தநின தருளாலின் றகண்ட ஞான
மடைந்தவனா யான்மாவி லமர்ந்து நின்றேன். (13)

சுத்தமதாய் நீயருளு முபதே சத்தைச்
சூட்சமமாம் புத்தியினுன் மனனஞ் செய்து
நித்தமுமே யாதரவா யிடைவி டாம
னிச்சலமா யெப்போது நிதித்யா சித்துச்
சத்துருவா மாவரண விட்சே பங்கள்
சற்றுமிலா வகண்டபர ஞானம் பெற்றிங்
கத்துவித பரப்பிரம சொரூப மாகி
யதிவன்ன வாச்சிரமி யானே னையா. (14)

குறைவறவே செய்கின்ற நிதித்யா சத்தாற்
கோரமு டங்களெனும் விருத்தி நீங்கி
மறைவறவே சத்துவமாம் விருத்தி யொன்றுன்
மாசற்ற வகண்டபர போதம் பெற்று
நிறைவுறவே யாநந்த மநுப வித்து
நித்தியஞா னாநந்த வடிவே யாகி
யறிவுறுமோ ராச்சிரம வன்ன மின்றி
யதிவன்ன வாச்சிரமி யானே னையா. (15)

சற்குருவே நீயருளிச் செய்த வண்ணஞ்
சந்ததமுஞ் சலியாமற் சிரத்தை யோடே
நிர்க்குணமாம் பரப்பிரம நானே யென்று
நேசமுட னிரந்தரமாய் நிதித்யா சித்து
முக்குணமுங் கடந்தபர போதம் பெற்று
மூதுணர்வாம் பரப்பிரம நானே யாகித்
துர்க்குணமா மெக்குணமுந் தூரத் தள்ளித்
துகளற்ற குணாதீத ஞானே னையா. (16)

ஆசிரிய நீயருளிச் செய்த வண்ண
மஹமகம் பிரமாஸ்மி யென்ப தாக
நேசமுட னிரந்தரமாய்த் தியானஞ் செய்து
நிகிலமனோ விகற்பமுமே நீங்கி னேனாய்ச்
சாசுவத சொரூபத்தி னிருவி கற்ப
சமாதிநிலை பெற்றவனாய்ச் சாந்த னாகிப்
பேசவொணாப் பரப்பிரம போதம் பெற்றுப்
பெருமைமிகும் பிராமணஞா னேனே னையா. (17)

*கலனமுறுப் பாவனையால் லயவிட் சேப
கஷாயரசாஸ் வாதமெனும் பதிபந் தங்கள்
பலவகையு மிழந்துபரப் பிரமத் தின்கட்
பாலிலுறு நீரெனவே கலந்தொன் றாகி
நிலைமருவு நிச்சலமா நிருவி கற்ப
நிட்டையினைப் பெற்றுநிசா னந்தங் கூர்ந்து
திலமளவும் பேதமிலா வகண்ட ஞானத்
திறமையுடன் றிடப்பிரக்ஞ ஞானே னையா. (18)

ஆங்கமுத லணுவுமிலா தகண்டா கார
மாகியுள வத்துவித பாசி வத்தைச்
சங்கமறச் சந்ததமுஞ் சிவோக மென்னுஞ்
சலியாத பாவனையாற் பூசை செய்து
துங்கபர சிவகருணை திடமாய்ப் பெற்றுத்
தொடருமனோ விகற்பமெலா முடனே தீர்ந்து
பங்கமிலாப் பரமசிவ போதங் கூர்ந்து
பரமசிவ பத்தனுமா னேனே னையா. (19)

*(கலனம் = தோஷம்)

எங்குமுள வெப்பொருளுஞ் சிவமே யென்று
மேகபரி பூரணவச் சிவநா னென்றுந்
துங்கமுறும் பாவனையா லச்சி வத்தைத்
துகளறவே யெப்போதும் பூசை செய்து
தங்கியிடும் பதிபந்த மனைத்துந் தீர்ந்து
தடையற்ற வாநந்த மநுப வித்துப்
பங்கமிலாப் பரமசிவ போதங் கூர்ந்து
பரமசிவ பத்தனுநா னேனை யா. (20)

பின்னமறக் கருணையினு னீயு ரைத்த
பிரஞ்ஞானம் பிரமமுதல் வாக்கி யார்த்த
மன்னுவண நன்றாக மனதிற் கொண்டு
மாசறவே மற்றதனை மனனம் பண்ணி
யன்னதனைப் பின்னையுமே யநுசந் தானித்
தஞ்ஞான சந்தேக விபரீ தங்கண்
மன்னியிடா வகண்டார்த்த போத மேவி
மகிழ்சீவன் முத்தனுநா னேனை யா. (21)

சிரவணமே முதலியதி னப்யா சத்தாற்
சிறுமைதருந் தேகான்ம புத்தி நீக்கிப்
பெருமைமிகும் பிரமான்ம புத்தி மேவிப்
பின்பந்தப் புத்தியுமே யிழந்தோ னாகிக்
கருதவொணு வகண்டான்ம போதம் பெற்றுக்
கர்த்துருத்வ முதலான பந்தந் தீர்ந்து
நிரதிசய வாநந்த மநுப வித்து
நிகழ்சீவன் முத்தனுநா னேனை யா. (22)

ஈனமிலாச் சமாதியினி லிருமை யின்றி
யேகபரி பூரணமா யிருப்போ னாகி
யூனமிலாச் சமாதியினி லிருக்குங் காலை
யுலகத்தி லுதாசீன விருத்தி மேவி
மானமவ மானமுத லெவையு மின்றி
மைத்திரியே முதலான குணநி றைந்து
தீனமுறுக் கெம்பீர சுபாவ மாகித்
திகழ்சீவன் முத்தனுநா னேனை யா. (23)

சந்ததமுஞ் சமாதியினைச் சார்ந்தோ னாகிச்
சகலமனோ விகற்பமுமே தீர்ந்தோ னாகித்
தொந்தமுறும் பந்தமெலாந் தவிர்ந்தோ னாகித்
தூயபிர மானந்தந் தொடர்ந்தோ னாகிச்
சிந்தைமுதற் ககோசரமாஞ் சுபாவ னாகிச்
செகசீவ பரங்களெலா மிழந்தோ னாகி
யந்தமிலா மகிமைமிகுஞ் சீவன் முத்தி
யடைந்தவனு யான்மாவி லமர்ந்தே னையா. (24)

அனிசமகம் பிரமமென்று மதுநா னென்று
மதிதிடமா நிலைபெற்ற வுறுதி தானே
துனிமருவாச் சமாதியெனச் செப்ப லாகுந்
துவிதத்தின் றோற்றமெலா மறவு நீங்கி
நினைவெவையு மில்லாத நிருவி கற்ப
நிட்டையுமே சமாதியென நிகழ்த்த லாகுஞ்
சொனவுபய சமாதியினாற் சீவன் முத்திச்
சுகமேவிச் சுத்தபர மானே னையா. (25)

அகிலவித வுபாதியுமில் விதேக முத்தி
யடையுமள வஞ்ஞான லேசத் தாலே
வெகுவிதமாம் பிராரத்தந் தொலையு மட்டும்
விதம்விதமாந் துவிதத்தி னுபா சங்க
ணிகழினுமே நிச்சலமாஞ் சீவன் முத்தி
நிலையிலுள நானென்றுஞ் சலித்தி டாம
லிகழ்வறவே நேரிட்ட போகந் துய்த்திங்
கென்னிடைநா னின்பமுற விசைந்து நிற்பேன். (26)

புகல்சீவன் முத்தர்க்கும் பிராரத் தத்தாற்
பூடணமுந் தூடணமு மெங்கு முண்டே
யகமேவு மகம்பிரம நிச்ச யத்தா
லவர்சீவன் முத்தரலான் மற்றோர் செய்யும்
வெகுவான பூடணதூ டணங்க ளாலே
விமலமதா நிலைபெற்ற வன்னோர்க் கென்று
மிகழ்வான தெவையுமிலை யெனுமு ரத்தோ
டென்னிடைநா னின்பமுற விசைந்து நிற்பேன். (27)

அகமனிச நித்தபரப் பிரம ரூப
 மகமனிசஞ் சுத்தபரப் பிரம ரூப
மகமனிசம் புத்தபரப் பிரம ரூப
 மகமனிச முத்தபரப் பிரம ரூப
மகமனிச மசலபரப் பிரம ரூப
 மகமனிச மசங்கபரப் பிரம ரூப
மகமனிச மகண்டபரப் பிரம மென்னு
 மகம்பிரம நிச்சயவான் சீவன் முத்தன். (28)

மனமுதலாம் வியட்டியுபா திகளு மின்றி
 மாயைமுதற் சமட்டியுபா திகளு மின்றி
நனவுமுத லூநாவா மவத்தை யின்றி
 நாடியிடு நாமமுரு வெவையு மின்றி
யனவரத மன்னியமோ ரிறையு மின்றி
 யகம்பிரம நிச்சயமு மறவு மின்றிக்
கனவறிவாம் பரப்பிரம மாத்ர மாகிக்
 களங்கமற நிற்பவனே விவேக முத்தன். (29)

மாதவநின் கருணையினு னிப் போது
 மகிழ்சீவன் முத்திநிலை மருவா நின்றேன்
பேதமுறும் பிராரத்த முள்ள மட்டும்
 பிரிவறவே யகம்பிரம நிச்ச யத்தைச்
சாதகமாய்ச் சந்ததமுஞ் சாதிப் போனுய்ச்
 சங்கற்ப விகற்பங்கட் கிடங் கொடாம
லாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
 வான்மாவி லநவரத மமர்ந்து நிற்பேன். (30)

பேதமுறும் பிராரத்தந் தொலைந்த பின்னர்ப்
 பிரிவற்ற பரப்பிரம மாத்ர மாகி
யேதுமொரு விகற்பமுமே யின்றி யென்று
 மேகபரி பூரணமா யிருப்போ னுவேன்
சீதளமாஞ் சற்குருவே நானிப் போது
 செய்வதெலாஞ் செய்துமுடிந் தவனே யானே
னேதெனினின் கருணையினு லெளிதே யாக
 வேகபர ஞானத்தை யிசைந்தே னன்றே. (31)

அகமகில வதிட்டான சொரூப மாகி
யகிலமுமாய்த் திகழ்கின்ற பிரம மானே
னகமனிய மெவையுமிலா தகண்ட மாக
வமர்கின்ற வத்துவிதப் பிரம மானே
னகமனிச மத்யந்த சுத்த மான
வகண்டசிதா காயபரப் பிரம மானே
னகமனிசஞ் சத்தியசிற் சுகமாய் நின்ற
வகண்டபரி பூன்றபரப் பிரம மானேன். (32)

அகமனிச நிர்க்குணமாம் பிரம மானே
னகமனிச நிட்களமாம் பிரம மானே
னகமனிச நிரஞ்சனமாம் பிரம மானே
னகமனிச நிட்கிரியப் பிரம மானே
னகமனிச நிராமயமாம் பிரம மானே
னகமனிச நிராவரணப் பிரம மானே
னகமனிச நிச்சலமாம் பிரம மானே
னகமனிச நிமலபரப் பிரம மானேன். (33)

சகலமுநின் னருளெனவே நிதாக னோதிச்
சற்குருவாம் ரிபுமுனியை யிறைஞ்சி யேத்தி
நிகிலமனோ விகற்பமுமே நீங்கி நின்ற
நிச்சலமாந் தன்சொரூப நிட்டை யோடு
சுகமுறவே சுதந்தரமா யிருந்தா னென்றே
சோகமெலாந் தீரும்வணஞ் சைகீ ஷவ்யற்
கிகழ்வறவே சண்முகனா லியம்பப் பட்ட
விப்பொருளை யாவர்க்கு மிசைத்தான் சூதன். (34)

வேறு.

பேதமின்றிநற் றேசிகன்சொன்னவா பிரமஞானத்தைப் பெற்றநிதாக
னிங், கேதமின்றிய சிற்பரூபமா யீனமார்பவ தாபமிலாமலே
சீதளாநந்த மேவியசித்தனாய்ச் சீவன்முத்தி செறிந்ததைச் செப்புத
றீதிலாநந்தத்தாண்டவமாடுநந் தேவதேவ னகண்டசொரூபமே. (35)

நாற்பத்து மூன்றாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் 43-க்கு திருவிருத்தம் 1872.

++++++++++++++++++++++++++++++++++++++++++++

## நாற்பத்திருன்காவது.

### பரமசிவகருணைக்கு முக்கியவேதுவான நிதித்யாசனமுடன் இந்நூலின் மகத்துவஞ்சொல்லி முடிக்கும் அத்தியாயம்.

இந்தவிதந் தான்செய்த வுபதேசத்தா
　லிருமையிலா வகண்டபர போதம் பெற்றுத்
தொந்தமுறும் பந்தமெலா முடனே தீர்ந்து
　தூயபர மாநந்த மநுப வித்துப்
புந்தியிலோர் சலனமிலா நிதாகன் றன்னைப்
　புரையற்ற ரிபுமுனிவன் பரிவாய் நோக்கிச்
சந்ததமுஞ் சகலர்க்கு மிதமே யாகச்
　சாரமதாய் மீளவுமிவ் வசனஞ் சொல்வான். (1)

உத்தமமா மகண்டபர ஞானம் பெற்றிவ்
　வுலகமுதல் வாதனைக ளனைத்து நீங்கி
யத்துவிதா நந்தமிகுஞ் சீவன் முத்தி
　யடைந்தவனுய்க் க்ருதகிருத்ய ஞனுய் மைந்தா
புத்திமிகுந் துலகிலுள முமுட்சு வெல்லாம்
　பூரணமாஞ் சிவகருணை பொருந்து மட்டு
நித்தமுமே யாதரவா யிடைவி டாம
　னிதித்யாசஞ் செயும்வகையை நிகழ்த்தக் கேளாய். (2)

நான்றனே யழிவற்ற சற்சொ ரூப
　நான்றனே யமலமதாஞ் சிற்சொ ரூப
நான்றனே யாநந்த கனசொ ரூப
　நான்றனே யகண்டைக ரசசொ ரூப
நான்றனே யகண்டபர மான்ம ரூப
　நான்றனே யமலபர சிவசொ ரூப
நான்றனே யகண்டபரப் பிரம மென்றே
　நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (3)

நான்றனே நிர்க்குணமாம் பிரம ரூப
நான்றனே நிருமலமாம் பிரம ரூப
நான்றனே நிட்களமாம் பிரம ரூப
நான்றனே நிட்கிரியப் பிரம ரூப
நான்றனே நிச்சலமாம் பிரம ரூப
நான்றனே நிரஞ்சனமாம் பிரம ரூப
நான்றனே நிறைந்தபரப் பிரம மென்றே
நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (4)

நான்றனே நிராமயமாம் பிரம ரூப
நான்றனே நிராவரணப் பிரம ரூப
நான்றனே நிரந்தரமாம் பிரம ரூப
நான்றனே நீக்கமிலாப் பிரம ரூப
நான்றனே நிர்ப்பயமாம் பிரம ரூப
நான்றனே நிரதிசயப் பிரம ரூப
நான்றனே நிகரில்பரப் பிரம மென்றே
நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (5)

நான்றனே நித்தியமாம் பிரம ரூப
நான்றனே நிலைபெற்ற பிரம ரூப
நான்றனே சத்தியமாம் பிரம ரூப
நான்றனே சலமற்ற பிரம ரூப
நான்றனே யத்துவிதப் பிரம ரூப
நான்றனே யயலற்ற பிரம ரூப
நான்றனே சுத்தபரப் பிரம மென்றே
நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (6)

நான்றனே நாசமிலாப் பிரம ரூப
நான்றனே நவைமருவாப் பிரம ரூப
நான்றனே பாசமிலாப் பிரம ரூப
நான்றனே பங்கமுறுப் பிரம ரூப
நான்றனே சாசுவதப் பிரம ரூப
நான்றனே சங்கமிலாப் பிரம ரூப
நான்றனே நேசபரப் பிரம மென்றே
நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (7)

நான்றானே யகிலமுமாம் பிரம ரூப
நான்றானே யனைத்துமிலாப் பிரம ரூப
நான்றானே யிகழ்விலதாம் பிரம ரூப
நான்றானே யேகபரப் பிரம ரூப
நான்றானே சுககனமாம் பிரம ரூப
நான்றானே சுத்தபரப் பிரம ரூப
நான்றானே துகளில்பரப் பிரம மென்றே
நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (8)

நான்றானே சன்மயமாம் பிரம ரூப
நான்றானே சதாநந்தப் பிரம ரூப
நான்றானே சின்மயமாம் பிரம ரூப
நான்றானே சிதாகாயப் பிரம ரூப
நான்றானே நன்மயமாம் பிரம ரூப
நான்றானே நானுன பிரம ரூப
நான்றானே நின்மலமாம் பிரம மென்றே
நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (9)

நான்றானே நித்தபரப் பிரம ரூப
நான்றானே சுத்தபரப் பிரம ரூப
நான்றானே யுத்தபரப் பிரம ரூப
நான்றானே முத்தபரப் பிரம ரூப
நான்றானே திருத்தபரப் பிரம ரூப
நான்றானே சித்தபரப் பிரம ரூப
நான்றானே நிமலபரப் பிரம மென்றே
நழுவாது நிதித்யாசஞ் செய்ய வேண்டும். (10)

வெகுவிதமாய் விளம்பியென்ன வேதாந் தத்தில்
விதித்தமகா வாக்குகளின் பொருளை யோர்ந்திங்
ககமணிச மகண்டபரப் பிரம மென்று
மகண்டபரப் பிரமமே யகம தென்றும்
விகலமற வெகுகாலம் பிரிய மோடு
வேறறவே நிதித்யாசஞ் செய்வோ ருக்கே
மிகவரிதாம் பரமசிவ கருணை யுண்டாய்
மெய்யுணர்வா நந்தபர ஞானந் தோன்றும். (11)

ஆதலினு லுலகிலுள முமுட்சு வெல்லா
மத்யந்த வாதரவோ டாசான் முன்பாய்
வேதமுடி விதித்தமகா வாக்கி யத்தின்
வேறற்ற வகண்டார்த்த நிர்ண யத்தை
நீதியுடன் கேட்டதனை மனனஞ் செய்து
நிரந்தரமாய் மற்றதனை நிதித்யா சித்தே
சாதகமாஞ் சிவனருளா லகண்ட ஞானஞ்
சார்ந்ததனுன் மோட்சசுகஞ் சார வேண்டும். (12)

ஆசிரியன் முன்பாக வகண்டார்த் தத்தை
யடைவாக வறிவுற்ற மாணு னந்தத்
தேசிகனைத் திரவியமே முதலி ருந்துந்
திடமான லோபத்தாற் பூசி யானேன்
மோசனமே யிலாதவனுய்க் கும்பி பாக
முதலியதில் வீழ்ந்திடுவ னுதலாலே
தேசிகனை யாவிபொரு ளாக்கை யாலே
தினந்தினமும் பூசிக்க வேண்டு மாணுன். (13)

இந்தவித மருள்வடிவா யெழுந்த வீசன்
யாவர்க்கு மிதமாக வருளிச் செய்த
வந்தமிலா வகண்டபர சிவஞா னத்தை
யழுக்கறவே நிதாகனினக் குரைத்தே னன்பாய்ப்
பந்தமெலா மழிப்பதுவா மிஞ்ஞா னத்தைப்
பகர்ந்தபடி பங்கமறக் கேட்ட டைந்தோர்
சிந்தைமுதற் பந்தமெலா முடனே தீர்ந்து
சின்மயமா மகண்டபர சிவமே யாவர். (14)

இன்னவித மருளியிடு மாசான் வாக்கை
யீனமிலா நிதாகமுனி கேட்ட லோடு
மன்னியநல் லன்புடனே யெழுந்தி றைஞ்சி
மனைமக்கள் யாவையுமே குருவுக் கீந்து
தன்னையுமே சுதனுக வுதகத் தோடு
தன்குருவுக் கீந்தவனுய்த் தனதான் யாதி
பின்னுமுள வெப்பொருளு மன்னே னுக்கே
பிரியமுட னர்ப்பித்துப் போற்ற லுற்றுன். (15)

அனுபவ வாரிதியி லழிந்த வென்னை
யகண்டபர ஞானமெனு நாவாய் கொண்டு
சனாதனமாம் பரப்பிரம தீரத் தின்கட்
சகசமதா யேற்றியசற் குருவே போற்றி
விநாசமுறுந் தேகாதி நானென் றெண்ணி
விதம்விதமாந் துன்பமிகுந் திருந்த வென்னை
யனாமயமாம் பரப்பிரம நீயென் றோதி
யகண்டசுக நல்கியசற் குருவே போற்றி. (16)

அகிலமுமே யகண்டபரப் பிரம மென்று
மதுதானே நீயென்று முபதேசித்துச்
சகமுதலீ துண்மையதாஞ் சடநா னென்றுஞ்
சங்கையெலா நீக்கியசற் குருவே போற்றி
விகலமுறுங் கருமத்தாற் கதியுண் டென்று
வெகுகால மயக்கமுடன் சுழன்ற வென்னைத்
தகைமிகு மகண்டபர ஞானந் தந்து
தற்பரமே யாக்கியசற் குருவே போற்றி. (17)

அருள்வடிவா யெழுந்தருளி யென்னை யாண்ட
வகண்டபர வுருவான குருவே போற்றி
சருவவித வுலகத்துஞ் சார்வ தற்குச்
சாலவுமே யரியபர குருவே போற்றி
நிருமலமாய் நிட்களமாய் நிகரில் லாதாய்
நீக்கமற நிறைந்தபர குருவே போற்றி
பரசிவமாய்ப் பராற்பரமாய் பரமான் மாவாய்ப்
பரப்பிரம மானபர குருவே போற்றி. (18)

விமலமதாய் வேறற்ற வகண்டா கார
விருத்தியினில் விளங்கியசற் குருவே போற்றி
யமலமதா யகண்டபர வித்தை யாகி
யவித்தையெலா நீக்கியசற் குருவே போற்றி
நிமலமதாம் வித்தைக்கு மப்பா லாகி
நிச்சலமாய் நின்றபர குருவே போற்றி
சமமதுவாய்ச் சத்துருமொரு சங்க மின்றிச்
சன்மாத்ர மானபர குருவே போற்றி. (19)

சத்தியசிற் சுககனமாங் குருவே போற்றி
சலனமிலாச் சாந்தபர குருவே போற்றி
நித்தியநிர்க் குணமான குருவே போற்றி
நிரஞ்சனமாய் நின்றபர குருவே போற்றி
சுத்தபர வெளியான குருவே போற்றி
சூட்சுமமாய் நிறைந்தபர குருவே போற்றி
யத்துவித பூரணமாங் குருவே போற்றி
யகண்டமதாஞ் சற்குருவே போற்றி போற்றி. (20)

சகலமுமே தட்சணையாக் குருவுக் கீந்து
சலனமிலாப் பத்தியுட னிறைஞ்சி யேத்தி
நிகரிலதாம் பணிவிடைகள் செய்யு மந்த
நிதாகமுனி தனைநோக்கிக் குரவன் சொல்வான்
மகிழ்வுடனீ பணிவிடைகள் செய்ததா லியான்
மகத்தான சந்தோட மருவ லானேன்
றருமகனே யினியெவையு முன்னாற் செய்யத்
தக்கதிலை தன்யகிரு தார்த்த னீயே. (21)

புத்திரனே யத்யந்த திடமே யாகப்
பூரணமாம் பரப்பிரம போதம் பெற்றாய்
மித்தையதாஞ் சம்சார மனைத்து நீங்கி
மெய்யுணர்வா நந்தபரப் பிரம மானாய்
சத்தியமே யாகினுநீ விதேக முத்தி
சாருமள வகம்பிரம நிச்ச யத்தை
நித்தமுமே யாதரவா யிடைவி டாம
னிரந்தரமாய்ப் பழகிநிச நிலையி னிற்பாய். (22)

அதிதிடமா மகம்பிரம நிச்ச யத்துக்
கயலெவையு மோட்சத்துக் கேது வல்ல
வதிதிடமா மகம்பிரம நிச்ச யந்தா
னகண்டபர மோட்சத்துக் கேது வாகு
மதிதிடமா மகம்பிரம நிச்ச யத்தை
யநவரத மாதரவாய்ப் பழகு வோர்க்கே
யதிதிடமா மகம்பிரம நிச்ச யத்தா
லரிதான மோக்ஷநிலை யெளிதா யெய்தும். (23)

பேதமுறு வகம்பிரம நிச்ச யந்தான்
பின்னமிலா வகண்டபர மோட்ச நல்கு
மேதுமிதி லையமிலை சத்தி யந்தா
னீசனிரு பதத்தானை சத்தி யந்தா
னுதலினுன் முமுட்சுவெலா மறைந்த வண்ண
மநவரத மகம்பிரம நிச்ச யத்தைச்
சாதகமாய்ச் சாதித்தே யகண்ட போகஞ்
சார்ந்ததனுன் மோட்சநிலை சார வேண்டும். (24)

கலனமிலா வகண்டபர மோட்சத் துக்குக்
காரணமா மகம்பிரம நிச்ச யத்தைச்
சலனமறத் திடமாகத் தருவ தற்குச்
சாற்றியவிந் நூலெனமற் றெவையு மில்லை
நிலைமருவும் பரமசிவ னெனக்கு நேரே
நிகழ்த்தியவிந் நூலுக்கு நிகரொன் றுண்டோ
பலவிதமா முலகத்து மிந்த நூலே
பரவியவெந் நூலுக்குஞ் சார மாகும். (25)

சகலவித மறையிலுநற் சார மீதே
சகலமறை முடிவிலுநற் சார மீதே
சகலவித நூற்களிலுஞ் சார மீதே
சகலவிதி காசத்துஞ் சார மீதே
சகலவித குருவருளுஞ் சார மீதே
சகலசெப தவங்களினுஞ் சார மீதே
சகலவித புவனத்துஞ் சார மீதே
சகலபொருட் களினுமகா சார மீதே. (26)

சகலவித செனனத்தின் மோட்ச மீதே
சகலர்க்குஞ் சுலபமதா மோட்ச மீதே
சகலவித துயருமிலா மோட்ச மீதே
சந்ததமுஞ் சுகமான மோட்ச மீதே
சகலவித புலனுமிலா மோட்ச மீதே
சந்ததமும் பூரணமா மோட்ச மீதே
சகலமதின் சாரமதா மோட்ச மீதே
சந்ததமுஞ் சாம்பிராச்சிய மோட்ச மீதே. (27)

சிரவணமே முதலியதைச் செய்த லாலே
 சின்மாத்ர மாகுவதா மோட்ச மீதே
தாளமனோ விகற்பமெலாந் தவிர்த லாலே
 தன்மாத்ர மாகுவதா மோட்ச மீதே
விரவுசக முதலியதை விடுத லாலே
 விசேடமற நிற்பதுவா மோட்ச மீதே
சாமசா மெவையுமிலா திகழ்த லாலே
 சத்தியசிற் சுககனமா மோட்ச மீதே. (28)

இவ்விதமா மகிமைமிகு மிந்த நூலை
 யாவர்க்கு மிதமாகக் கருணை யாலே
திவ்வியமங் களவடிவா யெழுந்த வீசன்
 றிகழ்த்தியவா நிதாகனினைத் தலைமை யாக்கிச்
செவ்வியவிச் சுகர்முதலா முனிவர்க் கெல்லாஞ்
 சிந்தையினிற் செறியும்வணஞ் செப்பி னேனிங்
கவ்விதமா மிதைக்கேட்ட விவரெல் லோரு
 மகண்டபர போதத்தா லதுவே யானார். (29)

இந்தவிதங் கெம்பீர வாக்கி னோடே
 யாவரையு நோக்கிரிபு விசைத்த லோடு
மந்தமிலா மகிழ்வுடனே நிதாக னங்கே
 யாநந்த வாரிதியி லமர்ந்து நின்றான்
சுந்தரமா நிதாகரிபு சம்வா தத்தைச்
 சுகாதி முனிவரெலாங் கேட்டங் கத்தாற்
பந்தமிலாப் பரப்பிரம போதம் பெற்றப்
 பரப்பிரம வடிவாகிப் பாசந் தீர்ந்தார். (30)

பிந்திமகா முனிவரெலா மகிழ்வு கூர்ந்து
 பிரியமுடன் ரிபுமுனியை வணங்கிச் சொல்வார்
பந்தமிலாப் பரகுருவே கருணை யாலே
 பரமசிவ னருளியவா றகண்ட ஞான
சிந்துவினை யெங்கட்கின் றுபதே சித்துச்
 சிந்தைமுதற் பந்தமெலா முடனே தீர்த்தவ்
வந்தமிலா வகண்டபர மாநந் தத்தை
 யளித்தனைநின் கருணையினை யென்சொல் வோமியாம். ()

சலனமிலாச் சற்குருவே நின்பா தத்தைச்
சரணமதாச் சார்கின்ற வெம்மை யெல்லா
மலைவில்பர மாநந்த மடையும் வண்ண
மவித்தைமுத லனுதிபவ வாரி நின்று
மூலவுபெரு வகண்டபரப் பிரம ஞான
வுபதேச மென்னுமகா நாவாய் கொண்டே
யிலகுபரப் பிரமமெனுந் தீரத் தேற்றி
யிப்பவமீண் டணுகாம லாண்டா யன்றோ. (32)

ஆதலினாற் றந்தையுநீ தாயு நீயே
யதிசயமா மற்றுமுள பந்து நீயே
சாதகமாஞ் சற்குருநீ சகாவு நீயே
சகலமுமே நீயென்று வணங்கி யேத்திச்
சீதளமா மனதுடனே பவதா பங்கள்
சிறிதுமிலாச் சின்மாத்ர நிட்டை கூடி
யாதிமுடி வொன்றுமிலா வகண்டா நந்த
வாழியினி லசஞ்சலமா யமர்ந்தா ரன்னோர். (33)

இந்தவிதம் ரிபுமுனிவன் கைலா சத்தி
லெமதீசன் கருணையினா லடைந்த நூலைப்
பந்தமற நிதாகன்முதன் முனிவர்க் கெல்லாம்
பகர்ந்தவரைப் பரவடிவாய்ச் செய்த பின்ன
ரந்தமிலா வாநந்தத் தமர்ந்து நின்று
னவ்விதமே நினக்கிதனைச் சைகீ ஷவ்யா
சுந்தரமா யருள்செய்தே னினிநா னுங்கஞ்
சூட்சுமமா யருள்செய்வே னிதனைக் கேளாய். (34)

உலகினிடை யந்தணரே யாதி யாக
வுற்பத்தி பொருந்தியிடுஞ் சீவ ரெல்லா
மிலகுமறை விதித்தபடி முன்பு கன்ம
மிகழாது செயவேண்டுஞ் செய்யுங் காலைத்
திலகமதா மறைமுடியில் விதிக்கப் பட்ட
திவ்வியமாம் விபூதியினை நியம மோடு
சலனமறச் சந்ததமுந் தரிக்க வேண்டுஞ்
சற்றுமிதி லனாதரவே செய்ய வொண்ணா. (35)

பூதியினு லங்கமெலா நன்றாய்ப் பூசிப்
  பொருவிறிரி புண்டரமு மணிந்து கொண்டு
மாதவனே நியமமுட னுருத்தி ராக்க
  மாலைகளுஞ் சிரமுதலிற் றரித்துக் கொண்டிங்
கோதியிடு முருத்திரபஞ் சாட்ச ராதி
  யுத்தமமா மந்திரமுஞ் செபித்துக் கொண்டு
நீதியுட னிகழுமகா லிங்கத் தின்க
  ணித்தியமா யர்ச்சனையுஞ் செய்ய வேண்டும். (36)

அத்தனுடைப் பூசனைபோ லன்பர் பூசை
  யநுதினமு மாதாவா யியற்ற வேண்டு
முத்தமமா யோதியவோர் சிவத லத்தி
  லுடலுள்ள பரியந்தம் வசிக்க வேண்டுஞ்
சுத்தமதாஞ் சிவநாம கீர்த்த னத்தைச்
  சோர்வறவே சந்ததமுஞ் செய்ய வேண்டு
மெத்தவுமே யுத்தமமாஞ் சாம்ப மூர்த்தி
  மேனியுடைப் பாவனையும் பண்ண வேண்டும். (37)

வேதவதி காரமுளோர் விதித்த வண்ணம்
  விகலமற யாவையுமே செய்ய வேண்டு
மீதிலதி காரமிலாச் சூத்தி ராதி
  யாவருமே சிசுருடை யாதி கன்ம
நீதியொடு நழுவாது செய்து கொண்டே
  நிருமலமாம் விபூதியுடைத் தார ணாதி
சாதனமோ டேதுமொரு சிவத லத்திற்
  சந்ததமுஞ் சலியாது வசிக்க வேண்டும். (38)

தகைமைமிகும் விபூதியுடைத் தார ணத்துந்
  தவிராம லுருத்திராக்க தார ணத்து
மகிமைமிகுஞ் சிவநாம கீர்த்த னத்து
  மகேசனுடைத் தியானத்துஞ் சிவத லத்தி
லிகழ்வறவே வாசத்து முலகி லுள்ளோ
  ரியாவர்க்கு மதிகார மிருப்ப தாலே
சகமதனின் முமுட்சுவெலா முறையா யிங்குச்
  சாற்றியவிச் செய்கையினைச் செய்ய வேண்டும். (39)

மாதவனே யோதியவிச் செய்கை யெல்லா
மகத்தான ஞானுங்க மென்ன லாகு
மோதியவிவ் வங்கமுடன் சிரவ ணுதி
யுற்றவரே பரமசிவ னருளி னுலே
யாதிமுடி வொன்றுமிலா வகண்ட ஞான
மடைந்ததனு லஞ்ஞான மனைத்து நீங்கிப்
பேதிசெயு மனுதிபவ பந்தந் தீர்ந்து
பின்னமிலாப் பரப்பிரம சொரூப மாவர். (40)

பூதியினு லணிந்ததிரி புண்ட ராதி
பொருந்தினரே வேதாந்த விசாரந் தன்னி
லேதமிலா வதிகார மிசைந்தோ ராவ
ரிதரரெலா மதிகார ராக மாட்டார்
வேதமுடி யிவ்விதமே விதிப்ப தாலே
வேதவிதிக் கயலான விதியொன் றுண்டோ
வாதலினு லறைந்தவதி காரம் பெற்றே
யகண்டபர விசாரணையைச் செய்ய வேண்டும். (41)

அருந்தவனே விபூதியுடைத் தார ணுதி
யங்கமெலா மில்லாமற் சமத மாதி
விரிந்ததிட சந்யாசி யான போதும்
விசாரணையி லதிகாரி யாகா னன்னேன்
பொருந்தியவன் விசாரணையே செய்த போதும்
பூரணமாம் பரமசிவ னருளி லாதா
னிரந்தரமாம் பரப்பிரம ஞானஞ் சாரா
னிகழ்த்தியது நிச்சயமே யைய மில்லை. (42)

பலவிதமா யுரைத்தென்ன பகர்ந்த வண்ணம்
பழுதற்ற ஞானுங்கம் பற்றி னேராய்ச்
சலனமற விந்நூலை விசாரிப் போரே
சம்புவினுற் சாற்றியவிந் நூலின் ஞான
மலைவறவே யடைந்ததனு லகண்டா னந்த
மமைவுற்றவ் வகண்டபர மாவ ரென்றே
யிலகியிடுஞ் சண்முகவன் சைகீ ஷவ்யற்
கிணையற்ற விந்நூலை யுபதே சித்தான். (43)

அவ்விதமே சூதமுனி யிந்த நூலை
யகிலமகா முனிவர்க்கு மருளிச் செய்தான்
செவ்வியதா மிந்நூலைக் கேட்ட லோடுஞ்
சின்மயமாம் பரப்பிரம ஞான மேவித்
திவ்வியமா மாநந்த மநுப வித்துத்
திருத்தியொடம் முனிவரெலாங் குருவை நோக்கித்
தவ்வியிடா வன்புடனே யிறைஞ்சி யேத்தித்
தற்பரமே தாமாகிச் சுகித்தி ருந்தார். (44)

சூதமகா முனிவரனு மிந்த வண்ணஞ்
சூட்சுமமா மிந்நூலை முனிவர்க் கெல்லாம்
பேதமற வுபதேசித் தவரை யெல்லாம்
பின்னமிலாப் பரப்பிரம வடிவே யாக்கிப்
போதகன மானபர சிவத்தை நோக்கிப்
பூரணமா மன்புடனே யிறைஞ்சி யேத்தி
யாதிமுடி வொன்றுமிலா தகண்ட மான
வாநந்த சிந்துவினி லமர்ந்து நின்றான். (45)

கற்பிதமாம் பேதமெலாம் போக்கு மிந்நூல்
களங்கமிலாப் பரப்பிரம மாக்கு மிந்நா
னிற்பயமா நிட்டையினை யளிக்கு மிந்நூ
னிரதிசயா நந்தத்தை நல்கு மிந்நூ
லற்புதமா மிந்நூலின் கவியி லக்க
மாயிரமோ டொன்பானூற் றறுநான் காகும்
பற்பலவா நூலையெலாம் விட்டிந் நூலைப்
பரிவுடனே முமுட்சுவெலாம் பார்க்க வேண்டும். (46)

சுகமுறவே யிந்நூலை யுபதே சித்த
சூதமகா முனிவனிரு பதங்கள் போற்றி
விகலமற வன்னோனுக் குபதே சித்த
வியாசமகா முனிவனிரு பதங்கள் போற்றி
யகமறவே வினவியிடுஞ் சைகீ ஷவ்ய
முநிமகா முனிவாரின் பதங்கள் போற்றி
திகழ்வுறவே யன்னோருக் குபதே சித்துத்
தெரிவித்த சண்முகவன் பதங்கள் போற்றி. (47)

அருளுடனே யன்னோனுக் குபதே சித்த
வம்பிகையின் றிவ்வியநற் சரணம் போற்றி
நிருமலமாய் வினவியிடு நிதாக ஞானி
நிகிலமகா முனிவரரின் சரணம் போற்றி
யிருளறவே யன்னோருக் குபதே சித்த
விணையற்ற ரிபுமுனிவன் சரணம் போற்றி
பரிவுடனே யன்னோனுக் குபதே சித்த
பராற்பரமாம் பரமசிவன் சரணம் போற்றி. (48)

அகிலவதிட் டானபர சொரூபம் போற்றி
யனேத்துமிலா வத்துவித சொரூபம் போற்றி
துகளணுகாத் துரியபர சொரூபம் போற்றி
துரியத்து மதீதபர சொரூபம் போற்றி
யகமருவா வகண்டபர சொரூபம் போற்றி
யான்மாவுக் கபின்னபர சொரூபம் போற்றி
நிகரிலதாய் நின்றபர சொரூபம் போற்றி
நீக்கமற நிறைந்தபர சொரூபம் போற்றி. (49)

சற்போத சுககனமாஞ் சொரூபம் போற்றி
சலனமிலாச் சாந்தபர சொரூபம் போற்றி
தற்போத சூனியமாஞ் சொரூபம் போற்றி
தன்மயமாய்த் தனித்தபர சொரூபம் போற்றி
கற்போல நிச்சலமாஞ் சொரூபம் போற்றி
களங்கமிலா நிட்களமாஞ் சொரூபம் போற்றி
யெப்போது மிருமையிலாச் சொரூபம் போற்றி
யேகமதாம் பரப்பிரம சொரூபம் போற்றி. (50)

சத்தியஞா னநந்த சொரூபம் போற்றி
சகலபரி பூரணமாஞ் சொரூபம் போற்றி
நித்தியஞா னநந்த சொரூபம் போற்றி
நிரஞ்சனநிர்க் குணமான சொரூபம் போற்றி
யித்துவித லேசமிலாச் சொரூபம் போற்றி
யேகசிதா காயபர சொரூபம் போற்றி
யத்துவித மானபர சொரூபம் போற்றி
யகண்டமதாம் பரசொரூபம் போற்றி போற்றி. (51)

வேறு.

தேசிகன்றெரி வித்த திறப்படி
தீரமாய்நிதித் யாசம் புரிந்ததா
லீசனல்லருள் பெற்றவர் முத்தியை
யெய்தலாமென முன்பு விளம்பிமற்
றேசிலாவிந்த நூலின் மகத்துவ
மியாவுமோதி யிதனை முடித்திட
லாசிலாநந்தத் தாண்டவ மாடுந
மம்பிகேச னகண்ட சொரூபமே. (52)

நாற்பத்துநான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் 44-க்கு திருவிருத்தம் 1924.

திருச்சிற்றம்பலம்.

ரிபுகீதை முற்றிற்று.

## ரிபுகீதை பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 22 | முறுதீர | தீரமுறு |
| 9 | 29 | முத | முதல் |
| 10 | 3 | நேரப் | நேராய்ப் |
| 10 | 12 | திசை | தசை |
| 10 | 28 | மவை | மது |
| 24 | 26 | டய | டா |
| 25 | 16 | சொருப | சொரூப |
| 26 | 4 | மிலரச் | மிலாச் |
| 28 | 14 | தெரிவி | தெரிவு |
| 31 | 29 | ததைச் | தத்தைச் |
| 32 | 14 | கார்த்தா | கர்த்தா |
| 34 | 18 | ஒதிய | ஓதிய |
| 34 | 20 | ாதி | யாதி |
| 42 | 3 | றிலோர் | றியிலோர் |
| 42 | 9 | சோருப | சொரூப |
| 43 | 17 | சாஞ் | சாசஞ் |
| 45 | 5 | யிகழ்ந் | யிகக் |
| 46 | 2 | அண்ட | அகண்ட |
| 50 | 7 | செர | சொ |
| 51 | 16 | மதிலங் | மலதிங் |
| 53 | 29 | தயர | தபர |
| 55 | 19 | காப்பா | கப்பா |
| 57 | 15 | சொரூம | சொரூப |
| 60 | 2 | ஏதமினி | ஏதமனி |
| 66 | 19 | மதுமே | மதுவே |
| 71 | 8 | மென்னு | னென்னு |
| 71 | 22 | சொரூ | சொரூப |
| 73 | 21 | மணு | மணுவு |
| 79 | 9 | ணிகழ் | நிகழ் |
| 79 | 18 | சிவ | சிவன் |
| 83 | 5 | தோன்றி | தோற்றி |
| 86 | 3 | யாகு | யாகுஞ் |
| 90 | 23 | மான்மா | மான்ம |
| 95 | 21 | னந் | னந்த |
| 100 | 3 | வறிவ | வறிவு |
| 101 | 22 | யாக | பாக |
| 105 | 27 | மான்ம | யான்ம |
| 106 | 17 | ஷை | ஷை |
| 110 | 3 | மென்னும் | மென்றும் |
| 110 | 20 | வெளி | யொளி |
| 119 | 2 | வெனவே | தெனவே |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 120 | 20 | மோனான் | மோநா |
| 121 | 6 | வித்தி | வித்த |
| 122 | 28 | தறிவு | வறிவு |
| 125 | 11 | பதின் | பதி |
| 126 | 25 | சித்ர | சித்திர |
| 127 | 7 | தமே | தமுமே |
| 134 | 11 | யறறு | யற்று |
| 138 | 32 | சச்தே | சத்தே |
| 141 | 24 | ரனு | ரணு |
| 142 | 14 | மோனான் | மோநா |
| 142 | 18 | சுகங் | சநங் |
| 143 | 13 | மாத்ர | மாத்ரம் |
| 149 | 22 | கொண்ட | கொண்டே |
| 155 | 16 | மானே | னென்றே |
| 155 | 17 | யதுசங் | யநுசங் |
| 155 | 19 | னம | னக |
| 155 | 31 | வமையு | வமைவு |
| 160 | 29 | காஞ் | காரஞ் |
| 164 | 5 | கின்றே | நின்றே |
| 171 | 7 | தெலா | தெலாஞ் |
| 171 | 21 | தறைற் | ததறைற் |
| 171 | 32 | றுணே | ஞணே |
| 177 | 19 | மேன் | மென் |
| 178 | 26 | மஞ் | வஞ் |
| 178 | 33 | பொதும் | போதும் |
| 179 | 3 | மெமை | யெவை |
| 179 | 15 | மில்லே | வில்லே |
| 184 | 11 | மறக் | மரக் |
| 192 | 8 | யுமர | யுமா |
| 197 | 12 | னத்தாற் | னந்தான் |
| 200 | 23 | சத்தியமும் | சத்தியமு |
| 201 | 30 | யோதி | மோதி |
| 204 | 2 | மேனான் | மேநா |
| 208 | 28 | மிகழ் | மிக |
| 213 | 11 | தாய | தாயு |
| 220 | 7 | கபா | கபர |
| 222 | 28 | ளலன் வுள் | னல னுள் |
| 225 | 26 | வன்றித் | வின்றித் |
| 238 | 7 | லன்றெ | லன்றே |
| 242 | 19 | வரி | வறி |
| 244 | 9 | சித்த | சிந்த |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 244 | 33 | செப் | செய் |
| 249 | 18 | ளெல்லா | ளெல்லாம் |
| 252 | 10 | பரரே | பரே |
| 260 | 16 | யப்பா | யப்யா |
| 273 | 24 | யுல்ள | யுள்ள |
| 275 | 18 | நந்ந | நந்த |
| 276 | 13 | பாா | பரா |
| 282 | 22 | சித்து | சிந்து |
| 283 | 11 | விதன் | யிதன் |
| 287 | 2 | னக்கு | தனக்கு |
| 301 | 11 | தமக | தம்மக |
| 302 | 27 | பிறங் | பிறங்கி |
| 310 | 17 | யறி | றறி |
| 319 | 26 | அலைவு | அலைவ |
| 325 | 4 | கயன்மா | கயமா |
| 338 | 29 | நிகழ் | நிகழ்த் |
| 341 | 25 | சகித் | சுகித் |
| 344 | 5 | விவை | மிவை |
| 344 | 9 | த்துச் | த்துக் |
| 349 | 9 | தெரியு | தெரிவு |
| 351 | 19 | சுகத் | சகத் |
| 353 | 16 | விசாக் | விசாரிக் |
| 354 | 4 | பிரம்மென் | பிரம மொன் |
| 355 | 27 | வேணு | வேனு |
| 356 | 4 | ரபொ | ரம்பொ |
| 361 | 28 | வேதாந் | வேகாந் |
| 361 | 33 | யுறு | வுறு |
| 375 | 17 | னைவையி | ரணத்தி |
| 377 | 32 | வதும் | வதுவும் |
| 379 | 15 | சகமு | சகலமு |
| 379 | 18 | திசை | தசை |
| 381 | 28 | பயத்து | பயது |
| 382 | 32 | மிலாத் | மிலா |
| 383 | 2 | மாமே | மாவே |
| 383 | 25 | மான் | மான்மா |
| 384 | 32 | மகம | மகம் |
| 386 | 28 | சித்தத் | சித்த |
| 386 | 29 | சகலத் | சகல |
| 388 | 35 | சக | சகன் |
| 389 | 17 | யான்மா | யான்மாவி |
| 393 | 28 | மெல்லா | மெல்லாம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 395 | 21 | சுத்தம | சுத்தவ |
| 396 | 13 | யென்னு | யென்று |
| 398 | 21 | மென்றும் | மென்று |
| 404 | 25 | மனது | மனதை |
| 406 | 27 | விபதா | வியதா |
| 411 | 22 | மதாம் | தமாய் |
| 412 | 4 | னென்னுங் | னெனுங் |
| 413 | 16 | தமாய் | தமாம் |
| 418 | 28 | மின்றி | மன்றி |
| 424 | 7 | தோர் | தோங் |
| 425 | 21 | யாக | யாகா |
| 426 | 19 | திரியை | கிரியை |
| 432 | 15 | தோன்று | தொன்று |
| 432 | 25 | யடை | றடை |
| 434 | 15 | பிரிவு | பிரிவ |
| 434 | 29 | சாரங் | சார்ங் |
| 435 | 21 | றியது | றியதும் |
| 436 | 27 | சன்ம | சின்ம |
| 438 | 1 | அதத | அத்தி |
| 440 | 22 | முத்திப் | முத்தி |
| 440 | 24 | சைசுகீ | சைகீ |
| 441 | 2 | றுப | னறுப |
| 442 | 26 | விகாா | விகார |
| 445 | 7 | பாவள | பாவன |
| 445 | 21 | சூட்ச | சூட்சு |
| 455 | 31 | மனைக்து | மனைத்து |
| 458 | 2 | ஆசரிய | ஆசிரிய |
| 458 | 27 | வுப்பிறி | வும்பிறி |
| 459 | 2 | மையை | மை |
| 460 | 19 | னவந | னவன |
| 464 | 24 | னிதை | னிதைக் |
| 465 | 11 | பூதிப் | பூதி |
| 465 | 25 | யாம் | யாயம் |
| 466 | 11 | மன்றி | மின்றி |
| 468 | 7 | வாப | பாவ |
| 470 | 25 | பிரக்ஞ | பிரஞ்ஞ |
| 473 | 17 | விவேக | விதேக |
| 477 | 20 | யுத்த | புத்த |
| 478 | 28 | யெழி | யெழு |
| 479 | 2 | லழிந் | லாழ்ந் |
| 480 | 16 | றரு | றகு |